கழக வெளியீடு-௪௨

உ

திருச்சிற்றம்பலம்

# திருக்குறள்



திருவள்ளுவர்

:: அருளியது ::



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி :: & சென்னை

இரக்தாட்சி ௵ ஆனி ௴

Published by
The South India Saiva Siddhanta Works
Publishing Society, Tinnevelly, Limited,
Tinnevelly and Madras
July 1924

Printed by
Munusawmy Mudaliar & Sons, Madras.

பொருளடக்கம்



# அதிகார வகராதி

## அறத்துப்பால்

. க. பாயிரம்

௨. இல்லறவியல்

௩. துறவறவியல்

௪. ஊழ்

## பொருட்பால்

௧. அரசியல்

௨. அங்கவியல்

௩. ஒழிபியல்

## காமத்துப்பால்

௧. களவியல்

உ

திருச்சிற்றம்பலம்

- - - -

## ஆசிரிய் வணக்கம்

திருமுடி மிசையார் மயிர்முடி யழகுந்
திர்க்கபுண் டாநுத லழகுந்
திரண்மணி புயந்தை வருஞ்செவி யழகுந்
திசழ்நெடுந் தாடியி னழகும்
அருமுடி செபமா லிகைசின்முத் திரைசே
ரபயரோர் வலக்கையி னழகு
மமிழ்துறழ் தமிழ்மா மறைமுறை வாந்த
மமைதரு மிடக்கையி னழகுங்
கருமுடி யோகப் பட்டையி னழகுங
கடிகொர்கீட் கோவண வழகுங்
கழல்களிற் றிகிரி வளைவரை யழகுங்

கமலநல் லாதனத் தழுகுந்
தருமுடி முகிரேய் மயிலையி னிடைமா
தவர்கள்கண் டிறைஞ்சவீற் றிருக்குந்
தழைபுகழ்த் திருவள் ளுவரெனு நாம
சற்குரு சரணமே சரணம்.

---

எ

## நூற் பெருமை

வள்ளுவர்செய் திருக்குறளை
மறுவறநன் குணர்ந்தோர்கள
உள்ளுவரோ மநுவாதி
யொருகுலத்துக் கொருநீதி.
மனோன்மணீயம்

---

அ

உ

திருச்சிற்றம்பலம்

---

# திருவள்ளுவர் வரலாறு

தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் கடைச்சங்க காலத்து உலகஞ் செய்த உயர் தவப்பயனாய்த் திருமயிலையில் ஆதிக்கும் பகவனுக்கும பிறந்து, ஓர் சைவவேளாள மரபில் வளர்ந்து, கல்வி யறிவொழுக்கங்களிற் றலை நின்று, மார்க்க சகாயன் என்னும சைவவேளாளரது அருமைத் திருமகள் வாசுகியம்மையை மணந்து, நெய்தற்றொழிலே எத்தொழிலையும் விடக் குற்றமற்ற தொழிலெனக் கொண்டு, கற்புக்கரசியாகிய அவ்வம்மையாருடன தமது இல்வாழ்க்கையினைச் சிறக்க நடத்தினர் என்ப.

இவர், கடவுள் உயிர் உலகம் என்னும் முப்பொருள் இலக்கணங்களையும் முற்றக்கற்று முழுதுணர்ந்த முனிவராகலின், பண்டைத் தண்டமிழ் மொழி வழக்கிற் கேற்பத் 'திருக்குறள்' என்னும் ஒப்புயர்வற்ற நூலை, அறம் பொருள் இன்பமென வகுத்து, குறட்பாவானியற்றி உலகுய்ய அருளினர். இந்நூலை மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் அரங்கேற்றுகையில், சங்கப்பலகை ஏனைய நூற்களைப் புறத்தே தள்ளிவிட்டு இஃதொன்றையே ஏற்றுத் திகழ்ந்ததாம். ஆகவே, இது தனக்கொப்பாய நூல் வேறொன்றின்றி, தனிவளம் நிரம்பிய பெருநூல் என்பது

வெள்ளிடை மலைபோற் றெள்ளியதாகும். மேலும், பண்டுதொட்டு இதுகாறும் உலகவழக்கில நின்று நிலவும் அமிழ்தினுமினிய செந்தமிழ் மொழியின் முதற்கண் ஆக்கப்பெற்றுத் தமிழர்தம் உயிர்க்குறுதி பயக்கும் பெருமறையாப் பேறுற்றுப் பெறுவதாய்; ஓதற்கெளிதாய்; சிந்தைக்குஞ் செவிக்கும் இன்பம் பயப்பதாய்; எச்சமயத்தினர்க்கும், எக்காலத்திற்கும் எந்நாட்டினர்க்கும் பொதுவாய்; எல்லாச் சமயத்தினர்க்கும் பொதுவாகிய சொற்றொடர்களினும் கடவுளைச் சுட்டினும் நுணுகி யாராய்வார்க்கு அது சைவசமயப் பொதுத்தன்மையை விளக்குவதாய்; இதற்குப் பின்னெழுந்த நூற்களெல்லாம் இதன் மொழிபொருளைப் பொன்னேபோற் போற்றும் பெருமை வாய்ந்ததாய்; மேலை நாட்டில் வழங்கிவரும் ஆங்கில முதலிய பன்னிரு மொழிகளிலும், ஆரியம் தெலுங்கு முதலிய மொழிகளிலும் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளதாய்; நவிற்றொறும் நவிற்றொறும் நறுஞ்சுவை பயப்பதாய்; பயிற்றொறும் பயிற்றொறும் பழைமையுடன் புதுமை காட்டுவதாய்; புறவிருள் நீக்கும் உலக ஞாயிறேபோன்று மக்கள் அகவிருள் நீக்கும் அரிய பெற்றித்தாய் விளங்குவ திந்நூல்.

இத்தகைய பெருநூலியற்றிய ஆசிரியர், தமது உளமகிழ்விற்குரிய மனைவி தமக்கு முன் உயிர்நீப்ப, சிலகாலமிருந்து, பல அருஞ்செயல்களைச் செய்து, ஏலேல சிங்கர் முதலிய தமது மாணவர்களை அன்

புடன் வாழ்த்தி, உலகத்தில் என்றும் அழியாப் புகழ் பரப்பி எல்லாம் வல்ல இறைவன் திருவடி நீழலெய்தினரென்று கூறுப.

திருவள்ளுவர் திருவடி வாழ்க.

ௐ

## திருவள்ளுவரின் வேறு பெயர்கள்

க. நாயனர் ரு. நான்முகனர்
உ. தேவர் சு. மாதானுபங்கி
ங. முதற்பாவலர் எ. செநாப்போதார்
ச. தெய்வப்புலவர் அ. பெருநாவலர்

—

## திருக்குறளின் வேறு பெயர்கள்

க. முப்பானூல் ரு. பொய்யாமொழி
உ. உத்தரவேதம் சு. வாயுறைவாழ்த்து
ங. தெய்வநூல் எ. தமிழ்மறை
ச. திருவள்ளுவர் அ. பொதுமறை



# திருக்குறள்
## அதிகார வகராதி



அதிகாரம் பக்கம்

கணவுநிலையுரைத்தல் ௧௨௨

தெரிந்துசெயல்வகை ௪௭

தெரிந்துதெளிதல் ௫௧

தெரிந்துவினையாடல் ௫௨

நடுவுநிலைமை ௧௨

நட்பாராய்தல் ௮௰

நட்பு ௭௯

நலம்புனைந்துரைத்தல் ௧௧௨

௧௨௫

நெஞ்சொடுபுலத்தல் ௧௩௰

பகைத்திறந்தெரிதல் ௮௮

பகைமாட்சி ௮௭

பசப்புறுபருவரல் ௧௧௯

படர்மெலிந்திரங்கல் ௧௧௭

படைச்செருக்கு ௭௮

படைமாட்சி ௭௭

பண்புடைமை ௱

பயனிலசொல்லாமை ௨௰

பழைமை ௮௧

பிரியாற்றாமை ௧௧௬

பிறனில்விழையாமை ௧௫

புகழ் ௨௪

புணர்ச்சிமகிழ்தல் ௧௧௧

புணர்ச்சிவிதும் ௧௨௯





திருச்சிற்றம்பலம்

# திருக்குறள்



# அறத்துப்பால்

அதிகாரம்-க பாயிரம்

## கடவுள்வாழ்த்து

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. க
கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின். உ
மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார். ௩
வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில. ௪
இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. ௫
பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார். ௬
தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலை மாற்ற லரிது. ௭
அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது. ௮
கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை. ௯
பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா

றிறைவ னடிசேரா தார். ௰



## வான்சிறப்பு

வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று. ௧
துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை. ௨
விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி. ௩
ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால். ௪
கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை. ௫
விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது. ௬
நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின். ௭
சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு. ௮
தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின். ௯
நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு. ௰

# நீத்தார்பெருமை

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு. க
துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று. உ
இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு. ௩
உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. ௪
ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி. ௫
செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். ௬
சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. ௭
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். ௮
குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது. ௯
அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான். ௰

# அறன்வலியுறுத்தல்

சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு. ௧
அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு. ௨
ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். ௩
மனத்துக்கண் மாசில னாத லனைத்தற
னாகுல நீர பிற. ௪
அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கு
மிழுக்கா வியன்ற தறம். ௫
அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை. ௬
அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை. ௭
வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். ௮
அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில. ௯
செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி. ௰

# இல்வாழ்க்கை

இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை. ௧

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை. ௨

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை. ௩

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில். ௪

அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது. ௫

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன். ௬

இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை. ௭

ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து. ௮

அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று. ௯

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும். ௰

# வாழ்க்கைத் துணைநலம்

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. ௧

மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில். ௨

இல்லதெ னில்லவள் மாண்பானா லுள்ளதெ
னில்லவள் மாணாக் கடை. ௩

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். ௪

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. ௫

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். ௬

சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை. ௭

பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு. ௮

புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற் பீடு நடை. ௯

மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு. ௰

அறம் அதி. ௭ இல்லறவியல்

## மக்கட்பேறு.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற. ௧
எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். ௨
தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு
டந்தம் வினையான் வரும். ௩
அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ். ௪
மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு. ௫
குழலினிது யாழினி தென்பதம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர். ௬
தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல். ௭
தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது. ௮
ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய். ௯
மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல். ௰





## அன்புடைமை

அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்

புன்கணீர் பூச றரும். க
அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு. உ
அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு. ங
அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு. ச
அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு. ரு
அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை. சு
என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம். எ
அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று. அ
புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு. கூ
அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு. ய





# விருந்தோம்பல்

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. க

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. உ
வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று. ௩
அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில. ௪
வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம். ௫
செலவிருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத் தவர்க்கு. ௬
இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன். ௭
பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார். ௮
உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ணுண்டு. ௯
மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. ௰

இல்லறவியல் அதி. ௰ திருக்குறள்

## இனியவைகூறல்

இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். க
அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்

தின்சொல னாகப் பெறின். உ

முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா
மின்சொ லினதே யறம். ந

துன்புறூஉந் துவ்வாமை யில்லாகு மியார்மாட்டு
மின்புறூஉ மின்சொ லவர்க்கு. ச

பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற. ரு

அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின். சு

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல். எ

சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும். அ

இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. கூ

இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. ய

அறம் அதி. கக இல்லறவியல்

## செய்ந்நன்றியறிதல்

செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது. க

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு
ஞாலத்தின் மாணப் பெரிது. உ

பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின்

னன்மை கடலிற் பெரிது. ௩

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். ௪

உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. ௫

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு. ௬

எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு. ௭

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று. ௮

கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும். ௯

எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. ௰

2 கக



# நடுவுநிலைமை

தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின். ௧

செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து. ௨

நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல். ௩

தக்கார் தகவில ரென்ப தவரவ
ரெச்சத்தாற் காணப் படும். ௪
கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி. ௫
கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச
நடுவொரீஇ யல்ல செயின். ௬
கெடுவாக வையா துலக நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு. ௭
சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி. ௮
சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
வுட்கோட்ட மின்மை பெறின். ௯
வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின். ௰





# அடக்கமுடைமை

அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும். ௧
காக்க பொருளா வடக்கத்தை யாக்க
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு. ௨
செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின். ௩

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது. ௪
எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. ௫
ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து. ௬
யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. ௭
ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி
னன்றாகா தாகி விடும். ௮
தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு. ௯
கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
யறம்பார்க்கு மாற்றி னுழைந்து. ௰

௧௩.

இல்லறவியல் அதி. ௧௪ திருக்குறள்

## ஒழுக்கமுடைமை

ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
முயிரினு மோம்பப் படும். ௧
பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை. ௨
ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும். ௩
மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்

பிறப்பொழுக்கங் குன்றக் கெடும். ௪
அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு. ௫
ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து. ௬
ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
னெய்துவ ரெய்தாப் பழி. ௭
நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
மென்று மிடும்பை தரும். ௮
ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். ௯
உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார். ௰

௧௪

அறம் அதி. ௧௫ இல்லறவியல்

## பிறனில்விழையாமை

பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில். ௧
அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில். ௨
விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார். ௩
எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல். ௪

எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி. ௫
பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண். ௬
அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன். ௭
பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு. ௮
நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பிற்
பிறற்குரியா டோடோயா தார். ௯
அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. ௰





## பொறையுடைமை

அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்த றலை. ௧
பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று. ௨
இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. ௩
நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
போற்றி யொழுகப் படும். ௪
ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்

பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. ௫
ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ். ௬
திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று. ௭
மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தந்
தகுதியான் வென்று விடல். ௮
துறந்தாரிற் றூய்மை யுடைய ரிறந்தார்வா
யின்னாச்சொ னோற்கிற் பவர். ௯
உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
மின்னாச்சொ னோற்பாரிற் பின். ௰

---



## அழுக்காறாமை

ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
தழுக்கா றிலாத வியல்பு. ௧
விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு
மழுக்காற்றி னன்மை பெறின். ௨
அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான். ௩
அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து. ௪
அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது. ௫

கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
முண்பதூஉ மின்றிக் கெடும். சு
அவவித் தழுக்கா றுடையானைச் செய்யவ
டவ்வையைக் காட்டி விடும். எ
அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும். அ
அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
கேடு நினைக்கப் படும். கூ
அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரு மில். ௰

௧௮

இல்லறவியல் அதி. ௧௮ திருக்குறள்

## வெஃகாமை

நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும். க
படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். உ
சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். ௩
இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர். ௪
அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின். ரு
அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப

பொல்லாத சூழக் கெடும். ௬
வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன். ௭
அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள். ௮
அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
திறனறிந் தாங்கே திரு. ௯
இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு. ௰

௧௮

அறம் அதி. ௧௯ இல்லறவியல்

## புறங்கூறாமை

அறங்கூறா னல்ல செயினு மொருவன்
புறங்கூறா னென்ற லினிது. ௧
அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
புறனழீஇப் பொய்த்து நகை. ௨
புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
லறங்கூறு மாக்கந் தரும். ௩
கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல். ௪
அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும். ௫
பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும். ௬
பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற்றா தவர். ௭

துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா
ரென்னைகொ லேதிலார் மாட்டு. ௮
அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
புன்சொ லுரைப்பான் பொறை. ௯
ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
றீதுண்டோ மன்னு முயிர்க்கு. ௰

௧௯



## பயனில்சொல்லாமை

பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும். ௧
பயனில பல்லார்முற் சொல்ல னயனில
நட்டார்கட் செய்தலிற் றீது. ௨
நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை. ௩
நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து. ௪
சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின். ௫
பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல். ௬
நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று. ௭
அரும்பய னாயு மறிவினார் சொல்லார்

பெரும்பய னில்லாத சொல். ௯
பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
மாசறு காட்சி யவர். ௧௦
சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். ௰

௨௰

அறம் அதி. ௨௧ இல்லறவியல்

## தீவினையச்சம்

தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு. ௧
தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும். ௨
அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல். ௩
மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு. ௪
இலனென்று தீயவை செய்யற்க செய்யி
னிலனாகு மற்றும் பெயர்த்து. ௫
தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான். ௬
எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை

வீயாது பின்சென் றடும். ௭
தீயவை செய்தார் கெடுத னிழறன்னை
வீயா தடியுறைந் தற்று. ௮
தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால். ௯
அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின். ௰

**இல்லறவியல் அதி. ௨௨ திருக்குறள்**

## ஒப்புரவறிதல்

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு. ௧
தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. ௨
புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற. ௩
ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். ௪
ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு. ௫
பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ
நயனுடை யான்கட் படின். ௬
மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்

பெருந்தகை யான்கட் படின். ௭

இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர். ௮

நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர
செய்யா தமைகலா வாறு. ௯

ஒப்புரவி னால்வருங் கேடெனி னஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து. ௰

அறம் அதி. உ௩. இல்லறவியல்

## ஈகை

வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. ௧

நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
மில்லெனினு மீதலே நன்று. ௨

இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. ௩

இன்னா திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு. ௪

ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின். ௫

அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. ௬

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்

தீப்பிணி தீண்ட லரிது. ௭
ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். ௮
இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல். ௯
சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
மீத லியையாக் கடை. ௰

௨௩



## புகழ்

ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு. ௧
உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
றீவார்மே னிற்கும் புகழ். ௨
ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில். ௩
நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு. ௪
நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது. ௫
தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்

தோன்றலிற் றோன்றாமை நன்று. ௬

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன். ௭

வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு
மெச்சம் பெறாஅ விடின். ௮

வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
யாக்கை பொறுத்த நிலம். ௯

வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
வாழ்வாரே வாழா தவர். ௰

அறம் அதி. ௨௫ துறவறவியல்

## அருளுடைமை

அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணு முள. ௧

நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை. ௨

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
வின்னா வுலகம் புகல். ௩

மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை. ௪

அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
'மல்லன்மா' ஞாலங் கரி. ௫

பொருணீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருணீங்கி
யல்லவை செய்தொழுகு வார். ௬
அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லா கியாங்கு. ௭
பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா
ரற்றார்மற் றாத லரிது. ௮

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரி
னருளாதான் செய்யு மறம். ௯
வலியார்முற் றன்னை நினைக்கதான் றன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து. ௰

௨௫

துறவறவியல் அதி. ௨௬ திருக்குறள்

## புலான்மறுத்தல்

தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள். ௧
பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு. ௨
படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்ற
னுடல்சுவை யுண்டார் மனம். ௩
அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல். ௪
உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
வண்ணாத்தல் செய்யா தளறு. ௫

தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில். சு
உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின். எ
செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணா
ருயிரிற் றலைப்பிரிந்த வூன். அ
அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று. கூ
கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
யெல்லா வுயிருந் தொழும். ௰



## தவம்

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற் குரு. க
தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது. உ
துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன்
மற்றை யவர்க டவம். ந
ஒன்னாத் தெறலு முவந்தாரை யாக்கலு
மெண்ணிற் றவத்தான் வரும். ச
வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப் படும். ரு
தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வாரமற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு. சு

சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. எ

தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும். அ

கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட் டவர்க்கு. கூ

இலர்பல ராகிய காரண நோற்பார்
சிலர்பலர் நோலா தவர். ௰

உஎ

துறவறவியல் அதி. உஅ திருக்குறள்

## கூடாவொழுக்கம்

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
ளைந்து மகத்தே நகும். க

வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின். உ

வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று. ௩

தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று. ச

பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென
றேதம் பலவுந் தரும். ரு

நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து

வாழ்வாரின் வன்கணா ரில். ௬
புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து. ௭
மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர். ௮
கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல். ௯
மழித்தலு நீட்டலும் வேண்டா வுலகம்
பழித்த தொழித்து விடின். ௰

௨௮

அறம் அதி. ௨௯ துறவறவியல்

## கள்ளாமை

எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு. ௧
உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல். ௨
களவினா லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும். ௩
களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமந் தரும். ௪
அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்க ணில். ௫
அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்

கன்றிய காத லவர். ௬
களவென்னுங் காரறி வாண்மை யளவென்னு
மாற்றல் புரிந்தார்க ணில். ௭
அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
களவறிந்தார் நெஞ்சிற் கரவு. ௮
அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர். ௯
கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு. ௰

உ௩

துறவறவியல் அதி. ௩௰ திருக்குறள்

## வாய்மை

வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல். ௧
பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின். ௨
தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
றன்னெஞ்சே தன்னைச் சுடும். ௩
உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
ருள்ளத்து ளெல்லா முளன். ௪
மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை. ௫
பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா வறமுந் தரும். ௬

பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. எ
புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும். அ
எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. கூ
யாமெய்யாக் கண்டவற்று ளில்லையெனைத் தொன்றும்
வாய்மையி னல்ல பிற. ௰

௩௰

அறம் அதி. ௩௧ துறவறவியல்

## வெகுளாமை

செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்
காக்கினென் காவாக்கா லென். க
செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
மில்லதனிற் றீய பிற. உ
மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
பிறத்த லதனான் வரும். ௩
நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற. ௪
தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம். ரு
சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும். சு
சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு

நிலத்தறைந்தான் கைபிழையா தற்று. எ
இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று. அ
உள்ளிய தெல்லா முடனெய்து முள்ளத்தா
லுள்ளான் வெகுளி யெனின். கூ
இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை. ய

௩௧

துறவறவியல் அதி. ௩௨ திருக்குறள்

# இன்னாசெய்யாமை

சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள். க

கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள். உ
செய்யாமற் செற்றார்க்கு மின்னாத செய்தபி
னுய்யா விழுமந் தரும். ௩
இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல். ௪
அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை. ரு
இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கட் செயல். சு
எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானா

மாணாசெய் யாமை தலை. ௭

தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல். ௮

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும். ௯

நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர். ௰

௩௨.

அறம் அதி. ௩௩ துறவறவியல்

## கொல்லாமை

அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும். ௧

பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை. ௨

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று. ௩

நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி. ௪

நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை. ௫

கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று. ௬

தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை. ௭

நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகு மாக்கங் கடை. அ
கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து. கூ
உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர். ய

௩௩.

துறவறவியல் அதி. ௩௪ திருக்குறள்

## நிலையாமை

நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை. க
கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று. உ
அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
லற்குப வாங்கே செயல். ௩
நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின். ச
நாச்செற்று விக்குள்மேல் வாராமு னல்வினை
மேற்சென்று செய்யப் படும். ரு
நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு. சு
ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியு மல்ல பல. எ
குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே

யுடம்போ டுயிரிடை நட்பு. ௮
உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. ௯
புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு. ௰

அறம் அதி. ௩௫ துறவறவியல்

## துறவு

யாதனின் யாதனி னீங்கியா னோத
லதனி னதனி னிலன். ௧
வேண்டினுண் டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல. ௨
அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய வெல்லா மொருங்கு. ௩
இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து. ௪
மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை. ௫
யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும். ௬
பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு. ௭
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி

வலைப்பட்டார் மற்றை யவர். ௫
பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும். ௬
பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. ௰



# மெய்யுணர்தல்

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு
மருளானா மாணாப் பிறப்பு. ௧
இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. ௨
ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து. ௩
ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு. ௪
எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. ௫
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. ௬
ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. ௭
பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்

செம்பொருள் காண்ப தறிவு. ௮
சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். ௯
காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னாமங் கெடக்கெடு நோய்.

௩௬

அறம் அதி. ௩௭ துறவறவியல்

## அவாவறுத்தல்

அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து. ௧
வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும். ௨
வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
யாண்டு மஃதொப்ப தில். ௩
தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும். ௪
அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
ரற்றாக வற்ற திலர். ௫
அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரு மவா. ௬
அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும். ௭

அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
றவாஅது மேன்மேல் வரும். ௮

இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். ௯

ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும். ௰

௩௭

ஊழ் அதி. ௩௮ திருக்குறள்

## ஊழ்

ஆகூழாற் றோன்று மசைவின்மை கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி. ௧

பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
மாகலூ ழுற்றக் கடை. ௨

நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
னுண்மை யறிவே மிகும். ௩

இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு. ௪

நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
நல்லவாஞ் செல்வஞ் செயற்கு. ௫

பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம. ௬

வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது. ௭

துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால

ஊட்டா கழியு மெனின். ௮

நன்றாங்கா னல்லவாக் காண்பவ ரன்றாங்கா
லல்லற் படுவ தெவன். ௯

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும். ௰

௩௮

# பொருட்பால்

அதி. ௩௯ அரசியல்

## இறைமாட்சி

படைகுடி கூழமைச்சு நட்பா ணாறு
முடையா னரசரு ளேறு. ௧

அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு. ௨

தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவற்கு. ௩

அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு. ௪

இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு. ௫

காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேன்
மீக்கூறு மன்ன னிலம். ௬

இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்
றான்கண் டனைத்திவ் வுலகு. எ
முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும். அ
செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு. கூ
கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானாம் வேந்தர்க் கொளி. ய

[redacted]

அரசியல் அதி. ௪ய திருக்குறள்

## கல்வி

கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக. க
எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு. உ
கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். ௩
உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில். ௪
உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர். ௫
தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு. ௬
யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்

சாந்துணையுங் கல்லாத வாறு. ௭

ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து. ௮

தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். ௯

கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை. ௰



பொருள் — அதி. ௪௧ — அரசியல்

## கல்லாமை

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். ௧

கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டு
மில்லாதாள் பெண்காமுற் றற்று. ௨

கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின். ௩

கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார். ௪

கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். ௫

உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர். ௬

நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று. ௭
நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு. ௮
மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு. ௯
விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர். ௰



அரசியல் அதி. ௪௨ திருக்குறள்

## கேள்வி

செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
செல்வத்து ளெல்லாந் தலை. ௧
செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும். ௨
செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
னான்றாரோ டொப்பர் நிலத்து. ௩
கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றாந் துணை. ௪
இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல். ௫
எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும். ௬
பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா ரிழைத்துணர

தீண்டிய கேள்வி யவர். ௭

கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி. ௮

நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது. ௯

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
ளவியினும் வாழினு மென். ௰



பொருள் அதி. ௪௩ அரசியல்

## அறிவுடைமை

அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு
முள்ளழிக்க லாகா வரண். ௧

சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு. ௨

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. ௩

எண்பொருள வாகச்செலச் சொலித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு. ௪

உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு. ௫

எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு. ௬

அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா

ரஸேதறி கல்லா தவர். எ
அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில் அ
எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
யதிர வருவதோர் நோய். க
அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர். ம

௪௩.

அரசியல் அதி. ௪௪ திருக்குறள்

## குற்றங்கடிதல்

செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து. க
இவறலு மாண்பிறந்த மானமு மாணா
வுவகையு மேத மிறைக்கு. உ
தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக
கொள்வர் பழிநாணு வார். ௩
குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
யற்றந் தரூஉம் பகை. ௪
வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். ரு
தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைக்கு. சு
செயற்பால செய்யா திவறியான் செலவ

யுயற்பால தன்றிக் கெடும். எ
பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு
மெண்ணப் படுவதொன் றன்று. அ
வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை. ௯
காதல காத லறியாமை யுய்க்கிற்பி
னேதில வேதிலார் நூல். ௰

௪௪.

பொருள் அதி. ௪௫ அரசியல்

## பெரியாரைத் துணைக்கோடல்

அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல். க

உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல். உ

அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். ௩
தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை. ௪
சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல். ௫
தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில். ௬
இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே

கெடுக்குந் தகைமை யவர். எ
இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும். அ
முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை. ௯
பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல். ௰



அரசியல் அதி. ௪௬ திருக்குறள்

## சிற்றினஞ்சேராமை

சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும். க
நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு. உ
மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா
மின்னா னெனப்படுஞ் சொல். ௩
மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
கினத்துள தாகு மறிவு. ௪
மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
மினந்தூய்மை தூவா வரும். ௫
மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை. ௬
மனநல மன்னுயிர்க் காக்க மினநல
மெல்லாப் புகழுந் தரும். எ

மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து. அ
மனநலத்தி னாகு மறுமைமற் றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து. கூ
நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில். ம

சஅ

பொருள் அதி. சஎ அரசியல்

## தெரிந்துசெயல்வகை

அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு
மூதியமுஞ் சூழ்ந்து செயல். க
தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில். உ
ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார். ங
தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு
மேதப்பா டஞ்சு பவர். ச
வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு. ரு
செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும். சு
எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண்ணுவ மென்ப திழுக்கு. எ
ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும். அ

நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை. ௯
எண்ணாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு. ௰



அரசியல் அதி. ௪௮ திருக்குறள்

## வலியறிதல்

வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல். ௧
ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில். ௨
உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர். ௩
அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும். ௪
பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின். ௫
நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி
னுயிர்க்கிறுதி யாகி விடும். ௬
ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
போற்றி வழங்கு நெறி. ௭
ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை. ௮

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
வில்லாகித் தோன்றாக் கெடும். ௯
உளவரை தூக்காத வொப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும். ௰

பொருள் அதி. ௪௯ அரசியல்

## காலமறிதல்

பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. ௧
பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு. ௨
அருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின். ௩
ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின். ௪
காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர். ௫
ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து. ௬
பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர். ௭
செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை
காணிற் கிழக்காந் தலை. ௮
எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே

செய்தற் கரிய செயல். க
கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து. ய



# இடனறிதல்

தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று
மிடங்கண்ட பின்னல் லது. க
முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்சேர்ந்தா
மாக்கம் பலவுந் தரும். உ
ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின். ந
எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின். ச
நெடும்புன லுள் வெல்லு முதலை யடும்புனலி
னீங்கி னதனைப் பிற. ரு
கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து. கூ
அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின். எ
சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையா
னூக்க மழிந்து விடும். அ
சிறைநலனுஞ் சீரு மிலரெனினு மாந்த
ருறைநிலத்தோ டொட்ட லரிது. கூ

காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு. ௰



## தெரிந்துதெளிதல்

அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும். ௧
குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு. ௨
அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு. ௩
குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல். ௪
பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல். ௫
அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி. ௬
காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும். ௭
தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும். ௮
தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்
றேறுக தேறும் பொருள். ௯
தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்

# தெரிந்துவினையாடல்

நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும். ௧
வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை. ௨
அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு. ௩
எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகு மாந்தர் பலர். ௪
அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று. ௫
செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல். ௬
இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல். ௭
வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
யதற்குரிய னாகச் செயல். ௮
வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு. ௯
நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்

பொருள் அதி. ௫௩ அரசியல்

## சுற்றந்தழால்

பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. ௧
விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும். ௨
அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று. ௩
சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன். ௪
கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும். ௫
பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில். ௬
காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்னநீ ரார்க்கே யுள. ௭
பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர். ௮
தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
காரண மின்றி வரும். ௯
உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த

## பொச்சாவாமை

இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு. க
பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு. உ
பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு. ந
அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு. ச
முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும். ரு
இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில். சு
அரியவென் றாகாத வில்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின். எ
புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில். அ
இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. கூ
உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தா

னுள்ளிய துள்ளப் பெறின். ௰

௫௫

பொருள் அதி. ௫௫ அரசியல்

## செங்கோன்மை

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை. ௧

வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி. ௨

அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல். ௩

குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு. ௪

இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு. ௫

வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின். ௬

இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின். ௭

எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
றண்பதத்தாற் றானே கெடும். ௮

குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில். ௯

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். ௰

# கொடுங்கோன்மை

கொலைமேற்கொண் டாரிற் கொடிதேயலைமேற்கொண்
டல்லவை செய்தொழுகும் வேந்து. ௧
வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு. ௨
நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும். ௩
கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு. ௪
அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. ௫
மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன்
மன்னுவா மன்னர்க் கொளி. ௬
துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு. ௭
இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின். ௮
முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
யொல்லாது வானம் பெயல். ௯
ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின். ௰

# வெருவந்தசெய்யாமை

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து. ௧
கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க
நீங்காமை வேண்டு பவர். ௨
வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயி
னொருவந்த மொல்லைக் கெடும். ௩
இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும். ௪
அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து. ௫
கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ
நீடின்றி யாங்கே கெடும். ௬
கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம். ௭
இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு. ௮
செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும். ௯
கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை. ௰

# கண்ணோட்டம்

கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
யுண்மையா னுண்டிவ் வுலகு. ௧

கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை. ௨

பண்ணென்னாம் பாடற் கியைபின்றேற் கண்ணென்னாங்
கண்ணோட்ட மில்லாத கண். ௩

உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண். ௪

கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும். ௫

மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர். ௬

கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையு மில். ௭

கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு. ௮

ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை. ௯

பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். ௰

௫௮.

# ஒற்றாடல்

ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண். க

எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில். உ

ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில். ங

வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று. ச

கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகாஅமை வல்லதே யொற்று. ரு

துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று. சு

மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
யையப்பா டில்லதே யொற்று. எ

ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ
ரொற்றினா லொற்றிக் கொளல். அ

ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும். கூ

சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை. ௰

## ஊக்கமுடைமை

உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லா
ருடைய துடையரோ மற்று. க

உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். உ

ஆக்க மிழந்தேமென் றல்லவா ரூக்க
மொருவந்தங் கைத்துடை யார். ௩

ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
வூக்க முடையா னுழை. ௪

வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு. ௫

உள்ளுவ தெல்லா முயர்வுள்ளன் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து. ௬

சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு. ௭

உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு. ௮

பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின். ௯

உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு. ௰

௬௰.

பொருள் அதி. ௬௧ அரசியல்

## மடியின்மை

குடியென்னுங் குன்று விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும். ௧

மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர். ௨

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து. ௩

குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு. ௪

நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன். ௫

படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்
மாண்பய னெய்த லரிது. ௬

இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர். ௭

மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும். ௮

குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும். ௯

மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு. ௰



அரசியல் அதி. ௬௨ திருக்குறள்

## ஆள்வினையுடைமை

அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்

பெருமை முயற்சி தரும். க
வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு. உ
தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு. ங
தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும். ச
இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண். ரு
முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும். சு
மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள். எ
பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி. அ
தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். கூ
ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர். ௰
பொருள் அதி. சுஉ அரசியல்

## இடுக்கணழியாமை

இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில். க

வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும். உ

இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர். ௩

மடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து. ௪

அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும். ௫

அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புத றேற்றா தவர். ௬

இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல். ௭

இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
றுன்ப முறுத லிலன். ௮

இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன். ௯

இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு. ௰

௯௧

அங்கவியல் அதி. ௬௪ திருக்குறள்

## அமைச்சு

கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு

மருவினையு மாண்ட தமைச்சு. ௧

வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு. ௨

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு. ௩

தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு. ௪

அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை. ௫

மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை. ௬

செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல். ௭

அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன். ௮

பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரெழுபது கோடி யுறும். ௯

முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர். ௰

பொருள் அதி. ௬௫ அங்கவியல்

## சொல்வன்மை

நாநல மென்னு நலனுடைமை யந்நலம்

யாநலத் துள்ளதூஉ மன்று. ௧

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. ௨

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல். ௩

திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில். ௪

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து. ௫

வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள். ௬

சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
யிகல்வெல்லல் யார்க்கு மரிது. ௭

விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். ௮

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்ல றேற்றா தவர். ௯

இணருழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார். ௰

உ

அங்கவியல் அதி. ௬௬ திருக்குறன்

## வினைத்தூய்மை

துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்

வேண்டிய வெல்லாந் தரும். ௧
என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை. ௨
ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர். ௩
இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர். ௪
எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேன்
மற்றன்ன செய்யாமை நன்று. ௫
ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை. ௬
பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை. ௭
கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா
முடிந்தாலும் பீழை தரும். ௮
அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை. ௯
சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று. ௰



## வினைத்திட்பம்

வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப

மற்றைய வெல்லாம் பிற. ௧
ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள். ௨
கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி
னெற்றா விழுமந் தரும். ௩
சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல். ௪
வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க
ணூறெய்தி யுள்ளப் படும். ௫
எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின். ௬
உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து. ௭
கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல். ௮
துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை. ௯
எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு. ௰

௬௭

**அங்கவியல் அதி. ௬௮ திருக்குறள்**

## வினைசெயல்வகை

சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குத றீது. ௧

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. உ

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச் செயல். ௩

வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்
றீயெச்சம் போலத் தெறும். ௪

பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல். ௫

முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். ௬

செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல். எ

வினையான் வினையாக்கிக் கோட னனைகவுள்
யானையால் யானையாத் தற்று. ௮

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல். ௯

உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து. ௰

பொருள் அதி. ௬௯ அங்கவியல்

## தூது

அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு. க

அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று. உ

நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு. ௩

அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு. ௪

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது. ௫

கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தா
றக்க தறிவதாந் தூது. ௬

கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை. எ

தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு. அ

விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன். ௯

இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது. ௰



அங்கவியல் அதி. எ௰ திருக்குறள்

## மன்னரைச்சேர்ந்தொழுகல்

அகலா தணுகாது திக்காய்வார் போல்க
விகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். க
மன்னர் விழைப விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும். உ
போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
றேற்றுதல் யார்க்கு மரிது. ௩
செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து. ச
எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்காற் கேட்க மறை. ரு
குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். சா
வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல். எ
இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
வொளியோ டொழுகப் படும். அ
கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர். கூ
பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும். ௰
எ௰
பொருள் அதி. எக அங்கவியல்

# குறிப்பறிதல்

கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி. ௧

ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். ௨

குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல். ௩

குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு. ௪

குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண். ௫

அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம். ௬

முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும். ௭

முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின். ௮

பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின். ௯

நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற.
௭௧

# அவையறிதல்

அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர். ௧

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லி
னடைதெரிந்த நன்மை யவர். ௨

அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉ மில். ௩

ஒளியார்முன் னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல். ௪

நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு. ௫

ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு. ௬

கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து. ௭

உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று. ௮

புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு
ணன்கு செலச்சொல்லு வார். ௯

அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல். ௰

௭௨

# அவையஞ்சாமை

வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர். க

கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார். ௨

பகையகத்துச் சாவா ரெளிய ரரிய
ரவையகத் தஞ்சா தவர். ௩

கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல். ௪

ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு. ௫

வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
னுண்ணவை யஞ்சு பவர்க்கு. ௬

பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல். ௭

பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
ணன்கு செலச்சொல்லா தார். ௮

கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார். ௯

உளரெனினு மில்லாரொ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார். ௰

தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு. க

பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு. உ

பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறையவற்
கிறையொருங்கு நேர்வது நாடு. ௩

உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு. ௪

பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு. ௫

கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை. ௬

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லாணு நாட்டிற் குறுப்பு. எ

பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம
மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து. அ

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு. ௯

ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை யில்லாத நாடு. ௰

௭௪

பொருள் அதி. ௭௫ அங்கவியல்

அரண்

ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள். க

மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண். உ

உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
னமைவர ணென்றுரைக்கு நூல். ௩

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண். ௪

கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண். ௫

எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண். ௬

முற்றியு முற்றா தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண். எ

முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண். அ

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண். கூ

எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண். ௰

எஅ

அங்கவியல் அதி. எக திருக்குறள்

# பொருள்செயல்வகை

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள். க

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு. உ

பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று. ங

அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். ச

அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல். ரு

உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். சு

அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு. எ

குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை. அ

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில். கூ

ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு. ய



பொருள் அதி. எஎ அங்கவியல்

## படைமாட்சி

உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை. க

உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது. உ

ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும். ங

அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை. ச

கூற்றுடன் று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை. ரு

மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே யேமம் படைக்கு. சு

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து. எ

அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும். அ

சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை. கூ

நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில். ய

எஎ

அங்கவியல் அதி. எஅ திருக்குறள்

# படைச்செருக்கு

என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர். க
கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது. உ
பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு. ௩
கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். ௪
விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி
னொட்டன்றோ வன்க ணவர்க்கு. ரு
விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து. சு
சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து. எ
உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர். அ
இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர். கூ
புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து. ௰
எஅ

# நட்பு

செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு. ௧

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு. ௨

நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு. ௩

நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு. ௪

புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும். ௫

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு. ௬

அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு. ௭

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு. ௮

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை. ௯

இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு. ௰



# நட்பாராய்தல்

நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு. ௧

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும். ௨

குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தியாக்க நட்பு. ௩

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு. ௪

அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல். ௫

கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல். ௬

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல். ௭

உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு. ௮

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
யுள்ளினு முள்ளஞ் சுடும். ௯

மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு. ௰

௮௰

பொருள் அதி. ௮௧ அங்கவியல்

## பழைமை

பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு. ௧

நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன். ௨

பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை. ௩

விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின். ௪

பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின். ௫

எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு. ௬

அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர். ௭

கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின். ௮

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு. ௯

விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார். ௰





# தீநட்பு

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது. ௧

உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென். ௨
உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர். ௩
அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை. ௪
செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
யெய்தலி னெய்தாமை நன்று. ௫
பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும். ௬
நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும். ௭
ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல். ௮
கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. ௯
எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு. ௰

௮௨

பொருள் அதி. ௮௩ அங்கவியல்

## கூடா நட்பு

சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. ௧
இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்

மனம்போல வேறு படும். ௨
பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன் மாணார்க் கரிது. ௩
முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும். ௪
மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று. ௫
நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
லொல்லை யுணரப் படும். ௬
சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான். ௭
தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா
ரழுதகண் ணீரு மனைத்து. ௮
மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று. ௯
பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட்
டகநட் பொரீஇ விடல். ௰

௮௩

அங்கவியல் அதி. ௮௪ திருக்குறள்

## பேதைமை

பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல். ௧
பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை

கையல்ல தன்கட் செயல். ௨

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில். ௩

ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில். ௪

ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு. ௫

பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின். ௬

ஏதிலா ரார்த் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை. ௭

மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின். ௮

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில். ௯

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். ௰

௮௪

பொருள் — அதி. ௮௫ — அங்கவியல்

## புல்லறிவாண்மை

அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு. ௧

அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
மில்லை பெறுவான் றவம். ௨

அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது. ௩

வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு. ௪

கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும். ௫

அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி. ௬

அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. ௭

ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய். ௮

காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு. ௯

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும். ௰

௮௫



## இகல்

இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய். ௧

பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி
யின்னாசெய் யாமை தலை. ௨

இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும். ௩

இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின். ௪

இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர். ௫

இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து. ௬

மிகன்மேவல் மெய்ப்பொருள் காணா ரிகன்மேவ
லின்னா வறிவி னவர். ௭

இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு. ௮

இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு. ௯

இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மென்னுஞ் செருக்கு. ௰

அக

பொருள் அதி. அஎ அங்கவியல்

## பகைமாட்சி

வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை. ௧

அன்பிலூ னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு. ௨

அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு. ரு
நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது. சு
வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது. ௬
காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும். ௭
கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
மாணாத செய்வான் பகை. எ
குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து. அ
செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின். கூ
கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி. ώ

௯௭

அங்கவியல் அதி. அஅ திருக்குறள்

## பகைத்திறந்தெரிதல்

பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று. க
வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. உ
ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்

பல்லார் பகைகொள் பவன். ௩

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு. ௪

தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று. ௫

தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல். ௬

நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து. ௭

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு. ௮

இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து. ௯

உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார். ௰

௮௮

பொருள் அதி. ௮௯ அங்கவியல்

## உட்பகை

நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின். ௧

வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. ௨

உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். ௩

மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா
வேதம் பலவுந் தரும். ௪
உறன்முறை யாணுட்பகை தோன்றி னிறன்முறையா
னேதம் பலவுந் தரும். ௫
ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது. ௬
செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி. ௭
அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி. ௮
எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு. ௯
உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று. ௰

அங்கவியல் அதி. கல திருக்குறள்

# பெரியாரைப்பிழையாமை

ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை. ௧
பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும். ௨
கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி
னாற்று பவர்க ணிழுக்கு. ௩
கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்

காற்றாதா ரின்னா செயல். ௪
யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர். ௫
எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார். ௬
வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாம்
தகைமாண்ட தக்கார் செறின். ௭
குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து. ௮
ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். ௯
இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின். ௰

௯௰

பொருள் அதி. ௯௧ அங்கவியல்

## பெண்வழிச்சேறல்

மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது. ௧
பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். ௨
இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும். ௩
மனையாளை யஞ்சு மறுமையி லாளன்

வினையாண்மை வீறெய்த லின்று. ௫
இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல். ௬
இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர். ௭
பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து. ௮
நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர். ௯
அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில். ௧௦
எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில். ௰

அங்கவியல் அதி. ௯௨ திருக்குறள்

## வரைவின்மகளிர்

அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா
ரின்சொ லிழுக்குத் தரும். ௧
பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல். ௨
பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று. ௩
பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு

லாயு மறிவி னவர். ௪
பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர். ௫
தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள். ௬
நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள். ௭
ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு. ௮
வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு. ௯
இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. ௰



## கள்ளுண்ணாமை

உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார். ௧
உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
னெண்ணப் படவேண்டா தார். ௨
ஈன்றாண் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி. ௩
நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு. ௪

கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல். ௫

துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்று
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். ௬

உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர். ௭

களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும். ௮

களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று. ௯

கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு. ௰

அங்கவியல் அதி. ௯௪ திருக்குறள்

## சூது

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. ௧

ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
லன்றெய்தி வாழ்வதோ ராறு. ௨

உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும். ௩

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில். ௪

கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார். ௫

அகடாரா ரல்லல் உழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார். ௬
பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின். ௭
பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது. ௮
உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின். ௯
இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர். ௰

பொருள் அதி. ௯௫ அங்கவியல்

## மருந்து

மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று. ௧
மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின். ௨
அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு. ௩
அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து. ௪
மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு. ௫
இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்

கழிபே ரிரையான்க ணோய். ௬
தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோய்அள வின்றிப் படும். ௭
நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். ௮
உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல். ௯
உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து. ௰

ஒழிபியல் அதி. ௯௬ திருக்குறள்

## குடிமை

இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு. ௧
ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார். ௨
நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு. ௩
அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர். ௪
வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று. ௫

சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார். ௬
குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து. ௭
நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும். ௮
நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். ௯
நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு. ௰

௯௭

பொருள் அதி. ௬௭ ஒழிபியல்

## மானம்

இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல். ௧
சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். ௨
பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு. ௩
தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. ௪
குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின். ௫
புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்

நிகழ்வார்பின் சென்று நிலை. ௬
ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று. ௭
மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து. ௮
மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின். ௯
இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு. ௰

௧௩

ஒழிபியல் அதி. ௯௮ திருக்குறள்

# பெருமை

ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல். ௧
பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். ௨
மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர். ௩
ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு. ௪
பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல். ௫
சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்

பேணிக்கொள் வேமென்னு நோக்கு. ௬
இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின். ௭
பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து. ௮
பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல். ௯
அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். ௰

௯௯

பொருள் அதி. ௯௯ ஒழிபியல்

## சான்றாண்மை

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. ௧
குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று. ௨
அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண். ௩
கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. ௪
ஆற்றுவா ராற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை. ௫
சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி

துலையல்லார் கண்ணுங் கொளல். கூ
இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு. எ
இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். அ
ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார். கூ
சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது மன்னோ பொறை. ய

கக

ஒழிபியல் அதி. ா திருக்குறள்

## பண்புடைமை

எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு. க
அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு. உ
உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு.. ங
நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு. ச
நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு. ரு
பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேன்
மண்புக்கு மாய்வது மன். சு
அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். எ

நண்பாற்ற ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்ற ராதல் கடை. அ

நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள். கூ

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று. ய

பொருள் அதி. ாக ஒழிபியல்

# நன்றியில்செல்வம்

வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில். க

பொருளானா மெல்லாமென் றீயா திவறு
மருளானா மாணாப் பிறப்பு. உ

ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை. ங

எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா
னச்சப் படாஅ தவன். ச

கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில். ரு

ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவவான் றகவாகோன
நீத லியல்பிலா தான். சு

அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றா டமியண்மூத் தற்று. எ

நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று. அ

அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
வொண்பொருள் கொள்வார் பிறர். கூ
சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து. ௰

௱க

ஒழிபியல் அதி. ௱உ திருக்குறள்

## நாணுடைமை

கருமத்தா னாணுத னாணுத் திருநுதல்
னல்லவர் நாணுப் பிற. க
ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு. உ
ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு
நன்மை குறித்தது சால்பு. ௩
அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற்
பிணியன்றோ பீடு நடை. ச

பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு. ரு
நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். சு
நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
னாண்டுறவார் நாணாள் பவர். எ
பிறர்நாணத் தக்கது தானாணா னாயி

னறநாணத் தக்க துடைத்து. அ
குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை. கூ
நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்ம்ருட்டி யற்று. ௰



பொருள் அதி. ௱௩ ஒழிபியல்

# குடிசெயல்வகை

கரும்ஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில். க
ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையா னீளுங் குடி. உ
குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். ௩
சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு. ௪
குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு. ௫
நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல். ௬
அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை. ௭
குடிசெய்வார்க் கில்லை பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும். அ

இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு. ௯

இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
நல்லா ளிலாத குடி. ௰

ஒழிபியல் அதி. ௱௪ திருக்குறள்

## உழவு

சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை. ௧
உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து. ௨
உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர். ௩
பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர். ௪
இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர். ௫
உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை. ௬
தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். ௭
ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு. ௮
செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்

தில்லாளி னூடி விடும். க
இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும். ம

பொருள் அதி. ௱ஙு ஒழிபியல்

## நல்குரவு

இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது. க
இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும். உ
தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை. ங
இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும். ச
நல்குர வென்னு மிடும்பையுட் பல்குறைத்
துன்பங்கள் சென்று படும். ரு
நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். சு
அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். எ
இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு. அ
நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்

யாதொன்றுங் கண்பா டரிது. ௬

துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று. ௰



## இரவு

இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி
னவர்பழி தம்பழி யன்று. ௧
இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின். ௨
கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து. ௩
இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு. ௪
கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது. ௫
கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும். ௬
இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து. ௭
இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால
மரப்பாவை சென்றுவந் தற்று. ௮

ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோள்
மேவா ரிலாஅக் கடை. ௯
இரப்பான் வெகுளாமை வேண்டு மிடிம்பை
தானேயுஞ் சாலுங் கரி. ௰

பொருள் அதி. ௱எ ஒழிபியல்

## இரவச்சம்

கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு
மிரவாமை கோடி யுறும். ௧
இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான். ௨

இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில். ௩
இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு. ௪
தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில். ௫
ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில். ௬
இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று. ௭
இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும். ௮

இரவுள்ள வுள்ள முருகுங் காவுள்ள
வுள்ள தூஉ மின்றிக் கெடும். கூ
காப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர். ய

ாஎ

ஒழிபியல் அதி. ௱௮ திருக்குறள்

## கயமை

மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில். க
நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர். உ
தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான். ங
அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ். ச
அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது. ரு
அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். சு
ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு. எ

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ். அ
உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ். கூ
எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து. ω

௱௮

# காமத்துப்பால்

அதி. ௱௯ **களவியல்**

## தகையணங்குறுத்தல்

அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு. க
நோக்கினா ணோக்கெதிர் நோக்குத லாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து. உ
பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு. ௩
கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண். ௪
கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
னோக்கமிம் மூன்று முடைத்து. ௫

கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண். ௬
கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் றுகில். ௭
ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு. ௮
பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து. ௯
உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று. ௰

௱௯

களவியல் அதி. ௱௰ திருக்குறள்

## குறிப்பறிதல்

இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து. ௧
கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது. ௨
நோக்கினா ணோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர். ௩
யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும். ௪
குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்

சிறக்கணித்தாள் போல நகும். ௫
உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ
லொல்லை யுணரப் படும். ௬
செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
முறாஅர்போன் றுற்றார் குறிப்பு. ௭
அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள் பைய நகும். ௮
ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள. ௯
கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
ளென்ன பயனு மில. ௰

காமம் அதி. ௧௧௧ களவியல்

## புணர்ச்சிமகிழ்தல்

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
மொண்டொடி கண்ணே யுள. ௧
பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து. ௨
தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு. ௩
நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள். ௪
வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள். ௫

உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள். ௬
தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு. ௭
வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு. ௮
ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன். ௯
அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு. ௰

***

களவியல் அதி. ௧௧௨ திருக்குறள்

## நலம்புனைந்துரைத்தல்

நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள். ௧
மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று. ௨
முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு. ௩
காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று. ௪
அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை. ௫

மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன். ௬

அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து. ௭

மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி. ௮

மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி. ௯

அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம். ௰

௧௧௨.

காமம் அதி. ௧௧௩ களவியல்

## காதற்சிறப்புரைத்தல்

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர். ௧

உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு. ௨

கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம். ௩

வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து. ௪

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம். ௫

கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர். ௬

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து. ௭

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து. ௮

இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
யேதில ரென்னுமிவ் வூர். ௯

உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர். ௰





## நாணுத்துறவுரைத்தல்

காம முழந்து வருந்தினார்க் கேம

மடலல்ல தில்லை வலி. ௧

நோனா வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து. ௨

நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல். ௩

காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை. ௪

தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு
மாலை யுழக்குந் துயர். ௫

மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண். ௬

கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில். ௭

நிறையரியர் மன்னளிய ரென்னாது காம
மறையிறந்து மன்று படும். ௮

அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு. ௯

யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு. ௰

காமம் அதி. ௧௧௪ களவியல்

## அலரறிவுறுத்தல்

அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்

பலரறியார் பாக்கியத் தால். க
மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர். உ
உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து. ங
கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
றவவென்னுந் தன்மை யிழந்து. ச
களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது. ரு
கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று. சா
ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொன்
னீராக நீளுமிந் நோய். எ
நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காம நுதுப்பே மெனல். அ
அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை. கூ
தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்கு மிவ்வூர் ௰

கற்பியல் அதி. ககசு திருக்குறள்

## பிரிவாற்றாமை

செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை. ௧
இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு. ௨
அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான். ௩
அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு. ௪
ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு. ௫
பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை. ௬
துறைவன் றுறந்தமை தூற்றாகொன் முன்கை
யிறையிறவா நின்ற வளை. ௭
இன்னா தினனில்லூர் வாழ்த லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு. ௮
தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ. ௯
அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர். ௰



## படர்மெலிந்திரங்கல்

மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்

ஊற்றுநீர் போல மிகும். க
கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும். உ
காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனா வுடம்பி னகத்து. ௩
காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து
மேமப் புணைமன்னு மில். ௪
துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர். ௫
இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது. ௬
காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன். ௭
மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
வென்னல்ல தில்லை துணை. ௮
கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா
ணெடிய கழியு மிரா. ௯
உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண். ௰

[redacted]

கற்பியல் அதி. ககஅ திருக்குறள்

## கண்விதுப்பழிதல்

கண்டாங் கலுழ்வதெவன் கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது. க

தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைத லுழப்ப தெவன். உ
கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து. ந
பெயலாற்ரு நீருலந்த வுண்க ணுயலாற்ரு
வுய்விஞெ டென்க ணிறுத்து. ச
படலாற்ரு பைத லுழக்குங் கடலாற்ருக்
காமநோய் செய்தவென் கண். ரு
ஓஒ வினிதே யெமக்கிநோய் செய்தகண்
டாஅ மிதற்பட் டது. சு
உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண். எ
பேணது பெட்டா ருளர்மன்னுே மற்றவர்க்
காணு தமைவில கண். அ
வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண். கூ
மறைபெற லூரார்க் கரிதன்ரு லெம்போ
லறைபறை கண்ணு ரகத்து. ய

கசஅ

காமம் அதி. ககக கற்பியல்

## பசப்புறுபருவரல்

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற. க
அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்

மேனிமே லூரும் பசப்பு. உ
சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறு
நோயும் பசலையுந் தந்து. ௩
உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு. ௪
உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது. ௫
விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு. ௬
புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு. ௭
பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில். ௮
பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின். ௯
பசப்பெனப் பேர்பெறுத னன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்று ரெனின். ௰

* * *

கற்பியல் அதி. ௧௨௰ திருக்குறள்

# தனிப்படர்மிகுதி

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி. ௧
வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி. உ

வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு. ௩
வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின். ௪
நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை. ௫
ஒருதலையா னின்னாது காமங்காப் போல
விருதலை யானு மினிது. ௬
பருவரலும் பைதலுங் காணான்கொல் காம
னொருவர்க ணின்றொழுகு வான். ௭
வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில். ௮
நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையு மினிய செவிக்கு. ௯
உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு. ௰

௧௨௰

காமம் அதி. ௧௨௩ கற்பியல்

## நினைந்தவர்புலம்பல்

உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது. ௧
எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில். ௨

நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
சினைப்பது போன்று கெடும். ௩

யாமு முளேங்கொ லவர்நெஞ்சத் தெந்நெஞ்சத்
தோஒ வுளரே யவர். ௪

தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொ
லெந்நெஞ்சத் தோவா வரல். ௫

மற்றியா னென்னுளேன் மன்னோ வவரொடியா
னுற்றநா ளுள்ள வுளேன். ௬

மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியேன்
உள்ளினு முள்ளஞ் சுடும். ௭

எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு. ௮

விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து. ௯

விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி. ௰

௧௨௧

கற்பியல் அதி. ௧௨௨ தி. ன்

## கனவுநிலையுரைத்தல்

காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து. ௧

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன். ௨

நனவினா னல்கா தவரைக் கனவினாற்
காண்டலி னுண்டென் னுயிர். ௩

கனவினா னுண்டாகுங் காம நனவினா
னல்காரை நாடித் தாற்கு. ௪

நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது. ௫

நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன். ௬

நனவினா னல்காக் கொடியார் கனவினா
னென்னெம்மைப் பீழிப் பது. ௭

துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா
னெஞ்சத்த ராவர் விரைந்து. ௮

நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர். ௯

நனவினா னந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர். ௰

௧௨௨



## பொழுதுகண்டிரங்கல்

மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது. ௧

புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை. ௨

பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும். ௩

காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும். ௪

காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை. ௫

மாலைநோய் செய்தல் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன். ௬

காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய். ௭

அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை. ௮

பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து. ௯

பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர். ௰

௧௨௩

கற்பியல் அதி. ௧௨௪ திருக்குறள்

## உறுப்புநலனழிதல்

சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண். ௧

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண். ௨

தணந்தமை சால வறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள். ௬
பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். ௭
கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். ௮
தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
கொடிய ரெனக்கூற னொந்து. ௯
பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து. ௧௦
முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல். ௧௧
முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண். ௧௨
கண்ணின் பசப்போ பருவா லெய்தின்றே
யொண்ணுதல் செய்தது கண்டு. ௧௩

காமம் அதி. கஉ௯ கற்பியல்

## நெஞ்சொடுகிளத்தல்

நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்று
மெவ்வநோய் தீர்க்கு மருந்து. ௧
காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு. ௨

இருந்துள்ளி யென்பரித நெஞ்சே பரிந்துள்ளல்
பைதனோய் செய்தார் கணில். ௫
கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
தின்னு மவர்க்காண லுற்று. ௬
செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா லுறாஅ தவர். ௭
கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்திியென் னெஞ்சு. ௮
காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு. ௯
பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு. ௮
உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு. ௯
துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
வின்னு மிழத்துங் கவின். ௰

௧௨௫

கற்பியல் அதி. ௧௨௬ திருக்குறள்

## நிறையழிதல்

காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. ௧
காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில். ௨

மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போற் றோன்றி விடும். ௩
நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காம
மறையிறந்து மன்று படும். ௪

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன் றன்று. ௫
செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
வெற்றென்னை யுற்ற துயர். ௬
நாணென வொன்றோ வறியலங் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின். ௭
பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை. ௮
புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சங்
கலத்த லுறுவது கண்டு. ௯
நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல். ௰

[redacted]

காமம் அதி. ௧௨௭ கற்பியல்

# அவர்வயின்விதும்பல்

வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல். ௧
இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற்
கலங்கழியுங் காரிகை நீத்து. ௨

ஊனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன். ௩
கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு. ௪
காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபி
னீங்குமென் மென்றோட் பசப்பு. ௫
வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
பைதனோ யெல்லாங் கெட. ௬
புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின். ௭
வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து. ௮
ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு. ௯
பெறினென்னாம் பெற்றக்கா லென்னா முறினென்னா
முள்ள முடைந்துக்கக் கால். ௰

7 ௧௨௭

கற்பியல் அதி. ௧௨௮ திருக்குறள்

## குறிப்பறிவுறுத்தல்

கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்கண்
ணுரைக்க லுறுவதொன் றுண்டு. ௧
கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது. ௨

மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியிற் றிகழ்வதொன் றுண்டு. ௩

முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு. ௪

செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து. ௫

பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து. ௬

தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை. ௭

நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து. ௮

தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது. ௯

பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு. ௰

௧௨௯

காமம் அதி. ௧௨௯ கற்பியல்

## புணர்ச்சி விதும்பல்

உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு. ௧

தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
காம நிறைய வரின். ௨

பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணா தமையல கண். ௩

ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு. ௪

எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து. ௫

காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
காணேன் றவறல் லவை. ௬

உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து. ௭

இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு. ௮

மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார். ௯

கண்ணிற் றுனித்தே கலங்கினாள் புல்லுத
லெண்ணினுந் தான்விதுப் புற்று. ௰

௪௨௧

கற்பியல் அதி. ௧௩௰ திருக்குறள்

## நெஞ்சொடுபுலத்தல்

அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது. ௧

உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாஅரெனச் சேறியென் னெஞ்சு. ௨

கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல். ௩

இனியன்ன நின்னொடு சூழ்வாரியார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று. ௪

பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
முறாஅ விடும்பைத்தென் னெஞ்சு. ௫

தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு. ௬

நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணா மடநெஞ்சிற் பட்டு. ௭

எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற
முள்ளு முயிர்க்காத னெஞ்சு. ௮

துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி. ௯

தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி. ௰

முற்று

காமம் அதி. ௧௩௰ கற்பியல்

## புலவி

புல்லா திராஅப் புலத்தை யவருறு
மல்லனோய் காண்கஞ் சிறிது. ௧

உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றா னீள விடல். ௨

அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். ௩
ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. ௪
நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து. ௫
துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று. ௬
ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று. ௭
நோதல் எவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி. ௮
நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது. ௯
ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா. ௰

௩௨௩

கற்பியல் அதி. ௩௨ திருக்குறள்

## புலவி நுணுக்கம்

பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பா
ரண்ணேன் பரத்தநின் மார்பு. ௧
ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து. ௨

கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று. ௩
யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று. ௪
இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள். ௫
உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள். ௬
வழுத்தினா டும்மினே னாக வழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று. ௭
தும்முச் செறுப்ப வழுதா ணுமருள்ள
லெம்மை மறைத்திரோ வென்று. ௮
தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரிந்நீர ராகுதி ரென்று. ௯
நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று. ௰

௱௩௨

காமம் அதி. ௱௩௩ கற்பியல்

## ஊடலுவகை

இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு. ௧
ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும். ௨

புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து. ௩

புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை. ௪

தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னாங்கொன் றுடைத்து. ௫

உணலினு முண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது. ௬

ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும். ௭

ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு. ௮

ஊடுக மன்னோ வொளியிழை [illegible] மிரப்ப
நீடுக மன்னோ விரா. ௯

ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின். ௰

[illegible]

# திருவள்ளுவமாலை

திருச்சிற்றம்பலம்

---

சிறப்புப்பாயிரமாகிய

# திருவள்ளுவமாலை

அசரீரி

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க-விருக்க
வுருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ வென்றதோா சொல்.

நாமகள்

நாடா முதனூன் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்-கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு. உ

இறையனார்

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்-குன்றாத்
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.. ந

கடு

திருவள்ளுவமாலை
உக்கிரப்பெருவழுதியார்

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா
[நான்முகத்தோன்

ருன்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த - நூன்
[முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி. ௨

கபிலர்

தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால்-மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி. ௫

பரணர்

மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞால முழுது நயந்தளந்தான்-வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தா
ருள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து. ௬

நக்கீரர்

தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளா
லானா வறமுதலா வந்நான்கு-மேனோருக்
கூழி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று. ௭

[illegible]

திருவள்ளுவமாலை

மாமூலனார்

அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்

பிறந்தெரிந்து செப்பிய தேவை-மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார். ௮

கல்லாடர்

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனி
னன்றென்ப வாறு சமயத்தார்-நன்றென
வெப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி. ௯

சீத்தலைச்சாத்தனார்

மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியு
மும்முரசு முத்தமிழு முக்கொடியு-மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாண்டே
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால். ௰

மருத்துவன்றாமோதரனார்

சிந்நீர்க் கண்டந் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்-காந்தி
மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலாற்
றலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு. ௧௧



நாகன்றேவனார்

தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீரை

வேளா தொழிதல் வியப்பன்று-வாளாதா
மப்பா லொருபாவை யாய்பவோ வள்ளுவனார்
முப்பான் மொழிமூழ்கு வார். ௧௨

அரிசில்கிழார்

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறுஞ் சேரச்-சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல
வல்லாரார் வள்ளுவரல் லால். ௧௩

பொன்முடியார்

சானின்ற தொங்கலாய் காசிபனார் தந்ததுமுன்
கூறின் றளந்த குறளென்ப-நூன்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனார்
தானின் றளந்த குறள். ௧௪

கோதமனார்

ஆற்ற லழியுமென் றந்தணர்க ளான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதா-ரேட்டெழுதி
வல்லாரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினு மாற்றல்சோர் வின்று. ௧௫

[redacted]

திருவள்ளுவமாலை

நத்தத்தனார்

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்-போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம். கசு

முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்

உள்ளுத லுள்ளி யுரைத்த லுரைத்ததனைத்
தெள்ளுத லன்றே செயற்பால-வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்பகர்வா
ரெப்பா லவரினு மில். கஎ

ஆசிரியர் நல்லந்துவனார்

சாற்றிய பல்கலையுந் தப்பா வருமறையும்
போற்றி யுரைத்த பொருளெல்லாந்-தோற்றவே
முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பா
ரெப்பா லவரினு மில். கஅ

கீரந்தையார்

தப்பா முதற்பாவாற் றமாண்ட பாடலினான்
முப்பாலி னாற்பான் மொழிந்தவ-ரெப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர். க௯



திருவள்ளுவமாலை

### சிறுமேதாவியார்

வீடொன்று பாயிர நான்கு விளங்கற
னாடிய முப்பத்து மூன்றொன் றூழ்-கூடுபொரு
ளெள்ளி லெழுப திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை. உ௰

### நல்கூர்வேள்வியார்

உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தா
னுத்தர மாமதுரைக் கச்சென்ப-விப்பக்க
மாதானு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு. உக

### தொடித்தலைவிழுத்தண்டினார்

அறநான் கறிபொரு ளேழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து-பெறலரிய
நாலு மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலு மொழிந்த பொருள். உஉ

### வெள்ளிவீதியார்

செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே-செய்யா
வதற்குரிய ரந்தணரே யாராயி னேனை
யிதற்குரிய ரல்லாதா ரில். உங

மாங்குடி மருதனார்

ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்-தீதற்றோ
ருள்ளுதொ றுள்ளுதொ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு. உ௪

எறிச்சலூர் மலாடனார்

பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக-வாய
வறத்துப்பா னால்வகையா வாய்ந்துரைத்தார் நூலின்
றிறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து. உ௫

போக்கியார்

அரசிய லையைந் தமைச்சிய லீரைந்
தருவல் லரணிரண்டொன் றொண்கூ-ழிருவியல்
றிண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொரு ளேழா மிவை. உ௬

மோசி கீரனார்

ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராறாக-மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
காமத்தின் வள்ளுவனார் நன்கு. உ௭

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்
ஐயாறு நூறு மதிகார மூன்றுமா
மெய்யாய வேதப் பொருள்விளங்கப்-பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனாகி
யந்தா மரைமே லயன். உஅ

மதுரைத் தமிழ்நாகனார்
எல்லாப் பொருளு மிதன்பா லுளவிதன்பா
லில்லாத வெப்பொருளு மில்லையாற்-சொல்லாற்
பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை. உகூ

பாரதம்பாடிய பெருந்தேவனார்
எப்பொருளும் யாரு மியல்பி னறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாஞ் செப்பவரு-முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர். ௩௰

உருத்திரசன்மகண்ணர்
மணற்கிளைக்க நீரூறு மைந்தர்கள் வாய்வைத்
துணச்சுரக்குந் தாய்முலை யொண்பால்-பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பான் மதிப்புலவோர்க்

கசஉ.

திருவள்ளுவமாலை

பெருஞ்சித்திரனார்

எல்லாஞ்சொல் வள்ளுவ ரின்குறள்வெண் பாவினு
லோதிய வொண்பொரு ளெல்லா-முரைத்ததனாற்
றூதவிழ் தார்மாற தாமே தமைப்பயந்த
வேதமே மேதக் கன. கஉ

நரிவெரூஉத்தலையார்

இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கு
முன்பறியச் சொன்ன முதுமொழிநூன-மனபகைக்
குள்ள வரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள். கங

மதுரைத்தமிழாசிரியர் செங்குன்றூர்கிழார்

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்ப-னிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்
கறங்கிருண்மா லைக்கும் பெயர். கச

மதுரையறுவைவாணிகன் இளவேட்டனார்

இன்பமுந் துன்பமு மென்னு மிவையிரண்டு

மன்பதைக் கெல்லா மனமகிழ-வன்பொழியா
துன்னி யுணர் வுரைத்தாரே யோதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து. கூசு

திருவள்ளுவமாலை

கவிசாகரப் பெருந்தேவனர்

பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனத
மாவிற் கருமுனியா யானைக்-கமரரும்ப
ரேவிற் றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா. கூசு

மதுரைப பெருமருதனர்

அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்
திறமிருபத் தைந்தாற் றெளிய-முறைமையால்
வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனு
ரோதவழுக் கற்ற துலகு. கூஎ

கோவூர்கிழார்

அறமுத லைன்கு மகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தேர்ந்து தெளியக்-குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனர் பான்முறைநே ரொவ்வாதே
முன்னை முதுவோர் மொழி. கூஅ

உறையூர் முதுகூற்றனர்

தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண்
பாவிற் சிறந்திடுமேப் பால்பகரார்-நாவிற்
குயவில்லை சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ்
செயலில்லை யென்னுந் திரு. கக

திருவள்ளுவமாலை

இழிகட்பெருங்கண்ணனார்

இம்மை மறுமை யிரண்டு மெழுமைக்குஞ்
செம்மை நெறியிற் றெளிவுபெற-மும்மையின்
வீடவற்றி னின்கின் விதிவழங்க வள்ளுவனார்
பாடின ரின்குறள்வெண் பா. சய

செயிர்க்காவிரியார்மகனார் சாத்தனார்

ஆவனவு மாகா தனவு மறிவுடையார்
யாவரும் வல்லா ரெடுத்தியம்பத்-தேவர்
திருவள் ளுவர்தாமுஞ் செப்பியவே செய்வார்
பொருவி லொழுக்கம்பூண் டார். சக

செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனார்

வேதப் பொருளை விரகால் விரித்துலகோ
ரோதத் தமிழா லுரைசெய்தா-ராதலா
லுள்ளுநருள்ளும் பொருளெல்லா முண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு. சஉ

வண்ணக்கஞ் சாத்தனா

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதா-லாரியம்
வேத முடைத்து தமிழ்திரு வள்ளுவனா
ரோது குறட்பா வுடைத்து. ௪௬



திருவள்ளுவமாலை

களத்தூர்கிழார்

ஒருவ ரிருகுறளே முப்பாலி னோதுந்
தரும முதனான்குஞ் சாலு-மருமறைக
ளைந்துஞ் சமயநூ லாறும் வள்ளுவனார்
புந்தி மொழிந்த பொருள். ௪௭

நச்சுமனார்

எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
வழுக்கில் வனப்பணி வண்ண-மிழுக்கின்றி
யென்றெவர் செய்தன வெல்லா மியம்பின
வின்றிவ ரின்குறள் வெண்பா. ௪௮

அக்காரக்கனி நச்சுமனார்

கலைநிரம்பிக் காண்டற் கினிதாகிக் கண்ணி
னிலைநிரம்பு நீர்மைத் தெனினுந்-தொலைவிலா
வானூர் மதியந் தனக்குண்டோ வள்ளுவர்முப்
பானூ னயத்தின் பயன். ௪௯

பாதான், துன்பததுள துன்பம் உறுதல் இலன் - துன்பம வந்துழி யும அதனை அனுபவியாநின்றே மனததான் வருகதான்.

துன்பம் - முயற்சியான் வரும் இடுக்கண். இரண்டையும் ஒருதன்மையாகக் கோடலின், பயன்களும இலவாயின. (9)

இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்
ஒன்னார் விழையும் சிறப்பு. 630

இன்னாமை இன்பம் எனக் கொளின்-ஒருவன் வினை செய்யும் இடத்து முயற்சியான் வரும் துன்பந்தன்னையே தனக்கு இன்ப மாகக் கற்பிததுக்கொளவல்லனின், தன் ஒன்னா விழையும சிறப்பு ஆகும் அதனால் தன் பகைவர் நன்கு மதிததற்கு ஏதுவாய உயர்சசி உண்டாம்.

துன்பம்தானும் உயிர்க்கு இயல்பன்றிக் கணிகமாய் மனத் திடை நிகழவதோர் கோட்பாடு ஆகலின், அதனை மாறுபடக் கொள்ளவே, அதறகு அழிவு இன்றி மனமகிழசசி உடையனாய் அதனால தொடங்கியவினை முடிததேவிடும ஆற்றலுமஉடையனாம் என்பது கருதது.

இவை நான்கு பாட்டானும் மெய்வருத்ததான் ஆயதற்கு அழியாமையும் அதறகு உபாயமும் கூறப்பட்டன, (10)

அரசியல முற்றும்

—: 0 :—

# அங்க இயல்

—: 0 :—

இனி முறையானே அரசியல் நடாததுதற்கண் ஒன்றற்கு ஒன்று துணையாய அங்கங்கள ஆறனது இயல்பு முப்பததிரண்டு அதிகாரததால கூறுவான் எடுததுக்கொண்டு, அவை ஆறனுள ளும "காவற் சாகாடு உகைததற" (புறநா. 186) கண் அவ் அரசற்கு இணையாய அமைச்சனது இயல்பு பதது அதிகாரததால் கூறு வான் தொடங்கி, முதற்கண் அமைச்சுக் கூறுகின்றார்.

# 64. அமைச்சு

அஃதாவது அமைச்சனது தன்மை, என்றது அவன் தன் குணங்களையும் செயல்களையும.

கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு. 631

கருவியும் - வினைசெய்யுங்கால் அதற்கு வேண்டும் கருவிகளும், காலமும் - அதற்கு ஏற்ற காலமும, செய்கையும் - அது செய்யுமாறும், செய்யும அருவினையும் - அவ்வாற்றில் செய்யப்படும் அவ் அரிய வினைதானும், மாண்டது அமைச்சு - வாய்ப்ப எண்ண வல்லவனே அமைச்சனாவான்.

கருவிகள - தானையும் பொருளும. காலம் - அது தொடங்கும் காலம். செய்கை எனவே, அது தொடங்கும உபாயமும், இடையூறு நீக்கி முடிவுபோக்குமாறும அடங்கின. சிறிய முயற்சியால் பெரிய பயன் தருவது என்பார், 'அருவினை' என்றார்.

இவை ஐந்தனையும் வடநூலார் மந்திரத்திற்கு அங்கம என்ப. (1)

வன்கண் குடிகாத்தல் கற்றுஅறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்டது அமைச்சு. 632

வன்கண் - வினைசெய்தற்கண் அசைவின்மையும், குடி காத்தல் குடிகளைக் காத்தலும, கற்று அறிதல் நீதிநூல்களைக் கற்றுச் செய்வன தவிர்வன அறிதலும, ஆள்வினையொடு - முயற்சியும், ஐந்துடன் மாண்டது அமைச்சு - மேற்சொல்லிய அவ் அங்கங்கள ஐந்துடனே திருந்த உடையானே அமைச்சனாவான்.

எண்ணொடு நீண்டது. 'அவ் ஐந்து' எனச் சுட்டு வருவிக்க. இலக்கணங்களையும் மேற் கூறியவற்றோடு தொகுத்துக் கூறியது அவையும் இவற்றோடு கூடியே மாட்சிமைப்பட வேண்டுதலானும், அவற்றிற்கு ஐந்து என்னும் தொகை பெறுதற்கும். இனி இதனை ஈண்டு எண்ணியவற்றிற்கே தொகையாக்கிக் குடிகாத்தல் என்பதனைக் குடிப்பிறப்பும், அதனை ஒழுக்கத்தால் காத்தலும் எனப் பகுப்பாரும், 'கற்று அறிதல்' என்பதனைக் கற்றலும் அறிதலும் எனப் பகுப்பாரும் உளர். அவர் 'உடன்' என்பதனை முற்று உம்மைப் பொருட்டாக்கியும், 'குடி' என்பதனை ஆகுபெயராக்கியும் இடர்ப்படுப. (2)

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்லது அமைச்சு. 633

*பிரித்தலும் - வினை வந்துழிப் பகைவர்க்குத் துணையாயினாரை அவரிற் பிரிக்கவேண்டின் பிரித்தலும், பேணிக்கொளலும் - தம்*



*பாலாரை அவர் பிரியாமல் கொடை இன்சொற்களால் பேணிக் கொள்ளுதலும், பிரிந்தார்ப் பொருத்தலும் - முன்னே தம்மினும் தம்பாலாரினும் பிரிந்தாரை மீண்டும் பொருத்த வேண்டின் பொருத்தலும், வல்லது அமைச்சு-வல்லவனே அமைச்சனாவான்.*

*இவற்றுள் அப்பொழுதை நிலைக்கு ஏற்ற செயலறிதலும் அதனை அவர் அறியாமல் ஏற்ற உபாயத்தால் கடைப்பிடித்தலும் அரியவாதல் நோக்கி 'வல்லது' என்றார். வடநூலார் இவற்றுள் பொருத்தலை 'சந்தி' என்றும், பிரித்தலை 'விக்கிரகம்' என்றும் கூறுப.* (3)

தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு. 634

*தெரிதலும் - ஒருகாரியச்செய்கை பலவாற்றால் தோன்றின் அவற்றுள் ஆவது ஆராய்ந்தறிதலும், தேர்ந்து செயலும் - அது செய்யுங்கால் வாய்க்கும் திறன் நாடிச் செய்தலும், ஒருதலையாச் சொல்லலும்-சிலரைப் பிரித்தல் பொருத்தல்செயற்கண் அவர்க்கு இதுவே செயற்பாலது என்று துணிவு பிறக்கும்வகை சொல்லு*

தலும், வல்லது அமைச்சு - வல்லவனே அமைச்சனுவான்.

தெரிதல் செயல்மேலதாயிற்று, வருகின்றது அதுவாகலின்.()

**அறன்அறிந்து ஆன்றுஅமைந்த சொல்லான்எஞ் ஞான்றும்**
**திறன்அறிந்தான் தேர்ச்சித் துணை. 635**

அறன் அறிந்து ஆன்று அமைந்த சொல்லான் - அரசனுல் செய்யப்படும் அறங்களை அறிந்து தனக்கு ஏற்ற கலவியான் நிறைந்து அமைந்த சொல்லை உடையனுய், எஞ்ஞான்றும் திறன் அறிந்தான் - எக்காலத்தும் வினை செய்யும் திறங்களை அறிந்தான், தேர்ச்சித் துணை - அவர்க்குச் சூழ்ச்சித் துணையாம்.

தன் அரசன் சுருங்கிய காலத்தும் பெருகிய காலத்தும் இடை நிகராய காலத்தும் என்பார், 'எஞ்ஞான்றும்' என்ருர். 'சொல லான்' என்பதனை 'ஒடு' உருபின் பொருட்டாய ஆனுருபாக்கி உரைப்பாரும் உளர்.

இவை ஐந்து பாட்டானும் அமைச்சரது குணத் தன்மை கூறப்பட்டது. (5)

**மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்**
**யாவுள முன்நிற் பவை. 636**

மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு - இயற்கையாகிய நுண் ணறிவைச் செயற்கை ஆகிய நூலறிவோடு உடையராய அமைச் சர்க்கு, அதி நுட்பம் முன் நிற்பவை யா உள - மிக்க நுட்பத்தை யுடைய சூழ்ச்சிகளாய் முன் நிற்பன யாவை யுள?

'மதிநுட்பம்' என்பது பின்மொழிநிலையல். அது தெய்வம்தர வேண்டுதலின் முற் கூறப்பட்டது. 'நூல்' என்பதூஉம் 'அதி

நுட்பம்' என்பதூஉம் ஆகுபெயர். 'அறி' என்பது வடசொல்லின் மிகுதிப்பொருளை தருவதோர் இடைச்சொல், அது நிரிந்து நுட்பம் என்பதனோடு தொக்கது. முன் நிற்றல் - மாற்றார் சூழ்ச்சியாயின் தம் சூழ்ச்சியால் அறியாதுமை நிற்றல். இனி, 'அறிநுட்பம்' என்று பாடம் ஓதி, அதனின் நுட்பம் யா என்று உரைப்பாரும் உளர். அவர் சூழ்ச்சிக்கு இனமாய் முன் சுட்டப்படுவது ஒன்றில்லாமை யும், சுட்டுப் பெயர் ஐந்தாம் உருபு ஏற்றவழி அவ்வாறு நில்லாமை யும் அறிந்திலர். பகைவர் சூழ்வனவற்றைத் தாம் அறிந்து அழித்து அவர் அறிந்து அழியாதன தாம் சூழவர் என்பது கருத்து.

இதனான் அவரது சிறப்புக் கூறப்பட்டது. (6)

செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல். 637

செயற்கை அறிந்தக் கடைத்தும் - நூல் நெறியான் வினை செய்யும் திறங்களை அறிந்த இடத்தும், உலகத்து இயற்கை அறிந்து செயல் - அப்பொழுது நடக்கின்ற உலக இயற்கையை அறிந்து அதனோடு பொருந்தச் செய்க.

'கடைத்தும்' என்புழி, து, பகுதிப்பொருள விகுதி. நூல் நெறியே ஆயினும் உலக நெறியோடு பொருந்தாதன செய்யற்க, செய்யின் அது பழிக்கும் என, இயற்கை அறிவால் பயன் கூறிய வாறு. (7)

அறிகொன்று அறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன். 638

அறி கொன்று அறியான் எனினும் - அறிந்து சொல்லியாரது அறிவையும் அழித்து அரசன் தானும் அறியானே ஆயினும், உறுதி கூறல் உழையிருந்தான் கடன் - அக்குற்றம் நோக்கி ஒழி யாது அவனுக்கு உறுதியாயின கூறுதல் அமைச்சனுக்கு

முறைமை.

'அறி' என்பது முதனிலைத் தொழிற்பெயர். கோறல் - தான் கொள்ளாமை மேலும் இகழ்ந்து கூறுதல். 'உழையிருந்தான்' எனப் பெயர்கொடுத்தார், 'அமாத்தியர்' என்னும் வடமொழிப் பெயர்க்கும் பொருண்மை அதுவாகலின். உறுதி கூறுங்கால் அவனது இறுதி எய்தல் குற்றத்தை உலகம் தன்மேல் ஏற்றும் என்பார், 'கூறல் கடன்' என்றார்.

இவை இரண்டு பாட்டானும் அவர் செயல் கூறப்பட்டது. (8)

பழுதுஎண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்ஓர்
எழுபது கோடி யுறும். 639

*பக்கத்துள் பழுது எண்ணும் மந்திரியின்* - பக்கத்திருந்து பிழைப்ப எண்ணும் அமைச்சன் ஒருவனில், ஓரெழுபது கோடி



*தெவ் உறும்* - அரசனுக்கு எதிர் நிற்பார் ஓரெழுபதுகோடி பகைவர் உறுவர்.

'எழுபது கோடி' என்றது மிகப்பலவாய எண்ணிற்கு ஒன்று காட்டியவாறு. வெளிப்பட நிற்றலான் அவர் காக்கப்படுவர், இவன் உட்பகையாய் நிற்றலான் காக்கப்படான் என்பது பற்றி இவ்வாறு கூறினார். 'எழுபதுகோடி மடங்கு நல்லர்' என்று உரைப்பாரும், 'எழுபதுகூறு நலி' என்று பாடம் ஓதுவாரும் உளர். (9)

முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பாடு இலாஅ தவர். 640

*முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர்* - செய்யப்படும் வினைகளை முன் அடைவுபட எண்ணிவைத்தும், செய்யுங்கால் அவை முடிவிலவாகவே செய்யாநிற்பர், *திறப்பாடு இலாதவர்* - முடித்தற்கு ஏற்ற கூறுபாடு இல்லாதார்.

அக்கூறுபாடாவன வந்த வந்த இடையூறுகட்கு ஏற்ற ஏற்ற பரிகாரம் அறிந்து செய்தலும், தாம் திண்ணியராதலுமாம். பிழையாமல் எண்ண வல்லராய் வைத்தும் செய்துமுடிக்க மாட்டாரும் உளர் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் அமைச்சருள் விடப்படுவாரது குற்றம் கூறப்பட்டது. (10)

## 65. சொல் வன்மை

அஃதாவது தான் கருதிய வினை முடியுமாற்றால் அமைச்சியல் நடத்தற்கு ஏதுவாய சொற்களைச் சொல்ல வல்லனாதல். மேல் "ஒருதலையாச் சொல்லலும் வல்லது" (குறள். 634) என்றதனையே சிறப்புப் பற்றி விரித்துரைக்கின்றமையின், இஃது அமைச்சின் பின் வைக்கப்பட்டது.

நாநலம் என்னும் நலன்உடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று. 641

நாநலம் என்னும் நலன் உடைமை - அமைச்சர்க்கு இன்றியமையாக் குணமாவது சான்றோரான் நாநலம் என்று சிறப்பித்துச் சொல்லப்படும் நலத்தினை உடையராதல், அந்நலம் யாநலத்து உள்ளதூஉம் அன்று - அந்நலம் பிறர்க்கும் பிறநலம் எல்லாவற்றுளளும் அடங்குவதன்றி மிக்கது ஆகலான்.

நாவால் உளதாய நலம் என விரியும். 'இந்நலம் உலகத்தைத் தம் வயத்ததாக்கும் அமைச்சர்க்கு வேருக வேண்டும்' என்னும் நீதிநூல் வழக்குப்பற்றி 'நாநலம் என்னும் நலன்' என்றும், பிறர்க்கும் இதுபோல் சிறந்தது பிறிது இன்மையான், 'அந்நலம் யாநலத்துள்ளதூஉம் அன்று' என்றும் கூறினார். பிரித்தல்



பொருத்தல் முதலிய தொழில் இல்லாதார்க்கும் இஃது இன்றியமையாததாயின் அத்தொழிலார்க்குக் கூறவேண்டுமோ என்பது கருத்து. (1)

ஆக்கமும் கேடும் அதனால் வருதலான்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு. 642

ஆக்கமும் கேடும் அதனால் வருதலால் - தம் அரசர்க்கும் அங்கங்கட்கும் ஆக்க அழிவுகள் தம் சொல்லான் வரும் ஆகலான்,

சொல்லின்கண் சோர்வு காத்து ஓம்பல் - அப்பெற்றித்தாய சொல்லின்கண் சோர்தலை அமைச்சர் தம்கண் நிகழாமல் போற்றிக் காக்க.

ஆக்கத்திற்கு ஏதுவாய நற்சொல்லையும், கேட்டிற்கு ஏதுவாய தீச்சொல்லையும், சொல்லாதல் ஒப்புமை பற்றி 'அதனால்' என்றார்

செய்யுள் ஆகலின், சுட்டுப்பெயர் முன்வந்தது. பிறர் சோர்வு போலாது உயிர்கட்கு எல்லாம் ஒருங்குவருதலால், 'காத்து ஓம்பல்' என்றார்.

இவை இரண்டு பாட்டானும் இஃது இவர்க்கு இன்றியமையாது என்பது கூறப்பட்டது. (2)

கேட்டார்ப் பிணிக்கும் தகைஅவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல். 643

கேட்டார்ப் பிணிக்கும் தகை அவாய் - நட்பாய் ஏற்றுக் கொண்டாரைப் பின் வேறுபடாமல் பிணிக்கும் குணங்களை அவாவி, கேளாரும் வேட்ப மொழிவது - மாற்றாராய்ப் பகையாய் ஏற்றுக்கொள்ளாதாரும் பின் அப் பகைமை ஒழிந்து நட்பினை விரும்பும் வண்ணம் சொல்லப்படுவதே, சொல்லாம் - அமைச்சர்க்குச் சொல்லாவது.

அக் குணங்களாவன வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், விழுப்பயன் தருதல் என்றிவை முதலாயின. அவற்றை அவாவுதலாவது சொல்லுவான் குறித்தனவேயன்றி

வேறு நுண்ணுணர்வுடையோர் கொள்பவற்றின் மேலும் நோக்குடைத்தாதல். 'அவாய்' என்னும் செய்தென் எச்சம் 'மொழிவது' என்னும் செயப்பாட்டு வினை கொண்டது. இனி 'கேட்டார் கேளார்' என்பதற்கு 'நூல் கேட்டார் கேளாதார்' எனவும், 'வினவியார் வினவாதார்' எனவும் உரைப்பாரும் உளர். 'தகையவாய்'

என்பதற்கு எல்லாரும், 'தகுதியையுடையவாய்' என்று உரைத்தார், அவர் அப்பன்மை, மொழிவது என்னும் ஒருமையோடு

இயையாமை நோக்கிற்றிலா.

இதனான் சொல்வினது இலக்கணம் கூறப்பட்டது. (3)

திறன்அறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூஉங்கு இல். 644



சொல்லைத் திறன் அறிந்து சொல்லுக - அப் பெற்றித்தாய சொல்லை அமைச்சர் தம்முடையவும் கேட்பாருடையவுமாய திறங்களை அறிந்து சொல்லுக, அதனின் ஊங்கு அறனும் பொருளும் இல் - அங்ஙனம் சொல்லுதற்கு மேற்பட்ட அறனும் பொருளும் இல்லை யாகலான்.

அறத்திறங்களாவன: குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம், உருவம், பருவம் என்பனவற்றான் வரும் தகுதி வேறுபாடுகள். அவற்றை அறிந்து சொல்லுதலாவது அவற்றான் தமக்கும் அவர்க்கும் உளவாய ஏற்றத்தாழ்வுகளை அறிந்து அவ்வம் மரபான் சொல்லுதல். அஃது உலகத்தோடு ஒட்ட ஒழுகலையும் இனிமையையும் பயத்தலின் அறனாயிற்று. தம் காரியம் முடித்தலின் பொருளாயிற்று. அறனும் பொருளும் எனக் காரணத்தைக் காரியமாக்கிக் கூறினார். (4)

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லும்சொல் இன்மை அறிந்து. 645

சொல்லைப் பிறிது ஓர்சொல் வெல்லும் சொல் இன்மை அறிந்து - தாம் சொல்லக்கருதிய சொல்லைப் பிறிதோர்சொல்லாய் வெல்லவல்லதொரு சொல் இல்லாமை அறிந்து, அச்சொல்லைச் சொல்லுக - பின் அச்சொல்லைச் சொல்லுக.

பிறிதோர்சொல் மாற்றாரது மறுதலைச்சொல். வெல்லுதல் குணங்களான் மிகுதல். அதுவே வெல்லச் சொல்லுக என்பதாம். இனிப் பிறிதோர்சொல் வெல்லும் சொல் எனச் செவ்வெண்ணாக்கி, ஒத்தசொல்லும் மிக்க சொல்லும் உளவாகாமல் சொல்லுக என்று உரைப்பாரும் உளர். இது சொற்பொருட் பின் வரும் நிலை. (5)

வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள். 646

வேட்பத் தாம் சொல்லிப் பிறர் சொற்பயன் கோடல்-பிறர்க்கு தாம் சொல்லுங்கால் அவர் பின்னும் கேட்டலை விரும்புமாறு சொல்லி, அவர் தமக்குச் சொல்லுங்கால் அச்சொல்லின் பயனைக் கொண்டொழிதல், மாட்சியின் மாசு அற்றார் கோள் - அமைச்சியலுள் குற்றம் அற்றார் துணிபு.

பிறர் சொற்களுள் குற்றமுளவாயினும் அவை நோக்கி இகழார் என்பதாம். வல்லாரை இகழ்தல் வல்லுநர்க்குத் தகுதி இன்மையின், இதுவும் உடன் கூறினார்.

இவை மூன்று பாட்டானும் அதனைச் சொல்லுமாறு கூறப்பட்டது. (6)

சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது. 647

சொலல் வல்லன் - தான் எண்ணிய காரியங்களைப் பிறர்க்கு ஏற்பச் சொல்லுதல் வல்லனாய், சோர்வு இலன் - அவை மிகப்பல



வாயவழி ஒன்றினும் சோர்விலனாய், அஞ்சான் அவைக்கு அஞ்சானும் ஆயினான் யாவன், அவனை இகல் வெல்லல் யார்க்கும் அரிது அவனை மாறுபாட்டின்கண் வெல்லுதல் யாவர்க்கும் அரிது.

ஏற்பச்சொல்லுதல் அவர்க்கு அவை காரியமல்லவாயினும் ஆம் எனத் துணியும்வகை சொல்லுதல். சோர்வு - சொல்ல வேண்டுவதனை மறப்பான் ஒழிதல.

இம் மூன்று குணமும் உடையானை மாற்றாராய்ப் பிரித்தல் பொருத்தல் செய்து வெல்வாரில்லை என்பதாம். (7)

விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்துஇனிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். 648

தொழில் நிரந்து இனிது சொல்லுதல் வல்லார்ப்பெறின் - சொல்லப்படும் காரியங்களை நிரல்படக் கோத்து இனிதாகச் சொல்லுதல் வல்லாரைப் பெறின், ஞாலம் விரைந்து கேட்கும் - உலகம் அவற்றை விரைந்து ஏற்றுக்கொள்ளும்.

'தொழில்' சாதியொருமை. நிரல்படக் கோத்தல்: முன் சொல்வனவும் பின்சொல்வனவும் அறிந்து அம்முறையே வைத்தல். இனிதாதல் கேட்டார்க்கு இன்பம் பயத்தல். "சொல்லுதல் வல்லான் நூறாயிரவருள் ஒருவன்" என்ற வடமொழி பற்றி, 'பெறின்' என்றார். ஈண்டும் கேட்டல், ஏற்றுக்கோடல்.

இவை இரண்டு பாட்டானும் அவ்வாற்றல் சொல்லுதல் வல்லாரது சிறப்புக் கூறப்பட்டது. (8)

**பலசொல்லக் காமுறுவர் மன்றமாசு அற்ற**
**சிலசொல்லல் தேற்றா தவர். 649**

*மாசு அற்ற சில சொல்லல் தேற்றாதவர் - குற்றமற்றனவாய்ச் சிலவாய வார்த்தைகளை அவ்வாற்றல் சொல்லுதலை அறியாதார், பல சொல்லக் காமுறுவர் - பலவாய வார்த்தைகளைத் தொடுத்துச் சொல்ல விரும்புவர்.*

குற்றம் மேற்சொல்லிய குணங்கட்கு மறுதலையாயின. இடைவிடாது பலசொல்லுதலையும் சொல்வன்மை என்று விரும்புவாரும் உளர் அவர் அவ்வாறு சொல்ல மாட்டாதாரே, வல்லார் அது செய்யாரென யாப்புறுப்பார், 'மன்ற' என்றார். (9)

**இணரூழ்த்தும் நாறா மலரனையர் கற்றது**
**உணர விரித்துரையா தார். 650**

*கற்றது உணர விரித்து உரையாதார் - கற்றுவைத்த நூலைப் பிறரறியும் வண்ணம் விரித்துரைக்கமாட்டாதவர், இணர் ஊழ்த்தும் நாறா மலர் அனையர் - கொத்தின்கண்ணே மலர்ந்துவைத்தும் நாறாத பூவையொப்பர்.*



செவ்விபெற மலர்ந்துவைத்தும் நாற்றம் இல்லாத பூச் சூடப் படாதவாறுபோல நூலைக் கற்றுவைத்தும் சொல்லமாட்டாதார் நன்கு மதிக்கப்படார் என்றமையின், இது தொழில் உவமம் ஆயிற்று.

இவை இரண்டு பாட்டானும் அது மாட்டாதாரது இழிபு கூறப்பட்டது. (10)

## 66. வினைத் தூய்மை

அஃதாவது செய்யப்படும் வினைகள் பொருளேயன்றி அறமும் புகழும் பயந்து நல்ல ஆதல். சொல்லேயன்றிச் செயலும் நன்றாக வேண்டும் என்கின்றமையின், இது சொல் வன்மையின் பின் வைக்கப்பட்டது.

துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்
வேண்டிய எல்லாம் தரும். 651

துணை நலம் ஆக்கம் தரூஉம் - ஒருவனுக்குத் துணையது நன்மை செல்வம் ஒன்றனையும் கொடுக்கும், வினை நலம் வேண்டிய எல்லாம் தரும் - அவ்வளவன்றி வினையது நன்மை அவன் வேண்டியன யாவற்றையும் கொடுக்கும்.

'வேண்டிய எல்லாம்' என்றது இம்மைக்கண் அறம், பொருள், இன்பம் முதலாயவற்றையும், மறுமைக்கண் தான் விரும்பிய பதங்களையும்.

இதனான் காணப்படும் துணை நன்மையினும், கருதப்படும் வினைநன்மை சிறந்தது என வினைத் தூய்மையது சிறப்புக் கூறப்பட்டது. (1)

என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை. 652

புகழொடு நன்றி பயவா வினை - தம் அரசனுக்கு இம்மைக்கண் புகழும் மறுமைக்கண் அறமும் பயவாத வினைகளை, என்றும் ஒருவுதல் வேண்டும் - அமைச்சர்க்கு எக்காலத்தும் ஒழிதல் வேண்டும்.

பெருகல், சுருங்கல், இடைநிற்றல் என்னும் நிலைவேறுபாடு காலத்தான் வருதலின் 'என்றும்' என்றார். வேண்டும் என்பது ஈண்டு இன்றியமையாது என்னும் பொருட்டு. (2)

ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னும் அவர். 653

ஆதும் என்னும் அவர் - மேலாகக்கடவேம் என்று கருதுவார், ஒளிமாழ்கும் வினை செய் ஓதல்வேண்டும் - தம் ஒளிகெடுதற்குக் காரணமாய வினையைச் செய்தலைத் தவிர்க.

'ஓஒதல் வேண்டும்' என்பது ஒரு சொல் நீர்மைத்து. ஓவுதல் என்பது குறைந்து நின்றது. ஒளி: தாம் உளகாலத்து எல்லாரானும் நன்கு மதிக்கப்படுதல். 'செய்' என்னும் முதனிலைத் தொழில் பெயர் மாற்றப்பட்டது. அன்றிச் செய்வினை என வினைத்தொகையாக்கியவழிப் பொருளின்மை அறிக. ஒளி கெடவருவது ஆக்கம் அன்று என்பதாம். (3)

இடுக்கட் படினும் இளிவந்த செய்யார்
நடுக்குஅற்ற காட்சி யவர். 654

இடுக்கண்படினும் இளிவந்த செய்யார் - தாம் இடுக்கணிலே படவரினும், அது தீர்தற்பொருட்டு முன் செய்தார்க்கு இளிவந்த வினைகளைச் செய்யார், நடுக்கு அற்ற காட்சியவர் - அசைக்கம் அற்ற தெளிவினை உடையார்.

சிறிதுபோழ்தில் கழிவதாய இடுக்கண் நோக்கி, என்றும் கழியாத இழிவு எய்தற்பாலது அன்று என்பதூஉம் அஃது எய்தி னும் வருவது வரும் என்பதூஉம் தெளிவர் ஆகலான், 'செய் யார்' என்றார். (4)

எற்றென்று இரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்று அன்ன செய்யாமை நன்று. 655

எற்று என்று இரங்குவ செய்யற்க - யான் செய்தது எத்தன் மைத்து என்று பின் தானே இரங்கும் வினைகளை ஒருகாலும் செய்யாதொழிக, செய்வானேல் மற்று அன்ன செய்யாமை நன்று - அன்றி ஒருகால் மயங்கி அவற்றைச் செய்யுந்தன்மை யினன் ஆயின், பின் இருந்து அவ் இரங்கல்களைச் செய்யாதொழி தல் நன்று.

'இரங்குவ' என முன்வந்தமையின் பின் 'அன்ன'வெனச் சுட்டி ஒழிந்தார். அவ்வினைகளது பன்மையான், இரங்கலும் பலவாயின. அச்செயற்குப் பின்னிருந்து இரங்குதலையின், அது தீரும் வாயில் அறிந்திலன் எனவும், திடமிலன் எனவும், பயனல் லன செய்கின்றான் எனவும் தன்பழியைத் தானே தூற்றுகின்றான் எனவும், எல்லாரும்இகழ்தலின் 'பின் இரங்காமை நன்று' என்றார். இதுவும், வினைத்தூய்மை செய்யாமையின் உடன் கூறப்பட்டது.

'பின் தொடர்தற்குச் செய்யாமையின் அவ்வம்பாலவனவும் செய் யாமை நன்று' எனப் பிறரெல்லாம் இயைபு அற உரைத்தார். (5)

ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும வினை. 656

ஈன்றாள பசி காண்பான் ஆயினும் - தன்னைப் பயந்தாளது பசியை வறுமையால் கண்டு இரங்கும் தன்மையிலன் ஆயி

னும், சான்றோர் பழிக்கும வினை செய்யற்க - அது கூடிய அறிவுடையார் பழிக்கும வினைகளை ஒருவன் செய்யாதொழிக.



‘ இறந்த மூப்பினராய இருமுதுகுரவரும் கற்புடை மனைவியும் குழவியும் பசியான் வருந்தும் எல்லைக்கண் தீயன பலவுஞ் செய்தாயினும் புறந்தருக’ என்னும் அறநூற் பொதுவிதி பொருளநூல் வழி ஒழுகுதலும், அரசர் தொழிற்கு உரியராதலும், நன்கு மதிக் கற்பாடும் உடைய அமைச்சர்க்கு எய்தாமைபற்றி, இவ்வாறு கூறினர்.

இவை ஐந்து பாட்டானும் ‘பாவமும் பழியும் பயக்கும் வினை செய்யற்க’ என்பது கூறப்பட்டது. (6)

பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை. 657

பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் - சாலாதார் தீய வினைகளைச் செய்து அதனல் பழியைத் தம்மேற்கொண்டு பெற்ற செல்வத்தின், சான்றோர் கழி நல்குரவே தலை - அதுமேற்கொளளாத சான்றோர் அனுபவிக்கும் மிக்க நல்குரவே உயர்ந்தது.

நிலையாத செல்வத்தின் பொருட்டு நிலையின பழியை மேற்கோடல் சாலபோடு இயையாமையின், ‘ சான்றோர் கழி நல்குரவே தலை ’ என்றார். (7)

கடிந்த கடிந்துஒரார் செய்தார்க்கு அவைதாம்
முடிந்தாலும் பீழை தரும். 658

கடிந்த கடிந்து ஓரார் செய்தார்க்கு - நூலோர் கடிந்த வினைகளைத் தாமும் கடிந்தொழியாது பொருளை நோக்கிச் செய்த அமைச்சர்க்கு, அவைதாம் முடிந்தாலும் பீழை தரும் - அவை தூயஅன்மையின் முடியா, ஒருவாற்றான் முடியினும் பின் துன்பத்தையே கொடுக்கும்.

முடிதல்: கருதிய பொருளை தருதல். பீழை தருதலாகிய பொருளின் தொழில் அதற்குக் காரணமாய வினைகள் மேல் ஏற்றப்பட்டது, (8)

அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை. 659

அழக் கொண்ட எல்லாம் அழப் போம் - ஒருவன் தீவினைகளைச் செய்து பிறர் இரங்கக் கொண்ட பொருளெல்லாம் இம்மையிலே அவன் தான் இரங்கப் போகாநிற்கும், நற்பாலவை இழப்பினும் பிற்பயக்கும் - மற்றைத் தூய வினையான் வந்த பொருள்கள் முன் இழந்தானாயினும் அவனுக்குப் பின்னர் வந்து பயன் கொடுக்கும்.

'பின்' எனவே, மறுமையும் அடங்கிற்று. பொருள்களான் அவற்றிற்குக் காரணமாய வினைகளது இயல்பு கூறியவாறு. (9)



சலத்தால் பொருள்செய்தே மாக்கல் பசுமட்
கலத்துள்நீர் பெய்துஇரீஇ யற்று. 660

சலத்தால் பொருள் செய்து ஏமாக்கல் - அமைச்சர் தீய வினைகளாற் பொருள்படைத்து அதனை அரசனுக்கு ஏமஞ் செய்தல், பசுமட்கலத்துள் நீர் பெய்து இரீஇயற்று - பசிய மட்கலத்துள்ளே நீரைப் பெய்து அதற்கு ஏமஞ்செய்தலோடொக்கும்.

முன் ஆக்கம் பயப்பனபோலத் தோன்றிப் பின் அழிவே பயத்தலான், அவை 'சலம்' எனப்பட்டன. 'ஏமமாக்கல்' என்பது ஏமாக்கல் என்று ஆயிற்று. ஏமத்தை அடையப்

[illegible]றுதல் என்றவாறு. இருத்துதல் - நெடுங்காலம் இருப்பச் செய்தல். அரசனும் பொருளும் போய்ப்போம் என்பதாம். பிறரெல்லாம், 'ஏமாத்தல்' என்று பாடமோதி, அதற்கு மகிழ்தல் என்றும், 'இரீஇயற்று' என்பதற்கு வைத்தாற்போலும் என்றும் உரைத்தார்; அவர், அவை தன்வினையும் பிறவினையுமாய் உவமையிலக்கணத்தோடு மாறுகோடல் நோக்கிற்றிலர்.

இவை நான்கு பாட்டானும் அதற்குக் காரணம் கூறப்பட்டது. (10)

## 67. வினைத் திட்பம்

அஃதாவது அந்நாட்டு வினை முடிப்பார்க்கு வேண்டுவதாய மனத்திண்மை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

**வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம**
**மற்றைய எல்லாம் பிற. 661**

வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம் - வினைசெய்தற்கண் திண்மை என்று சொல்லப்படுவது அதனை முடிப்பானொருவன் மனத்தினது திண்மை, மற்றைய எல்லாம் பிற - அஃதொழிந்தன எல்லாம் அதற்குத் திண்மை என்று சொல்லப்படா.

ஒழிந்தனவாவன படை, அரண், நட்பு முதலியவற்றின் திண்மைகள். அவையும் அதற்கு வேண்டுவனவாய் இன்மையாக

லின், 'மற்றைய' என்றும், வேண்டினும் அது போற் சிறப்பிலவாகலின் 'பிற' என்றும் கூறினார்.

இதனான் வினைத்திட்பமாவது இன்னது என்பது கூறப்பட்டது. (1)

**ஊறுஒரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்**
**ஆறுஎன்பர் ஆய்ந்தவர் கோள். 662**

ஆய்ந்தவர் கோள் - முன் நீதிநூல் ஆராய்ந்த அமைச்சரது துணிபு, ஊறு ஒரால் உற்றபின் ஒல்காமை இவ் இரண்டின் ஆறு

8

என்பர் - பழுதுபடும் வினைகளைச் செய்யாமையும் செய்யும் வினை தெய்வத்தான் பழுதுபட்ட வழி அதற்குத் தளராமையும் ஆகிய இவ் இரண்டன் வழி என்பர் நூலோர்.

தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப் பூண்ட வியாழ, வெள்ளிகளது துணிபு தொகுத்துப் பின் நீதி நூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின், ஈண்டு வினைத் தூய்மையும் உடன் கூறினார். உறுதலுடையதனை முன் 'ஊறு' என்றமையின், 'உற்றபின்' என்றும், இவ் இரண்டின்கண்ணே பட்டது என்பார் 'இரண்டின்ஆறு' என்றும் கூறினார். 'ஊறு ஒரார்' என்று பாடம் ஓதுவாரும் உளர், அஃது 'ஒல்காமை' என்னும் எண்ணோடும் 'இரண்டு' என்னும் தொகையோடும் இயையாமை அவர் அறிந்திலர். (2)

**கடைக்கொட்கச் செய்தக்கது ஆண்மை இடைக்கொட்கின்**
**எற்றா விழுமம் தரும். 663**

கடைக் கொட்கச் செய்தக்கது ஆண்மை - செயப்படும் வினையை முடிவின்கண் புலப்படும் வகை முன்னெல்லாம் மறைத்துச் செய்வதே திட்பமாவது, இடைக் கொட்கின் எற்றா விழுமம் தரும் - அங்ஙனமன்றி இடையே புலப்படுமாயின் அப் புலப்பாடு செய்வானுக்கு நீங்காத இடும்பையைக் கொடுக்கும்.

மறைத்துச் செய்வதாவது அங்கம் ஐந்தும் எண்ணியவாறு, பிறர் அறியாமலும், தான் அறிந்ததனை உரை, தன் இங்கிதம், வடிவு, செயல், சொற்களான் அவர் உய்த்துணராமலும் அடக்கிச் செய்தல். அத் திட்பம், ஆண் தன்மையான் வருதலின் 'ஆண்மை' எனப்பட்டது. எற்றா விழுமமாவன பகைவர் முன் அறிந்து அவ் வினையை விலக்குதல், செய்வானை விலக்குதல் செய்வன ஆகலின், அவற்றான் வருவன. விழுமம் - சாதிப் பெயர்.

இவை இரண்டு பாட்டானும் அதனது பகுதி கூறப்பட்டது.(3)

**சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்**
**சொல்லிய வண்ணம் செயல். 664**

சொல்லுதல் யார்க்கும் எளிய - யாம் இவ்வினையை இவ்வாற்றால் செய்தும் என நிரல்படச் சொல்லுதல் யாவர்க்கும் எளிய, சொல்லியவண்ணம் செயல் அரியவாம் - அதனை அவ்வாற்றானே செய்தல் யாவர்க்கும் அரியவாம்.

சொல்லுதல், செயல் என்பன சாதிப்பெயர். அரியவற்றை எண்ணிச் சொல்லுதல் திட்பமில்லார்க்கும் இயறலின், 'எளிய' என்றார்.

இதனான் அதனது அருமை கூறப்பட்டது. (4)

**வீறுஎய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்**
**ஊறுஎய்தி உள்ளப் படும். 665**



*வீறு எய்தி மாண்டார் வினைத்திட்பம் - எண்ணத்தால் சிறப்பெய்திப் பிற இலக்கணங்களானும் மாட்சிமைப்பட்ட அமைச்சரது வினைத்திட்பம், வேந்தன்கண் ஊறு எய்தி உள்ளப்படும் - வேந்தன்கண்ணே உறுதலை எய்தலான், எல்லாரானும் நன்கு மதிக்கப்படும்.*

*வேந்தன்கண் ஊறு எய்தல் - எடுத்த வினை அதனான் முற்றுப் பெற்றுச் செல்வமும் புகழும் அவன்கண்ண ஆதல். 'எய்தலான்' என்பது திரிந்து நின்றது. உள்ளல் - மதிப்பான் மறவாமை.*

*இதனான் அதன் சிறப்புக் கூறப்பட்டது.* (5)

**எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்**
**திண்ணிய ராகப் பெறின். 666**

*எண்ணிய எண்ணியாங்கு எய்துப - தாம் எய்த எண்ணிய பொருள்கள் எல்லாவற்றையும் அவ்வெண்ணியவாறே எய்துவர், எண்ணியார் திண்ணியராகப் பெறின் - எண்ணியவர் அவற்றிற்கு வாயிலாகிய வினைக்கண் திண்மையுடையராகப் பெறின்.*

*எளிதின் எய்துப என்பார், 'எண்ணியாங்கு எய்துப' என்றார். அவர் அவ்வாறல்லது எண்ணாமையின் திண்ணியராகவே வினை முடியும், அது முடிய, அவையாவையும் கைகூடும் என்பது கருத்து.*

*இதனான் அஃதுடையார் எய்தும் பயன் கூறப்பட்டது.* (6)

**உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு**
**அச்சாணி யன்னார் உடைத்து 667**

உருள் பெருந்தேர்க்கு அச்சு ஆணி அன்னார் உடைத்து - உருளாநின்ற பெரிய தேர்க்கு அச்சின்கண் ஆணிபோல வினைக்கண் திண்ணியாரையுடைத்து உலகம், உருவு கண்டு எள்ளாமை வேண்டும் - அதனால் அவரை வடிவின் சிறுமை நோக்கி இகழ்தலை ஒழிக.

சிறுமை 'எள்ளாமை வேண்டும்' என்பதனாலும், உவமையாலும் பெற்றும். அச்சு - உருள் கோத்த மரம். ஆணி, உருள் கழலாது அதன் கடைக்கண் செருகுமது. அது வடிவாற் சிறிதாயிருந்தே பெரிய பாரத்தைக் கொண்டுய்க்கும் திட்பம் உடைத்து. அதுபோல, வடிவாற் சிறியராயிருந்தே பெரிய வினைகளைக் கொண்டுய்க்கும் திட்பம் உடைய அமைச்சரும் உளர்; அவரை அத்திட்பம் நோக்கி அறிந்துகொள்க என்பதாம்.

இதனான் அவரை அறியுமாறு கூறப்பட்டது. (7)

**கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது**
**தூக்கம் கடிந்து செயல். 668**

கலங்காது கண்ட வினைக்கண் - மனந்தெளிந்து செய்வதாகத் துணிந்த வினையின்கண், துளங்காது தூக்கம் கடிந்து செயல் - பின் அசைதலின்றி நீட்டித்தலையொழிந்து செய்க.



கலங்கியவழி ஒழிவதும் செய்வதுபோல் தோன்றுமாகலின், தெளிந்து பலகால் ஆராய்ந்து தாம் செய்வதாக ஓர்ந்த வினையை, 'கலங்காது கண்டவினை' என்றார். துளங்காமை - திட்பம் உடைமை. (8)

**துன்பம் உறவரினும் செய்க துணிவுஆற்றி**
**இன்பம் பயக்கும் வினை. 669**

துன்பம் உற வரினும் - முதற்கண் மெய்ம்முயற்சியால் தமக்குத் துன்பம் மிக வருமாயினும், இன்பம் பயக்கும் வினை துணிவு ஆற்றிச் செய்க - அது நோக்கித் தளராது முடிவின்கண் இன்பம் பயக்கும் வினையைத் திட்பமுடையராய்ச் செய்க.

துணிவு - கலங்காமை. அஃதுடையார்க்கல்லது கணிகமாய முயற்சித் துன்பம்நோக்காது நிலையுதலுடைய பரிணாம இன்பத்தை நோக்கிச் செய்தல் கூடாமையின், 'துணிவாற்றிச் செய்க' என்றார்.

இவை இரண்டு பாட்டானும் அவர் வினைசெய்யுமாறு கூறப்

பட்டது. (9)

எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டாது உலகு. 670

வினைத்திட்பம் வேண்டாரை - வினைத்திட்பத்தை இது நமக்குச் சிறந்ததென்று கொள்ளாத அமைச்சரை, எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் - ஒழிந்த திட்பங்களை எல்லாமுடையராயவிடத்தும், வேண்டாது உலகு - நன்கு மதியார் உயர்ந்தோர்.

மனத்தின்கண் திட்பமில்லாதார்க்குப் படை, அரண், நட்பு முதலியவற்றின் திட்பங்களெல்லாம் உளவாயினும், வினை முடியாதாம், ஆகலின், அவையெல்லாம் கெடும் என்பதுபற்றி 'உலகு வேண்டாது' என்றார்

இதனான் வினைத்திட்பமில்லாதாரது இழிபு கூறப்பட்டது.(10)

## 68. வினை செயல் வகை

அஃதாவது அத்திட்பமுடைய அமைச்சன் அவ் வினையைச் செய்யும் திறம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

சூழ்ச்சி முடிவு துணிவுஎய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது. 671

சூழ்ச்சி முடிவு துணிவு எய்தல் - விசாரத்திற்கு எல்லையாவது விசாரிக்கின்றான் இனி இது தப்பாது என்னும் துணிவினைப் பெறுதல், அத் துணிவு தாழ்ச்சியுள் தங்குதல் தீது - அங்ஙனம் துணிவுபெற்ற வினை பின் நீட்டிப்பின் கண் தங்குமாயின், அது குற்றமுடைத்து.



சூழ்ச்சி முடிவு துணிவு எய்தல்' எனவே, துணிவு எய்தும் அளவும் சூழவேண்டும் என்பது பெற்றாம். பின்னர், 'துணிவு' ஆகுபெயர். நீட்டிப்பு செய்யுங் காலத்துச் செய்யாமை, அஃதுன் வழிக் காலக்கழிவாகலானும், பகைவர் அறிந்து அழித்தலானும் முடியாமையின், அதனை 'தீது' என்றார். (1)

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. 672

*தூங்கிச் செயற்பால தூங்குக* - நீட்டித்துச் செய்யும் பகுதிய வாய வினைகளை நீட்டிக்க, *தூங்காது செய்யும் வினை தூங்கற்க* - நீட்டியாது செய்யும் வினைகளை நீட்டியாது ஒழிக. இருவழியும் இறுதிக்கண் தொக்க ஏழாவது விரிக்கப் பட்டது.

இருவகை வினைகளும் வலியானும் காலத்தானும் அறியப் படும். மாறிச் செயின், அவை வாயா என்பது கருத்து. மேல் 'தூங்காமை' என்றார் (குறள் 383) ஈண்டதனைப் பகுத்துக் கூறினார்.

இவை இரண்டு பாட்டானும் பொதுவகையால் வினைசெய்யும் திறம் கூறப்பட்டது. (2)

**ஒல்லும்வாய் எல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்**
**செல்லும்வாய் நோக்கிச் செயல். 673**

*ஒல்லும் வாய் எல்லாம் வினை நன்று* - வினை செய்யுங்கால் இயலுமிடத்தெல்லாம் போரால் செயல் நன்று, *ஒல்லாக்கால் செல்லும் வாய் நோக்கிச் செயல்* - அஃது இயலாவிடத்து ஏனை மூன்று உபாயத்துள்ளும் அது முடிவதோர் உபாயம் நோக்கிச் செய்க.

இயலுமிடம் - பகையின் தான் வலியனாய காலம். அக்காலத்துத் தண்டமே நன்று என்றார், அருகுவது அதற்கே யாகலின். இயலா இடம் ஒத்த காலமும் மெலிய காலமும். அவ் இரண்டு காலத்தும் சாமபேத தானங்களுள் அது முடியும் உபாயத்தாற் செய்க என்றார், அவை ஒன்றற்கொன்று வேறுபாடுடைய வேனும் உடம்படுத்தற்பயத்தான் தம்முள் ஒக்கும் ஆகலின்.

இதனான் வலியான், ஒப்பான், மெலியான் என நிலை மூவகைத்து என்பதூஉம், அவற்றுள் வலியது சிறப்பும் கூறப் பட்டன. (3)

**வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்**
**தீயெச்சம் போலத் தெறும். 674**

*வினை பகை என்ற இரண்டின் எச்சம்* - செய்யத் தொடங்கிய வினையும் களையத் தொடங்கிய பகையும் என்று சொல்லப்பட்ட இரண்டனது ஒழிவும், *நினையுங்கால் தீயெச்சம்போலத் தெறும்* - ஆராயுங்கால் தீயினது ஒழிவுபோலப் பின் வளர்ந்து கெடுக்கும்.

'இனி இக்குறை என் செய்வது?' என்று இகழ்ந்தொழியற்க, முடியச் செய்க என்பதாம். பின் வளர்தல் ஒப்புமை பற்றிப் பகையெச்சமும் உடன் கூறினர்.

இதனான் வலியான் செய்யுந் திறம் கூறப்பட்டது. (4)

பொருள்கருவி காலம் வினைஇடனொடு ஐந்தும்
இருள்தீர எண்ணிச் செயல். 675

பொருள் கருவி காலம் வினை இடனொடு ஐந்தும் - வினை செய்யுமிடத்துப் பொருளும் கருவியும் காலமும் வினையும் இடனுமாகிய இவ் ஐந்தனையும், இருள தீர எண்ணிச் செயல - மயக்கம் அற எண்ணிச் செய்க.

எண்ணொடு, பிற வழியும் கூட்டப்பட்டது. பொருள்—அழியும் பொருளும் ஆகும் பொருளும். கருவி—தன் தானையும் மாற்றான் தானையும். காலம்—தனக்கு ஆகுங் காலமும் அவர்க்கு ஆகுங் காலமும். வினை—தான் வல்ல வினையும் அவர் வல்ல வினையும். இடம்—தான் வெல்லும் இடமும் அவர் வெல்லும் இடமும். இவற்றைத் தான் வென்றியெய்தும் திறத்தில் பிழையாமல் எண்ணிச் செய்க என்பதாம். (5)

முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். 676

முடிவும் - வினை செய்யுங்கால் அது முடிதற்குளதாம் முயற்சியும், இடையூறும் - அதற்கு வரும் இடையூறும், முற்றியாங்கு எய்தும் படுபயனும் - அது நீங்கி முடிந்தால் தான் எய்தும் பெரும் பயனும், பார்த்துச் செயல் - சீர்தூக்கிச் செய்க.

முடிவு: ஆகுபெயர். முயற்சி இடையூறுகளது அளவின் பயனது அளவு பெரிதாயின் செய்க என்பதாம். (6)

செய்வினை செய்வான் செயல்முறை அவ்வினை
உள்ளறிவான் உள்ளங் கொளல். 677

செய்வினை செய்வான் செயல்முறை — அவ்வாற்றால் செய்யப்படும் வினையைத் தொடங்கினான் செய்யும் முறைமையாவது, அவ்வினை உள அறிவான் உள்ளம்கொளல் — அதனது உளப்பாட்டினை அறிவான் கருத்தினை தான் அறிதல்.

'அவ்வாறு' என்றது பொருள் முதலிய, எண்ணையும் முடிவு முதலிய தூக்கலையும். உள் அறிவான் — முன்செய்து போந்தவன். அவன் கருத்து — அவன் செய்து போந்த உபாயம். அதனையறியவே, தானும் அதனால் செய்து பயன் எய்தும் என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் ஒப்பான் செய்யும் திறம் கூறப்பட்டது. (7)



**வினையான் வினைஆக்கிக் கோடல் நனைகவுள்**
**யானையால் யானையாத் தற்று. 678**

வினையான் வினை ஆக்கிக்கோடல் - செய்கின்றவினையாலே அன்னது பிறிதும் ஓர்வினையை முடித்துக்கொள்க, நனை கவுள யானையால யானை யாத்தற்று - அது மதத்தான் நனைந்த கபோலத்தினையுடைய யானையாலே அன்னது பிறிதும்மோர் யானையைப் பிணித்ததனோடு ஒக்கும்.

பிணித்தற்கு அருமை தோன்ற 'நனைகவுள' என்பது பின்னும் கூட்டப்பட்டது. தொடங்கிய வினையானே பிறிதும் ஓர் வினையை முடித்தற்கு உபாயம் ஆமாறு எண்ணிச் செய்க; செய்யவே, அம்முறையான் எல்லா வினையும் எளிதில் முடியும் என்பதாம். (8)

**நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே**
**ஒட்டாரை ஒட்டிக் கொளல். 679**

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே - வினை செய்வானால் தன்நட்டார்க்கு இனியவற்றைச் செய்தலினும் விரைந்து செய்யப்

படும், ஒட்டாரை ஒட்டிக் கொளல் - தன் பகைவரோடு ஒட்டாரைத் தனக்கு நட்பாக்கிக் கோடல்.

அவ் வினை வாயத்தற்பயநதவாய இவ இரண்டும் பகைவாக்குத தன் மெலிவு புலனுவதன்முன்னே செயக என்பார், 'விரைநதது' என்றார். விரைநது செய்யப்படுவது என்றவாறு. வினைசெய்யும திறமாகலின் பகைவரோடு ஒட்டாராயிற்று. தன் ஒட்டார் பிறருட் கூடாமல மாற்றிவைததல எனினும் அமையும். (9)

உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சிக் குறைபெறின்
கொள்வர் பெரியார்ப் பணிந்து. 680

உறை சிறியார் - ஆளும் இடஞ் சிறியாராய அமைச்சர், உள் நடுங்கல் அஞ்சி - தமமின் வலியரால எதிாநதவழித தம் பகுதி நடுங்கலை அஞ்சி, குறை பெறின் பெரியார் பணிந்துகொள்வார் - அவ்வினைக்கு வேண்டுவதாய சநது கூடுமாயின், அவரைத் தாழ்ந்து அதனை ஏற்றுக்கொள்வர்.

இடம் - காடும அரணும். அவற்றது சிறுமை ஆள்வார் மேல ஏற்றப்பட்டது. மெலியாரோடு சநதிக்கு வலியார் இசைதல அரிதாகலின் 'பெறின்' என்றார். அடியிலே மெலியாராயினார் தம் பகுதியும் அஞசி நீங்கின் முதலொடும் கெடுவராகலின், அது வாராமல சிறிது கொடுததும் சநதியை ஏற்றுக்கொள்க என்பதாம். பணிதல் மானமுடையார்க்குக் கருதது அன்மையின் 'கொள்வர்' என உலகியலால கூறினார்.



இவை மூன்று பாட்டானும் மெலியான் செய்யும் திறம் கூறப்பட்டது. (10)

# 69. தூது

அஃதாவது சந்தி விக்கிரகங்கட்கு வேற்று வேந்தரிடைச் செல்வாரது தன்மை. அவ் இரண்டனையும் மேல் 'வினைசெயல் வகை' என்றமையின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது. தான் வகுத்துக் கூறுவான், கூறியது கூறுவான் எனத் தூது இரு வகைப்படும். அவருள் முன்னோன் அமைச்சனோடு ஒப்பான் ஆகலானும், பின்னோன் அவனில் காற்கூறு குணம் குறைந்தோன் ஆகலானும் இஃது அமைச்சியலாயிற்று.

**அன்புஉடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்துஅவாம்**
**பண்புஉடைமை தூதுஉரைப்பான் பண்பு 681**

அன்பு உடைமை தன் சுற்றத்தாரமாட்டு அன்புடையனாதலும், ஆன்ற குடிப்பிறத்தல் - அமைச்சுப் பூணற்கு அமைந்த குடியின்கண் பிறத்தலும், வேந்து அவாம் பண்பு உடைமை - அரசர்சாதி விரும்பும் பண்புடையன் ஆதலும், தூது உரைப்பான் பண்பு-தூது வார்த்தை சொல்வானுக்கு இலக்கணம்.

முன்னைய இரண்டானும், முறையே சுற்றத்தார்க்கும் தீங்கு வராமல் தான் பேணியொழுகலும், தன் முன்னோர் தூதியல கேட்டறிதலும் பெறும். வேந்து அவாம்பண்பு உடைமை முன்னா மன்னரைச் சேர்ந்தொழுகற்கண் பெறப்படும். அதனால் வேற்றரசரும் அவன் வயத்த ராதல் பெறுதும். (1)

**அன்புஅறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுஉரைப்பார்க்கு**
**இன்றி யமையாத மூன்று 682**

அன்பு - தம் அரசன் மாட்டு அன்புடைமையும், அறிவு-அவனுக்கு ஆவன அறியும் அறிவுடைமையும்,ஆராய்ந்த சொலவன்மை-அவற்றை வேற்றரசரிடைச் சொல்லுங்கால் ஆராய்ந்து சொல்லுதல் வன்மையும் என, தூது உரைப்பார்க்கு இன்றியமையாத மூன்று - தூதுரைக்க உரியார்க்கு இன்றியமையாத குணங்கள மூன்று.

ஆராய்தல் அவற்றிற்கு உடமபடுஞ் சொற்களைத் தெரிதல். 'இன்றியமையாத மூன்று' எனவே, அமைச்சர்க்குச் சொலலிய பிறகுணங்களும் வேண்டும் என்பது பெற்றும்.

இவை இரண்டுபாட்டானும் இருவகையார்க்கும் பொதுஇலக்கணம் கூறப்பட்டது. (2)

நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு. 683



*வேலாருள் வென்றி வினை உரைப்பான் பண்பு - வேலை யுடைய வேற்றரசரிடைச் சென்று தன் அரசனுக்கு வென்றிதரும் வினையைச் சொலலுவானுக்கு இலக்கணமாவது, நூலாருள் நூல் வல்லன் ஆகுதல் - நீதிநூலையுணர்ந்த அமைச்சரிடைத் தான் அந்நூலை வலலனாதல்.*

*கோறல் மாலையர் என்பது தோன்ற 'வேலார்' என்றும், தூதுவினை இரண்டும் அடங்க 'வென்றிவினை' என்றும் கூறினர். வல்லனாதல்-உணர்வு மாததிர முடையராய அவர் முன் வகுக்கும் ஆற்றல் உடையனாதல்.* (3)

அறிவுஉரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு 684

*அறிவு - இயற்கையாகிய அறிவும், உரு - கண்டார் விரும்பும் தோற்றப் பொலிவும, ஆராய்ந்த கல்வி - பலரோடு பலகாலும் ஆராயப்பட்ட கலவியும என, இம்மூன்றன் செறிவு உடையான் - நன்கு மதிததற்கு ஏதுவாய இம் மூன்றனது கூட்டத்தை உடையான், வினைக்குச செலக - வேறறு வேந்தரிடத் தூது வினைக்குச் செல்க.*

*இம் மூன்றும் ஒருவன்பாற் கூடுதல் அரிது ஆகலின் 'செறி வுடையான' என்றார். இவற்றான் நன்கு மதிப்புடையனாகவே, வினை இனிது முடியும் என்பது கருத்து.* (4)

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது. 685

*தொகச் சொலலி - வேற்றரசாக்குப் பல காரியங்களைச் சொல் லும் வழிக் காரணவகையால தொகுததுச் சொல்லியும், தூவாத நீக்கி நகச் சொலலி இன்னாத காரியஙகளைச் சொல்லுமவழி வெய்ய சொற்களை நீக்கி இனிய சொறகளான் மனமகிழச் சொல்லியும், நன்றி பயப்பது தூதாம் - தன்னரசனுக்கு நன்மையைப் பயப்

பவனே தூதனாவான்.

பலகாரியங்கட்கு உடம்படாதார் பரம்பரையான் அவற்றிற்குக் காரணமாயது ஒன்றைச்சொல்ல, அதனால் அவை விளையுமாறு உய்த்துணர அருமையானும் சுருக்கத்தானும் உடம்படுவர்; இன்னாதவற்றிற்கு உடம்படாதார் தம் மனம் மகிழச்சொல்ல, அவ் இன்னாமை காணாது உடம்படுவராதலின், அவ் இருவாற்றானும் தன் காரியம் தவறாமல் முடிக்கவல்லான் என்பதாம். எண்ணும்மைகள், விகாரத்தால் தொக்கன. (5)

**கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்**
**தக்கது அறிவதாம் தூது** 686

*கற்று - நீதி நூல்களைக் கற்று, செலச் சொல்லி - தான் சென்ற கருமத்தைப் பகைவேந்தர் மனங்கொளச் சொல்லி, கண்*



*அஞ்சான் - அவர் செயிர்த்து நோக்கின் அந்நோக்கிற்கு அஞ்சாது, காலத்தால் தக்கது அறிவது தூதாம் - காலத்தோடு பொருந்த அது முடிக்கத் தக்க உபாயம் அறிவானே தூதனாவான்.*

அவ் உபாயம் அறிதற்பொருட்டு நீதி நூற்கல்வியும், அதனானன்றிப் பிற்றொன்றான் முடியுங்காலம் வரின் அவ்வாறு முடிக்க வேண்டுதலின் காலத்தால் தக்கது அறிதலும், இலக்கணமாயின( )

**கடன்அறிந்து காலம் கருதி இடன்அறிந்து**
**எண்ணி உரைப்பான் தலை** 687

*கடன் அறிந்து - வேற்றரசரிடத்துத்தான் செய்யும் முறைமையறிந்து, காலம் கருதி - அவர் செவ்வி பார்த்து, இடன் அறிந்து - சென்ற காமஞ் சொல்லுதற்கு ஏற்ற இடம் அறிந்து, எண்ணி - சொல்லு மாற்றத்தை முன்னே விசாரித்து, உரைப்பான் தலை - அவ்வாறு சொல்லுவான் தூதரின் மிக்கான்.*

செய்யும் முறைமையாவது அவர் நிலையும் தன் அரசன் நிலையும் தன் நிலையும் தூக்கி அவற்றிற்கு ஏற்பக் காணும் முறைமையும் சொல்லும் முறைமையும் முதலாயின. செவ்வி - தன் சொல்லை ஏற்றுக்கொள்ளும் மன நிகழ்ச்சி. அது காலவயத்ததாகலின் காலம் என்றார். இடம்-தனக்குத் துணையாவார் உடைமை. இடம்.

எண்ணுதல் - தான் அது சொல்லுமாறும், அதற்கு அவர் சொல்லும் உத்தரமும், அதற்குப் பின் தான் சொல்லுவனவுமாக இவ்வாற்றான் முன்னமே தானே கற்பித்தல். வடநூலார் இவ் இருவகையாருடன் ஓலை கொடுத்து நிற்பாரையும் கூட்டித் தூதரைத் தலை, இடை, கடை என்று வகுத்துக் கூறினாராகலின், அவர் மதமும் தோன்றத் 'தலை' என்றார். 'தூது' என்பது அதிகாரத்தான் வந்தது.

இவை ஐந்து பாட்டானும் தான் வகுத்துக் கூறுவானது இலக்கணம் கூறப்பட்டது. (7)

**தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்**
**வாய்மை வழியுரைப்பான் பண்பு. 688**

*வழி உரைப்பான் பண்பு - தன் அரசன் வார்த்தையை அவன் சொல்லியவாறே வேற்றரசர்க்குச் சென்று சொல்லுவானது இலக்கணமாவன, தூய்மை - பொருள் காமங்களால் தூயனாதலும், துணைமை - தமக்கு அவரமைச்சர் துணையாந்தன்மையும், துணிவுடைமை - துணிதலுடைமையும், இம் மூன்றின் வாய்மை - இம் மூன்றோடு கூடிய மெய்ம்மையும் என இவை.*

*பொருள் காமங்கள் பற்றி வேறுபடக் கூறாமைப்பொருட்டுத் தூய்மையும், தன் அரசனுக்கு உயர்ச்சிகூறியவழி அமைச்சர்க்கு அஃது இயல்பு எனக்கூறி அவர் வெகுளி நீக்குதற்பொருட்டுத் துணைமையும், இது சொல்லின் இவர் என்செய்வர் என்று ஒழியாமைப்பொருட்டுத் துணிவுடைமையும், யாவரானும் தேறப்*



*படுதற்பொருட்டு மெய்ம்மையும் வேண்டப்பட்டன. 'இன்' ஒடுவின்பொருட்கண் வந்தது.* (8)

**விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடுமாற்றம்**
**வாய்சோரா வன்க ணவன். 689**

*விடு மாற்றம் வேந்தர்க்கு உரைப்பான்-தன்னரசன் சொல்லிவிட்ட வார்த்தையை வேற்றரசர்க்குச் சென்று சொல்ல உரியான், வடுமாற்றம் வாய்சோரா வன்கணவன் - தனக்கு வரும் ஏதத்திற் கஞ்சி அவனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய்சோர்ந்தும் சொல்லாத திண்மையை யுடையான்.*

தாழ்வு சாதிக்குமமன்மையின், 'வடு' என்றார். 'வாய்சோரா' எனக் காரியம காரணததுள அடக்கப்பட்டது. (9)

இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு
உறுதி பயப்பதாம் தூது. 690

இறுதி பயப்பினும் எஞ்சாது - அவ்வார்த்தை தன் உயிர்க்கு இறுதி தருமாயினும் அதற்கு அஞ்சி யொழியாது, இறைவற்கு உறுதி பயப்பது தூதாம - தன் அரசன் சொல்லியவாற்ற அவனுக்கு மிகுதியை வேற்றரசரிடைச் சொல்லுவானே தூதனுவான்.

இறுதிபயப்பினும என்றதனால், ஏனைய பயததல் சொல்ல வேண்டாவாயிற்று.

இவை மூனறுபாட்டானும் கூறியது கூறுவானது இலக்கணம் கூறப்பட்டது. (10)

## 70. மன்னரைச் சேர்ந்து ஒழுகல்

அஃதாவது அமைச்சர் அரசரைப்பொருந்தி ஒழுகுமாறு. இது, 'வேந்து அவாம் பண்பு உடைமை' என மேலே (குறள். 618) வேண்டப்பட்டமையின், தூதின்பின் வைக்கப் பட்டது.

அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச சேர்ந்தொழுகு வார். 691

இகல் வேந்தர்ச் சேர்ந்து ஒழுகுவார - மாறுபடுதலையுடைய அரசரைச் சேர்ந்தொழுகும் அமைச்சர், அகலாது அணுகாது தீக் காய்வார் போல்க அவரை மிக நீங்குவதும் மிகச் செறிவதும் செய்யாது தீக்காய்வார்போல இடைநிலத்திலே நிற்க.

கடிதின் வெகுளும் தன்மையர் என்பது தோன்ற, 'இகல் வேந்தர்' என்றார். மிக அகலின் பயன் கொடாது, மிக அணுகின் அவமதிபற்றித் தெறும் வேந்தர்க்கு, மிகஅகலின் குளிர் நீக்காது, மிக அணுகின் சுடுவதாய தீயோடு உளதாய தொழில்உவமம் பெறப்பட்டது. (1)

**மன்னர் விழைப விழையாமை மன்னரான்**
**மன்னிய ஆக்கம் தரும்** 692

*மன்னர் விழைப விழையாமை* - தம்மால் சேரப்பட்ட மன்னர் விரும்புவனவற்றைத் தாம் விரும்பாதொழிதல, *மன்னரான் மன்னிய ஆக்கம் தரும்* - அமைச்சர்க்கு அவராலே நிலைபெற்ற செல்வத்தைக் கொடுக்கும்.

ஈண்டு 'விழைப' என்றது அவர்க்குச் சிறப்பாக உரியவற்றை. அவை நுகரப்படுவன, ஒப்பனை, மேன்மை என்றிவை முதலாயின. இவற்றை ஒப்பிற்கு அஞ்சித் தாம விழையாதொழியவே, அவ் அச்சம் நோக்கி உவந்து அவர் தாமே எல்லாச் செல்வமும நலகுவர் என்பது கருதது. எனவே, அவற்றை விரும்பின் கேடுதரும் என்பதாம். (2)

**போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்**
**தேற்றுதல் யார்க்கும் அரிது.** 693

*போற்றின் அரியவை போற்றல* - அமைச்சர் தம்மைக் காக்கக் கருதின் அரிய பிழைகள தக்கணவாராமல் காக்க, *கடுத்தபின் தேற்றுதல் யார்க்கும் அரிது* - அவற்றுள் வந்தன வாகக் கேட்டு அவ் அரசர் ஐயுற்றால அவரைப பின் தெளிவித்தல் யாவர்க்கும் அரிது ஆகலான்.

அரிய பிழைகளாவன அவரால பொறுத்தற்கு அரிய அறைபோதல உரிமையொடு மருவல், அரும்பொருள வெளவல் என்றிவை முதலாயின. அவற்றைக் காத்தலாவது ஒருவன் சொல்லியக்கால, தகுமோ என்று ஐயுறுது தகாது என்றே அவர் துணிய ஒழுகல். ஒருவாற்றால் தெளிவித்தாலும கடன்கொண்டான் தோன்றப் பொருள தோன்றுமாறுபோலக் கண்டுழியெல்லாம் அவை நினைக்கப்படுதலின் யார்க்கும் அரிதெனஞர்.

இவை மூன்று பாட்டானும் அது பொதுவகையால கூறப்பட்டது. (3)

**செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்**
**ஆன்ற பெரியா ரகத்து** 694

*ஆன்ற பெரியா ரகத்து* - அமைந்த அரசர் அருகு இருந்தால், *செவிச்சொலலும் சேர்ந்த நகையும் அவித்து ஒழுகல்* - அவர்காண ஒருவன் செவிக்கண் சொலலுதலையும ஒருவன்

முகம் நோக்கி நகுதலையும் தவிர்ந்து ஒழுகுக.

சேர்தல் - பிறரொடு சேர்தல். செய்தொழுகின், தம் குற்றம் கண்டு செய்தனவாகக் கொள்வர் என்பது கருத்து. (4)

எப்பொருளும் ஓரார் தொடரார்மற்று அப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை. 695



மறை - அரசனுக்குப் பிறரோடு மறை நிகழ்வுழி, எப்பொருளும் ஓரார் - யாதொரு பொருளையும் செவிகொடுத்துக் கேளாது, தொடரார்—அவனை முடுகி வினவுவதும் செய்யாது, அப்பொருளை விட்டக்கால் கேட்க - அம் மறைப்பொருளை அவன் தானே அடக்காது சொல்லியக்கால் கேட்க.

ஓர்தற்கு ஏற்கும் பொருளாயினும் என்பார், 'எப்பொருளும்' என்றார். 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. (5)

குறிப்பு அறிந்து காலம் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். 696

குறிப்பு அறிந்து - அரசனுக்குக் காரியஞ் சொல்லுங்கால் அப்பொழுது நிகழ்கின்ற அவன் குறிப்பினை அறிந்து, காலம் கருதி - சொல்லுதற்கு ஏற்ற காலத்தையும் நோக்கி, வெறுப்புஇல வேண்டுப வேட்பச் சொலல் - வெறுப்பிலவுமாய் வேண்டுவனவுமாய காரியங்களை அவன் மனம் விரும்புமாறு சொல்லுக.

குறிப்புக் காரியத்தின்கண் இன்றிக் காமவெகுளியுள்ளிட்டவற்றில் நிகழ்வுழியும் அதற்கு ஏலாக்காலத்தும் சொல்லுதல் பயனின்றாகலின் 'குறிப்பு அறிந்து காலம் கருதி' என்றும், அவன் உடம்படாதன முடிவுபோகாமையின் 'வெறுப்பில' என்றும், பயனிலவும் பயன் சுருங்கியவும் செய்தல் வேண்டாமையின் 'வேண்டுப' என்றும், அவற்றை இனியவாய்ச் சுருங்கி விளங்கிய பொருளவாய சொற்களால் சொல்லுக என்பார், 'வேட்பச்சொலல்' என்றும் கூறினார். (6)

**வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்**
**கேட்பினும் சொல்லா விடல். 697**

*வேட்பன சொல்லி-பயன் பெரியவாயும் அரசன் விரும்புவனவுமாய காரியங்களை அவன் கேட்டிலனாயினும் சொல்லி, எஞ்ஞான்றும் வினை இல கேட்பினும் சொல்லா விடல் - எஞ்ஞான்றும் பயனில்லாதவற்றை தானே கேட்டாலும் சொல்லாது விடுக.*

*'வினையில' எனவும், 'கேட்பினும்' எனவும் வந்த சொற்களான் அவற்றின் மறுதலைச் சொற்கள் வருவிக்கப்பட்டன. வினையான் வருதலின் 'வினை' என்றும், வறுமைக் காலமும் அடங்க 'எஞ்ஞான்றும்' என்றும் கூறினார். சொல்லுவனவும் சொல்லாதனவும் வகுத்துக் கூறியவாறு.*

*இவை நான்கு பாட்டானும் சிறப்புவகையால் கூறப்பட்டது.* (7)

**இளையர் இனமுறையர் என்றுஇகழார் நின்ற**
**ஒளியோடு ஒழுகப் படும் 698**

*இளையர் இன முறையர் என்று இகழார் - இவர் எம்மின் இளையர் என்றும் எமக்கு இன்ன முறையினையுடையர் என்றும்*



*அரசரை அவமதியாது, நின்ற ஒளியோடு ஒழுகப்படும் - அவர் மாட்டு நின்ற ஒளியோடு பொருந்த ஒழுகுதல் செய்யப்படும்.*

*ஒளி - உறங்காநிற்கவும் தாம் உலகம் காக்கின்ற அவர் கடவுள் தன்மை. அதனோடு பொருந்த ஒழுகலாவது அவர் கடவுளரும் தாம் மக்களுமாய் ஒழுகுதல். அவ் ஒளியால் போக்கப்பட்ட இளமையும் முறையும் பற்றி இகழ்வராயின், தாமும் போக்கப்படுவர் என்பது கருத்து.* (8)

**கொளப்பட்டேம் என்றுஎண்ணிக் கொள்ளாத செய்யார்**
**துளக்கு அற்ற காட்சியவர் 699**

கொளப்பட்டேம் என்று எண்ணிக் கொள்ளாத செய்யார் - அரசனல் யாம் நன்கு மதிக்கப்பட்டேம் என்று கருதி அவன் விரும்பாதவற்றைச் செய்யார், துளக்கு அற்ற காட்சியவர் - நிலை பெற்ற அறிவினையுடையார்.

கொள்ளாதன செய்து அழிவு எய்துவார் கொளப்பாட்டிற்குப் பின் தம்மை வேறொருவராகக் கருதுவர் ஆகலின், முன்னைய ராகவே கருதி அஞ்சியொழுகுவாரைத 'துளக்கு அற்ற காட்சிய வர்' என்றார். (9)

**பழையம் எனக்கருதிப் பண்புஅல்ல செய்யும்**
**கெழுதகைமை கேடு தரும் 700**

பழையம் எனக் கருதிப் பண்பு அல்ல செய்யும் கெழுத கைமை-அரசனுக்கு யாம் பழையம் எனக் கருதித் தமக்கு இயல்பு அல்லாதவற்றைச் செய்யும் உரிமை, கேடு தரும் - அமைச்சர்க்குக் கேட்டினைப் பயக்கும்.

அவன் பொறாது செறும்பொழுதின் அப் பழமைநோக்கிக் கண்ணோடாது உயிரை வௌவுதலான், அவன் வேண்டாதன செய்தற்கு ஏதுவாய கெழுதகைமை கேடுதரும் என்றார்.

இவை மூன்று பாட்டானும், பொறுப்பர் என்று அரசர் வெறுப்பன செய்யற்க என்பது கூறப்பட்டது.

## 71. குறிப்பு அறிதல்

அஃதாவது அரசர் கருதிய அதனை அவர் கூறுமல் அறிதல். இது மன்னரைச் சேர்ந்தொழுகற்கு இன்றியமையாததாகலின், அதன் பின் வைக்கப்பட்டது.

**கூறுமை நோக்கிக் குறிப்புஅறிவான் எஞ்ஞான்றும்**
**மாறுநீர் வையக்கு அணி 701**

குறிப்பு கூறுமை நோக்கி அறிவான் - அரசனல் குறித்த கருமத்தை அவன் கூறவேண்டாவகை அவன் முகத்தானும் கண்ணானும் நோக்கி அறியும் அமைச்சன், - எஞ்ஞான்றும் மாறு

நீர் வையக்கு அணி - எஞ்ஞான்றும் வற்றாத நீரால் சூழப்பட்ட வையத்துள்ளார்க்கு ஓர் ஆபரணமாம்.

ஒப்பமுடையானை எல்லார்க்கும் அழகு செய்தலான், 'வையக்கு அணி' என்றார். குறிப்பும் வையமும் ஆகுபெயர். வையத்திற்கு என்பது விகாரப்பட்டு நின்றது. (1)

ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல். 702

அகத்தது ஐயப்படாது உணர்வானை - ஒருவன் மனத்தின்கண் நிகழ்வதனை ஐயப்படாது ஒருதலையாக உணரவல்லானை, தெய்வத்தோடு ஒப்பக் கொளல் - மகனேயாயினும், தெய்வத்தோடு ஒப்ப நன்கு மதிக்க.

உடம்பு முதலியவற்றான் ஒவ்வானாயினும் பிறர் நினைத்தது உணரும் தெய்வத் தன்மையுடைமையின் 'தெய்வத்தோடு ஒப்ப' என்றார். (2)

குறிப்பின் குறிப்புஉணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல். 703

குறிப்பின் குறிப்பு உணர்வாரை - தம்குறிப்பு நிகழுமாறு அறிந்து அதனாற் பிறர்குறிப்பறியும் தன்மையாரை, உறுப்பினுள் யாது கொடுத்தும் கொளல் - அரசர் தம் உறுப்புக்களுள் அவர் வேண்டுவதொன்றனைக் கொடுத்தாயினும் தமக்குத் துணையாகக் கொள்க.

உள்ளநிகழும் நெறி யாவர்க்கும் ஒத்தலின், பிறர்குறிப்பறிதற்குத் தம் குறிப்புக் கருவியாயிற்று. உறுப்புக்களாவன பொருளும், நாடும், யானை குதிரைகளும் முதலிய புறத்து உறுப்புக்கள். இதற்கு 'பிறர் முகக் குறிப்பானே அவர் மனக்குறிப்பு உணர்வாரை' என்று உரைப்பாரும் உளர்.

இவை மூன்று பாட்டானும் குறிப்பு அறிவாரது சிறப்புக் கூறப்பட்டது. (3)

குறித்தது கூறாமைக் கொள்வாரோடு ஏனை
உறுப்புஓ ரனையரால் வேறு 704

குறித்தது கூறாமைக் கொள்வாரோடு - ஒருவன் மனத்துக் கருதியதனை அவன் கூறவேண்டாமல் அறியவல்லாரோடு, ஏனை உறுப்பு ஓரனையர் - மற்றை மாட்டாதார். உறுப்பால் ஒருதன்மையராக ஒப்பாராயினும், வேறு - அறிவான் வேறு.

'கொள்ளாதார்' என்பதூஉம், அறிவான் என்பதூஉம் அவாய்நிலையான் வந்தன. சிறந்த அறிவின்மையின், விலங்கு என்னும் கருத்தான் 'வேறு' என்றார். (4)



குறிப்பின் குறிப்புஉணரா ஆயின் உறுப்பினுள்
என்ன பயத்தவோ கண் 705

குறிப்பின் குறிப்பு உணரா ஆயின் - குறித்தது காணவல்ல தம் காட்சியால் பிறர்குறிப்பினை உணரமாட்டாவாயின், உறுப்பினுள் கண் என்ன பயத்தவோ - ஒருவன் உறுப்புக்களுள் சிறந்த கண்கள் வேறு என்ன பயனைச் செய்வன.

முதற்கண் 'குறிப்பு' ஆகுபெயர். குறிப்பு அறிதற்கண் துணையாதல் சிறப்புப்பற்றி உயிரது உணர்வு கண்மேல் ஏற்றப்பட்டது. அக்கண்களால் பயன் இல்லை என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் குறிப்பு அறியாரது இழிவு கூறப்பட்டது. (5)

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். 706

அடுத்தது காட்டும் பளிங்குபோல - தன்னை அடுத்த பொருளது நிறத்தைத் தானே கொண்டு காட்டும் பளிங்கு போல, நெஞ்சம் கடுத்தது முகம் காட்டும் - ஒருவன் நெஞ்சத்து மிக்கதனை அவன் முகம் தானே கொண்டு காட்டும்.

'அடுத்தது' என்பது ஆகுபெயர். கடுத்தது என்பது 'கடி' என்னும் உரிச்சொல் அடியாய் வந்த தொழிற்பெயர். உவமை ஒரு பொருள பிறிதொருபொருளின் பண்பைக் கொண்டு தோற்றுதலாகிய தொழில்பற்றி வந்தது. (6)

முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்
காயினும் தான்முந் துறும் 707

உவப்பினும் காயினும் தான் முந்துறும் - உயிர் ஒருவனை உவத்தலானும் காய்தலானும் உறின், தான் அறிந்து அவற்றின் கண் அதனின்முற்பட்டு நிற்கும் ஆகலான், முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ-முகம்போல அறிவுமிக்கது பிறிதுஉண்டோ? இல்லை.

'உயிர்க்கே அறிவுள்ளது ஐம்பூதங்களான் இயன்ற முகத்திற்கு இல்லை' என்பாரை நோக்கி, 'உயிரது கருத்தறிந்து அஃது உவக்குறின் மலர்தலும், காய்வுறின் கருகுதலும் உடைமையான், உண்டு' என மறுப்பார் போன்று, குறிப்பு அறிதற்குக் கருவி கூறியவாறு.

முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி
உற்றது உணர்வார்ப் பெறின். 708

அகம் நோக்கி உற்றது உணர்வார்ப்பெறின்—குறையுறுவானும் தன் மனத்தைக் குறிப்பான் அறிந்து தானுற்ற அதனைத் தீர்ப்பாரைப் பெறின், முகம் நோக்கி நிற்க அமையும் - அவர் தன் முகம் நோக்கும் வகை தானும் அவர் முகம் நோக்கி அவ் எல்லைக்கண் நிற்க அமையும்.



'உணர்வார்' எனக் காரியத்தைக் காரணமாக்கிக் கூறினார். அவ் எல்லையைக் கடந்து சொல்லுமாயின் இருவர்க்குஞ் சிறுமையா மாதலின், அது வேண்டா என்பதாம். குறையுறுவர் இயல்பு கூறுவார்போன்று கருவி கூறியவாறு.

இவை மூன்று பாட்டானும் குறிப்பறிதற்கருவி முகமென்பது கூறப்பட்டது. (8)

பகைமையும் கேண்மையும் கண்உரைக்கும் கண்ணின்
வகைமை உணர்வார்ப் பெறின். 709

கண்ணின் வகைமை உணர்வார்ப் பெறின் - வேந்தர்தம்

நோக்கு வேறுபாட்டின் தன்மையை அறியவல்ல அமைச்சரைப் பெறின், பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும் - அவர்க்கு மனத்துக் கிடந்த பகைமையையும் ஏனைக்கேண்மையையும் வேற்று வேந்தர் சொல்லிற்றிலராயினும் அவர் கண்களே சொல்லும்.

இறுதிக் கண் 'கண்' ஆகுபெயர். நோக்கு வேறுபாடாவன: வெறுத்த நோக்கமும் உவந்த நோக்கமும். உணர்தல் அவற்றை அவ்வக் குறிகளான் அறிதல். (9)

**நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்கால்**
**கண்அல்லது இல்லை பிற. 710**

நுண்ணியம் என்பார் அளக்கும் கோல் - யாம் நுண்ணறிவு உடையேம் என்றிருக்கும் அமைச்சர் அரசர் கருத்தினை அளக்கும் கோலாவது, காணுங்கால் கண் அல்லது பிற இல்லை - ஆராயுமிடத்து அவர்கண்ணல்லது பிற இல்லை.

அறிவின் உண்மை அஃதுடையாரமேல் ஏற்றப்பட்டது. இங்கிதம், வடிவு, தொழில், சொல் என்பன முதலாகப் பிறர்கருத்தளக்கும் அளவைகள் பல, அவையெல்லாம் தான் அறிந்த வழி அவரான் மறைக்கப்படும். நோக்கம் மனத்தொடு கலத்தலான் ஆண்டு மறைக்கப்படாது என்பதுபற்றி, அதனையே பிரித்துக் கூறினார். இனி 'அலைக்குங்கோல்' என்று பாடம் ஓதி, 'நுண்ணியம் என்று இருக்கும் அமைச்சரை அரசரலைக்கும் கோலாவது கண்' என உரைத்து, தன் வெகுளி நோக்கால் அவர் வெகுடற் குறிப்பு அறிக என்பது கருத்தாக்குவாரும் உளர்.

இவை இரண்டு பாட்டானும் நுண்கருவி நோக்கு என்பது கூறப்பட்டது. (10)

## 72. அவை அறிதல்

அஃதாவது அரசனோடிருந்த அவையினது இயல்பை அறிதல். காரியஞ் சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலே யன்றி இதுவும் வேண்டுதலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

**அவைஅறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகைஅறிந்த தூய்மை யவர். 711**

சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர் - சொல்லின் குழுவினை அறிந்த தூய்மையினையுடையார், அவை அறிந்து ஆராய்ந்து சொல்லுக - தாமொன்று சொல்லுங்கால் அப் பொழுதை அவையினை அறிந்து ஆராய்ந்து சொல்லுக.

சொல்லின் குழுவெனவே: செஞ்சொல், இலக்கணச்சொல், குறிப்புச்சொல் என்னும் மூவகைச் சொல்லும் அடங்கின. தூய்மை அவற்றுள் தமக்காகாதன ஒழித்து ஆவன கோடல். அவை என்றது ஈண்டு அதன் அளவை. அது மிகுதி, ஒப்பு, தாழ்வு என மூவகைத்து. அறிதல் தம்மொடு நோக்கி அறிதல். ஆராய்தல் - இவ் அவைக்கண் சொல்லும் காரியம் இது, சொல்லுமாறு இது, சொன்னால் அதன் முடிவு இது என்று இவை உள்ளிட்டன ஆராய்தல். (1)

**இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர். 712**

சொல்லின் நடைதெரிந்த நன்மையவர் - சொற்களின் நடையினை ஆராய்ந்தறிந்த நன்மையினையுடையார், இடை தெரிந்து நன்கு உணர்ந்து சொல்லுக - அவைக்கண் ஒன்று சொல்லுங்கால் அதன் செவ்வியை ஆராய்ந்து அறிந்து வழுப்படாமல் மிகவும் தெளிந்து சொல்லுக.

சொற்களின் நடையாவது: அம் மூவகைச் சொல்லும் செம்பொருள், இலக்கணப் பொருள், குறிப்புப் பொருள் என்னும் பொருள்களைப் பயக்குமாறு, செவ்வி: கேட்போர்கண் விருப்புடைமை. வழு: சொல் வழுவும் பொருள் வழுவும்.

இவை இரண்டு பாட்டானும் ஒன்று சொல்லுங்கால் அவையறிந்தே சொல்ல வேண்டும் என்பது கூறப்பட்டது. (2)

**அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉம் இல். 713**

அவை அறியார் சொல்லல் மேற்கொளபவர் சொல்லின் வகை அறியார் - அவையினது அளவையறியாது ஒன்று சொலுதலைத் தம்மேற்கொளவார் அச் சொல்லுதலின் கூறுபாடும் அறியார், வல்லதூஉம் இல் - கற்றுவல்ல கலையும் அவர்க்கு இல்லை.

அம் மூவகைச் சொற்களால் வரும் சொல்லுதல் வகைமை, கேட்பாரது உணர்வு வகைமை பற்றி வருதலால் 'சொலலின் வகையறியார்' என்றும், அஃது அறியார் யாதும் அறியாரென்று எல்லாராலும் இகழப்படுதலின் 'வல்லதூஉம் இல்' என்றும் கூறினார்.



இதனான் அவை யறியாக்கால் வரும் குற்றம் கூறப்பட்டது.()

**ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் வெளியார்முன்**
**வான்சுதை வண்ணம் கொளல். 714**

ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் - அறிவால் ஒள்ளியாரவைக்கண் தாமும் ஒள்ளியராக, வெளியார்முன் வான்சுதை வண்ணம் கொளல் - ஏனை வெளிலைகள் அவைக்கண் தாமும் வாலிய சுதையின் நிறத்தைக் கொள்க.

'ஒளியார' என்றது மிக்காரையும் ஒத்தாரையும். அது விகாரத்தால் 'ஒளியார்' என்று நின்றது. ஒள்ளியராதல்: தம்

நூலறிவுஞ் சொல் வன்மையும் தோன்ற விரிததல். அவை அறியாத புலலரை 'வெளியார்' என்றது, வயிரம் இல் மரத்தை

'வெளிறு' என்னும் வழக்குப் பற்றி. அவர் மதிக்கும் வகை அவரினும் வெண்மையுடையராக என்பார், 'வான் சுதை வண்ணம் கொளல்' என்றார்.

அவையளவு அறிந்தார் செய்யும் திறம் இதனான் தொகுத்துக் கூறப்பட்டது. பின்னர் விரிததுக் கூறுப. (4)

நன்றுஎன்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு. 715

*நன்று என்றவற்றுளளும் நன்றே - ஒருவற்கு இது நன்று என்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட குணங்கள் எல்லாவற்றுள் ளும் நன்றே, முதுவருள் முந்து கிளவாச் செறிவு-தம்மின் மிக்கார் அவைக்கண் அவரின் முற்பட்டு ஒன்றனைச் சொல்லாத அடக்கம்.*

*தம குறைவும், அவர் மிகுதியும், முந்துகிளந்தார்படும் இழுக்கும், கிளவாக்கால் எய்தும் நன்மையும் அறிந்தே அடங்கினமையின், அவ் அடக்கத்தினை 'நன்று என்றவற்றுளளும நன்று' என்றார். முன்கிளத்தலையே விலக்கினமையின், உடன் கிளத்தலும் பின் கிளத்தலும் அம என்பது பெறறும்.*

*இதனான் மிக்கார் அவைக்கண் செய்யும் திறம் கூறப்பட்டது.*

ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுஉணர்வார் முன்னர் இழுக்கு. 716

*ஆற்றின் நிலை தளர்ந்தற்று - வீடு எய்தற்பொருட்டு நன் நெறிக்கண் நின்றான்ஒருவன் அந்நெறியினின்றும் நிலை தளர்ந்து வீழ்ந்தாலொக்கும், வியன் புலம் ஏற்று உணர்வார் முன்னர் இழுக்கு - அகன்ற நூற்பொருள்களை உட்கொண்டு அவற்றின் மெய்ம்மையை உணரவல்லார் அவைக்கண் வல்லான்ஒருவன் சொல் இழுக்குப்படுதல்.*

*நிலைதளர்ந்து வீழ்தல் "உரன் என்னும் தோட்டியான் ஓரைந் தும்" (குறள், 24) காத்தொழுகியான் பின் இழுக்கிக் கூடா ஒழுக் கத்தனாதல், பயன் இழத்தலே அன்றி இகழவும் படும் என்பதாம்*



*இதனால் அதன்கண் இழுக்கியவழிப்படும் குற்றம் கூறப் பட்டது.* (6)

கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடுஅறச்
சொல்தெரிதல் வல்லா ரகத்து. 717

*கசடு அறச் சொல் தெரிதல் வல்லாரகத்து - வழுப்படாமல் சொற்களை ஆராய்தல் வல்லார் அவைக்கண் சொல்லின், கற்று*

அறிந்தார் கல்வி விளங்கும் - பல நூல்களையும் கற்று அவற்றின் ஆய பயனை அறிந்தாரது கல்வி யாவர்க்கும் விளங்கத்தோன்றும்.

'சொல்லின்' என்பது அவாய்நிலையான் வந்தது. ஆண்டே சொல்லுக என்பதாம்.

**உணர்வ துடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று** 718

உணர்வது உடையார்முன் சொல்லல் - பிறர் உணர்த்த லின்றிப் பொருள்களைத் தாமே உணரவல்ல அறிவினையுடையார் அவைக்கண் கற்றார் ஒன்றனைச் சொல்லுதல், வளர்வதன் பாத்தியுள் நீர்சொரிந்தற்று - தானே வளர்வதொரு பயிர் நின்ற பாத்திக்கண் நீரினைச் சொரிந்தாற்போலும்.

தானேயும் வளர்தற்குரிய கல்வி மிக வளரும் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் ஒத்தார் அவைக்கண் எவ்வழியும் சொல்லுக என்பது கூறப்பட்டது. (8)

**புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார்.** 719

நல்லவையுள் நன்கு செலச் சொல்லுவார் - நல்லார் இருந்த அவைக்கண் நல்ல பொருள்களை அவர் மனங்கொளச் சொல்லு தற்குரியார், புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க - அவையறி யாத புல்லர் இருந்த அவைக்கண் அவற்றை மறந்தும் சொல்லா தொழிக.

சொல்லின், தம் அவையறியாமையை நோக்கி நல்லவையும், பொருளறியாமையால் புல்லவை தானும் இகழுதலின், இரண்டு அவைக்கும் ஆகார் என்பது கருதி 'பொச்சாந்தும் சொல்லற்க' என்றார். (9)

**அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல்.** 720

தம் கணத்தார் அல்லார்முன் கோட்டி கொளல் - நல்லார் தம்மினத்தரல்லாதார் அவைக்கண் ஒன்றனையும் சொல்லற்க

அங்கணத்துள் உக்க அமிழ்தற்று - சொல்லின் அது தூய்தலவா,ர் முற்றத்தின்கண் அமிழ்தினை ஒக்கும்.



'கொள்' என்னும் முதனிலைத் தொழிற் பெயர் முன்னின்று பின் எதிர்மறை அல விகுதியோடு கூடி "மகன் எனல்" (குறள் 196) என்பது போல் நின்றது. 'சொல்லின்', 'அது' என்பன அவாய் நிலையான் வந்தன. பிறரெல்லாம் 'கொளல்' என்பதனைத் தொழிற் பெயராக்கி உரைத்தார், அவர் அத் தொழில் அமிழ்து என்னும் பொருள் உவமையோடு இயையாமை நோக்கிற்றிலர். சாவா மருந்தால் அறந்து, நுகர்வார் யாதினும் படாது அவ் அங்கணத்துக்கும் இயைபு இன்றிக் கெட்டவாறு தோன்ற, 'உக்க அமிழ்து' என்றார். அச்சொல் பயனில் சொல்லாம் என்பதாயிற்று.

இவ்விரண்டு பாட்டானும் தாழ்ந்தார் அவைக்கண் ஒருவழியும் சொல்லற்க என்பது கூறப்பட்டது. (10)

## 73. அவை அஞ்சாமை.

அஃதாவது சொல்லுதற்குரிய அவையினையறிந்து சொல்லுங்கால் அதற்கு அஞ்சாமை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

வகைஅறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர். 721

வகை அறிந்து வல்லவை வாய்சோரார் - கற்று வல்ல அவை, அல்லா அவை என்னும் அவை வகையினை அறிந்து வல்ல அவைக்கண் ஒன்று சொல்லுங்கால் அச்சத்தான் வழுப்படச் சொல்லார், சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர் - சொல்லின் தொகையெல்லாம் அறிந்த தூய்மையினையுடையார்.

இருந்தாரது வன்மை அவைமேல் ஏறறப்பட்டது. 'வல்லவை' என்பதற்கு, 'தாம் கற்று வல்ல நூற்பொருள்களை' என்று உரைப்

பாரும் உளர். 'அச்சந்தான்' என்பது அதிகாரத்தால் வந்தது. 'சொல்லின்தொகை', 'நூயனம' என்பனவற்றற்கு (குறள் 711) மேல் உரைத்தாங்கு உரைக்க. (1)

**கற்றருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார். 722**

*கற்றருள் கற்றார் எனப்படுவர் - கற்றார் எல்லாரினும் இவர் நன்கு கற்றார் என்று உலகத்தாரால் சொல்லப்படுவார், கற்றார்முன் கற்ற செலச் சொல்லுவார் - கற்றாரவைக்கண் அஞ்சாது தாம் கற்றவற்றை அவர் மனம் கொள்ளும்வகை சொல்ல வல்லார்.*

*உலகம் அறிவது அவரையே ஆகலின், அதனாற் புகழப்படுவாரும் அவர் என்பதாம்.* (2)

**பகையகத்துச் சாவார் எளியர் அரியர்
அவையகத்து அஞ்சா தவர். 723**



*பகையகத்துச் சாவார் எளியர் - பகையிடை அஞ்சாது புக்குச் சாவ வல்லார் உலகத்துப் பலர், அவையகத்து அஞ்சாதவர் அரியர் - அவையிடை அஞ்சாது புக்குச் சொல்லவல்லார் சிலர்.*

*அஞ்சாமை 'சாவார்; என்பதனோடும் கூட்டி, அதனால 'சொல்ல வல்லார்' என்பது வருவிந்து உரைக்கப்பட்டது.*

*இவை மூன்று பாட்டானும் அவை அஞ்சாரது சிறப்புக் கூறப்பட்டது.* (3)

**கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாம்கற்ற
மிக்காருள் மிக்க கொளல். 724**

*கற்றார்முன் கற்ற செலச் சொல்லி - பல நூல்களையும் கற்றார் அவைக்கண் தாம் கற்றவற்றை அவர்மனம் கொள்ளுமாற்றாற் சொல்லி, தாம் கற்ற மிக்க மிக்காருள் கொளல் - அவற்றின் மிக்க பொருள்களை அம் மிகக் கற்றாரிடத்து அறிந்து கொள்க.*

*எல்லாம் ஒருவற்குக் கற்றல் கூடாமையின், வேறுவேறுய கல்வியுடையார் பலர் இருந்த அவைக்கண் தாம் கற்றவற்றை*

அவர்க்கு ஏற்பச் சொலலுக; சொலலவே, அவரும் அவை யெல்லாஞ் சொல்லுவர் ஆகலான், ஏலேக் கற்கப்பெருதன கேட்டறியலாம் என்பதாயிற்று.

இதனுன் அதனது ஒருசார் பயன் கூறப்பட்டது. (4)

**ஆற்றின் அளவுஅறிந்து கற்க அவைஅஞ்சா**
**மாற்றம் கொடுத்தற் பொருட்டு. 725**

ஆற்றின் அளவு அறிந்து கற்க—சொல்லிலக்கண நெறியானே அளவை நூலை அமைச்சர் உட்பட்டுக் கற்க, அவை அஞ்சா மாற்றம் கொடுத்தற்பொருட்டு—வேற்றுவேந்தர் அவையிடை அஞ்சாது அவர் சொல்லிய சொற்கு உத்தரஞ் சொலலுதற் பொருட்டு.

அளவைநூல் சொலநூல் கற்றே கற்கவேண்டுதலின், அதற்கு அஃது ஆறு எனப்பட்டது. அளக்கும் கருவியை 'அளவு' என்ருர், அகுபெயரான். அவர் சொலலே வெல்வதொரு சொல சொல்லலாவது நியாயத்து வாத சொற்ப விதண்டைகளும் சல சாதிகளும் முதலிய கற்ருர்க்கே ஆகலின், அவற்றைப் பிழையாமல் கற்க என்பதாம்.

இதறுன் அதன் காரணம் கூறப்பட்டது. (5)

**வாளொடுஎன் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடுஎன்**
**நுண்அவை அஞ்சு பவர்க்கு 726**

வன்கண்ணர் அலலார்க்கு வாளொடு என் -வன்கண்மை யுடையர் அல்லாதார்க்கு வாளோடு என்ன இயைபு உண்டு, நுண் அவை அஞ்சுபவர்க்கு நூலொடு என் - அதுபோல நுண்ணி யாரது அவையை அஞ்சுவார்க்கு நூலோடு என்ன இயைபு உண்டு.



இருந்தாரது நுண்மை அவை மேல் ஏற்றப்பட்டது. நூற்கு உரியர் அலலர் என்பதாம் (6)

**பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து**
**அஞ்சு மவன்கற்ற நூல். 727**

பகையகததுப் பேடி கை ஒளவாள - எறியப்படும் பகைநடு வண் அதனை அஞசும் பேடி பிடிதத கூர்வாளை ஒக்கும், அவை

யகத்து அஞ்சுமவன் கற்ற நூல்—சொல்லப்படும் அவை நடுவண் அதனை அஞ்சுமவன் கற்ற நூல்.

பேடி பெண் இயல்பு மிக்கு ஆண் இயல்பும் உடையவள். களமும் வாயத்துத் தானும் நன்றாய் இருந்ததேயாயினும் பிடித்தவள் குற்றத்தால் வாள் சிறப்பின்றாயினாற்போல, அவையும் வாயத்துத் தானும் நன்றாய் இருந்ததேயாயினும் கற்றவன் குற்றத்தால் நூல் சிறப்பின்றாயிற்று. (7)

**பல்லவை கற்றும் பயம்இலரே நல்லவையுள்**
**நன்கு செலச்சொல்லா தார். 728**

*நல்லவையுள் நன்கு செலச் சொல்லாதார் - நல்லார் இருந்த அவைக்கண் நல்ல சொற் பொருள்களைத் தம் அச்சத்தான் அவர்க்கு ஏற்கச் சொல்லமாட்டாதார், பல்லவை கற்றும் பயம் இலரே - பல நூல்களைக் கற்றாராயினும் உலகிற்குப் பயன் படுதல் இலர்.*

*அறிவார் ஏற்றன் சொல்லாமையின் கல்வியின் உண்மை அறிவாரில்லை என்பதாம். இனிப் 'பயமிலா' என்பதற்கு, 'கல்விப் பயனுடையாரல்லர்' என்று உரைப்பாரும் உளர்.* (8)

**கல்லா தவரின் கடைஎன்ப கற்றறிந்தும்**
**நல்லா ரவைஅஞ்சு வார். 729**

*கற்று அறிந்தும் நல்லார் அவை அஞ்சுவார் - நூல்களைக் கற்றுவைத்தும் அவற்றின் பயன் அறிந்து வைத்தும் நல்லார் இருந்த அவையினை அஞ்சி ஆண்டுச் சொல்லாதாரை, கல்லாதவரின் கடை என்ப - உலகத்தார் கல்லாதவரினும் கடையர் என்று சொல்லுவர்.*

*அக்கல்வியறிவுகளால் பயன் தாமும் எய்தாது பிறரை எய்துவிப்பதும் செய்யாது கல்வித்துன்பமே எய்தினிற்றலின், 'கல்லாதவரின் கடை' என உலகம் பழிக்கும் என்பதாம்.* (9)

**உளர்எனினும் இல்லாரொடு ஒப்பர் களன்அஞ்சிக்**
**கற்ற செலச்சொல்லா தார். 730**

*களன் அஞ்சிக் கற்ற செலச் சொல்லாதார்-அவைக்களத்தை அஞ்சித் தாம் கற்றவற்றை அதற்கு ஏற்கச் சொல்லமாட்டாதார்,*

உளர் எனினும் இல்லாரொடு ஒப்பர் - உயிர் வாழ்கின்றாராயினும் உலகத்தாரால் எண்ணப்படாமையின் இறந்தாரோடு ஒப்பர்.

ஈண்டு, 'களன்' என்றது ஆண்டிருந்தாரை.

இவை ஐந்து பாட்டானும் அவை அஞ்சுவாரது இழிபு கூறப் பட்டது. (10)

## 74. நாடு

இனி, அவ் அரசனாலும் அமைச்சனாலும் கொண்டு உய்க்கப்படுவதாய ஏனை அரண் முதலிய அங்கங்கட்கு இன்றியமையாச் சிறப்பிற்றாய நாடு கூறுகின்றார். அதிகாரத்தாற் கூறுகின்றார்.

**தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்வுஇலாச்**
**செல்வரும் சேர்வது நாடு. 731**

தள்ளா விளையுளும் - குன்றாத விளையுளைச் செய்வோரும், தக்காரும் - அறவோரும், தாழ்வு இலாச் செலவரும் - கேடு இல்லாத செல்வமுடையோரும், சேர்வது நாடு - ஒருங்கு வாழ்வதே நாடாவது.

மற்றை உயர்திணைப் பொருளகளோடும் சேர்தல் தொழிலோடும் இயையாமையின், 'விளையுள' என்பது உழவர்மேல நின்றது. குன்றாமை - எல்லா உணவுகளும் மிக்குறைய உணவாதல். இதனான் வாழ்வார்க்கு வறுமையின்மை பெறப்பட்டது. அற வோர் - துறந்தோர், அந்தணர் முதலாயினார். "நற்றவஞ்செய் வார்க்கு இடம் தவம் செய்வோர்க்கும் அஃது இடம்" (சீவக. நாமக. 48) என்றார் பிறரும். இதனான் அழிவின்மை பெறப் பட்டது. கேடு இல்லாமை - வழங்கத் தொலையாமை. செலவர் -

கலத்தினும் காலினும் அரும்பொருள தரும் வணிகர். இதனான் அரசனுக்கும் வாழ்வார்க்கும் பொருள வாய்த்தல் பெறப்பட்டது.

**பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டான்**
**ஆற்ற விளைவது நாடு. 732**

பெரும்பொருளால் பெள்தக்கது ஆகி - அளவிறந்த பொருளுடைமையால் பிற தேயத்தாராலும் விரும்பத் தக்கதாய், அருங் கேட்டால் ஆற்ற விளைவது நாடு-கேடின்மையோடு கூடி மிக விளைவதே நாடாவது.

அளவிறப்பு - பொருள்களது பன்மைமேலும் தனித்தனி அவற்றின் மிகுதிமேலும் நின்றது. கேடாவது. மிக்கபெயல், பெயலின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மை என்றிவற்றான் வருவது. "மிக்கபெய லோடுபெய லின்மை எலிவிட்டில்கிளி - அக்கண் அரசண்மையோடு ஆறு." இவற்றை வடநூலார் ஈதிகள் என்ப. இவற்றுள் முன்னையவற்றது இன்மை அரசன் அறத்

தானும், பின்னையது இன்மை அவன் மறத்தானும் வரும். இவ் இன்மைகளான் மிக விளைவதாயிற்று. (2)



பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு
இறையொருங்கு நேர்வது நாடு. 733

பொறை ஒருங்கு மேல்வருங்கால் தாங்கி - பிறநாடுகள் பொறுத்த பாரமெல்லாம் ஒருங்கே தன்கண் வருங்கால் அவற்றைத் தாங்கி, இறைவற்கு இறை ஒருங்கு நேர்வது நாடு - அதன் மேல் தன் அரசனுக்கு இறைப்பொருளை முழுவதையும் உடம்பட்டுக் கொடுப்பதே நாடாவது.

பாரங்கள் - மக்கள் தொகுதியும் ஆன் எருமை முதலிய விலங்குத் தொகுதியும். தாங்குதல் அவை தந்தம தேயத்துப் பகை வந்து இறுததாக, அரசு கோலகோடியதாக, உணவின்மை யானுதத தன்கண் வந்தால அவ்வதேயங்களைப்போல இனிதிருப்பச் செய்தல். அச்செயலால் இறையைக் குறைபடுத்தாது தானே கொடுப்பதென்பார், 'இறை ஒருங்கு நேர்வது' என்றார். (3)

உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேராது இயல்வது நாடு. 734

உறு பசியும் - மிக்க பசியும், ஓவாப் பிணியும - நீங்காத நோயும், செறுபகையும சேராது - புறத்து நின்றுவந்து அழிவு செய்யும் பகையும் இன்றி, இயலவது நாடு - இனிது நடப்பதே

நாடாவது.

உறுபசி உறுவருநோயுடைமையாலும் ஆறாத விளைதலானும சேரா தாயிற்று. ஓவாப்பிணி நீக் காற்று மிக்க குளிர வெப்பங்களும் நுகரப்படுமவற்றது தீமையும் இன்மையின் சேராதாயிற்று. செறு பகை அரசனுற்றலும் நிலைப்படையும அடவியும அரணும உடை மையின் சேராதாயிற்று. (4)

**பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்துஅலைக்கும்**
**கொல்குறும்பும் இல்லது நாடு. 735**

பல் குழுவும் - சங்கேத வயத்தான் மாறுபட்டுக் கூடும் பல கூட்டமும், பாழ் செய்யும் உட்பகையும - உடனுறையாநின்றே பாழாகச் செய்யும் உட்பகையும், வேந்து அலைக்கும் கொல குறும பும் இல்லது நாடு - அளவு வந்தால் வேந்தனை அலைக்கும கொல் வினைக்குறும்பரும் இல்லாததே நாடாவது.

சங்கேதம் - சாதிபற்றியும கடவுள பற்றியும் பலர்க்கு உள தாம் ஒருமை. உட்பகை - ஆறலைப்பார், களவர், குறளைகூறுவார் முதலிய மக்களும், பன்றி, புலி, கரடி முதலிய விலங்குகளும். உட்பகை, குறும்பு என்பன ஆகுபெயர். இம் மூன்றும் அரசனை யும் வாழ்வாரையும் கடியப்பட்டு நடப்பதே நாடு என்பதாம. (5)

**கேடுஅறியாக் கெட்ட இடத்தும் வளங்குன்று**
**நாடுஎன்ப நாட்டின் தலை. 736**

கேடு அறியா - பகைவரால் கெடுதலறியாததாய், கெட்ட விடத்தும் வளம் குன்று நாடு - அரிதின் கெட்டதாயினும் அப்பொழுதும் தன் வளங்குன்றாத நாட்டினை, நாடின் தலை என்ப - எல்லாநாட்டினும் தலை என்று சொல்லுவர் நூலோர்.

அறியாத, குன்றாத என்னும் பெயரெச்சங்களின் இறுதிநிலைகள் விகாரத்தால் தொக்கன. கேடு அறியாமை அரசனாற்றலானும் கடவுட்பூசை அறங்கள் என்றிவற்றது செயலானும் வரும். வளம் - ஆகரங்களிற் படுவனவும், வயலினும் தண்டலையினும் விளைவனவுமாம். குன்றாமை - அவை செய்யவேண்டாமல் இயல்பாகவே உளவாயும் முன் ஈட்டப் பட்டும குறைவுறுதல்.

இவை ஆறு பாட்டானும் நாட்டது இலக்கணம் கூறப்பட்டது. (6)

இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வலஅரணும் நாட்டிற்கு உறுப்பு. 737

இருபுனலும் - கீழ்நீர் மேல் நீர் எனப்பட்ட தன்கண் நீரும், வாய்ந்தமலையும் - வாய்ப்புடைத்தாய மலையும், வருபுனலும் - அதனின்றும் வருவதாய நீரும், வல்லரணும் - அழியாத நகரியும், நாட்டிற்கு உறுப்பு - நாட்டிற்கு அவயவமாம.

ஈண்டு 'புனல்' என்றது தரவு கேணிகளும் ஏரிகளும் ஆறுகளுமாகிய ஆதாரங்களை, அவயவமாதற்குரியன அவையே ஆகலின். அவற்றான் வானம் வறப்பினும வளனுடைமை பெறப்பட்டது. இடையதன்றி ஒருபுடையதாகலும, தன்வளம் தருதலும மாரிக்கண் உண்டகீா கோடைக்கண் உழ்ழுதலும் உடைமைபற்றி 'வாய்ந்த மலை' என்றார். அரண் - ஆகுபெயர்.

இதனான் அதன் அவயவம் கூறப்பட்டது. (7)

பிணியின்மை செல்வம் விளைவுஇன்பம் ஏமம்
அணிஎன்ப நாட்டிற்குஇவ் ஐந்து. 738

பிணியின்மை செல்வம் விளைவு இன்பம் ஏமம் இவ் ஐந்து - நோயின்மையும் செல்வம் விளைதல் இன்பம் காவல் என்றிவை உடைமையுமாகிய இவ் ஐந்தினையும், நாட்டிற்கு அணி என்ப - நாட்டிற்கு அழகு என்று சொல்லுவா நூலோா.

பிணியின்மை - நிலநலத்தான் வருவது. செல்வம் - மேற

சொல்லியன. இன்பமும் விழுவும் வேளாவியுமசான்றோரும் உடைமை யானும், நுகாவன உடைமையானும், நிலநீர்களாது கன்மை யானும், வாழ்வார்க்கு உவ நிகழுவது. 'காவல்' என்றவே அரசன் காவலும் வாழ்வோர் காவலும் அரண் காவலும் அடங்கின.

பிற தேயங்களினுள்ளாரும் விழைந்து பின் அவையுள ளாமைக்கு ஏதுவாய அதன் அழகு இதனைன் கூறப்பட்டது. (8)



நாடுஎன்ப நாடா வளத்தன நாடுஅல்ல
நாட வளந்தரும் நாடு. 739

நாடா வளத்தன நாடு என்ப - தம்கண் வாழ்வார் தேடி வருந் தாமல் அவர்பால் தானே அடையும் செல்வதத்தை உடையவற்றை நூலோர் நாடு என்று சொல்லுவர், நாட வளம் தரும் நாடு நாடு அல்ல - ஆதலால் தேடி வருந்தச் செல்வம் அடைவிக்கும் நாடுகள் நாடாகா.

நாடுதல் - இருவழியும் வருத்தத்தின் மேல் நின்றது. "பொருள செய்வார்க்கும் அஃது இடம்" என்றார் பிறரும். நூலோர் விதிபற்றி எதிர்மறை முகத்தால் குற்றம் கூறியவாறு. இவ்வாறன்றி 'என்ப' என்பதனைப் பின்னும் கூட்டி இருபொருள பட உரைப்பின், அனுவாதமாம். (9)

ஆங்குஅமைவு எய்தியக் கண்ணும் பயம்இன்றே
வேந்துஅமைவு இல்லாத நாடு. 740

வேந்து அமைவு இல்லாத நாடு - வேந்தனோடு மேவுதல் இல் லாத நாடு, ஆங்கு அமைவு எய்தியக் கண்ணும் பயம் இன்றே - மேற்சொல்லிய குணங்கள் எல்லா வற்றினும் நிறைந்திருந்ததாயி னும் அவற்றால் பயனுடைத்தன்று.

'வேந்து அமைவு' எனவே, குடிகள் அவன் மாட்டு அன்புடைய ராதலும் அவன்தான் இவர் மாட்டு அருளுடையனாதலும் அடங் கின. அவை இலவழி வாழுவோர் இன்மையின், அவற்றால் பயனின்றாயிற்று.

இவை இரண்டு பாட்டானும் அதன் குற்றம் கூறப்பட்டது. ()

## 75. அரண்

இனி அந் நாட்டிற்கும் உறுப்பாய் அடங்குமாயினும், பகைவரால் தொலைவு வந்துழி அது தனக்கும் அரசன் தனக் கும் ஏம மாதற் சிறப்புப் பற்றிப் பிரிதோர் அங்கமாக ஓதப் பட்ட அரண் இவ் அதிகாரத்தால் கூறுகின்றார்.

ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள். 741

ஆற்றுபவர்க்கும் அரண் பொருள் - மூவகை ஆற்றலுமுடை யராய்ப் பிறர்மேற் செல்வார்க்கும் அரண் சிறந்தது; அஞ்சித் தற்போற்றுபவர்க்கும் அரண் பொருள் - அவையன்றித் தம்மேல் வருவார்க்கு அஞ்சித் தன்னையே அடைவார்க்கும் அரண் சிறந்தது.

பிறர்மேல் செல்லுங்கால் உரிமை பொருள் முதலியவற்றைப் பிறனொருவன் வௌவாமல் வைத்துச் செல்லவேண்டுமாகலா னும், அப் பெருமை தொலைந்து இறுதி வந்துழிக் கடல் நடுவண்



உடைகலத்தார் போன்று ஏமங்காணாது இறுவராகலானும், ஆற்று பவர்க்கும் போற்றுபவர்க்கும் அரண் பொருளாயிற்று. ஆற்ற உடையராயினும் அரண் இலவழி அழியுமபாலராகலின், அவரை முற்கூறினார்.

இதனான் அரணினது சிறப்புக் கூறப்பட்டது. (1)

மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்

காடும் உடையது அரண். 742

மணி நீரும் மண்ணும் மலையும் அணி நிழற்காடும் உடையது அரண் - மணிபோலும் நிறத்தினையுடைய நீரும் வெள்ளிடை நிலமும் மலையும் குளிர்ந்த நிழலையுடைய காடும் உடையதே அரணாவது.

எஞ்ஞான்றும் வற்றாத நீர் என்பார் 'மணிநீர்' என்றும், நீரும் நிழலும் இல்லா மருநிலம் என்பார் 'மண்' என்றும், செறிந்த காடு என்பார் 'அணி நிழற்காடு' என்றும் கூறினார். மதிற் புறத்தது மருநிலம் பகைவர் அரண் பற்றாமைப் பொருட்டு. நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என இயற்கையும் செயற்கையுமாய இந்நான்கு அரணும் சூழ்ப்படுவது அரண் என்பதாம். (2)

உயர்வு அகலம் திண்மை அருமை இந்நான்கின்
அமைவுஅரண் என்றுஉரைக்கும் நூல். 743

உயர்வு, அகலம், திண்மை, அருமை இந்நான்கின் அமைவு - உயர்ச்சியும், அகலமும், திண்மையும், அருமையும் என்று சொல்லப்பட்ட இந்நான்கின் மிகுதியையுடைய மதிலை, அரண் என்று உரைக்கும் நூல் - அரண் என்று சொல்லுவர் நூலோர்.

'அமைவு', 'நூல்' என்பன ஆகுபெயர். உயர்வு - ஏணியெட்டாதது. அகலம் - புறத்தோர்க்கு அகழலாகா அடியகலமும், அகத்தோர்க்கு நின்று வினை செய்யலாம் தலையகலமும். திண்மை - கல் இட்டிகைகளாற் செய்தலின் குத்தப்படாமை. அருமை - பொறிகளான் அணுகற்கு அருமை. பொறிகளாவன "வளைவிற் பொறியும் மயிற்செறி நீலையும், கருவிரல் ஊகமும் கல்லுமிழ் கவணும், பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும், காய்பொன் உலையும் கல்லிடு கூடையும், தூண்டிலும் தொடக்கும் ஆண்டலையடுப்பும், கவையும் கழுவும் புதையும் புழையும், ஐயவித் துலாமும் கைபெயர் ஊசியும் சென்றெறி சிரலும் பன்றியும் பணையும், எழுவும் சீப்பும் முழுவிறற் கணையமும், கோலும் குந்தமும் வேலும் சிலவும்" (சிலப். அடைக். 207-216) என்றிவை முதலாயின. (3)

சிறுகாப்பின் பேர்இடத்தது ஆகி உறுபகை
ஊக்கம் அழிப்பது அரண். 744

சிறு காப்பின் பேர் இடத்தது ஆகி - காக்க வேண்டும் இடம் சிறிதாய் அகன்ற இடத்தை உடைத்தாய், உறு பகை ஊக்கம் அழிப்பது அரண் - தன்னை வந்து முற்றிய பகைவரது மன எழுச்சியைக் கெடுப்பதே அரணாவது.

வாயிலும் வழியும் ஒழிந்த இடங்கள் மலை, காடு, நீர்நிலை என்று இவற்றுள் ஏற்பன உடைத்தாதல் பற்றி 'சிறுகாப்பின்' என்றும், அகத்தோர் நலிவின்றியிருத்தல் பற்றி 'பேரிடத்து ஆகி' என்றும், தம் வலி நோக்கி இதுபொழுதே அழிதும் என்று வரும் பகைவர் வந்து கண்டால் அவ்வூக்கமொழிதல் பற்றி, 'ஊக்கம் அழிப்பது' என்றும் கூறினார். (4)

**கொளற்கு அரிதாய்க் கொண்டகூழ்த்து ஆகி அகத்தார்**
**நிலைக்கு எளிதாம் நீரது அரண். 745**

கொளற்கு அரிதாய் - புறத்தாரால் கோடற்கு அரிதாய், கொண்ட கூழ்த்து ஆகி - உட்கொண்ட பலவகை உணவிற்றாய், அகத்தார் நிலைக்கு எளிதாம் நீரது அரண் - அகத்தாரது போர் நிலைக்கு எளிதாய நீர்மையையுடையதே அரணாவது.

கோடற்கு அருமை இளை மிடங்குகளானும், பொறிகளானும், இடங்கொளற்கு அருமை. உணவு தலைமைபற்றிக் கூறினமையின், மற்றுள்ள நுகரப்படுவனவும் அடங்கின. நிலைக்கு எளிதாம் நீர்மையாவது அகத்தார் விட்ட ஆயுதம் முதலிய புறத்தார்மேல் எளிதிற் சேறலும், அவர்விட்டன அகத்தார்மேல் செல்லாமையும், பதணப் பரப்பும் முதலாயின. (5)

**எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துஉதவும்**
**நல்லாள் உடையது அரண். 746**

எல்லாப் பொருளும் உடைத்தாய் - அகத்தோர்க்கு வேண்டும் பொருள்கள் எல்லாவற்றையும் உள்ளே உடைத்தாய், இடத்து உதவும் நல்லாள் உடையது அரண் - புறத்தோரால் அழிவெய்தும் எல்லைக்கண் அஃது எய்தாவகை உதவிக் காக்கும் நல்ல வீரரையும்

உடையதே அரணாவது.

அரசன்மாட்டு அன்பும் மானமும் மறமும் சோர்வின்மையும் முதலிய நற்குணங்களை உடையமையற்றி, 'நல்லான' என்றார். (6)

முற்றியும் முற்றது எறிந்தும் மறைப்படுத்தும்
பற்றற்கு அரியது அரண். 747

முற்றியும் - புகலொடு போக்கு ஒழியும் வகை நெருங்கிச் சூழ்ந்தும், முற்றாது எறிந்தும் - அங்ஙனம் சூழாது நெகிழ்ந்த இடன் நோக்கி ஒருமுகமாகப் பொருதும், அறைப்படுத்தும் - அகத்தோரை அவர் தெளிந்தோரைவிட்டுக் கீழறுத்துத் திருப்பியும், பற்றற்கு அரியது அரண் - புறத்தோரால் கொள்ளுதற்கு அரியதே அரணாவது.



இம் மூன்று உபாயத்துள்ளும் முதலாவது எல்லாப் பொருளும் உடைமையாலும், ஏனைய நல்லாளுடைமையானும், வாயா வாயின. (7)

முற்றுஆற்றி முற்றி யவரையும்பற்று ஆற்றிப்
பற்றியார் வெல்வது அரண். 748

முற்று ஆற்றி முற்றியவரையும் - தானைப் பெருமையாற் சூழ்தல் வல்லராய் வந்து சூழ்ந்த புறத்தோரையும், பற்றியார் பற்று ஆற்றி வெல்வது அரண்-தன்னைப்பற்றிய அகத்தோர்தாம் பற்றிய இடம் விடாதே நின்று பொருது வெல்வதே அரணாவது.

உம்மை -சிறப்பும்மை. பற்றின்கண்ணே ஆற்றி என விரியும். பற்று - ஆகு பெயர். 'வெல்வது' என உடையார் தொழில அரண்மேல் நின்றது. பெரும்படையானைச் சிறுபடையான் பொருத்து நிற்கும் துணையேயன்றி வெல்லும் இயல்பினது என்பதாம். இதற்குப் பிறிது உரைப்பாரும் உளர்.

இவை ஏழுபாட்டானும் அதனது இலக்கணம் கூறப்பட்டது.(8)

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறுஎய்தி மாண்டது அரண். 749

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து வீறு எய்தி - போர் தொடங்கின அளவிலே பகைவர் கெடும்வண்ணம் அகத்தோர் செய்யும் வினை வேறுபாடுகளான் வீறுபெற்று, மாண்டது அரண் - மற்றும் வேண்டும் ஆட்சியையுடையதே அரணாவது.

தொடக்கத்திற் கெட்டார் பின்னுங் கூடிப் பொருதல் கூடாமையின், 'முனைமுகத்துச் சாய' என்றார். வினை வேறுபாடுகளாவன பகைவர் தொடங்கிய போரினை அறிந்து எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுதல் என்றிவை முதலாய வினைகளுள் அதனைச் சாய்ப்பன செய்தல். மற்றும் வேண்டும் ஆட்சியென்றது புறத்தோர் அறியாமற் புகுதல் போதல் செய்தற்குக் கண்ட சுருங்கை வழி முதலாயின உடைமை. (9)

**எனைமாட்சித்து ஆகியக் கண்ணும் வினைமாட்சி**
**இல்லார்கண் இல்லது அரண். 750**

அரண் - அரண், எனைமாட்சித்து ஆகியக் கண்ணும் - மேற்சொல்லப்பட்ட மாட்சியெல்லாம் உடைத்தாய விடத்தும், வினைமாட்சி இல்லார்கண் இல்லது - வினைசெய்தற்கண் மாட்சி இல்லாதார் மாட்டு அவையிலதாம்.

வாளாவிருத்தலும், அளவறியாது செய்தலும், கீலாதது செய்தலும் எல்லாம் அடங்க 'வினைமாட்சியில்லார்' என்றும் ஏற்ற வினையை அளவறிந்து செய்து காவாக்கால் அம்மாட்சிகளால் பயனின்றி அழியும் என்பார். 'அவையுடைத்தன்று' என்றும் கூறி



னா. இவை இரண்டு பாட்டானும் காப்பாரை இன்றியமையாதென்பது கூறப்பட்டது. (10)

## 76. பொருள் செயல் வகை

இனிப் பெரும்பான்மையும் நாட்டானும் அரணானும் ஆக்கவும் காக்கவும் படுவதாய பொருளைச் செய்தலின் திறம் இவ் அதிகாரத்தாற் கூறுகின்றார்.

**பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்**
**பொருள்அல்லது இல்லை பொருள். 751**

பொருள அலலவரைப் பொருளாகக் செய்யும் பொருளல்லது - ஒரு பொருளாக மதிக்கப்படாதாரையும் படுவாராகச் செய்ய வலல பொருளையொழிய, பொருள் இல்லை - ஒருவனுக்குப் பொருளாவதிலலை.

மதிக்கப்படாதார் - அறிவிலாதார், இழி குலததார். இழிவு சிறப்பு உம்மை விகாரததால் தொக்கது. மதிக்கப்படுவாராகச் செய்தல அறிவுடையாரும உயா குலததாரும் அவர்பாறசென்று நிற்கப் பண்ணுதல. அதனால ஈட்டப்படுவது அதுவே, பிறிதில்லை என்பதாம். (1)

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு 752

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் - எல்லா நன்மையும் உடையராயினும் பொருளில்லாரை யாவரும இகழவா, செல்வரை எல்லாரும சிறப்புச் செய்வா - எல்லாத தீமையும் உடையராயினும அஃது உடையாரை யாவரும உயரச் செய்வா.

உயரச் செய்தல் தாம தாழநது நிற்றல. இகழ்தற்கண்ணும் தாழதற்கணணும் பகைவா, நட்டாா, நொதுமலா என்னும மூவகையாரும ஒததலின், யாவரும என்றாா. பின்னும் கூறியது அதனை வலியுறுததற்பொருட்டு. (2)

பொருள்என்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று. 753

பொருள என்னும பொய்யா விளக்கம - பொருள் என்று எல்லாராலும சிறப்பிக்கப்படும நந்தா விளக்கு, எண்ணிய தேயத்துச் சென்று இருள அறுக்கும் - தன்னை செய்தவர்க்கு அவர் நினைநத தேயததுச் சென்று பகை என்னும் இருளைக் கெடுக்கும்.

எல்லார்க்கும் எஞ்ஞான்றும் இன்றியமையாததாய் வருதல் பற்றி, 'பொய்யா விளக்கம்' என்றும், ஏனைய - விளக்கோடு இத

னிடை வேற்றுமை தோன்ற 'எண்ணிய தேயத்துச் சென்று' என்றும் கூறினார். ஏகதேச உருவகம்.

இவை மூன்று பாட்டானும் பொருளது சிறப்புக் கூறப் பட்டது. (3)

அறன்ஈனும் இன்பமும்ஈனும் திறன் அறிந்து
தீது இன்றி வந்த பொருள். 754

திறன் அறிந்து தீது இன்றி வந்த பொருள் - செய்யும் திறத்தினை அறிந்து அரசன் கொடுங்கோன்மையில்லாதாக உளதாய பொருள், அறன் ஈனும் இன்பமும் ஈனும் - அவனுக்கு அறத்தையும் கொடுக்கும், இன்பத்தையும் கொடுக்கும்.

செய்யுந்திறம் தான் பொருள் செய்தற்கு உரிய நெறி. 'இலாகை' என்பது 'இன்றி' எனத் திரிந்து நின்றது. செங்கோல் என்று புகழப்படுதலானும், கடவுட் பூசை தானங்களாற் பயனெய்தலானும், 'அறன் ஈனும்' என்றும், நெடுங்காலம் நின்று துய்க்கப் படுதலான், 'இன்பமும் ஈனும்' என்றும் கூறினார். அதனை அத்திறத்தான் ஈட்டுக என்பதாம். (4)

அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல் 755

அருளொடும் அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம் - தாம் குடிகளமாட்டுச் செய்யும் அருளோடும் அவர் தம்மாட்டுச் செய்யும் அன்போடும் கூடி வாராத பொருளீட்டத்தை, புல்லார் புரள விடல் - அரசர் பொருந்தாது கழியவிடுக.

அவற்றோடு கூடி வருதலாவது அறிநெறியொன்றுப் வருதல். அவ்வாறு வாராத பொருளீட்டம் பசுமட்கலத்து நீர்போலச் செய்தானையும் கொண்டு இறத்தலின், அதனைப் 'புல்லார' என்று ஒழியாது 'புரளவிடல்' என்றும் கூறினார். (5)

உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். 756

உறு பொருளும் - உடையாரின்மையின் தானே வந்துற்ற பொருளும், உல்கு பொருளும் - சுங்கமாகிய பொருளும், தன் ஒன்னார்த் தெறுபொருளும் - தன் பகைவரைத் திறையாகக் கொள்ளும் பொருளும், வேந்தன் பொருள் - அரசனுக்கு உரிய பொருள்கள்.

உறுபொருள் வைத்தார் இறந்துபோக நெடுங்காலம் நிலந்தின்கண் கிடந்து பின் கண்டெடுத்ததூஉம், தாயத்தார் பெறுததூஉமாம். சுங்கம் - கலத்திலும் காலினும் வரும் பண்டங்கட்கு இறையாயது. தெறு பொருள் தெறுதலான் வரும் பொருள் என விரியும். ஆறில் ஒன்று ஒழியவும் உரியன கூறியவாறு.



இவை மூன்று பாட்டானும் அஃது ஈட்டும் நெறி கூறப் பட்டது. (6)

**அருள்என்னும் அன்புஈன் குழவி பொருள்என்னும்**
**செல்வச் செவிலியால் உண்டு. 757**

அன்பு ஈன் அருள் என்னும் குழவி - அன்பினால் ஈனப்பட்ட அருள் என்னும் குழவி, பொருள் என்னும் செல்வச் செவிலியால் உண்டு - பொருள் என்று உயர்த்துச் சொல்லப்படும் செல்வத்தை யுடைய செவிலியான் வளரும்.

தொடர்பு பற்றாதே வருத்தமுற்றார்மேல் செல்வதாய அருள் தொடர்பு பற்றிச் செல்லும் அன்பு முதிர்ந்துழி உளதாவதாகலின் அதனை 'அன்புஈன் குழவி' என்றும், அது வறியார் மேற்செல்வது அவ் வறுமை களையவல்லார்க்காதலின் பொருளை அதற்கு 'செவிலி' என்றும், அஃது உலகிற் செவிலியர் போலாது தானே எல்லாப் பொருளும் உதவி வளர்த்தலின் 'செல்வச் செவிலி' என்றும் கூறினார். (7)

**குன்றுஏறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்துஒன்று**
**உண்டாகச் செய்வான் வினை. 758**

*தன் கைத்து உண்டாக ஒன்று செய்வான் வினை* - தன் கையது ஆகிய பொருளுண்டாக ஒரு வினையை எடுத்துக்கொண்டான் அதனைச் செய்தல், *குன்று ஏறி யானைப்போர் கண்டற்று* - ஒருவன் மலைமேல் ஏறி நின்று யானைப்போரைக் கண்டால் ஒக்கும்.

கைத்து உண்டாக ஒன்று செய்வான் எனக் கூட்டுக. 'ஒன்று' என்பது வினையாதல் 'செய்வான்' என்றதனாற் பெற்றாம். குன்றேறியான் அச்சமும் வருத்தமும் இன்றி நிலத்திடை யானையும் யானையும் பொரு போரைத் தான் இனிதிருந்து காணுமதுபோலக் கைத்து உண்டாக வினையை மேற்கொண்டானும் அச்சமும் வருத்தமும் இன்றி வல்லாரை ஏவித் தான் இனிதிருந்து முடிக்கும் என்பதாம். (8)

**செய்க பொருளைச் செறுநர் செருக்குஅறுக்கும்**
**எஃகு அதனிற் கூரியது இல் 759**

*பொருளைச் செய்க* - தமக்கொன்றுண்டாகக் கருதுவார் பொருளை உண்டாக்குக; *செறுநர் செருக்கு அறுக்கும் எஃகு* - தம் பகைவர் தருக்கினை அறுக்கும் படைக்கலம் அதுவாம்; *அதனிற் கூரியது இல்* - அதற்கு அதுபோலக் கூரிய படைக்கலம் பிறிது இல்லை.

'அதுவாம்' 'அதற்கு' என்பன அவாய்நிலையான் வந்தன. பொருளைச் செய்யவே பெரும் படையும் நட்பும் உடையராவர்; ஆகவே, பகைவர் தருக்கு ஒழிந்து தாமே அடங்குவர் என்பார்,



'செறுநர் செருக்கு அறுக்கும் எஃகு' என்றும், ஏனை எஃகுகள் அதுபோல அருவப்பொருளை அறுக்கமாட்டாமையின் 'அதனிற் கூரியது இல்' என்றும் கூறினர். (9)

**ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்**
**ஏனை இரண்டும் ஒருங்கு 760**

*ஒண் பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு* - நெறியான்வரும் பொருளை இறப்ப மிகப் படைத்தார்க்கு, *ஏனை இரண்டும் ஒருங்கு எண்பொருள* - மற்றை அறனும் இன்பமும் ஒருங்கே எளிய பொருள்களாம்.

காழ்த்தல் : முதிர்தல். பயன்கொடுத்தல்லது போகாமையின் ஒண்பொருள என்றும், ஏனை இரண்டும் அதன் வினைவாகலின் தாமே ஒருகாலத்திலேஉளவாம் என்பார் 'எண்பொருள' என்றும் கூறினர்.

இவை நான்கு பாட்டானும் அதனான் வரும் பயன் கூறப்பட்டது. (10)

## 77. படை மாட்சி

இனி அப்பொருளினான் ஆவதாய் வெல்வதாய படை இரண்டு அதிகாரத்தாற் கூறுவான் தொடங்கி, முதறகண 'படை மாட்சி' கூறுகின்றார். அஃதாவது படையினது நன்மை.

**உறுப்பு அமைந்து ஊறுஅஞ்சா வெல்படை வேந்தன்**
**வெறுக்கையுள் எல்லாம் தலை. 761**

*உறுப்பு அமைந்து ஊறு அஞ்சா வெல்படை* - யானை முதலிய நான்கு உறுப்பானும் நிறைந்து போரின்கண் ஊறு படுதற்கு அஞ்சாது நின்று பகையை வெல்வதாய படை, *வேந்தன் வெறுக்கையுள் எல்லாம் தலை* - அரசன் செல்வங்கள எல்லா வற்றுள்ளும் தலையாய செல்வம்.

ஈண்டு 'படை' என்றது அந்நான்கன் தொகுதியை. ஊறு அஞ்சியவழி வேறல் கூடாமையின், 'ஊறு அஞ்சா' என்றும் ஒழிந்த அங்கங்கட்கும் அரசன் தனக்கும் காவலாகலின் 'வெறுக்கையுள் எல்லாம் தலை' என்றும் கூறினார். (1)

**உலைவிடத்து ஊறு அஞ்சா வன்கண் தொலைவிடத்துத்**
**தொல்படைக்கு அல்லால் அரிது. 762**

*தொலைவிடத்து உலைவிடத்து ஊறு அஞ்சா வன்கண்* - தான் சிறியதாய வழியும் அரசர்க்குப் போரின்கண் உலைவு வந்தால் தன் மேலுறுவதற்கஞ்சாது நின்று தாக்கும் வன்கண்மை, *தொல் படைக்கல்லால் அரிது* - அவன் முன்னோரைத் தொடங்கிவரும் படைக்கல்லது உளதாகாது.

இழிவு சிறப்பு உம்மை விகாரத்தால் தொக்கது. மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப் படை என்னும் அறுவகைப்படையுள்ளும் சிறப்புடையது மூலப் படையாகலான், அதனை அரசன் "வெல்பொறியும் நாடும் விழுப் பொருளும் தன்னடையும் — கொல்களிறும் மாவும் கொடுத் தளிக்க" (பு. வெ. மா. தும்பை. 2) என்பது குறிப்பெச்சம். இப் படையை வடநூலார் மௌலம் என்ப. (2)

ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும். 763

எலிப்பகை உவரி ஒலித்தக்கால் என்னும் - எலியாய பகை திரண்டு கடல் போல ஒலித்தால் நாகத்திற்கு என்ன ஏதம் வரும், நாகம் உயிர்ப்பக் கெடும் - அந் நாகம் உயிர்த்த துணையானே அதுதானே கெடும்.

உவமைச் சொல் தொக்கு நின்றது. இத்தொழில் உவமத் தால் திரட்சி பெற்றும். வீரரல்லாதார் பலர் திரண்டு ஆர்த்தால் அதற்கு வீரன் அஞ்சான் அவன் சீளர்ந்த துணையானே அவர் தாம் கெடுவர் என்பது தோன்ற நின்றமையின், இது 'பிறிது மொழிதல்' என்னும் அலங்காரம். வீரரல்லாதார் பலரினும் வீரனொருவனை ஆளுதல் நன்று என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் முறையே அரசனுக்குப் படை ஏனையங்கங்களுள சிறந்தது என்பதூஉம், அது தன்னுள்ளும் மூலப்படை சிறந்தது என்பதூஉம், அது தன்னுளளும் வீரன் சிறந்தான் என்பதூஉம் கூறப்பட்டன. (3)

அழிவின்று அறைபோகாது ஆகி வழிவந்த
வன்க ணதுவே படை. 764

அழிவு இன்று - போரின்கண் கெடுதல் இன்றி, அறைபோகா தாகி - பகைவரால கீழறுக்கப்படாததாய், வழிவந்த வன்கணதுவே படை - தொன்றுதொட்டு வந்த தறுகண்மையை உடையதே

அரசனுக்குப் படையாவது.

அழிவின்மையான் மற மானங்கள உடைமையும், அறை போகாமையான் அரசன் மாட்டு அன்புடைமையும் பெறப்பட்டன. வழிவந்த வன்கண்மை "கல்நின்றான் எந்தை கணவன் களப்பட் டான், முன்னின்று மொய்யவிந்தார் என் ஐயர் - பின்னின்று, கைபோய்க் கணையுதைப்பக் காவலன் மேலோடி, எய்போற் கிடந்தான் என் ஏறு." (பு. வெ. மா. வாகை. 22) என்பதனான் அறிக. குற்றியலுகரத்தின் முன்னர் உடம்படுமெய் விகாரத் தான் வந்தது. இது வருகின்றபாட்டுள்ளும் ஒக்கும். (4)

**கூற்றுஉடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்**
**ஆற்ற லதுவே படை. 765**



கூற்று உடன்று மேல்வரினும் - கூற்றுவன்தானே வெகுண்டு மேல் வந்தாலும், கூடி எதிர் நிற்கும் ஆற்றலதுவே படை - ஒருங்கு ஒத்து எதிர்நின்று தாக்கும் ஆற்றலையுடையதே படையாவது.

'மருந்தில் கூற்று' ஆகலின், (புற.நா. 3) உம்மை சிறப்பும்மை. மிகப்பலர் நெஞ்சொத்தற்குக் காரணம் அரசன்மேல் அன்பு. ஆற்றல் - மனவலி. (5)

**மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்**
**என நான்கே ஏமம் படைக்கு. 766**

மறம் மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம் என நான்கே - தறுகண்மையும், மானமும், முன் வீரராயினார் சென்ற நன்னெறிக்கண் சேறலும், அரசனால் தேறப்படுதலும் என இந் நான்கு குணமுமே, படைக்கு ஏமம் - படைக்கு அரணாவது.

இவற்றான் முறையே பகைவரைக் கடிதிற்கொன்று நிற்றலும், அரசனுக்குத் தாழ்வு வாராமற் காத்தலும், "அழியுநர்புறக் கொடை அயில்வாளோச்சா" (பு.வெ.மா. வஞ்சி. 20) மை முத

வியவும், அறைபோகாமையும் ஆகிய செய்கைகள பெறப்பட்டன. இச் செய்கையார்க்குப் பகைவர் கணுகாராகலின், வேறு அரண் வேண்டா என்பதாம். (6)

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்கும் தன்மை அறிந்து 767

*தலைவந்த போர் தாங்கும் தன்மை அறிந்து - மாற்றாரால் வகுக்கப்பட்டுத் தன் மேல் வந்த படையின்போரை விலக்கும் வகுப்பு அறிந்து வகுத்துக்கொண்டு, தார தாங்கிச் செல்வது தானை அவர் தூசியைத் தன்மேல் வராமல தடுத்துத தான் அதன்மேற் செல்வதே படையாவது.*

*படைவகுப்பாவது:-வியூகம். அஃது எழுவகை உறுப்பிற்றாய், வகையான் நான்காய், விரியான் முப்பதாம். உறுப்பு எழாவன: உரம் முதல் கோடி ஈறாயின. வகை நான்காவன தண்டம், மண்டலம், அசங்கதம், போகம் என இவை. விரி முப்பதாவன. தண்டவிரி பதினேழும், மண்டல விரி இரண்டும், அசங்கத விரி ஆறும் போக விரி ஐந்தும் என இவை. இவற்றின் பெயர்களும் இலக்கணமும் ஈண்டு உரைப்பின் பெருகும், அவை எல்லாம் வடநூல் களுள கண்டு கொள்க.*

*இவை நான்கு பாட்டானும் படையினது இலக்கணம் கூறப் பட்டது.* (7)

அடல்தகையும் ஆற்றலும் இல்எனினும் தானை
படைத்தகையால் பாடு பெறும். 768

*தானை - தானை, அடல்தகையும் ஆற்றலும் இல் எனினும் பகை மேல் தான் சென்று அடும் தறுகண்மையும் அது தன்*



*மேல் வந்தால் பொறுக்கும் ஆற்றலும் இல்லையாயினும், 'படைத் தகையால் பாடு பெறும் - தன் தோற்றப்பொலிவானே பெருமை எய்தும்.*

*'இல்லெனினும்' எனவே, அவற்றது இன்றியமையாமை பெறப்பட்டது. 'படைத் தகை' என்றது ஒரு பெயர் மாத்திரமாய் நின்றது. தோற்றப் பொலிவாவது அலங்கரிக்கப்பட்ட தேர், யானை,*

குதிரைகளுடனும் பதாகை, கொடி, குடை, பல்லியம், காகளம் முதலிய வற்றுடனும் அணிந்து தோன்றும் அழகு. பாடு: கண்ட அளவிலே பகைவர் அஞ்சும் பெருமை. (8)

சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்
இல்லாயின் வெல்லும் படை. 769

சிறுமையும் செல்லாத துனியும் வறுமையும் இல்லாயின்— தான் தேய்ந்து சிறிதாகலும் மனத்தினின்று நீங்காத வெறுப்பும் நல்குரவும் தனக்கு இல்லையாயின், படை வெல்லும் - படை பகையை வெல்லும்.

விட்டுப்போதலும் நின்றது நல்கூர்தலும் அரசன் பொருள் கொடாமையான் வருவன. செல்லாத துனியாவது மகளிரை வௌவல், இளிவரவாயினசெய்தல் முதலியவற்றான் வருவது. இவையுளவழி அவன் மாட்டு அன்பு இன்றி உற்றுப்பொரா மையின், 'இல்லாயின் வெல்லும்' என்றார். (9)

நிலைமக்கள் சால உடைத்துஎனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல் 770

நிலை மக்கள் சால உடைத்து எனினும் - போரின் கண் நிலை யுடைய வீரரை மிகஉடைத்தேயாயினும், தலைமக்கள் இல்வழித் தானை இல - தனக்குத் தலைவராகிய வீரர் இல்லாத வழித் தானை இல்லாது.

படைத்தலைவர் நிலையுடையரன்றிப் போவாராயின் காண் போர் இல்லெனப் பொராது தானும் போம் என்பார், 'தலைமக் கள் இல் வழி இல்' என்றார்.

இவை மூன்று பாட்டானும் முறையே படைத்தகையின்மை யானும் அரசன் கொடாத தாழ்வுகளானும், தலைவர் இன்மை யானும் தாழ்வு கூறப்பட்டது. (10)

## 78. படைச் செருக்கு

அஃதாவது அப்படையது மறமிகுதி. அதிகார முறை மையும் இதனானே விளங்கும்.

என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்னை
முன்நின்று கல்நின் றவர். 771

தெவ்விர் என் ஐ முன் நின்று கல் நின்றவர் பலர்-பகைவிர்! நின்று இங்கு என் தலைவன் எதிர் போரேற்று நின்று அவன் வேல்வாய் வீழ்ந்து பின் கல்லின் கண்ணே நின்ற வீரர் பலர்; என் ஐ முன் நில்லன்மின் – நீவிர் அதன் கண் இன்றி நும் உடற்கண் நிற்றல் வேண்டின், என் தலைவனெதிர் போரேற்று நிற்றலை ஒழிமின்.

'என்ஐ' யெனத் தன்னொடு தொடர்புபடுத்துக் கூறினமை யின் அவன் வேல்வாய் வீழ்தல் பெற்றும். கல் - நடுகல். "நம்பன் சிலைவாய் நடக்குங்கணை மிச்சில் அல்லால - அம்பொன் முடிப்பூண் அரசுமிலை" (சீவக. காந்தருவ. 317) எனப் பதுமுகன் கூறினாற்போல, ஒருவீரன் தன் மறம் அரசன்மேல்வைத்துக் கூறியவாறு. இப்பாட்டு 'நெடுமொழிவஞ்சி' (1)

கான முயல்எய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது. 772

கான முயல் எய்த அம்பினில் - கானகத்தின்கண் ஓடும் முயலைப் பிழையாமல் எய்த அம்பை ஏந்தலினும், யானை பிழைத்த வேல் ஏந்தல் இனிது - வெளளிடை நின்ற யானையை எறிந்து பிழைத்த வேலை ஏந்துதல் நன்று.

'கானமுயல்' என்றதால் வெளளிடைநின்ற என்பதும், 'பிழைத்த' என்றதனாற் பிழையாமல என்பதும், முயற்குத் தக 'எய்த' என்றதனான் யானைக்குத்தக எறிதலும வருவிக்கப்பட்டன. இது மாற்றரசன் படையொடு பொருதானோர் வீரன் அது புறங் கொடுத்ததாக நாணிப் பின்அவன் தன்மேற் செலலலுற்றானது கூற்று. (2)

பேராண்மை என்ப தறுகண்ஒன் று உற்றக்கால்
ஊராண்மை மற்றுஅதன் எஃகு. 773

தறுகண் பேராண்மை என்ப - பகைவர்மேற் கண்ணோடாது செய்யும் மறத்தை நூலோர் மிக்கஆண்தன்மையென்று சொல்லுவர், ஒன்று உற்றக்கால் ஊராண்மை அதன் எஃகு (என்ப) -

அவர்க்கு ஒருதாழ்வு வந்ததாயின் கண்ணோடி அது தீர்த்துக் கோடற்பொருட்டு ஊராண்மை செய்தலை நூலோர் அதற்குக் கூர்மை என்று சொல்லுவர்.

'என்ப' என்பது பின்னும் இயைந்தது. ஊராண்மை - உபகாரியாம்தன்மை. அஃதாவது இலங்கையர்வேந்தன் போரிடைத் தன் தானை முழுதும்படத் தமியனாய் அகப்பட்டானது நிலைமை நோக்கி, அயோத்தியர் இறை மேற்செல்லாது, 'இன்றுபோய்

நாளை நின் தானையோடு வா' என விட்டாற்போல்வது. இவை இரண்டு பாட்டும் தழிஞ்சி. (3)



**கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்**
**மெய்வேல் பறியா நகும். 774**

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன் - கைப் படையாய வேலைத் தன்மேல்வந்த களிற்றோடு போக்கி வருகின்ற களிற்றுக்கு வேல் நாடித்திரிவான், மெய் வேல் பறியா நகும் - தன் மார்பின்கண் நின்ற வேலைக் கண்டு பறித்து மகிழும்.

களிற்றொடு போக்கல் - களிற்றினது உயிரைக் கொடுபோமாறுவிடுதல். மகிழ்ச்சி, தேடியதெய்தலான். இதனான் களிற்றையல்லது எறியான் என்பதூஉம், சினமிகுதியான் வேலிடைபோழ்ந்தது அறிந்திலன் என்பதூஉம், பின்னும் போர்மேல் விருப்பினன் என்பதூஉம் பெறப்பட்டன. நூழிலாட்டு. (4)

**விழித்தகண் வேல்கொண்டு எறிய அழித்துஇமைப்பின்**
**ஓட்டன்றோ வன்க ணவர்க்கு 775**

விழித்த கண் - பகைவரை வெகுண்டு நோக்கிய கண், வேல் கொண்டு எறிய அழித்து இமைப்பின் - அவர் வேலைக்கொண்டு

ஏறிய அஃது ஆற்றுது அக் நோக்கை அழித்து இமைக்குமாயின், வன்கணவர்க்கு ஓட்டு அன்றோ - அது வீரர்க்குப் புறங்கொடுத்த வாம்.

அவ் வெகுளிநோக்கம் மீட்டலும் போரின்கண் தோல்வி எனக் கருதி அதுவும் செய்யார் என்பதாம். (5)

**விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்**
**வைக்கும்தன் நாளை எடுத்து. 776**

தன் நாளை எடுத்து - தனக்குச் சென்ற நாள்களையெடுத்து எண்ணி, விழுப்புண் படாத நாளெல்லாம் வழுக்கினுள்வைக்கும் - அவற்றுள் விழுப்புண்படாத நாள்களையெல்லாம் பயன்படாது கழிந்த நாளுள்ளே வைக்கும் வீரன்.

விழுப்புண் - முகத்தினும் மார்பினும் பட்ட புண். போர் பெறாதிருக்கவும், அது பெறாத நாள்களோடும் கூட்டும் என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் அஞ்சாமை கூறப்பட்டது. (6)

**சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்**
**கழல்யாப்புக் காரிகை நீர்த்து. 777**

சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார் - இறக்கத்துந் தம்மொடு செல்லாது வையத்தைச் சூழ்ந்து நிற்கும் புகழை வேண்டி உயிர்வாழ்தலை வேண்டாத வீரர், கழல் யாப்புக் காரிகை நீர்த்து - கழல்கட்டுதல் அலங்கார நீர்மையை உடைத்து.

'வையத்தைச் சூழும்' எனவே, அதன் பெருமை பெற்றும். செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. சூழல் - அகத்திடல்.



இறக்கமும் புகழும் எனின் எய்துவராகலின், ஆபரணமாவது அதுவே என்பதாம். (7)

**உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்**
**செறினும்சீர் குன்றல் இலர். 778**

உறின் உயிர் அஞ்சா மறவர் - போர்பெறின் தம்முயிர்ப் பொருட்டு அஞ்சாது அதன் மேற்செல்லும் வீரர், இறைவன் செறினும் சீர் குன்றல் இலர் - தம் இறைவன் அதுவேண்டா என்று முனியினும் அவ் வீரமிகுதி குன்றார்.

போர்பெற்று அறியாமையின், அது பெற்றால் அரசன்தடுப் பினும் நில்லார் என்பதாம். பிறரும் "போரெனிற் புகலும் புனை கழல் மறவர்" (புறநா. 31) என்றும் "புட்பகைக்கு ஏவா னாகலின் சாவேம் யாம் என - நீங்கா மறவர் வீங்குதோள புடைப்ப" (புறநா. 68) என்றும் கூறினர். (8)

இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே
பிழைத்தது ஒறுக்கிற் பவர். 779

இழைத்தது இகவாமைச் சாவாரை-தாம் கூறின வஞ்சினம் தப்பாமற் பொருட்டுச் சென்று சாவ வல்ல வீரரை, பிழைத்தது ஒறுக்கிற்பவர் யார் - அது தப்பியவாறு சொல்லி எளுதற்குரி யார் யாவர்?

இழைததல் - இன்னது செய்யேனாயின் இன்னனாகுக எனத் தான் வகுத்தல். 'சொல்லி' என்பது அவாய்நிலையான் வந்தது. வஞ்சினமுடிப்பான் புக்கு முன்னே சாவினும்தொலைவின்மையின், அதுமுடித்தாராவா எனச் சாதற்சிறப்புக் கூறியவாறு. (9)

புரந்தார்கண் நீர்மல்கச் சாகற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து. 780

புரந்தார் கண் நீர் மல்கச் சாகற்பின் - தமக்குச் செய்த நன்றிகளை நினைந்து ஆண்டஅரசர் கண்கள் நீர் மல்கும்வகை போரிடைச் சாவப்பெறின், சாக்காடு இரந்துகோள் தக்கது உடைத்து - அச் சாக்காடு இரந்தாயினும் கொள்ளுந்தகுதியை உடைத்து.

மல்குதலாகிய இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின் மேல் நின்றது. கிளைஅழ இலவிடை நோயால் விளிவார் பழ

வினைப் பயனெய்தலின், அடுத்தவினையால் துறக்கமெய்தும் சாதலை 'இரந்துகோள் தக்கது உடைத்து' என்றார்.

இவை நான்கு பாட்டானும் உயிர் ஓம்பாமை கூறப்பட்டது.



## 79. நட்பு

இனி அப் படைபோல அரசனுக்கு வினையிடத்து உதவுவதாய நட்பினை ஐந்து அதிகாரம் விதிமுகத்தானும், பன்னிரண்டு அதிகாரம் எதிர்மறைமுகத்தானும் கூறுவான் தொடங்கி, விதிமுக அதிகாரம் ஐந்தனுள்ளும் முதற்கண் நட்புக் கூறுகின்றார். அஃதாவது இன்னதென்பதூஉம் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

**செயற்குஅரிய யாவுள நட்பின் அதுபோல்**
**வினைக்குஅரிய யாவுள காப்பு.** 781

நட்பின் செயற்கு அரிய யா உள - நட்புப்போலச் செய்து கோடற்கு அரிய பொருள்கள் யாவை உள?, அதுபோல் வினைக்கு அரிய காப்பு யா உள - செய்து கொண்டால் அதுபோலப் பகைவர் செய்யும் வினைக்குப் புகற்கு அரிய காவலாவன யாவை உள?

நட்புச்செய்தற்கு ஆவாரைப் பெறுதலும், பெற்றால் செய்யும் உபாயமும், செய்தால் திரிபின்றி நிற்றலும் முதலிய அரிய ஆகலின், நட்பின் செயற்கு அரியன 'இல்லை'என்றும், செய்தால் பகைவரஞ்சி வினைதொடங்காராகலின், 'அதுபோல வினைவாரா மைக்கு அரிய காவல் இல்லை'என்றும் கூறினார். நட்புத்தான்இயற்கை செயற்கை எனஇருவகைப்படும். அவற்றுள், இயற்கை பிறப்பு முறையானாய நட்பும், தேயமுறையானாய நட்பும் என இருவகைப்படும். அவற்றுள் முன்னையது சுற்றமாகலின், அது 'சுற்றந்தழா'லின் அடங்கிற்று, ஏனையது பகையிடைப்பட்ட தேயத்ததாகலின், அது துணைவலி என 'வலியறிதலுள' அடங்கிற்று.

இனி, ஈண்டுச் சொல்லப்படுவது முன்செய்த உதவிபற்றி வருஞ் செயற்கையேயாகலின், அதன் சிறப்பு இதனான் கூறப்பட்டது. (1)

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு. 782

*நீரவர் கேண்மை பிறை நிறை நீர* - அறிவுடையார் நட்புக்கள பிறை நிறையுந்தன்மைபோல நாடோறும் நிறையுந்தன்மையவாம்; *பேதையார் நட்பு மதிப் பின் நீர* - மற்றைப் பேதைமையுடையார் நட்புக்கள நிறைந்தமதி பின் குறையுந்தன்மைபோல நாள்தோறும் குறையுந தன்மையனவாம்.

'நீரவர்' என்றார், இனிமைபற்றி. கேண்மை, நட்பு என்பன ஒருபொருட்கிளவி. செய்தாரது பன்மையான் நட்பும் பலவாயின. அறிவுடையாரும் அறிவுடையாரும் செய்தன முன்சுருங்கிப் பின் பெருகற்கும், பேதையாரும் பேதையாரும் செய்தன முன்



பெருகிப் பின் சுருங்கற்கும் காரணம் தம்முள் முன் அறியாமையும் பின் அறிதலும்ஆம். (2)

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு. 783

பண்பு உடையாளர் தொடர்பு பயில்தோறும்-நற்குணமுடைய மக்கள் தம்முள் செய்த நட்புப் பயிலுந்தோறும் அவர்க்கு இன்பஞ்செய்தல், நூல் நவில்தொறும் நயம்போலும் - நூற்பொருள் கற்குந்தோறும் கற்றோர்க்கு இன்பஞ்செய்தலை ஒக்கும்.

நயத்தினைச் செய்தலான் 'நயம்'எனப்பட்டது. இருமை

யினும் ஒருகாலைக் கொருகால் மிகும் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் அச்சிறப்பிற்கு ஏது கூறப்பட்டது. (3)

நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு. 784

நட்டல் நகுதற்பொருட்டன்று - ஒருவனோடு, ஒருவன் நட்புச் செய்தல் தம்முள் நகுதற்கு இயைந்தன சொல்லி நகையாடற் பொருட்டன்று; மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற்பொருட்டு - அவர்க்கு வேண்டாதசெய்கை உளதாயவழி முற்பட்டுக் கழறுதற் பொருட்டு.

பழியும் பாவமும் தரும்செய்கை துன்பமே பயத்தலான் வேண்டப்படுவதன்மையின், அதனை 'மிகுதி'என்றும், அதுசெய்தற்கு முன்னே மீட்டலவேண்டுதலின், 'மேற்சென்று'என்றும், இன்சொற்கு மீளாமையின், 'இடித்தற்பொருட்டு' என்றும் கூறினார்.

இதனான் நட்பின் பயன் கூறப்பட்டது. (4)

புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும். 785

புணர்ச்சி பழகுதல் வேண்டா - ஒருவனோடு ஒருவன் நட்பாதற்குப் புணர்ச்சியும் பழகுதலுமாகிய காரணங்கள் வேண்டுவதில்லை, உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும் - இருவர்க்கும் ஒத்த உணர்ச்சிதானே நட்பாம் உரிமையைக் கொடுக்கும்.

புணர்ச்சி - ஒருதேயத்தாராதல், "இன்றே போல்க நும் புணர்ச்சி" (புறநா. 58) என்றதும் அதனை. பழகுதல் - பலகால் கண்டும் சொல்லாடியும் மருவுதல். இவ் இரண்டும் இன்றிக் கோப்பெருஞ் சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும்போல உணர்ச்சியொப்பின், அதுவே உடன் உயிர்நீக்கும் உரிமைத்தாய நட்பினைப் பயக்கும் என்பதாம் (புறநா. 217).



நட்பிற்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சியொத்தல் என்னும் காரணம் மூன்றனுள்ளும் பின்னது சிறப்புடைத்து என்பது இதனான் கூறப்பட்டது. (5)

**முகம்நக நட்பது நட்புஅன்று நெஞ்சத்து**
**அகம்நக நட்பது நட்பு. 786**

முகம் நக நட்பது நட்பு அன்று - கண்டவழி அகமொழிய முக மாத்திரமே மலரும்வகை நட்குமது நட்பாகாது, நெஞ்சத்து அகம் நக நட்பது நட்பு - அன்பால் அகமும் மலர நட்குமதே நட்பாவது.

நெஞ்சின்கண் நிகழ்வதனை 'நெஞ்சு' என்றார். இறந்தது தழீஇய எச்ச உம்மை விகாரத்தால் தொக்கது. இதனான் இரண்டும் ஒருங்கே மலரவேண்டும் என்பது பெற்றாம். (6)

**அழிவி னவைநீக்கி ஆறுஉய்த்து அழிவின்கண்**
**அல்லல் உழப்பதாம் நட்பு. 787**

அழிவினவை நீக்கி ஆறு உய்த்து - கேட்டினைத் தரும் தீநெறிகளைச் செல்லுங்கால் விலக்கி, ஏனை நன்னெறிகளைச் செல்லாக்கால் செலுத்தி, அழிவின்கண் அல்லல் உழப்பது நட்பாம் - தெய்வத்தால் கேடுவந்துழி அது விலக்கப்படாமையின் அத்துன்பத்தை

உடன் அனுபவிப்பதே ஒருவனுக்கு நட்பாவது.

'ஆறு' என வருகின்றமையின், 'அழிவினவை நீக்கி' என்றொழிந்தார். "தெருண்ட அறிவினவா" (நாலடி 307) என்புழிப் போல இன்சாரியை நிற்க இரண்டனுருபு தொக்கது. இனி, நவை என்று பாடமோதி, அதற்குப் போர் அழிவினும் செல்வ அழிவினும் வந்த துன்பங்கள் என்றும், 'அழிவின்கண்' என்பதற்கு 'யாக்கை அழிவின்கண்' என்றும் உரைப்பாரும் உளர். (7)

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு. 788

உடுக்கை இழந்தவன் கைபோல - அவையிடை ஆடைகுலைந்தவனுக்கு அப்பொழுதே கைசென்று உதவி அவ்விளிவரல் களையுமாறுபோல, ஆங்கே இடுக்கண் களைவது நட்பாம் - நட்டவனுக்கு இடுக்கண் வந்துழி அப்பொழுதே சென்று உதவி அதனைக் களைவதே நட்பாவது.

அற்றம்காத்தற்கண் கை தன் மனத்தினும் முற்படுதலின், அவ்விரைவு இடுக்கண் களைவுழியும் அதற்கு ஒத்த தொழிலுவமையினும் வருவிக்க. உடையவன்தொழில் நட்பின் மேல ஏற்றப்பட்டது. (8)

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் கொட்புஇன்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை. 789

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் - நட்பினுக்கு அரசிருக்கை யாதெனின், கொட்பு இன்றி ஒல்லும் வாய் ஊன்றும் நிலை - அஃது எஞ்ஞான்றும் திரிபின்றி இயலும் எல்லையெல்லாம் அறம் பொருள்களில் தளராமைத் தாங்கும் திண்மை.

ஒருஞான்றும் வேறுபடாது மறுமை இம்மைகட்கு உறுதியாய அறம்பொருளகளில தளர்ந்துழி அத் தளர்ச்சி நீக்கி அவற்றின் கண் நிறுத்துதற்குமேல ஒருசெயலும் இன்மையின், அதனை நட்பிற்கு முடிந்த எல்லை என்றார். (9)

இனையர் இவர்எமக்கு இன்னம்யாம் என்று
புனையினும் புல்லென்னும் நட்பு. 790

இவர் எமக்கு இனையர் யாம் இன்னம் என்று புனையினும் - இவர் நமக்கு இததுணையன்பினர் யாம்இவர்க்கு இத்தன்மையம் என்று ஒருவரையொருவர் புனைந்து சொலலினும், நட்புப் புல்லென்னும் - நட்புப் புலவிதாய்த் தோன்றும.

இவர்க்கு என்பது வருவிக்கப்பட்டது. தாம் அவர் என்னும் வேற்றுமையின்றி வைததுப் புனைந்துரைப்பினும் வேற்றுமையுண்டாம் ஆகலின், 'நட்புப் புலலென்னும்' என்றார.

இவை ஐந்து பாட்டானும் நட்பினது இலக்கணம் கூறப்பட்டது. (10)

## 80. நட்பு ஆராய்தல்.

அஃதாவது மேற்சொல்லிய இலக்கணததாரை ஆராய்ந்தறிந்தே நட்கவேண்டுதலின், அவரை ஆராயும்திறம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

நாடாது நட்டலின் கேடுஇல்லை நட்டபின்
வீடுஇல்லை நட்புஆள் பவர்க்கு. 791

நட்பு ஆள்பவர்க்கு நட்டபின் வீடு இல்லை—நட்பினைவிரும்பி அதன் கண்ணே நிற்பார்க்கு ஒருவனோடு நட்புச்செய்தபின் அவனை விடுதலுண்டாகாது; நாடாது நட்டலின் கேடு இல்லை—ஆகலான் ஆராயாது நட்புச்செய்தல்போலக் கேடு தருவது பிறிதில்லை.

ஆராய்தல் - குணம்செய்கைகளது நன்மையை ஆராய்தல். கேடு—ஆகுபெயர். நட்கின் தாம் அவர் என்னும் வேற்றுமை யின்மையின் 'வீடு இல்லை' என்றும், அவ் வேற்றுமைஇன்மை யான் அவன்கண் பழி பாவங்கள தம ஆமாகலின், இருமையும் கெடுவர் என்பது நோக்கி, 'நாடாது நட்டலின் கேடு இல்லை' என்றும் கூறினர். (1)

**ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை**
**தான்சாம் துயரம் தரும்.** 792



ஆய்ந்து ஆய்ந்து கேண்மை கொள்ளாதான்—குணமும் செய்கையும் நல்லன் என்பது பலகாலும் பலவற்றானும் ஆராய்ந்து ஒருவனோடு நட்புக்கொள்ளாதவன், கடைமுறை தான் சாம் துயரம் தரும்—முடிவில் தான் சாதற்கு ஏதுவாய துன்பத்தினைத் தன் மாற்றார் விளைக்கவேண்டாமல் தானே விளைக்கும்.

'கடைமுறைக்கண்' என இறுதிக்கண் தொக்க ஏழாவது விரிக்க. குணமும் செய்தலும் தீயானொடு கொளளின் அவற்கு வரும் பகைமை யெல்லாம் தன் மேலவாய்ப் பின் அவற்றான் இறந்துவிடும் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் ஆராயாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. (2)

குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்துயாக்க நட்பு. 793

குணனும் குடிமையும் குற்றமும் குன்றா இனனும் அறிந்து—ஒருவனை குணத்தினையும் குடிப்பிறப்பினையும் குற்றத்தினையும் குறைவற்ற சுற்றத்தினையும் ஆராய்ந்தறிந்து, நட்பு யாக்க-அவனோடு நட்புச்செய்க.

குறறமிலலாதாா உலகதது இன்மையின் உள்ளது பொறுக் கப்படுவதாயின் அவா நட்பு விடறபாற்றன்று என்பாா, 'குற்ற மும்' என்றும், சுறறப் பிணிப்புடையாா நட்டாரோடும் பிணிக் புணடு வருதலின் 'குன்று இனனும' என்றும், விடப்படின் தம் குறையாம் என்பாா 'அறிநதுயாக்க' என்றும் கூறினர். (3)

குடிப்பிறந்து தன்கண் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டும நட்பு. 794

குடிப்பிறந்து தன்கண் பழி நாணுவானை—உயர்ந்த குடியின் கண்பிறநது தன்மாடடு உலகாசொலலும் பழிக்கு அஞ்சுவானை, கொடுததும நடபுக்கொளல வேண்டும்—சில கொடுத்தாயினும் நட்புக்கோடல சிறநதது.

குடிப்பிறப்பால தான் பிழைசெய்யாமையும், பழியை அஞ்ச லான் பிழைததன பொறுத்தலும் பெற்றும். இவை இரண்டும் உடையானைப் பெறுதல அருமையின், அவன் நட்பை விலை கொடுததும் கொளக என்பதாம். (4)

அழச்சொல்லி அல்லது இடித்து வழக்குஅறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல். 795

அல்லது அழச் சொல்லி—தாம் உலகவழக்கல்லது செய்யக் கருதின் சோகம்பிறக்கும்வகை சொல்லி விலக்கியும், இடித்து— செய்தக்கால் பின்னும் செய்யாவகை நெருக்கியும், வழக்கு அறிய வல்லார்—அவ் வழக்குச் செய்யாவழிச் செய்விக்கவும் வல்லாரை, ஆய்ந்து நட்புக் கொளல்—ஆராய்ந்து நட்புக் கொளக.



'அழச்சொல்லி' 'இடித்து' எனவந்த பரிகாரவினைகளான் அவற்றிற்கு ஏற்ற குற்ற வினைகள் வருவிக்கப்பட்டன. வழக்கு— உலகத்தார் அடிப்படச் செய்துபோந்த செயல். தம்மொடு கட்டா ரும் அறியும்வகை அறிவித்தல் அரிதாகலின் 'அறியவல்லார்' என்றார். இரண்டாவது இறுதிக்கண் தொக்கது. (5)

கேட்டினும் உண்டுஓர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல். 796

கிளைஞரை நீட்டி அளப்பது ஓர்கோல்—ஒருவனுக்குக் கேடு என்பது தன் நட்டாராகிய புலங்களை எஞ்சாமல் அளப்ப தோர் கோல்; கேட்டினும் ஓர்உறுதி உண்டு—ஆகலின் அதன்கண்ணும் அவனால் பெறப்படுவதோர் நல்லறிவு உண்டு.

தத்தம் நட்பெல்லைகள் சுருங்கியிருக்கவும் செல்வக்காலத்துப் புறத்துத் தோன்றாமல்போக்தார் பின் கேடுவந்துழிச் செயல்வேறு படுதலின், அக்கேட்டால் அவை வரையறுக்கப்படும் என்பது பற்றிக் கேட்டினைக் 'கோலா'க்கியும், அதனால் அவரை அறாநதறிந் தால் அவ்வாரையே கோடலின் அவ்வறிவை 'உறுதி'என்றும் கூறினர். கிளைஞர்—ஆகுபெயா. இஃது ஏகதேச உருவகம்.

இவை நான்கு பாட்டானும் ஆராயுமாறும், ஆராய்ந்தால் நட்கப்படுவார் இவர் என்பதூஉம் கூறப்பட்டன. (6)

ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல். 797

ஒருவற்கு ஊதியம் என்பது—ஒருவனுக்குப் பேறு என்று சொல்லப்படுவது, பேதையார் கேண்மை ஒரீஇ விடல்—அறிவிலா ரோடு நட்புக்கொண்டானாயின் அதனை ஒழிந்து அவரின் நீங்குதல.

நட்பு ஒழிந்தாலும் நீங்காக்கால "வெறிகமழ சந்தனமும் வேங்கையும் வேகு" (நாலடி. 180) மாறுபோலத தீங்கு வருதலின் 'விடல்' என்றும், நீங்கியவழித தீங்கொழிதலேயன்றி இருமை யின் பத்திற்கு உரிமை எய்தலும் உடைமையின், அதனை 'ஊதியம்' என்றும் கூறினர். (7)

உள்ளற்க உள்ளம் சிறுகுவ கொள்ளற்க
அல்லற்கண் ஆற்றுஅறுப்பார் நட்பு. 798

உள்ளம் சிறுகுவ உள்ளற்க—தம் ஊக்கஞ் சுருங்குவதற்குக் காரணமாய வினைகளைச் செய்யநினையாதொழிக, அல்லற்கண் ஆற்று அறுப்பார் நட்புக் கொளளற்க—அதுபோலத் தமக்கு ஒரு துன்பம் வந்துழிக் கைவிடுவார் நட்பினைக் கொளளாதொழிக.

உள்ளம் சிறுகுவஆவன: தம்மின் வலியாரோடு தொடங்கியனவும் பயனில்லனவும் ஆம். 'ஆற்று'என்பது முதனிலைத் தொழிற்பெயர். முன்னெல்லாம் வலியராவார் போன்று ஒழி



தலின், 'ஆற்றுஅறுப்பார்' என்றார். எடுத்துக்காட்டு உவமை. கொன்னின் அழிக்கே விடும் என்பதாம். (8)

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை
உள்ளினும் உள்ளம் சுடும். 799

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை—ஒருவன் கெடுங்காலத்து அவனை விட்டு நீங்குவார் முன் அவனோடு செய்தநட்பு, அடுங்காலை

உளளினும் உளளம சுடும்—தன்னைக் கூற்று அடுங்காலத்து ஒருவன் நினைப்பினும, அந் நினைத்த உளளததைச் சுடும்.

நினைதத துணையானே இயைபிலலாத பிறனுக்கும் கூற்றினுங் கொடிதாம எனக் கைவிடு எண்ணிச் செய்த நட்பின்

கொடுமை கூறியவாறு. இனி, அவன்தானே ஆக்கியகேடு தன்னை அடுங்காலை உளளினும, அக்கேட்டினும 'சுடும்'என்று உரைப்பாரும உளர.

இவை மூன்று பாட்டானும ஆராய்நதால் நட்கப்படாதார் இவர் என்பது கூறப்பட்டது. (9)

மருவுக மாசற்றார் கேண்மைஒன்று ஈத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு. 800

மாசு அற்றார் கேண்மை மருவுக-உலகோடு ஒத்துக் குற்ற மற்றார் நட்பினையே பயில்க, ஒப்பு இலார் நட்பு ஒன்று ஈத்தும் ஒருவுக-உலகோடு ஒத்தலில்லார் நட்பினை அறியாது கொண்டாராயின், அவர் வேண்டியது ஒன்றனைக் கொடுத்தாயினும் விடுக.

உலகோடு ஒத்தார் நட்பு இருமையும் இன்பமும் பயத்தலின் 'மருவுக' என்றும், அங்ஙனம் ஒவ்வாதார் நட்புத் துன்பமே பயத்தலின், அதனை ஒழிவை 'விலைகொடுத்தும் கொள்க' என்றும் கூறினர். இதனான் அவ் இருமையும் தொகுத்துக் கூறப்பட்டன. (10)

## 81. பழைமை

அஃதாவது நட்டாரது பழையராகதன்மை பற்றி அவர் பிழைத்தன பொறுத்தல். காரணப்பெயர் காரியத்திற்கு ஆயிற்று. ஆராய்ந்து நட்கப்பட்டார் எனினும் பொறுக்கப்படும் குற்றமுடையராகலானும் ஊழ்வகையானும் நட்டார் மாட்டுப் பிழை உளதாம் என்பது அறிவித்தற்கு, இது நட்பு ஆராய்தலின் பின் வைக்கப்பட்டது.

**பழைமை எனப்படுவது யாதுஎனின் யாதும்**
**கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.** 801

பழைமை எனப்படுவது யாது எனின்-பழைமை என்று சொல்லப்படுவது யாது என்று வினவின், கிழமையை யாதும் கீழ்ந்திடா நட்பு-அது பழைமையோர் உரிமையால் செய்வனவற்றைச் சிறிதும் சிதையாது அவற்றிற்கு உடம்படும் நட்பு.



'கிழமை' ஆகுபெயர். 'கெழுதகைமை' என வருவனவும் அது. உரிமையாற் செய்வனவாவன 'கருமமாயின செய்யுங்கால் கேளாது செய்தல், கெடும்வகை செய்தல், தமக்கு வேண்டியன தாமே கோடல், பணிவு அச்சங்கள் இன்மை என்றிவை முதலாயின. சிதைத்தல்-விலக்கல்.

இதனான் 'பழைமையாவது காலஞ்சென்றதன்று; இப்பெற்றித்தாய நட்பு' என்பது கூறப்பட்டது. (1)

## நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை மற்றுஅதற்கு உப்பாதல் சான்றோர் கடன் 802

நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை-நட்பிற்கு அவயவமாவன நட்டார் உரிமையால் செய்வன; அதற்கு உப்பாதல் சான்றோர் கடன்-அதனால் அவ் உரிமைக்கு இனியராதல் அமைந்தார்க்கு முறைமை.

வேறன்மை தோன்ற 'உறுப்பு' என்றார். உறுப்பு என்பது ஈண்டு இலக்கணயடியாக வந்த குறிப்புச்சொல். அவயவமாதல் அறிந்தே இனியவராவர் என்பது தோன்றச் சான்றோர்மேல் வைத்தார். (2)

## பழகிய நட்பு எவன் செய்யும் கெழுதகைமை செய்தாங்கு அமையாக் கடை. 803

கெழுதகைமை செய்தாங்கு அமையாக்கடை—தாம் உடம் படாதனவேனும் நட்டார் உரிமையாற் செய்தனவற்றிற்குத தாம் செய்தாற்போல உடம்படாராயின், பழகிய நட்பு எவன்செய்யும்—அவரோடு பழையதாய் வந்த நட்பு என்ன பயனைச் செய்யும்?

செய்தாற்போல உடம்படுதலாவது தாமும் அவரிடத்து உரிமையால் உடம்படுதல்.

இவை இரண்டு பாட்டானும் பழைமையான் வரும் உரிமை யது சிறப்புக் கூறப்பட்டது. (3)

## விழைதகையான் வேண்டி இருப்பர் கெழுதகையான் கேளாது நட்டார் செயின். 804

நட்டார் கெழுதகையான் கேளாது செயின்—தம் கருமத்தை நட்டார் உரிமையாற்கேளாது செய்தாராயின், விழைதகையான் வேண்டி இருப்பர்—அச் செயலது விழையப்படுந் தன்மைபற்றி அதனை விரும்புவர் அறிவுடையார்.

ஒருவர்க்குத் தம்கருமம் தாம் அறியாமல் முடிந்திருத்தலின் ஊங்கு நன்மையின்மையின், அச்செயல் விழையத்தக்கதாயிற்று. அதனை அவ்வாறு அறிந்து விரும்புதல் அறிவுடையார்க்கல்லது இன்மையின், அவர்மேல் வைத்துக் கூறினர். வேண்டியிருப்பர் என்பது வேண்டியிருப்பர் என்பதுபோல ஒரு சொல் நீர்மைத்து.

இதனுன் கேளாது செய்தழி [அதனை விரும்புக என்பது கூறப்பட்டது. (4)

**பேதைமை ஒன்ருே பெருங்கிழமை என்றுஉணர்க**
**நோதக்க நட்டார் செயின். 805**

*நோதக்க நட்டார் செயின்—தாம் வெறுக்கத் தக்கனவற்றை நட்டார் செய்தாராயின், பேதைமை ஒன்ருே பெருங்கிழமை என்று உணர்க-அதற்குக் காரணம் ஒன்றில் பேதைமை என்ருதல் ஒன்றில் மிக்க உரிமை என்ருதல் கொளக.*

*'ஒன்ருே' என்பது எண்ணிடைச்சொல். 'செயின்' எனவே, தம் இயல்பால் செய்யாமை பெற்ரும். இது வருகின்றவற்றுள்ளும் ஒக்கும். இழவூழான் வரும் பேதைமை யாவர்க்கும் உண்மையின் தமக்கு ஏதங்கொண்டாரென்ருதல், ஊழவகையான் எம்மின் வரற்பாலது ஒற்றுமை மிகுதிபற்றி அவரின்வந்ததென்ருதல், கொளவதலலது அன்பின்மை யென்று கொளளப்படாது என்ப தாம்.*

*கெடும்வகை செய்யின் அதற்குக் காரணம் இதனுன் கூறப் பட்டது. (5)*

**எல்லைக்கண் நின்ருர் துறவார் தொலைவிடத்தும்**
**தொல்லைக்கண் நின்ருர் தொடர்பு. 806**

*எல்லைக்கண் நின்ருர்—நட்பு வரம்பு இகவாது அதன்கண்ணே நின்றவர், தொலலைக்கண் நின்ருர் தொடாபு தொலைவிடத்தும் துறவார்—தம்மொடு பழைமையின் திரியாது நின்ருரது நட்பினை அவரால் தொலைவு வநதவிடதது‌ம் விடார்.*

*பழைமையின் திரியாமை—உரிமையொழியாமை. தொலைவு—பொருட்கேடும் போர்க்கேடும். (6)*

**அழிவந்த செய்யினும் அன்புஅருர் அன்பின்**
**வழிவந்த கேண்மை யவர். 807**

*அழிவந்த செய்யினும் அன்பு அருர்—நட்டார் தமக்கு அழிவு வநதவற்றைச் செய்தாராயினும் அவாமாட்டு அன்பு ஒழியார்,*

அன்பின் வழி வந்த கேண்மையவர்—அன்புடனே பழையதாய் வந்த நட்பினை உடையார்.

'அழி' என்பது முதனிலைத் தொழிற்பெயர். அழிவு—மேற் சொல்லிய கேடுகள்.

இவை இரண்டு பாட்டானும் கேடு செய்தக் கண்ணும் நட்பு விடற் பாற்றன்று என்பது கூறப்பட்டது. (7)

**கேள்இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு**
**நாள்இழுக்கம் நட்டார் செயின். 808**

கேள் இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு—நட்டார் செய்த பிழையைத் தாமாகவேயன்றிப் பிறர் சொன்னாலும்



கொள்ளாத உரிமை அறியவல்லார்க்கு, நட்டார் இழுக்கம் செயின் நாள்—அவர் பிழை செய்வாராயின் அது பயன்பட்ட நாளாம்.

பிழையாவன, சொல்லாது நற்பொருள் வெளவல், பணி யாமை—அஞ்சாமை முதலாயின. கேட்டல்—உட்கோடல். 'கெழு தகைமை வல்லார்' என்பது ஒரு பெயராய 'கேளாத' என்னும் எச்சத்திற்கு முடிபாயிற்று. செய்து போக்குழியல்லது அவ் உரிமை வெளிப்படாமையின், செய்யாதன நாளல்லவாயின.

இதனுன் பிழைபொறுத்தற் சிறப்புக் கூறப்பட்டது. (8)

**கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை**
**விடாஅர் விழையும் உலகு. 809**

கெடா வழி வந்த கேண்மையார் கேண்மை—உரிமை அறுது பழையதாய் வந்த நட்பினை உடையாரது நட்பினை, விடார் உலகு விழையும்—அவர் பிழை நோக்கி விடுதல் செய்யாதாரை உலகம் நட்புக்குறித்து விரும்பும்.

'கெடாது' என்பதன் இறுதிநிலை விகாரத்தால் தொக்கது.

விடாதாரை எனவே, விடுதற்காரணம் கூறப்பட்டது. நம்மாட்டும் இவர் இத்தன்மையராவர் என்று யாவரும் தாமே வந்து நட்பாவர் என்பதாம். 'கெடார' என்று பாடம் ஓதி 'நட்புத்தன்மையில் கெடாராகி' என்று உரைப்பாரும் உளர். (9)

விழையார் விழையப் படுப பழையார்கண்
பண்பின் தலைப்பிரியா தார். 810

பழையார்கண் பண்பின் தலைப்பிரியாதார்–பழைய நட்டார் பிழை செய்தாராயினும் அவர்மாட்டுத் தம் பண்பின் நீங்காதார், விழையார் விழையப்படுப–பகைவரானும் விரும்பப்படுவர்.

தம் பண்பாவது செய்யாத முன்போல அன்புடையராதல். மூன்றன் உருபும் சிறப்பு உம்மையும் விகாரத்தால் தொக்கன. அத் திரிபின்மை நோக்கிப் பகைவரும் நட்டாராவர் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் பழைமையறிவார் எய்தும் பயன் கூறப்பட்டது. (10)

## 82. தீ நட்பு

இனிப் பொறுக்கப்படாத குற்றமுடைமையின் விடற்பாலதாய நட்பு, நட்பாராய்தற்கண் சுருங்கச் சொல்லியதனை யான் அடங்காமையின், அதனை இருவகைப்படுத்து இரண்டு அதிகாரத்தால் கூறுவான் தொடங்கி, முதற்கண் தீ நட்புக் கூறுகின்றார். அஃதாவது தீக்குணத்தாரோடு உளதாய நட்பு. குணத்தின் தீமை ஒற்றுமைபற்றி உடையார் மேற்றாய், அது பின் அவரோடுசெய்த நட்பின்மேற்றாயிற்று. அதிகாரமுறைமை கூறுமையே விளங்கும்.



பருகுவார் போலினும் பண்புஇலார் கேண்மை
பெருகலின் குன்றல் இனிது. 811

பருகுவார் போலினும் பண்பு இலார் கேண்மை–காதல் மிகுதியால் பருகுவார் போன்றாராயினும் தீக்குணமுடையார் நட்பு, பெருகலின் குன்றல் இனிது–வளர்தலின் தேய்தல் நன்று.

"பருகுவ அன்ன அருகா நோக்கமொடு" (பொருந 78) என்றார் பிறரும். நற்குணமில்லார் எனவே, தீக்குணமுடையார் என்பது அருத்தாபத்தியான் வந்தது. பெருகினால் வரும் கேடு

குன்றிலை வாராமையின் 'குன்றல் இனிது' என்றார்.

இதனான் தீ நட்பினது ஆகாமை பொதுவகையால் கூறப் பட்டது. இனிச் சிறப்புவகையால் கூறுப. (1)

**உறின்நட்டு அறின்ஒரூஉம் ஒப்புஇலார் கேண்மை**
**பெறினும் இழப்பினும் என். 812**

*உறின் நட்டு அறின் ஒரூஉம் ஒப்பு இலார் கேண்மை*-தமக்குப் பயனுள்வழி நட்புச் செய்து அஃது இல்வழி ஒழியும் ஒப்பிலாரது நட்பினை, *பெறினும் இழப்பினும் என்*-பெற்றால் ஆக்கம் யாது? இழந்தால் கேடு யாது?

தமக்கு உற்றன பார்ப்பார் பிறரோடு பொருத்தமிலராகலின் அவரை 'ஒப்பிலார்' என்றார். அவர்மாட்டு நொதுமல் தன்மையே அமையும் என்பதாம். (2)

**உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது**
**கொள்வாரும் கள்வரும் நேர். 813**

*உறுவது சீர்தூக்கும் நட்பும்*-நட்பளவு பாராது அதனால் வரும் பயனளவு பார்க்கும் நட்டாரும், *பெறுவது கொள்வாரும்*-கொடுப்பாரைக் கொள்ளாது விலையைக் கொள்ளும் பொதுமகளிரும், *கள்வரும்*-பிறர்கேடு நோக்காது அவர் சோர்வு நோக்கும் கள்வரும், *நேர்*-தம்முள் ஒப்பர்.

நட்பு-ஆகு பெயர். பொருளையே குறித்து வஞ்சித்து ஒழுகலின், கணிகையர் கள்வர் என்றிவரோடு ஒப்பர் என்பதாயிற்று.

இவை இரண்டு பாட்டானும் தமக்கு உறுவது பார்ப்பார் நட்பின் தீமை கூறப்பட்டது. (3)

**அமரகத்து ஆற்றுஅறுக்கும் கல்லாமா அன்னார்**
**தமரின் தனிமை தலை. 814**

*அமரகத்து ஆற்றறுக்கும் கல்லா மா அன்னார் தமரின்*-அமர் வாராத முன்னெல்லாம் தாங்குவதுபோன்று வந்துழிக் களத்திடை வீழ்த்துப்போம் கல்வி இல்லாத புரவி போல்வாரது தமர்மையின், *தனிமை தலை*-தனிமை சிறப்பு உடைத்து.

கல்லா மா-கதி ஐந்தும், சாரி பதினெட்டும், பொருமுரணுற்றலும் அறியாமை. துன்பம் வாராத முன்னெல்லாத் துணையாவார் போன்று, வந்துழி விட்டு நீங்குவர் என்பது உவமையாற் பெற்றாம். அவர் தமரானால் வரும் இறுதி தனியானால் வாராமையின், தனிமையை 'தலை' என்றார். எனவே, அதுவும் தீதாதல் பெறுதும் (4)

**செய்துஏமம் சாராச் சிறியவர் புன்கேண்மை**
**எய்தலின் எய்தாமை நன்று.** 815

*செய்து ஏமம் சாராச் சிறியவர் புன்கேண்மை - செய்து வைத்தாலும் அரணாகாத இழி மக்களது தீ நட்பு, எய்தலின் எய்தாமை நன்று - ஒருவர்க்கு உண்டாதலின் இல்லையாதல நன்று.*

*சிறப்பு உம்மை விகாரத்தால் தொக்கது. அரணாகாமை-தொலைவின்கண் விட்டு நீங்குதல. 'எய்தலின் எய்தாமை நன்று' என்பதற்கு மேல உரைததாங்குஉரைக்க. 'சாராத' என்னும் பெயரெச்சம் 'கேண்மை' என்னும் பெயா கொண்டது, 'சிறியவர்' என்பதனைக் கொளளின், 'செயது' என்பது நின்று வற்றும்.*

*இவை இரண்டு பாட்டானும தொலைவில துணையாகாத நட்பின் தீமை கூறப்பட்டது.* (5)

**பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்**
**ஏதின்மை கோடி உறும்.** 816

*பேதை பெருங்கெழீஇ நட்பின் - அறிவிலானது மிகச் செறிந்த நட்பின், அறிவுடையார் ஏதின்மை கோடி உறும் - அறிவுடையானது பகைமை கோடிமடங்கு நன்று.*

*'கெழீஇய' என்பதன் இறுதிநிலை விகாரததால தொக்கது. பன்மை உயர்ததற்கண் வநதது. அறிவுடையான் பகைமை ஒரு தீங்கும் பயவாமையானும, பேதை நட்பு எல்லாத் தீங்கும பயததலானும், 'கோடி உறும' என்றார். 'பெருங்கழி நட்பு' என்று பாடம் ஓதுவாரும் உளர்.* (6)

**நகைவகைய ராகிய நட்பின் பகைவரான்**
**பத்துஅடுத்த கோடி உறும்.** 817

*நகை வகையர் ஆகிய நட்பின் - தாம் அறிதல் வகையராகாது நகுதல் வகையராதற்கு ஏதுவாகிய நட்பான் வருவனவற்றின், பகைவரால் பத்து அடுத்த கோடி உறும் - பகைவரான் வருவன*

பத்துக் கோடி மடங்கு நல்ல.

நட்பு - ஆகுபெயர். அந் நட்பாவது விடமரும், தூர்த்தரும், வேழம்பரும் போன்று பலவகையான் நகுவித்துத் தாம் பயன் கொண்டொழிவாரோடு உளதாயது. 'பகைவரான்' என்பது அவாய் நிற்றலின், 'வருவன' என்பது வருவிக்கப்பட்டது. பத்துஅடுத்த



கோடி - பத்தாகத் தொகுத்த கோடி. அந் நட்பான் வரும் இன்பங்களின் அப் பகைவரான் வரும் துன்பங்கள் இறப்பு நல்ல என்பதாம். இதற்குப் பிறரெல்லாம் சொல்லிலக்கணத்தோடு மாறுகொள உரைத்தார். (7)

ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல். 818

ஒல்லும் கருமம் உடற்றுபவர் கேண்மை - தம்மான் முடியும் கருமத்தை முடியாதாக்கிச் செய்யாதாரோடு கொண்ட நட்பினை, சொல்லாடார் சோரவிடல் - அது கண்டால் அவரறியச் சொல்லாதே சோர விடுக.

முடியாதாக்குதல் - முடியாதாக நடித்தல். சோரவிடல் - விடுகின்றவாறு தோன்றாமல் ஒரு காலைக்கு ஒருகால் ஓயவிடுதல். அறியச் சொல்லினும் விடுகின்றவாறு தோன்றினும் அப்பொழுது பரிகரித்துப் பின்னும் நட்பாயொழுகக் கருதுவர் ஆகலின், 'சொல்லாடார்' என்றும் 'சோரவிடல்' என்றும் கூறினார்.

இவை மூன்று பாட்டானும் முறையே பேதையர், நகுவிப்பார், இயல்வது செய்யாதார் என்பவர்கள் நட்பின் தீமை கூறப்பட்டது. (8)

கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. 819

வினை வேறு சொல்வேறு பட்டார் தொடர்பு - வினையும் சொல்லும் ஒவ்வாது வேறுவேறாயிருப்பார் நட்பு, கனவினும் இன்னாது - நனவின் கண்ணே அன்றிக் கனவின் கண்ணும் இன்னாது.

வினை சொற்களது ஒவ்வாமை முதலமேல் ஏற்றப்பட்டது. அஃதாவது வினையிற் பகைவராய்ச் சொல்லின் நட்டாராயிருத்

தல. நிகழ்வின்கண் உளதாயிருததலால் 'கனவினும் இன்னது' என்றார். உம்மை எச்ச உம்மை, இழிவு சிறப்பு உம்மையும் ஆம். மன்னும், ஓவும அசை நிலை. (9)

எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றின் பழிப்பார் தொடர்பு. 820

மனைக்கெழீஇ மன்றின் பழிப்பார் தொடர்பு - தனியே மனைக்கண் இருந்துழி நட்பாடிப் பலரோடு மன்றின்கண் இருந்து பழி கூறுவார் நட்பு, எனைததும குறுகுதல் ஓம்பல் - சிறிதாயினும் தம்மை நணுகுதலைப் பரிகரிக்க.

மனைக்கண் கெழுமலும் மன்றின்கண் பழித்தலும் நீது ஆகலின், அவர் ஒருகாலும் தம்மை நணுகா வகை குறிக்கொண்டு காக்க என்பார், அவர் நட்பின்மேல் வைத்துக் கூறினார்.

இவை இரண்டு பாட்டானும் வஞ்சர் நட்பின் திமை கூறப்பட்டது. (10)



## 83. கூடா நட்பு

இனி எனைக் கூடா நட்புக் கூறுகின்றார். அஃதாவது பகைமையான் அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்கு மிடம் பெறுந்துணையும் புறத்தாற் கூடியொழுகுவார் நட்பு.

சீர்இடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. 821

நேரா நிரந்தவர் நட்பு - கூடாதிருநதே தமக்கு வாய்க்கும் இடம் பெறுந்துணையும் கூடியொழுகுவார நடபு, சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை - அது பெற்றால் அறஎறிதற்குத துணையாய பட்டடையாம்.

எறியும் எல்லை வாராமுன் எல்லாம தாஙகுவது போன்றிருந்து வந்துழி அற எறிவிப்பதாய பட்டடைக்கும் அததன்மைத

தாய நட்பிற்கும் தொழிலொப்புமை உண்மையான், அது பற்றி அந் நட்பினை பட்டடையாக உபசரித்தார். 'நீர்விடம்' என்று பாடம் ஓதி 'முடிவிடம்' என்று உரைப்பாரும் உளர். (1)

இனம்போன்று இனமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும். 822

இனம்போன்று இனமல்லார் கேண்மை - தமக்கு உற்றார் போன்று உறாதாரோடு உளதாய நட்பு, மகளிர் மனம்போல வேறுபடும்—இடம் பெற்றுழி பெண் பாலார் மனம்போல வேறு படும்.

அவர் மனம் வேறுபடுதல் "பெண் மனம் பேதின்று ஒருப் படுப்பேன் என்னும் எண்ணில் ஒருவன்" என்பதனானுமறிக. நட்பு வேறுபடுதலாவது - பழைய பகையேயாதல்.

இவை இரண்டு பாட்டானும் கூடா நட்பினது குற்றம் கூறப் பட்டது. (2)

பலநல்ல கற்றக் கடைத்தும் மனம்நல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது. 823

நலல பல கற்றக்கடைத்தும் - நல்லன பல நூல்களைக் கற்ற விடத்தும், மனம் நல்லர் ஆகுதல் மாணார்க்கு அரிது - அதனான் மனம் திருந்தி நட்பாதல் பகைவர்க்கு இல்லை.

நல்லன - மனக் குற்றம் கெடுப்பன. 'மனம் நல்லர்' எனச் சினைவினை முதல் மேல நின்றது. நல்லர் ஆகுதல் - செற்றம் விடுதல். உள்ளே செற்றமுடையாரைக் கல்வியுடைமை பற்றி நட்பு என்று கருதற்க என்பதாம். (3)

முகத்தின் இனிய நகாஅ அகத்துஇன்னா
வஞ்சரை அஞ்சப் படும். 824

முகத்தின் இனிய நகாஅ அகத்து இன்னா வஞ்சரை - கண்டபொழுது முகத்தால் இனியவாகச் சிரித்து எப்பொழுதும் மனத்தால் இன்னாராய வஞ்சரை, அஞ்சப்படும் - அஞ்சல் வேண்டும்.

நகையது வகைபற்றி 'இனிய' என்றும், அகத்துச் செற்றம் நிகழவும் அதற்கு மறுதலையாய நகையைப் புறத்து விளைத்தலின் 'வஞ்சர்' என்றும், அச்செற்றம் குறிப்பறிதற்கருவியாய முகத்தானும் தோன்றுமையின் 'அஞ்சுதல் செய்யப்படும்' என்றும் கூறினார்.

இவை இரண்டு பாட்டானும் குற்றதநிற்கு ஏதுவாய அவர் கொடுமை கூறப்பட்டது. (4)

மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்
சொல்லினால் தேறல்பாற் றன்று. 825

மனத்தின் அமையாதவரை - மனத்தால் தம்மொடு மேவாதாரை, எனைத்து ஒன்றும் சொல்லினால் தேறல்பாற்று அன்று - யாதொரு கருமத்தினும் சொல்லால் தெளிதல் முறைமைத்தன்று நீதி நூல்.

'நீதி நூல்' என்பது அவாய் நிலையான் வந்தது. பகைமை மறைத்தற்பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச் சொல்லைச் செவ்விய சொல் எனக் கருதி, அவரைக் கருமங்களில் தெளிதல் நீதி நூல் முறைமை அன்று என்பதாம். (5)

நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை உணரப் படும். 826

நட்டார்போல் நல்லவை சொல்லினும் - நட்டார் போன்று நன்மை பயக்கும் சொற்களைச் சொன்னாராயினும், ஒட்டார் சொல் ஒல்லை உணரப்படும் - பகைவர் சொற்கள் அது பயவாமை அச்சொல்லிய பொழுதே அறியப்படும்.

சொல்லினும் எனவே, சொல்லாமையே பெற்றும். ஒட்டாராதலால் தீமை பயத்தல் ஒருதலை என்பார், 'ஒல்லை உணரப்படும்' என்றார். (6)

சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான். 827

வில்வணக்கம் தீங்கு குறித்தமையான் - வில்லினது வணக்கம் ஏற்றவர்க்குத் தீமை செய்தலைக் குறித்தமையால், ஒன்னார்கண் சொல் வணக்கம் கொள்ளற்க - பகைவர் மாட்டுப் பிறக்கும் சொல்லினது வணக்கத்தையும் தமக்கு நன்மை செய்தலைக் குறித்தது என்று கருதற்க.

தம் வணக்கம் அன்று என்பது தோன்ற 'சொல் வணக்கம்' என்றும், வில் வணக்கம் வேறாயினும் வணங்குதல் ஒப்புமைபற்றி



அவர் குறிப்பை எதுவாக்கியுங் கூறினார். வில்லினது குறிப்பு அவனினுடைய வில்வணக்கத்தின்மேல் நிற்றலான், ஒன்னாரது குறிப்பும் அவரினுடைய சொல் வணக்கத்தின் மேலதாயிற்று. இதுவும் கேடு குறித்த வணக்கம் என்றே கொண்டு அஞ்சிக் காக்க என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் அவரைச் சொல்லால் தெளியற்க என்பது கூறப்பட்டது. (7)

தொழுதகை யுள்ளும் படைஒடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து. 828

ஒன்னார் தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும் - ஒன்னார் குறிப்பை உணரவல்லார்க்கு அவர் தொழுத கையகத்தும் படைக்கலம் மறைந்திருக்கும்; அழுத கண்ணீரும் அனைத்து - அவர் அழுத கண்ணீரும் அவ்வாறே அது மறைந்திருத்தற்கு இடனாம்.

நாம் நட்பு என்பதனைத் தம்கையானும் கண்ணானும் தேற்றிப் பின் கோறற்கு வாங்க இருக்கின்ற படைக்கலம் உய்த்துணரவழித் தேற்றுகின்றபொழுதே அவற்றுளனே தோன்றும் என்பார், ஒடுங்கும் என்றார். பகைவர்தம் மென்மை காட்டித் தொழினும் அழினும், அவர் குறிப்பையே நோக்கிக் காக்க என்பதாம்.

இதனான் அவரைச் செயலால் தெளியற்க என்பது கூறப்பட்டது. (8)

மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து
நட்பினுள் சாப்புல்லற் பாற்று. 829

மிகச் செய்து தம் எள்ளுவாரை - பகைமை தோன்றாமல் புறத்தின்கண் நட்பினை மிகச் செய்து அகத்தின்கண் தம்மை இகழும் பகைவரை, நட்பினுள் நகச் செய்து சாப் புல்லற்பாற்று - தாமும் அந் நட்பின்கண்ணே நின்று புறத்தின்கண் அவர் மகிழும் வண்ணம் செய்து அகத்தின்கண் அது சாம்வண்ணம் பொருந்தற் பான்மை உடைத்து அரசநீதி.

'நின்று' என்பதூஉம் 'அரச நீதி' என்பதூஉம் அவாய் நிலையான் வந்தன. அகனொன்று புறனொன்றாதல் ஒருவற்குத் தகாது எனினும் பகைவர்மாட்டாயின் தகும் என்பது நீதி நூல் துணிபு என்பார், அதன்மேல் வைத்துக் கூறினார். 'சாவ' என்பதன் இறுதிநிலை விகாரத்தால் தொக்கது. "கோட்டின்வாய்ச் சாக் குத்தி" (கலித்: முல்லை. 5) என்புழிப்போல. எள்ளுவாரைப் புல்லல் எனக் கூட்டுக. (9)

பகைநட்பாம் காலம் வருங்கால் முகம்நட்டு
அகநட்பு ஒரீஇ விடல். 830

பகை நட்பாம் காலம் வருங்கால் - தம் பகைவர் தமக்கு நட்டாராயொழுகுங்காலம் வந்தால், முகம் நட்பு அகம் நட்டு ஒரீஇ



விடல் - தாமும் அவரோடு முகத்தால் நட்புச் செய்து அகத்தால் அதனைவிட்டுப் பின் அதுவும் தவிர்க.

அக்காலமாவது தம்மானும் பகையென்று வெளிப்படா நீக்கலாகாத அளவு. இதனானே, ஆமளவெல்லாம் நீக்குக என்பதூஉம் பெற்றாம்.

இவை இரண்டு பாட்டானும் அந் நட்பிடை ஒழுகுமாறு கூறப்பட்டது. (10)

## 84. பேதைமை

இனி, அந் நட்பினை எதிர்மறுத்துப் பகை முகத்தாற் கூறிய தொடங்கினர். அப் பகைதான் முற்றக்கடியும் குற்ற மன்மையின் உளவாய வெகுளியானும் காமத்தானும் வருவ தாம். அவற்றுள் வெகுளியான் வருவன ஐந்து அதிகாரத் தானும் காமத்தான் வருவன ஐந்து அதிகாரத்தானும் கூறுவார், அவ் இரண்டற்கும் அடியாய மயக்கத்தை இரு வகைப்படுதது, இரண்டு அதிகாரத்தால் கூறுவான்தொடங்கி, முதற்கண் பேதைமை கூறுகின்றார். அஃதாவது யாதும் அறியாமை.

பேதைமை என்பதுஒன்று யாதெனின் ஏதங்கொண்டு
ஊதியம் போக விடல். 831

பேதைமை என்பது ஒன்று-பேதைமை என்று சொல்லப்படு வது ஒருவனுக்கு ஏனைக் குற்றங்கள் எல்லாவற்றினும் மிக்க. தொன்று, யாது எனின் ஏதம் கொண்டு ஊதியம் போகவிடல் - அதுதான் யாதென்று வினவின், தனக்குக் கேடு பயப்பன வற்றைக் கைக் கொண்டு ஆக்கம் பயப்பனவற்றைக் கைவிடுதல்.

கேடு - வறுமை, பழி பாவங்கள். ஆக்கம் - செல்வம், புகழ் அறங்கள். தானே தன் இருமையும் கெடுதைக்கோடல் என்ப தாம். (1)

பேதைமை யுள்எல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கண் செயல். 832

பேதைமையுள எல்லாம் பேதமை-ஒருவனுக்குப் பேதைமை எல்லாவற்றுளளும் மிக்க பேதைமையாவது, கையல்லதன்கண் காதன்மை செயல் - தனக்காகாத ஒழுக்கத்தின் கண் காதன்மை செய்தல்.

இருமைக்கும் ஆகாவென்று நூலோர் கடிந்த செயல்களை விரும்பிச் செய்தல் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் பேதைமையது இலக்கணம் கூறப்பட்டது. (2)

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில். 833

நாணாமை - நாணவேண்டுமவற்றுக்கு நாணாமையும், நாடாமை - நாட வேண்டுமவற்றை நாடாமையும், நார் இன்மை- யாவர்மாட்டும் முறிந்த சொல்செயலுடைமையும், யாதொன்றும் பேணாமை - பேணவேண்டுமவற்றுள் யாதொன்றனையும் பேணாமையும், பேதை தொழில்-பேதையது தொழில்.

நாணவேண்டுமவை - பழி பாவங்கள். நாடவேண்டுமவை- கருமங்களில் செய்வன தவிர்வன. முறிதல் - கண்ணறுதல். பேண வேண்டுமவை-குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம் முதலாயின. இவை பேதைமைக்கு என்றுமொன்றும இயல்பாய் வருதலின் 'தொழில்' என்றார். (3)

ஓதி உணர்ந்தும் பிறர்க்குஉரைத்தும் தான்அடங்காப்
பேதையின் பேதையார் இல். 834

ஓதி - மனமொழி மெய்கள அடங்குதற்கு ஏதுவாய நூல்களை ஓதியும், உணர்ந்தும் - அவ்வடக்கத்தான் வரும் பயனை உணர்ந்தும், பிறர்க்கு உரைத்தும் - அதனை அறியலுறப் பிறர்க்கு உரைத்தும், தான் அடங்காப் பேதையின் - தான் அவையடங்கி ஒழுகாத பேதைபோல, பேதையார் இல் - பேதையார் உலகத்து இல்லை.

உம்மை மூன்றும் கூட்டப்பட்டது. இப் பேதைமை தனக்கு மருந்தாய இவற்றால் தீராமையானும், வேற்று மருந்து இன்மையானும், 'பேதையின் பேதையார் இல்' என்றார்.

இவை இரண்டுபாட்டானும்பேதையது தொழில் பொதுவகை

யான் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையால் கூறுப. (4)

ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக்கு அழுந்தும் அளறு. 835

பேதை-பேதையாயினுன், எழுமையும் தான் புக்குஅழுந்தும் அளறு - வரும் பிறவிகள் எல்லாம் தான் புக்கு அழுந்தும நிரயத தினை, ஒருமைச் செயல் ஆற்றும் - இவ ஒரு பிறப்புளளே செயது கொளளவல்லனும்.

எல்லாப் பிறப்பும் ஏழாய் அடங்குதல அறியப்பட்டமையின், முற்று உம்மை கொடுத்தார். அழுந்துதறகு இடனுய நிரயம். ஈண்டைப் பிறப்புக்களினும் கொடுவினை வயத்தால் அந் 'நிரயத்' துன்பமே உழுந்து வருதலின், 'எழுமையும் தான் புக்கு அழுந்தும் அளறு' என்ருர். முடிவில் காலமெல்லாம் தான் நிரயத் துன்பம் உழத்தற்கு ஏதுவாங் கொடுவினைகளேயே அறிந்து சில காலத் துன்ளே செய்துகோடல் பிறர்க்கு அரிதாகலின், 'ஆற்றும்' என்ருர்.



இதனுன் அவன் மறுமைச் செயல் கூறப்பட்டது. (5)

பொய்படும் ஒன்ருே புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின். 836

கை அறியாப் பேதை வினைமேற்கொளின் - செய்யும் முறைமை அறியாத பேதை ஒரு கருமத்தை மேற்கொள்வானு யின், பொய்படும் ஒன்ருே புனைபூணும் - அதுவும் புரைபடும், தானும் தளை பூணும்.

'புரைபடுதல்' - பின் ஆகாவகை உள்ளழிதல். 'ஒன்ருே' என்பது எண்ணிடைச் சொல். அதனையும் கெடுத்துத் தானும் கெடும் என்பதாம்.

இதனுன் அவன் செல்வம் படைக்குமாறு கூறப்பட்டது. (6)

ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை. 837

பேதை பெருஞ் செல்வம் உற்றக்கடை - பேதையாயினன் பெரிய செல்வத்தைத் தெய்வததான் எய்திய வழி, ஏதிலார் ஆரத் தமா பசிப்பா - தன்னேடு ஓர் இயைபும இல்லாதார் நிறைய, எல்லா இயைபும உடைய தமராயினுர் பசியா நிற்பர்.

எலலா நன்மையுஞ்செய்து கோடறகருவி என்பது தோன்ற 'பெருஞ்செல்வம' என்றும, அதனைப் படைக்கும் ஆற்றல் இலலாமை தோன்ற 'உறறக்கடை' என்றும், எல்லாம் பெறுதல் தோன்ற 'ஆர' என்றும, உணவும பெறுமை தோன்ற, 'பசிப்பர்' என்றும் கூறினா. (7)

மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கைஒன்று உடைமை பெறின். 838

பேதை தன் கை ஒன்று உடைமை பெறின் - பேதையாயினன் தன் கைக் கண்ணே ஒன்றனை உடைமையாகப் பெற்றனாயின், மையல ஒருவன் களிததற்று - அவன் மயங்குதல் முன்னே பிததினை உடையானெருவன் அம் மயக்கத்தின் மேலே மதுவுண்டு மயஙகினற்போலும்.

'பெறின்' எனவே, தெய்வத்தான் அன்றித் தன்னாற் பெறுமை பெறாமை. பேதைமையும் செலவக் களிப்பும் ஒருங்கு உடைமையால அவன் செய்வன, மையலும் மதுக்களிப்பும் ஒருங்குடையான் செய்வனபோல தலை தடுமாறும் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் அவன் செல்வம் எய்திய வழிப் பயன்கொள்ளுமாறு கூறப்பட்டது. (8)

பெரிதுஇனிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதுஒன்று இல். 839

பிரிவின்கண் தருவது பிழை ஒன்று இல் - பிரிவு வந்தவழி அஃது இருவர்க்கும் தருவதொரு துன்பம் இல்லை; பேதையார் கேண்மை பெரிது இனிது - ஆகலான் பேதையாயினர் தம்முட் கொண்ட நட்பு மிக இனிது.

நாள்தோறும் தேய்ந்து வருதலின் துன்பம்தாராதாயிற்று. புகழ்வார் போன்று பழித்தவாறு.

இதனான் அவரது நட்பின் குற்றம் கூறப்பட்டது. (9)

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். 840

சான்றோர் குழாத்துப் பேதை புகல் - சான்றோர் அவையின் கண் பேதையாயினான் புகுதல், கழாக்கால் பள்ளியுள் வைத்தற்று - தூய அல்ல மிதித்தகாலை இன்பந்தரும் அமளிக் கண்ணே வைத்தாற் போலும்.

கழுவாக்கால என்பது இடக்கரடக்கு. இதனால் அவ் அமளியும் இழிக்கப்படுமாறு போல இவனால் அவ் அவையும் இழிக்கப்படும் என்பதாம்.

இதனான் அவன் அவையிடம் இருக்குமாறு கூறப்பட்டது. (10)

## 85. புல்லறிவாண்மை

இனி ஏனைப் புல்லறிவாண்மை கூறுகின்றார். அது புல்லிய அறிவினை ஆள்தலதன்மை என விரியும். அஃதாவது தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச் சொற் கொள்ளாமை.

அறிவுஇன்மை இன்மையுள் இன்மை பிறிதுஇன்மை
இன்மையா வையாது உலகு. 841

இன்மையுள் இன்மை அறிவின்மை - ஒருவனுக்கு இல்லாமை பலவற்றுள்ளும் மிக்க இல்லாமையாவது அறிவில்லாமை, பிறிது இன்மை இன்மையா வையாது உலகு - மற்றைப் பொருள் இல்லாமையோவெனின், அதனை அப்பெற்றித்தாய இல்லாமையாகக் கொள்ளார் உலகத்தார்.

அறிவு என்பது ஈண்டுத் தலைமைபற்றி கல்வியின் மேல் நின்றது. புல்லறிவாளர் செல்வம் எய்திய வழியும் இம்மை

மறுமைப் பயன் எய்தாமையின் அதனை 'இன்மையுள் இன்மை' என்றும், நல்லறிவாளர் வறுமையெய்திய வழியும் அஃது இழவாமையின் அதனை 'இன்மையா வையாது' என்றுங் கூறினர்.
இதனான் புல்லறிவினது குற்றம் கூறப்பட்டது. (1)

அறிவிலான் நெஞ்சுஉவந்து ஈதல் பிறிதுயாதும்
இல்லை பெறுவான் தவம். 842



அறிவிலான் நெஞ்சு உவந்து ஈதல் – புல்லறிவுடையான் ஒருவனுக்கு மனம் உவந்து ஒன்று கொடுத்தல் கூடிற்றாயின், பெறுவான் தவம் பிறிது யாதும் இல்லை – அதற்குக் காரணம் பெறுகின்றவன் நல்வினையே, வேறொன்றும் இல்லை.
ஒரோ வழி நெஞ்சு உவந்து ஈதல் கூடலின் 'புல்லறிவாளரும் நல்வினை செய்ப' என்பாக்குப் 'பெறுவான் வீழ்பொருளெய்தியான் போல்வதல்லது, இம்மை நோக்கியாக மறுமை நோக்கியாக ஈகின்றார் அல்லா' எனக் கூறியவாறு. கூடிற்றாயின், அதற்குக் காரணம் என்னும் சொற்கள் அவாய்நிலையான வந்தன.
இதனான் அஃதுடையார் தமமாட்டு நலலன செய்தலறியாமை கூறப்பட்டது. (2)

அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது. 843

அறிவிலார் தாம் தமமைப் பீழிக்கும் பீழை–புல்லறிவுடையார் தாமே தமமை வருத்தும் வருத்தம், செறுவார்க்கும் செய்தல் அரிது – அது செய்தற்குரியராய தம் பகைவர்க்கும் செய்தல் அரிது.
பகைவர் தாம் அறிந்த தொன்றனைக் காலம் பார்த்திருந்து செய்வதல்லது வறுமை, பழி, பாவம் முதலிய பலவற்றையும் எக்காலத்தும் செய்யமாட்டாமையின், அவர்க்கும் செய்தல் அரிதென்றார்.
இதனான் அவர் தம்மாட்டும் தீயன செய்தல் அறிவர் என்பது கூறப்பட்டது. (3)

வெண்மை எனப்படுவது யாதுஎனின் ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு. 844

வெண்மை எனப்படுவது யாது எனின் – புல்லறிவுடைமை என்று சொல்லப்படுவது யாது என்று வினவின், யாம் ஒண்மை உடையம் என்னும் செருக்கு–அது தம்மைததாமே யாம் நல்லறிவுடையம் என்று நன்கு மதிக்கும் மயக்கம்.

'வெண்மை, இளமை' அதாவது அறிவுமுதிராமை. ஒண்மை எனக்காரியப் பெயர் காரணத்திற்காயிற்று. உலகத்தார் இகழ்தல் அறிந்துவைத்தும் அவ்வாறு மதித்தலான், 'மயக்கம்' என்றார். (4)

கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடுஅற
வல்லதூஉம் ஐயம் தரும். 845

கல்லாத மேற்கொண்டு ஒழுகல் – புல்லறிவாளர் தாம் கல்லாத நூல்களையும் கற்றாராகத் தாம் மேலிட்டுக் கொண்டு ஒழுகுதல், கசடு அற வல்லதூஉம் ஐயம் தரும் – கசடறக் கற்றதொரு நூலுண்டாயின், அதன் கண்ணும் பிறர்க்கு ஐயத்தை விளைக்கும்.



வல்லது என எழாவது இறுதிக்கண் தொக்கது. 'உண்டாயின்' என்பது அவாய்நிலையான் வந்தது. ஐயம் அது வல்லர் என்பதூஉம் இவ்வாறு கொல்லோ என்பது. (5)

அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்
குற்றம் மறையா வழி. 846

தம் வயின் குற்றம் மறையாவழி–புல்லறிவாளர் தம்கண் நிகழும் குற்றங்களை அறிந்து கடியாராயின், அற்றம் மறைத்தலோ புல்லறிவு–ஆடையால் அற்றம் மறைத்தாராகத் தம்மைக் கருதுதலும் புல்லறிவாம்.

குற்றம்மறைத்தலாவது-அவற்றை இலவாக்குதல. மறைக்கப் படுவன பலவற்றுளளும் உயர்ந்தவற்றை எல்லாம் மறையாது தாழ்ந்ததொன்றனையே மறைத்து, அவ்வளவால் தம்மையும் உலக ஒழுக்கினராக மதித்தலும் புல்லறிவென்பதாம்.

இவை மூன்று பாட்டானும் அவர் தம்மை வியத்தற்குற்றம் கூறப்பட்டது. (6)

அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. 847

அருமறை சோரும் அறிவிலான்—பெறுதற்கு அரிய உபதேசப் பொருளைப் பெற்றும் உட்கொள்ளாது போக்கும புல்லறிவாளன், தானே தனக்குப் பெருமிறை செய்யும்—அவ் உறுதி அறியாமையால் தானே தனக்கு மிக்க வருததததைச் செய்து கொள்ளும்.

'சோரும்' என இடத்து நிகழ்பொருளின் தொழில் இடததின் மேல் நின்றது. மிக்க வருததம்—பொறுததற்கு அரிய துன்பங் கள். இனி 'அருமறை சோரும்' என்பதறகுப் பிறரெல்லாம், 'உள்ளத்து அடக்கப்படும் எண்ணததை வாய்சோர்ந்து பிறர்க்கு உரைக்கும்' என்று உரைத்தார் அது பேதைமை என்னும் பேதைமையாவதன்றிப் புல்லறிவாண்மை யன்மை அறிக. (7)

ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவும்ஓர் நோய். 848

ஏவவும் செய்கலான்—புல்லறிவாளன் தனக்கு உறுதியாயவற்றை அறிவுடையார் சொலலா நிற்கவும் செய்யான், தான் தேறான்—அதுவன்றித் தானாகவும் இவை செய்வன என்று அறியான், அவ் உயிர் போமளவும் ஓர் நோய்—அவ் உயிர் யாக்கையின் நீங்குமளவும் நிலத்திற்குப் பொறுத்தற்கு அரியதொரு நோயாம்.

உயிர் தன் உணர்தல்தன்மைத்தாயிருந்தும் நின்ற யாக்கையயத்தான் மருளல்தன்மைத்தாய வேறுபடுதலின், 'அவ் உயிர்'

என்றும், அதன் நீக்கியபொழுதே அதற்கு இரண்டனுள் ஒன்று கூடுதலில் 'பேரமளவும்' என்றும், குலமிலி முதலிய பொறுக் கின்ற நிலத்திற்குப் பாவயாக்கை பெரும்பொறையாய்த் துன்பம் செய்தலின் 'ஓர்நோய்' என்றும் கூறினர்.

**காணாதாற் காட்டுவான் தான்காணான் காணாதான்**
**கண்டானாம் தான்கண்ட வாறு. 849**

*காணாதாற் காட்டுவான் தான் காணான் - தன்னை எல்லாம் அறிந்தானாக மதித்தலான்பிறரால் ஒன்றறியும் தன்மையிலாதானை அறிவிக்கப்புகுவான் அவனாற் பழிக்கப்பட்டுத தான் அறியானாய் முடியும், காணாதான் தான் கண்டவாறு கண்டானாம் - இனி அவ் அறியுந்தன்மையில்லாதான் கொண்டது விடாமையான் தான் அறிந்தவாற்றால் அதனை அறிந்தானாய் முடியும்.*

*புல்லறிவாளர்க்கு நல்லறிவு கொளுவுதல் ஒருவாற்றானும் இயைவதன்று என்பதாம். (9)*

**உலகத்தார் உண்டுஎன்பது இல்என்பான் வையத்து**
**அலகையா வைக்கப் படும். 850**

*உலகததா உண்டு என்பது இல் என்பான்-உயர்ந்தோர் பலரும் உண்டு என்பதோர பொருளைத தன் புல்லறிவான் இலலை என்று சொல்லுவான், வையதது அலகையா வைக்கப்படும்-மகன் என்று கருதப்படான், வையததுக் காணப்படுவதோர் பேய் என்று கருதப்படும்.*

*கடவுளும், மறு பிறப்பும், இருவினைப்பயனும் முதலாக அவர் உள என்பன பலவேறும் சாதிப்பற்றி 'உண்டு என்பது' என்றார், தானே வேண்டிய கூறலால ஒப்பும் வடிவால் ஒவ்வாமையும் உடைமையின் தன்யாக்கை கரநது மக்களயாக்கையுள தோன்று தல்வல்ல 'அலகை' என்றும் கூறினர்.*

*இவை நான்கு பாட்டானும் உறுதிச்சொற் கொள்ளாமையது குற்றம் கூறப்பட்டது. (10)*

## 86. இகல்

*இனி, அவற்றான் வரும் வெகுளி காமங்களுள் அரசர்க்கு வெகுளி பெருமபான்மைததாகலின், அதனான் வருவன கூறுவான் தொடங்கி, முதறகண இகல கூறு கின்றார். அஃதாவது இருவா தமமுள பொருது வலி தொலைதற்கு ஏதுவாய மாறுபாடு.*

இகல்என்ப எல்லா உயிர்க்கும் பகல்என்னும்
பண்புஇன்மை பாரிக்கும் நோய். 851

*எல்லா உயிர்க்கும் பகல் என்னும் பண்பு இன்மை பாரிக்கும் நோய் - எல்லா உயிர்கட்கும் பிறஉயிர்களோடு கூடாமை என்*



*னும் தீக்குணத்தை வளர்க்கும் குற்றம், இகல் என்ப - இகல் என்று சொல்லுவர் நூலோர்.*

*மக்களையும் விலங்குகளோடு ஒப்பிப்பது என்பது தோன்ற 'எல்லா உயிர்க்கும்' என்றும், பகுதிக்குணத்தை இடைநின்று விளைத்தலின் 'பகல்என்னும் பண்பு இன்மை' என்றும் கூறினார். நற்குணம் இன்மை அருத்தாபத்தியால் தீக்குணமாயிற்று.*

*இதனான் இகலது குற்றம் கூறப்பட்டது.* (1)

பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை. 852

*பகல் கருதிப் பற்றா செயினும் - தம்மொடு கூடாமையைக் கருதி ஒருவன் வெறுப்பன செய்தானாயினும், இகல் கருதி இன்னா செய்யாமை தலை - அவனொடு மாறுபடுதலைக் குறித்துத் தாம் அவனுக்கு இன்னாதவற்றைச் செய்யாமை உயர்ந்தது.*

*செய்யின் பகைமை வளரத் தாம் தாழ்ந்துவரலானும், ஒழியின் அப் பற்றாதன தாமே ஓய்ந்துபோகத் தாம் ஓங்கிவரலானும், 'செய்யாமை தலை' என்றார். 'பற்றாத' என்பது விகாரமாயிற்று.*()

இகல்என்னும் எவ்வநோய் நீக்கின் தவல்இல்லாத்
தாவில் விளக்கம் தரும். 853

இகல் என்னும் எவ்வ நோய் நீக்கின்-மாறுபாடு என்று சொல்லப்படுகின்ற துன்பத்தைச் செய்யும் நோயை ஒருவன்தன் மனத்தினின்று நீக்குமாயின், தவல் இல்லாத் தா இல் விளக்கம் தரும் - அவனுக்கு அந நீக்குதல் என்ஞான்றும் உளதைற்கு ஏதுவாய புகழைக் கொடுக்கும்.

தவல் இல்லாமை அருததாபத்தியான் அப்பொருட்டாயிற்று. தா இல் விளக்கம் - வெளிப்படை. யாவரும் நண்பராவர், ஆகவே எல்லாச்செல்வமும் எய்திக் கொடை முதலிய காரணங் களால் புகழ்பெறும் என்பதாம். (3)

இன்பத்துள் இன்பம் பயக்கும் இகல்என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின். 854

. . இகல் என்னும் துன்பத்துள் துன்பம் கெடின் - மாறுபாடு என்று சொல்லப்படுகின்ற துன்பங்கள் எல்லாவற்றினும் மிக்க துன்பம் ஒருவனுக்கு இல்லையாயின், இன்பத்துள் இன்பம் பயக்கும்-அவ் இன்மை அவனுக்கு இன்பங்கள் எல்லாவற்றினும் மிக்க இன்பத்தினைக் கொடுக்கும்.

துன்பத்துள் துன்பம் பலரொடு பொருது வலிதொலைதலான் யாவர்க்கும் எளியனு யுறுவது. அதனை இடையின்றியே பயத் தலின், 'இகல் என்னும்' என்றார். இன்பத்துள் இன்பம் - யாவரும் நட்பாகலின் எல்லாப்பயனும் எய்தியுறுவது. (4)



இகல்எதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகல்ஊக்கும் தன்மை யவர். 855

இகல் எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை - தம்முள்ளத்து மாறு பாடு தோன்றியவழி அதனை ஏற்றுக்கொள்ளாது சாய்ந்தொழுக வல்லாரை, மிகல் ஊக்கும் தன்மையவர் யார் - வெல்லக்கருதும் தன்மையுடையார் யாவர்?

இகலை ஒழிந்தொழுகல் வேந்தர்க்கு எவ்வாற்றானும் அரிதாக லின், 'வல்லாரை' என்றும், யாவர்க்கும் நண்பாதலின் அவரை வெல்லக் கருதுவார் யாவரும் இல்லை என்றும் கூறினார்.

இவை நான்கு பாட்டானும் இகலாதார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது. (5)

இகலின் மிகல்இனிது என்பவன் வாழ்க்கை
தவலும் கெடலும் நணித்து. 856

*இகலின் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை - பிறரொடு மாறுபடுதற்கண் மிகுதல் எனக்கு இனிது என்று அதனைச் செய்வானது உயிர்வாழ்க்கை, தவலும் கெடலும் நணித்து - பிழைத்தலும் முற்றக்கெடுதலும் சிறிதுபொழுதின் உளவாம்.*

*மிகுதல் மேன்மேல் ஊக்குதல். 'இனிது' என்பது தான் வேறல் குறித்தல். பிழைத்தல் வறுமையான் இன்னாதாதல். முற்றக்கெடுதல் - இறத்தல். இவற்றோடு 'நணித்து' என்பதனைத் தனித்தனி கூட்டி, உம்மைகளை எதிரதும் இறந்ததும் தழீஇய எச்சவும்மைகளாக உரைக்க. பொருட்கேடும் உயிர்க்கேடும் அப்பொழுதே உளவாம் என்பதாம்.* (6)

மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல்
இன்னா அறிவி னவர். 857

*இகல் மேவல் இன்னா அறிவினவர் - இகலோடு மேவுதலையுடைய இன்னாத அறிவினையுடையார், மிகல் மேவல் மெய்ப்பொருள் காணார் - வெற்றி பொருந்துதலையுடைய நீதி நூற் பொருளை அறியமாட்டார்.*

*இன்னா அறிவு தமக்கும் பிறர்க்கும் தீங்கு பயக்கும் அறிவு. வெற்றி: வலியின்றார்க்கு உளதாவது. காணப்படும் பயத்ததாகலின் 'மெய்ந்நூல்' எனப்பட்டது. இகலால் அறிவு கலங்குதலின் 'காணார்' என்றார்.*

*இவை இரண்டு பாட்டானும் இகலினார்க்கு வரும் தீங்கு கூறப்பட்டது.* (7)

இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் அதனை
மிகல்ஊக்கின் ஊக்குமாம் கேடு. 858

10

இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம் - தன் உள்ளத்து மாறுபாடு தோன்றியவழி அதனை எதிர்தலையொழிதல் ஒருவனுக்கு ஆக்கம் ஆம், அதனை மிகல் ஊக்கின் கேடு ஊக்குமாம் - அது செய்யாது அதன்கண் மிகுதலை மேற்கொளவானாயின் கேடும் தன்கண் வருதலை மேற்கொள்ளும்.

எதிர்தல் - ஏற்றுக்கோடல். சாய்த்தபொழுதே வருதலின், 'சாய்தல் ஆக்கம் என்றார். 'இகலிற்கு' எனவும், 'அதனை' எனவும் வந்தன வேற்றுமைமயக்கம். (8)

இகல்காணான் ஆக்கம் வருங்கால் அதனை
மிகல்காணும் கேடு தரற்கு. 859

ஆக்கம் வருங்கால் இகல் காணான் - ஒருவன் தன்கண் ஆக்கம் வரும்வழிக் காரணமாய் உண்டாயினும் இகலை நினையான், கேடு தரற்கு அதனை மிகல் காணும் - தனக்குக் கேடுசெய்து கோடற்கண் காரணம் இன்றியும் அதன்கண் மிகுதலை நினைக்கும்.

இகலான் வருங்கேடு பிறரான் அன்றென்பது தோன்ற 'தரற்கு' என்றார். நான்காவதும் இரண்டாவதும் ஏழாவதன்கண் வந்தன. ஆக்கக்கேடுகட்கு முன் நடப்பன, இகலினது இன்மை உண்மைகள் என்பதாம். (9)

இகலான்ஆம் இன்னாத எல்லாம் நகலான்ஆம்
நன்னயம் என்னும் செருக்கு. 860

இகலான் இன்னாத எல்லாம் ஆம் - ஒருவனுக்கு மாறுபாடு ஒன்றானே இன்னாதன எல்லாம் உளவாம், நகலான் நன்னயம் என்னும் செருக்கு ஆம் - நட்பு ஒன்றானே நல்ல நீதி என்னும் பெருஞ்செல்வம் உளதாம்.

இன்னாதன - வறுமை, பழி, பாவம்முதலாயின. நகல் - மகிழ்தல். 'நகல்'என்பதூஉம் 'செருக்கு'என்பதூஉம் தத்தம் காரணங்கட்கு ஆயின. 'நயம் என்னும் செருக்கு'எனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார்.

இவை மூன்று பாட்டானும் அவ் இருமையும் கூறப்பட்டன.()

## 87. பகை மாட்சி

அஃதாவது அறிவின்மை முதலிய குற்றங்களுடைமை யாற் பகையை மாட்சிப் படுத்தல். அரசர்க்கு எவ்வாற்றானும் பகையின்மை கூடாமையின் மேற் பொதுவகையான் விலக்கப்பட்ட இகலை ஈண்டுச் சிறப்புவகையான் விதிக்கின்றார். ஆகலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

**வலியார்க்கு மாறுஏற்றல் ஓம்புக ஓம்பா**
**மெலியார்மேல் மேக பகை.** **861**



வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக - தம்மின் வலியார்க்குப் பகையாய் எதிர்தலை ஒழிக, மெலியார்மேல் பகை ஓம்பா மேக - ஏனை மெலியார்க்குப் பகையாதலை ஒழியாது விரும்புக.

'வலியார்' என்புழித் துணைவலியும் அடங்கலின் 'மெலியார்' என்புழித் துணைவலியின்மையும் கொள்ளப்படும். அத் துணை தான் படை பொருள் முதலிய வேற்றுமைத்துணையும், நல்லறிவுடைமை நீதிநூல்வழி ஒழுகல் முதலிய ஒற்றுமைத் துணையும் என இரண்டாம். அவ்விரண்டும் இல்லாரை வெல்வார்க்கு வலி தொலையாமையின் அவரோடு பகைத்தல் விதிக்கப்பட்டது.

இங்கநோக்காகிய இதனுள் பகைமாட்சி பொதுவகையால் கூறப்பட்டது. (1)

**அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்**
**என்பரியும் ஏதிலான் துப்பு.** **862**

அன்பு இலன் - ஒருவன் தன் சுற்றத்தின்மேல் அன்பிலன், ஆன்ற துணை இலன் - அதுவேயன்றி வலிய துணையிலன், தான் துவ்வான் - அதன்மேல் தான்வலியிலன், ஏதிலான் துப்பு என் பரியும் - அப் பெற்றியான் மேலவந்த பகைவன் வலியினை யாங்ஙனம் தொலைக்கும்?

சுற்றமும் இருவகைத் துணையும் தன் வலியும் இலனாகலின், அவன்மேற் செல்வார்க்கு வலி வளாவதன்றித் தொலையாது என்

பதாம. துவ்வான் - துவவினைச் செய்யான். (2)

அஞ்சும் அறியான் அமைவுஇலன் ஈகலான்
தஞ்சம் எளியன் பகைக்கு. 863

அஞ்சும - ஒருவன் அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சாநிற்கும், அறியான் - அறியவேண்டுமவற்றை அறியான், அமைவு இலன் - பிறரோடு பொருததம் இலன், ஈகலான் - இவற்றின் மேலும் யாவாமட்டும இவறன்மாலையன், பகைக்குத தஞ்சம் எளியன் - இப்பெற்றியான் பகைவாக்கு மிக எளியன்.

'தஞசம்' 'எளிய' என்பன ஒருபொருட்பன்மொழி.

இநநான்கு குற்றமும் உடையான் பகையின்றியும் அழியுமாகலின் 'தஞசம் எளியன்' என்றார். (3)

நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கும் எளிது. 864

வெகுளி நீங்கான் - ஒருவன் வெகுளியின் நீங்கான், நிறை இலன் - அதுவேயன்றித் தான் நிறையுடையன் அல்லன், எஞ்ஞான்றும் யாங்கணும் யார்க்கும் எளிது - அவன்மேற்சேறல் எக்காலத்தும் எவ்விடததும் யார்க்கும் எளிது.



நிறை - மறை பிறர் அறியாமை. வெகுளல் மாலையன் ஆகலானும், மறை வெளிப்படுத்தலானும், மேற்செல்வார்க்குக் காலமும் இடனும் வலியும் அறிந்து சேறல்வேண்டாதாயிற்று. இனி, 'இனிது' என்று பாடம் ஓதி 'அவன் பகைமை இனிது' என்று உரைப்பாரும் உளர். (4)

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க்கு இனிது. 865

வழி நோக்கான் - ஒருவன் நீதிநூலை ஓதான், வாய்ப்பன செய்யான் - அது விதித்த தொழில்களைச் செய்யான், பழி நோக்கான் - தனக்கு வரும் பழியைப் பாரான், பண்புஇலன் - தான் பண்புடையன் அல்லன், பற்றார்க்கு இனிது - அவன் பகைவர்க்கு

அப் பகைமை இனிது.

தொல்லோர் அடிப்பட வழங்கிவந்ததாகலான் 'வழி' என்றும் தப்பாது பயன்படுதலின் 'வாய்ப்பன' என்றும், இக் குற்றங்க ளுடையான் தானே அழிதலின் 'பற்றார்க்கு இனிது' என்றும், கூறினார். (5)

**காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்**
**பேணாமை பேணப் படும். 866**

*காணாச் சினத்தான்* - தன்னையும் பிறரையும் தான் அறியாமைக்கு ஏதுவாகிய வெகுளியையுடையான் யாவன், *கழி பெருங் காமத்தான்* - மேன்மேல வளராநின்ற மிக்க காமத்தையுடையான் யாவன், *பேணாமை பேணப்படும்* - அவனது பகைமை விரும்பிக் கொள்ளப்படும்.

காணாதசினம் என்பது விகாரமாயிற்று. முன்னோனுக்கு யாவரும் பகையாகலானும், ஏனோனுக்குக் காரியம் தோன்றாமை யானும், தாமே அழிவர் என்பது பற்றி, இவர் 'பேணாமை பேணப் படும்' என்றார். (6)

**கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து**
**மாணாத செய்வான் பகை. 867**

*அடுத்து இருந்து மாணாத செய்வான் பகை* - வினையைத் தொடங்கியிருந்து அதற்கு, ஏலாதன செய்வான் பகைமையை, *கொடுத்தும் கொளல் மன்ற வேண்டும்* - சிலபொருள் அழியக் கொடுத்தாயினும் கோடல் ஒருதலையாகவேண்டும்.

ஏலாதன மெலியனாயவதனைத் துணிதலும், வலியனாயவனைத் துணிதலும் முதலாயின. அப்பொழுது அதனால் சிலபொருள் அழியினும் பின் பலபொருள் எய்தற்கு ஐயம் இன்மையின், 'கொளல் வேண்டும் மன்ற' என்றார்.

இவை மூன்று பாட்டானும் அது சிறப்புவகையாற் கூறப் பட்டது. (7)

குணன்இலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்கு
இனன்இலனாம் ஏமாப்பு உடைத்து. 868

குணம் இலனாய்க் குற்றம் பலவாயின் இனம் இலனும் - ஒருவன் குணம் ஒன்றும் இலனாய் உடைய குற்றம் பலவாயவழி அவன் துணையிலனும், மாற்றார்க்கு ஏமாப்பு உடைத்து - அவ் இலனாதல்தானே அவன் பகைவர்க்குத் துணையாதலையுடைத்து.

குணம்-இறைமாட்சியுட் சொல்லியன. குற்றம்-இவ்வதிகாரத்துச் சொல்லியனவும் மற்றும் அத்தன்மையனவும். துணை-சுற்றம், நட்பு, பொருள், படை முதலாயின. பகைவர்க்கு இவற்றான் உளதாம் பயன்தானே உளதாமாகலின் 'ஏமாப்புடைத்து' என்றார். 'இலனாய்'என்னும் செய்தெனெச்சம் 'உடைய'என வந்த பெயரெச்சக் குறிப்புக் கொண்டது. (8)

செறுவார்க்குச் சேண்இகவா இன்பம் அறிவுஇலா
அஞ்சும் பகைவர்ப் பெறின். 869

அறிவு இலா அஞ்சும் பகைவர்ப் பெறின்-நீதியை அறிதல் இல்லாத அஞ்சும் பகைவரைப் பெற்றால், செறுவார்க்குச் சேண் இன்பம் இகவா-அவரைச் செறுவார்க்கு உயர்ந்த இன்பங்கள் நீங்கா.

உபாயம் அறிதலும் அறிந்தால் செய்துமுடிக்கும் திண்மையும் இலாதாரே பகைவராதல் கூடாமையின் 'பெறின்'என்றும். அவரை அறிந்து மேற்சென்றபொழுதே பகையின்மையும் செல்வமும் ஒருங்கேஎய்தலின், 'சேணுடை இன்பங்கள் இகவா' என்றும் கூறினார். (9)

கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும்
ஒல்லானை ஒல்லாது ஒளி. 870

கல்லான் வெகுளும் சிறுபொருள் ஒல்லானை-நீதிநூலைக் கல்லாதானோடு பகைத்தலான் வரும் எளியபொருளை மேவாதானை, எஞ்ஞான்றும் ஒளி ஒல்லாது-எஞ்ஞான்றும் புகழ் மேவாது.

சிறுபொருள்-முயற்சி சிறிதாய பொருள். நீதி அறியாதானை வேறல் எளிதாயிருக்கவும், அது மாட்டாதானை வெற்றியான்

வரும் புகழ் கூடாது என்பதாம், ஆகவே, இச்சிறிய முயற்சியாற் பெரிய பயன் எய்துக என்றவாறாயிற்று. இதற்குப் பிறரெல்லாம் அதிகாரத்தோடு மாறுதன் மேலும் ஒரு பொருள் தொடர்பு படாமல் உரைத்தார்.

இவை மூன்று பாட்டானும் அதனினாய பயன் கூறப்பட்டது.()



## 88. பகைத்திறம் தெரிதல்.

அஃதாவது மாணாத பகையை ஆக்குதற்குற்றமும், முன் ஆகின்ற பகையுள நட்பாக்கற்பாலதும், நொதுமலாக்கற்பாலதும், அவற்றின்கண் செய்வதும், ஏனைக் களைதற்பாலதன்கண் செய்வனவும், களையும் பருவமும், களையாக்காற்படும் இழுக்கும் என்று இத் திறங்களை ஆராய்தல். 'இரட்டுற மொழிதல்' என்பதனாற் பகையது திறமும் பகையிடத்து ஆக்குந் திறமும் என விரிக்கப்பட்டது. இவையெல்லாம் மாணாப் பகைய ஆகலின், இது பகைமாட்சியின் பின் வைக்கப்பட்டது.

பகைஎன்னும் பண்பி லதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று. 871

பகை என்னும் பண்பு இலதனை—பகை என்று சொலலப்படும் தீமை பயப்பதனை, ஒருவன் நகையேயும் வேண்டற்பாற்று அன்று—ஒருவன் விளையாட்டின் கண்ணேயாயினும விரும்புதல் இயற்கைத்தன்று நீதி நூல்.

மாணாத பகையை ஆக்கிக் கோடல எவ்வாற்றானும் தீமையே பயத்தலின் 'பண்பிலது' என்றும், அதனை விளையாட்டின்கண் வேண்டினும் செற்றமே விளைதது மெய்யாம் ஆகலின் 'நகையேயும்' என்றும், வேண்டாமை தொல்லோரது துணிவு என்பார் நீதி நூல்மேல வைத்தும் கூறினா. அப்பெயர் அவாய்நிலையான் வந்தது. (1)

வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க

சொல்லேர் உழவர் பகை. 872

வில் ஏர் உழவர் பகை கொளினும்—ஒருவன் வில்லை ஏராக வுடைய உழவரோடு பகைகொண்டானாயினும், சொல் ஏர் உழவர் பகை கொள்ளற்க—சொல்லை ஏராகவுடைய உழவரோடு பகை கொள்ளாதொழிக.

சொல்—ஆகுபெயராய் நீதிநூல்மேல நின்றது. வீரம் சூழ்ச்சி என்னும் ஆற்றல்களுள் வீரமே உடையாரோடு பகை கொண்டால் கேடுவருதல் ஒருதலையன்று, வந்ததாயினும் தனக்கே யாம். ஏனைச் சூழ்ச்சி உடையாரோடாயின் தன்வழியினுள்ளார்க் கும் தப்பாது வருதலின், அது கொளினும் இது கொள்ளற்க என்றா. உம்மையான் அதுவும் ஆகாமை பெறுதும். இரண்டும் உடையாரோடு கொள்ளலாகாமை சொல்ல வேண்டாவாயிற்று. உருவக விசேடம். (2)

ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன். 873



தமியனாய்ப் பல்லார் பகைகொள்பவன்—தான் தனியனாய் வைத்துப் பலரோடு பகைகொள்வான், ஏமுற்றவரினும் ஏழை—பித்தரினும் அறிவிலன்.

தனிமை—சுற்றம் நட்பு படை முதலிய இன்மை. மயக்கத் தால் ஒப்பாராயினும் ஏமுற்றவர் அதனால் தீங்கு எய்தாமையின் தீங்கெய்துதலுமுடைய இவனை, 'அவரினும் ஏழை' என்றார். தீங் காவது—துணையுள் வழியும் வேறல் ஐயமாயிருக்க, அஃது இன்றி யும் பலரோடு பகைகொண்டு அவரால் வேறுவேறு பொருதற் கண்ணும் ஒருங்கு பொருதற்கண்ணும் அழிந்தே விடுதல்.

இவை மூன்று பாட்டானும் பகைகோடற்குற்றம் பொது வினும் சிறப்பினும் கூறப்பட்டது. (3)

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற்று உலகு. 874

பகை நட்பாக் கொண்டு ஒழுகும் பண்புடையாளன் தகைமைக்கண்-வேண்டியவழிப் பகையை வேறுபடுத்துத் தனக்கு நட்பாகச்செய்துகொண்டொழுகும் இயல்பினையுடைய அரசனது பெருமையுள்ளே, தங்கிற்று உலகு-அடங்கிற்று இவ்வுலகு.

வேண்டியவழி என்பது ஆக்கத்தான் வந்தது. வேறுபடுத்தல்: பகைமையின் நீக்குதல். ஒழுகல்-நீதிவழியொழுகல். பெருமை-பொருள், படைஎன இருவகைத்தாய ஆற்றல். அதன் வழித்தாதற்கு எஞ்ஞான்றும் திரிபின்மையின், அத் துணிவு பற்றித் 'தங்கிற்று' என்றார். (4)

தன்துணை இன்றால் பகைஇரண்டால் தான்ஒருவன்
இன்துணையாக் கொள்கஅவற்றின் ஒன்று. 875

தன் துணை இன்று-தனக்கு உதவும் துணையோ எனின் இல்லை, பகை இரண்டு-நலிவுசெய்யும் பகையோ எனின் இரண்டு, ஒருவன் தான் அவற்றின் ஒன்று இன்துணையாக் கொள்க-அங்ஙனமாய் நின்றவழி ஒருவனாகிய தான் அப்பகை இரண்டனுள் பொருந்தியது ஒன்றை அப்பொழுதைக்கு இனிய துணையாகச் செய்து கொள்க.

பொருந்தியது ஏனையதனை வேறற்கு ஏற்றது. அப்பொழுது அவ் வெல்லும்பொழுது. திரிவின்றாகச் செய்துகொள்க என்பார், 'இன்துணையா' என்றார். ஆல்கள்-அசை.

இவை இரண்டு பாட்டானும் நட்பாக்கற்பாலது கூறப்பட்டது. (5)

தேறினும் தேறா விடினும் அழிவின்கண்
தேறான் பகாஅன் விடல். 876

தேறினும் தேறாவிடினும்-பகைவனை முன் தெளிந்தானாயினும் தெளிந்திலனாயினும், அழிவின்கண் தேறான் பகான் விடல்-



தனக்கும் புறத்தொருவினையால் தாழ்வு வந்துழிக் கூடாது நீக்காது இடையே விட்டுவைக்க.

'முன்தெளிந்தான் ஆயினும் அப்பொழுது கடாதொழிக' என்றது, உள்ளாய் நின்று கெடுத்தல் நோக்கி, 'தெளிந்திலனேனும் அப்பொழுது நீக்காதொழிக' என்றது, அவ் அழிவிற்குத் துணையாதல் நோக்கி.

இதனான் நொதுமலாக்கற்பாலது கூறப்பட்டது. (6)

நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து. 877

நொந்தது அறியார்க்கு நோவற்க—நொந்ததனைத் தாமாக அறியாத நட்டார்க்குத் தன் நோவு சொல்லற்க, மென்மை பகைவரகத்து மேவற்க—வலியின்மை பார்த்திருக்கும் பகைவர்மாட்டு அவ் வலியின்மையை மேலிட்டுக்கொள்ளற்க.

நோ என்னும் முதனிலைத்தொழிற்பெயர் ஈண்டு அது சொல்லுதற்கண் ஆயிற்று. பகைவர்கண் தவிர்வது கூறுவார், நட்டார்கண் தவிர்வதும் உடன்கூறினார்.

இதனான் அவ் இருபகுதிக்கண்ணும் செய்வது கூறப்பட்டது.()

வகையறிந்து தன்செய்து தன்காப்ப மாயும்
பகைவர்கண் பட்ட செருக்கு. 878

வகை அறிந்து தன்செய்து தன்காப்ப—தான் வினைசெய்யும் வகையை அறிந்து அது முடித்தற்கு ஏற்பத் தன்னைப் பெருக்கி மறவி புகாமல் தன்னைக் காக்கவே, பகைவர்கண் பட்ட செருக்கு மாயும்—தன் பகைவர்மாட்டு உளதாய களிப்புக் கெடும்.

வகை—வலியனைத் தான் எதிரே பொருமாறும், மெலியனை அளவிற் போர் விலக்குமாறும் முதலாயின. பெருக்கல்—பொருள் படைகளாற் பெருகச்செய்தல். களிப்பு—இவற்றான் வேறும் என்றுஎண்ணி மகிழ்ந்திருத்தல். இவ் இறுதல் அறிந்து தாமே அடங்குவர் என்பதாம்.

இதனான் களைதற்பாலதன்கண் செய்வன கூறப்பட்டன. (8)

இளைதாக முள்மரங் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து. 879

முள் மரம் இளைதாகக் கொல்க-களையவேண்டுவதாய முள் மரத்தை இளைதாய நிலைமைக்கண் களைக; காழ்த்த இடத்துக் களையுநர் கைகொல்லும்-அன்றியே முதிர்ந்த நிலைமைக்கண் களையலுறின் களைவார் கையினை அதுதான் களையும்.

'களையப்படுவதாய தம் பகையை அதுமெலிதாய காலத்தே களைக; அன்றியே, வலிதாயகாலத்துக் களையலுறின் தம்மை அதுதான் களையும்' என்பது தோன்ற நின்றமையின், இது பிறிது மொழிதல்.



இதனான் களையும் பருவம் கூறப்பட்டது. (9)

உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார். 880

செயிர்ப்பவர் செம்மல் சிதைக்கலாதார்-தம்மொடு பகைப்பாரது தருக்கினைக் கெடுக்கலாய் இருக்க இகழ்ச்சியான் அது செய்யாத அரசர், உயிர்ப்ப உளரல்லர் மன்ற-பின் உயிர்க்குமாத்திரத்திற்கும் உளரல்லர் ஒரு தலையாக.

அவர் வலியராய்த் தம்மைக் களைதல் ஒருதலையாகலின், இறந்தாரேயாவர் என்பதாம். அவர் உயிர்த்த துணையானே தாம் இறப்பர் எனினும் அமையும்.

இதனான் களையா வழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. (10)

## 89. உட்பகை

அஃதாவது புறப்பகைக்கு இடனாக்கிக் கொடுத்து, அது வெல்லும் துணையும் உள்ளாய் நிற்கும் பகை. இதுவும், களையப்படுவதன் பாலதாகலின், பகைத்திறம் தெரிதலின் பின் வைக்கப்பட்டது.

நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்
இன்னாவாம் இன்னா செயின். 881

நிழல் நீரும் இன்னாத இன்னா—ஒருவனுக்கு அனுபவிக்க வேண்டுவனவாய நிழலும் நீரும் முன் இனியவேனும் பின் நோய் செய்வன இன்னாவாம், தமர் நீரும் இன்னாசெயின் இன்னாவாம்— அதுபோலத் தழுவவேண்டுவனவாய தமரியல்புகளும் முன் இனியவேனும் பின் இன்னாசெய்வன இன்னாவாம்.

நோய் - பெருங்கால், பெருவயிறு முதலாயின. 'தமர்' என்றது தலை உட்பகையாதற்குரியராய ஞாதியர் என்பது அறிக. இன்னா செயல் முன்வெளிப்படாமை நின்று துணை பெற்றவழிக் கெடுத்தல். (1)

வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. 882

வாள்போல் பகைவரை அஞ்சற்க - வாள்போல எறிதும் என்று வெளிப்பட்டு நிற்கும் பகைவர் பகையினை அஞ்சாதொழிக, கேள்போல் பகைவர் தொடர்பு அஞ்சுக - அங்ஙனம் நில்லாது கேள்போல மறைந்து நிற்கும் பகைவர் நட்பினை அஞ்சுக.

பகைவர்—ஆகுபெயர். முன்னே அறிந்து காக்கப்படுதலான் 'அஞ்சற்க' என்றும், அங்ஙனம் அறியவும் காக்கவும்படாமையின் கெடுதல் ஒருதலைஎன்பதுபற்றி 'அஞ்சுக' என்றும் கூறினர். பின்



செய்யும் பகையினும் கொடிதாகலானும் காக்கலாகாது ஆகலானும், அஞ்சப்படுவது முன்செய்த அவர்தொடர்பாயிற்று.

இவை இரண்டு பாட்டானும் உட்பகை ஆகாது என்பது கூறப்பட்டது. (2)

உட்பகை அஞ்சித்தற்காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். 883

உட்பகை அஞ்சித் தற்காக்க-உட்பகையாயினாரை அஞ்சித் தன்னைக் காத்துக் கொண்டொழுகுக, உலைவிடத்து மட்பகையின்

மாணத்தெறும் - அங்ஙனம் ஒழுகாதவழித் தனக்கோர் தளர்ச்சி வந்தவிடத்துக் குயவன் மட்கலத்தை அறுக்கும் கருவிபோல அவர் தப்பாமற் கெடுப்பர்.

'காத்தல்' அவர் அஃயாமலும் அவர்க்கு உடம்படாமலும் பரிகரித்தல். மண்ணைப் பகுக்கும் கருவி மட்பகை எனப்பட்டது. பகைமை தோன்றாமல உள்ளாயிருந்தே கிழறுதலின், கெடுதல் தப்பாது என்பதாம். (3).

**மனம்மாணு உட்பகை தோன்றின் இனம்மாணு**
**ஏதம் பலவும் தரும். 884**

மனம் மாணு உட்பகை தோன்றின் - புறம திருந்தியது போன்று அகந்திருந்தாத உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின், இனம் மாணு ஏதம் பலவும் தரும் - அஃது அவனுக்குச் சுற்றம் வயமாகாமைக்கு ஏதுவாகிய குற்றம் பலவற்றையும் கொடுக்கும்.

அவை சுற்றத்தாரை உள்ளாய்நின்று வேறுபடுத்தலும், அதனால் அவர் வேறுபட்டவழித் தான் தேறுமையும், பின் அவற்றான் விளைவனவும் ஆம். (4).

**உறல்முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான்**
**ஏதம் பலவும் தரும் 885**

உறல் முறையான் உட்பகை தோன்றின் - புறத்து உறவு முறைத்தன்மையோடு கூடிய உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின், இறல் முறையான் ஏதம் பலவும் தரும் - அஃது அவனுக்கு இறத்தல் முறையோடு கூடிய குற்றம் பலவற்றையும் கொடுக்கும்.

அவை புறப்பகை துணையாய்நின்றே அது தோன்றாமல் கோறல் முதலிய வஞ்சனை செய்தலும், அமைச்சர் முதலிய உறுப்புக்களைத் தேய்த்தலும் முதலாயின. (5)

**ஒன்றாமை ஒன்றியார் கண்படின் எஞ்ஞான்றும்**
**பொன்றாமை ஒன்றல் அரிது. 886**

ஒன்றாமை ஒன்றியார் கண் படின் - பகைமை, தனக்கு உள்ளாயினார் மாட்டே பிறக்குமாயின்; பொன்றாமை ஒன்றல்

எஞ்ஞான்றும் அரிது - அரசனுக்கு இறவாமை கூடுதல், எஞ் ஞான்றும் அரிது.

பொருள் படை முதலிய உறுப்புக்களாற் பெரியனாய காலத் தும் என்பார், 'எஞ்ஞான்றும்' என்றார்.

இவை நான்கு பாட்டானும், அதனால் தனக்கு வரும் தீங்கு கூறப்பட்டது. (6)

செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே
உட்பகை உற்ற குடி. 887

செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் - செப்பினது புணர்ச்சி போலப் புறத்து வேறுமை தெரியாமற் கூடினாராயினும், உட் பகை உற்ற குடி கூடாது - உட்பகை உண்டாகிய குடியிலுள ளோர் அகத்துத் தம்முள் கூடார்.

செப்பின் புணர்ச்சி - செப்பு மூடியோடு புணர்ந்த புணர்ச்சி. உட்பகையான் மனம் வேறுபட்டமையின், புறப்பகை பெற்றுழி 'விற்றுவிற்றுவா' என்பதாம். குடி கூடாது என்பதனை, நாடு

வந்தது என்பதுபோலக் கொள்க. உட்பகை தான் உற்றகுடி யோடு கூடாது என்றும், உட்பகை உண்டாய குடி அப் பகை யோடு கூடாது என்றும் உரைப்பாரும் உளர். (7)

அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது
உட்பகை உற்ற குடி. 888

உட்பகை உற்றகுடி - புன் வளாநது வந்ததாயினும் உட் பகையுண்டாய குடி, அரம் பொருத பொன் போலப் பொருது உரம் தேயும் - அரத்தாற் பொரப்பட்ட இரும்பு போல அதனால் பொரப்பட்டு வலி தேயும்.

'பொருது' என்னும் செய்யுபாடு வினையெச்சம் 'தேயும்' என்னும் வினைகொண்டது. அஃது, உரத்தின் தொழிலாயினும் குடிமேல ஏற்றுதலின், வினை முதல் வினை ஆயிற்று. காரியஞ் செய்வது போன்று பொருந்தி மெல்ல மெல்லப் பிரிவித்தலான், வலி தேய்கதுவிடும் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும், அவன் குடிக்கு வரும் தீங்கு கூறப்பட்டது. (8)

எட்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு. 889

உட்பகை எட்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும் - அரசனது உட்பகை அவன் பெருமையை நோக்க எள்ளின் பிளவை ஒத்த சிறுமை உடைத்தேயாயினும், கேடு உள்ளதாம் - பெருமையெல்லாம் அழியவரும்கேடு அதன் அகத்ததாம்.



எத்துணையும் பெரியகேடு, தனக்கு எல்லைவருந்துணையும் எத்துணையும் சிறியதாய உட்பகையுள்ளே அடங்கியிருந்து, வந்தால் வெளிப்பட்டுநிற்கும் என்பதாம்.

இதனான் அது சிறிது என்று இகழப்படாது என்பது கூறப்பட்டது. (9)

உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடனுறைந் தற்று. 890

உடம்பாடு இலாதவர் வாழ்க்கை - மனப்பொருத்தம் இல்லாதாரோடுகூட ஒருவன் வாழும் வாழ்க்கை, குடங்கருள் பாம்போடு உடன் உறைந்தற்று - ஒரு குடிலுள்ளே பாம்போடு கூட உறைந்தாற்போலும்.

'குடங்கம்' என்னும் வடசொல் திரிந்து நின்றது. இடச்சிறுமையானும் பயிற்சியானும் பாம்பாற் கோட்படல் ஒருதலையாம்; ஆகவே, அவ் உவமையால் அவனுயிர்க்கு இறுதிவருதல் ஒருதலை என்பது பெற்றாம்.

இதனான் கண்ணோடாதவரைக் கடிக என்பது கூறப்பட்டது. ()

## 90. பெரியாரைப் பிழையாமை

அஃதாவது பெரியாரயினாரை அவமதித்து ஒழுகாமை. 'இரட்டுற மொழிதல்' என்பதனால் பெரியார் என்பது ஆற்றலாற் பெரியாராய வேந்தர்மேலும், தவத்தாற் பெரியாராய முனிவர் மேலும் நின்றது. மேற்சொல்லாது எஞ்சி நின்றது ஆகலின், இது வெகுளியான் வருவனவற்றது இறுதிக்கண் வைக்கப்பட்டது.

ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலுள் எல்லாம் தலை. 891

ஆற்றுவார் ஆற்றல் இகழாமை-எடுத்துக் கொண்டன யாவும் முடிக்க வல்லார்களுடைய ஆற்றலை அவமதியாமை, போற்றுவார் போற்றலுள் எல்லாம் தலை - தங்கண் தீங்கு வாராமல் காப்பார் செய்யும் காவல்கள் எல்லாவற்றினும் மிக்கது.

ஆற்றல் என்பது பெருமை, அறிவு, முயற்சி என்னும் மூன்றன்மேலும் நிற்றலின், சாதியொருமை. இகழ்ந்த வழி களைய வல்லார் என்பது தோன்ற 'ஆற்றுவார்' என்றும், அரண், படை, பொருள், நட்பு முதலிய பிறகாவல்கள் அவரான் அழியுமாகலின் அவ் இகழாமையைத் தலையாய காவல் என்றும் கூறினார்.

பொதுவகையால் அவ் இருதிறத்தாரையும் பிழையாமையது சிறப்பு இதனுள் கூறப்பட்டது. (1)

பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால்
பேரா இடும்பை தரும். 892



பெரியாரைப் பேணாது ஒழுகின் - ஆற்றல்களால் பெரியாரை வேந்தன் நன்குமதியாது அவமதித்து ஒழுகுமாயின்; பெரியாரால் பேரா இடும்பை தரும் - அவ்வொழுக்கம் அப்பெரியாரால் அவர்க்கு எஞ்ஞான்றும் நீங்காத துன்பங்களைக் கொடுக்கும்.

அத் துன்பங்களாவன: இருமையினும் இடையறாது வரும் மூவகைத் துன்பங்களும் ஆம். அவையெல்லாந் தாமே செய்து கொள்கின்றனர் என்பது தோன்ற, ஒழுக்கத்தை வினைமுதலாக்கியும் பெரியாரைக் கருவியாக்கியும் கூறினார்.

பொதுவகையான் அவரைப் பிழைத்தற்குற்றம் இதனுள் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையால் கூறுப். (2)

கெடல் வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்
ஆற்று பவர்கண் இழுக்கு. 893

அடல் வேண்டின் ஆற்றுபவர்கண் இழுக்கு - வேற்று வேந்தரைக் கோறல் வேண்டிய வழி அதனை அப்பொழுதே செய்ய வல்ல வேந்தர்மாட்டுப் பிழையினை, கெடல் வேண்டின் கேளாது செய்க - தான் கெடுதல் வேண்டினானாயின், ஒருவன் நீதி நூலைக் கடந்து செய்க.

அப்பெரியாரைக் "காலனும் காலம் பார்க்கும் பாராது-வேல் ஈண்டு தானை விழுமியோர் தொலைய—வேண்டிடத் தடூஉம் வெல் போர வேந்தர்" (புறநா. 41) என்றார் பிறரும். நீதி நூல் செயலாகாது என்று கூறலின், 'கேளாது' என்றார். (3)

கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல் 894

ஆற்றுவார்க்கு ஆற்றாதார் இன்னா செயல் - மூவகை ஆற்றலும் உடையார்க்கு அவை இல்லாதார் தாம் முற்பட்டு இன்னாதவற்றைச் செய்தல், கூற்றத்தைக் கையால் விளித்தற்று-தானேயும் வரற்பாலனாய கூற்றுவனை அதற்கு முன்னே கைகாட்டி அழைத்தல் ஒக்கும்.

கையால் விளித்தல் - இகழ்ச்சிக்குறிப்பிற்று. தாமேயும் உயிர் முதலிய கோடற்கு உரியாரைத் தம்மேல் வருவித்துக்கொள்வார் இறப்பினது உண்மையும் அண்மையும் கூறியவாறு.

இவை இரண்டுபாட்டானும் வேந்தரைப் பிழைத்தலின் குற்றம் கூறப்பட்டது. (4)

யாண்டுச் சென்று யாண்டும் உளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட்ட வர். 895

வெந்துப்பின் வேந்து செறப்பட்டவர் - பகைவர்க்கு வெய்தாய வலியினையுடைய வேந்தனால் செறப்பட்ட அரசர், யாண்டுச்

சென்று யாண்டும் உளராகார் - அவனைத் தப்பி எங்கே போயின ராவார், ஓரிடத்தும் உளராகார்.

இடைவந்த சொற்கள் அவாய்நிலையான் வந்தன. வேந்துப் பின் வேந்தாகலான் தம் நிலம் விட்டுப் போயவர்க்கு இடங்கொடுப் பாரில்லை; உளராயின் இவர் இனி ஆகார் என்பது நோக்கி அவனொடு நட்புக்கோடற்பொருட்டும், தாமே வந்தெய்திய அவர் உடைமையை, வௌவுதற்பொருட்டும் கொல்வர்; அன்றெனின் உடனே அழிவர் என்பன நோக்கி, 'யாண்டுச்சென்றுயாண்டும் உளராகார்' என்றார்.

இதனால் அக்குற்றமுடையார் "அருமை உடைய அரண் சேர்ந்தும் உய்யார்" என்பது கூறப்பட்டது. (5)

எரியாற் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார். 896

எரியால் சுடப்படினும் உய்வு உண்டாம் - காட்டிடைச் சென்றானொருவன் ஆண்டைத் தீயாற் சுடப்பட்டானாயினும் ஒரு வாற்றான் உயிருய்தல் கூடும்; பெரியார்ப் பிழைத்து ஒழுகுவார் உய்யார் - தவத்தாற் பெரியாரைப் பிழைத்து ஒழுகுவார் எவ் வாற்றானும் உயிருய்யார்.

தீ முன் உடம்பினைக் கதுவி அதுவழியாக உயிர் மேற் சேற லின், இடையே உய்யவும் கூடும். அருந்தவர் வெகுளி அன்ன தன்றித தான் நிற்பது கணமாய் அதற்குளளே யாவாக்கும் காத் தல் அரிதாகலின்; (குறள்-26)அது கூடாதாகலான், அதற்கு ஏது வாய பிழை செய்யற்க என்பதாம். (6)

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னும்
தகைமாண்ட தக்கார் செறின். 897

தகை மாண்ட தக்கார் செறின் - சாப அருள்கட்கு ஏது ஆய பெருமை மாட்சிமைப்பட்ட அருந்தவர் அரசனை வெகுளுவ ராயின், வகைமாண்ட வாழ்க்கையும் வான் பொருளும் என்னும்- உறுப்பழகுபெற்ற அவன் அரசாட்சியும் ஈட்டிவைதத பெரும் பொருளும் என்பட்டு விடும்?

உறுப்பு-அமைச்சு, நாடு, அரண், படைஎன இவை. 'செறின்'

என்பது அவர் செருமை தோன்ற நின்றது. இவ் எச்சந்தான் முன் வருவனவற்றிற்கும் இஃது ஒக்கும். அரசர் தம் செல்வக்களிப் பான் அருந்தவர்மாட்டுப் பிழை செய்வராயின், அச்செல்வம் அவர் வெகுளித் தீயான் ஒருகணத்துள்ளே வெந்துவிடும் என்பதாம்.

குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து. 898

குன்று அன்னார் குன்ற மதிப்பின் - குன்றத்தை ஒக்கும் அருந்தவர் கெட நினைப்பாராயின், நிலத்து நின்று அன்னார் குடி-



யொடு மாய்வர் - அப்பொழுதே இந் நிலத்து நிலைபெற்றாற் போலும் செல்வர் தம் குடியொடும் மாய்வர்.

வெயில், மழை முதலிய பொறுத்தலும் சலியாமையும் உள்ளிட்ட குணங்கள் உடைமையின், 'குன்றன்னார்' என்றார்: "மல்லல் மலையனைய மாதவர்" (சீவக. முத்தி 191) என்றார் பிறரும். நிலை பெற்றாற்போறலாவது: இறப்பப் பெரியராகலின், இவர்க்கு என்றும் அழிவில்லை என்று கண்டாரால் கருதப்படுதல். (8)

ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். 899

ஏந்திய கொள்கையார் சீறின் - காத்தற்கு அருமையான் உயர்ந்த விரதங்களை உடையார் வெகுள்வராயின், வேந்தனும் இடை வேந்து முரிந்து கெடும் - அவராற்றலான் இந்திரனும் இடையே தன்பதம் இழந்து கெடும்.

"வேந்தன் மேய தீம்புனல் உலகமும்" (தொல். பொருள். அகத். 5) என்றார் பிறரும். நகுடன் என்பான் இந்திரன் பதம் பெற்றுச் செல்கின்ற காலத்துப் பெற்ற களிப்பு மிகுதியான் அகத்தியன் வெகுள்வதோர் பிழை செய்ய அதனால் சாபமெய்தி அப்பதம் இடையே இழந்தான் என்பதனை உட்கொண்டு இவ்வாறு கூறினார்.

இவை நான்கு பாட்டானும் முனிவரைப் பிழைத்தலின் குற்றம் கூறப்பட்டது. (9)

இறந்துஅமைந்த சார்புடைய ராயினும் உய்யார்
சிறந்துஅமைந்த சீரார் செறின். 900

சிறந்த அமைசத சீரார் செறின் - கழிய மிக்க தவத்தினை உடையார் வெகுளவராயின், இறநத அமைந்த சார்பு உடையரா

யினும, உய்யார்-அவரான் வெகுளப்பட்டார் கழியப் பெரிய சார்பு உடையர் ஆயினும அதுபற்றி உய்யமாட்டார்.

சார்பு - அரண், படை, பொருள், நட்பு என இவை. அவை எல்லாம வெகுண்டவரது ஆற்றலால திரிபுரம்போல அழிந்துவிடும் ஆகலின் 'உய்யார்' என்றார். சிறப்புடையது சீர் எனப்பட்டது.

இதனால அக்குற்றமுடையார் சார்பு பற்றியும் உய்யார் என்பது கூறப்பட்டது. (10)

# 91. பெண்வழிச் சேறல்.

இனிக் காமததான் வருவன நேரே பகையல்லவாயினும் ஆக்கம் சிதைததல அழிவுதலைத் தருதல் என்னும் தொழிலகளால் பகையோடு ஒததலின் பகைப்பாற்படுவனவாம், ஆகலான், அவற்றைப் பகைப் பகுதியது இறுதிக்கண் கூறுவான் தொடங்கி, முதற்கண் பெண்வழிச் சேறல் கூறுகின்றார். அஃதாவது தன்வழி ஒழுகற்பாலளாய இல்லாள் வழியேதான் ஒழுகுதல்.



மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளும் அது. 901

மனை விழைவார் மாண் பயன் எய்தார் - இன்பம் காரணமாகத் தம் மனையாளை விழைந்து அவள் தன்மையராய் ஒழுகுவார், தமக்கு இனத்துணையாய அறத்தினை எய்தார்; வினை விழைவார் வேண்டாப் பொருளும் அது - இனிப் பொருள் செய்தலை முயல்வார் அதற்கு இடையீடென்று இகழும் பொருளும் அவ் இன்பம்.

மனையும், விழைதலும், பயனும் ஆகுபெயர். அவ் இன்பம் அன்ன தன்மையராதற்கு ஏதுவாய இன்பம். அஃது அவளாற் பயனுய அறத்தினும், அவ் அறததிற்கும் தனக்கும் ஏதுவாய பொருளினும், செல்லவிடாமையின், விடற்பாற்று என்பதாம்.(1)

பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். 902

பேணாது பெண் விழைவான் ஆக்கம் - தன் ஆண்மையை விட்டு மனையாளது பெண்மையை விழைவான் எய்தி நின்ற செல்வம், பெரியது ஓர் நாண் ஆக நாணுத் தரும் - இவ் உலகத்து ஆண்பாலார்க்கெல்லாம் பெரியதோர் நாண் உண்டாகத் தனக்கும் நாணுதலைக் கொடுக்கும்.

எய்திநின்றதாயிற்று, படைக்கும் ஆற்றல் இன்மையின். அச்செல்வத்தால் ஈதலும் துய்த்தலும் முதலிய பயன்கொள்வாள் அவள் ஆகலின், அவ்வாண்மைச்செய்கை அவள் கண்ணதாயிற்று என்று ஆண்பாலர் யாவரும் நாண, அதனால் தன் ஆண்மை யின்மை அறிந்து, பின் தானும் நாணும் என்பது நோக்கி 'பெரியதோர் நாணாக நாணுத்தரும்' என்றார்.

இவை இரண்டு பாட்டானும் மனைவிழைதற் குற்றம் கூறப்பட்டது. (2)

இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும். 903

இல்லாள்கண் தாழ்ந்த இயல்பு இன்மை - ஒருவன் இல்லாளை மிக்குத் தாழ்தற்கு ஏதுவாய அச்சம், நல்லாருள் நாணு எஞ்ஞான்றும் தரும் - அஃது இலராய நல்லாரிடைச் செல்லுங்கால் நாணுதலை அவனுக்கு எக்காலத்தும் கொடுக்கும்.

அவளதான் அஞ்சி ஒழுகுதல் இயல்பாகலின், அவளை யஞ்சுதல் இயல்பின்மையாயிற்று. அங்ஙனம் அஞ்சியொழுகுதலின், அவனை வியமிப்பார் இல்லையாம்; ஆகவே எல்லாக் குற்றமும் விளையும் என்பது நோக்கி, 'எஞ்ஞான்றும் நாணுத் தரும்' என்றார். (3)

மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்
வினையாண்மை வீறுஎய்தல் இன்று. 904

**மனையாளை அஞ்சும் மறுமை இலாளன் - தன் மனையாளை அஞ்சி ஒழுகுகின்ற மறுமைப் பயன் இல்லாதானுக்கு, வினை ஆண்மை வீறு எய்தல் இன்று - வினையை ஆளுந்தன்மை உண்டாய வழியும் நல்லோரால் கொண்டாடப்படாது.**

'உண்டாய வழியும்' என்பது அவாய்நிலையான் வந்தது. இல்லறம் செய்தற்குரிய நன்மை இன்மையின், 'மறுமையிலாளன்' என்றும், வினையையாளும் தன்மை தன் தன்மையில்லாத அவளை முடிவு போகாமையின், 'வீறு எய்தல் இன்று' என்றும் கூறினார். (4)

**இல்லாளை அஞ்சுவான் அஞ்சும்மற்று எஞ்ஞான்றும்**
**நல்லார்க்கு நல்ல செயல். 905**

இல்லாளை அஞ்சுவான் - தன் மனையாளை அஞ்சுவான், நல்லார்க்கு நல்ல செயல் எஞ்ஞான்றும் அஞ்சும் - தான் தேடிய பொருளேயாயினும் அதனை நல்லார்க்கு நல்லன செய்தலை எஞ்ஞான்றும் அஞ்சா நிற்கும்.

நல்லார் - தேவர், அருந்தவர், சான்றோர், இருமுதுகுரவர் முதலாயினாரும் நல் விருந்தினரும். நல்லன செய்தல் - அவர் விரும்புவன கொடுத்தல். அது செய்ய வேண்டும் நாள்களினும் என்பார், 'எஞ்ஞான்றும்' என்றார். "இல்லாளை அஞ்சி விருந்தின் முகங்கொன்ற நெஞ்சிற், புல்லாளகை" (சீவக. மண்மகள். 217) என்றார் பிறரும். (5)

**இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள்**
**அமைஆர்தோள் அஞ்சு பவர். 906**

இல்லாள் அமை ஆர் தோள் அஞ்சுபவர் - தம் இல்லாளுடைய வேய்போலும் தோளினை அஞ்சுவார், இமையாரின் வாழினும் பாடு இலா - வீரத்தால் துறக்கம் எய்திய அமரர்போல இவ் உலகத்து வாழ்ந்தாராயினும், ஆண்மையிலர்.

அமரர்போல வாழ்தலாவது, பகைத்த வீரர் தோள்களை எல்லாம் வேறலான் நன்கு மதிக்கப்பட்டு வாழ்தல். அது கூடாமையின், 'வாழினும்' என்றார். 'அமை ஆர் தோள்' எனவே அஞ்சுதற்காரணத்தது எண்மை கூறியவாறு. வீரர் தோள்களை வென்றார் ஆயினும் இல்லாள் தோள்களை அஞ்சுவார் ஆண்மையிலார்

எனபதாம.

இவை நான்கு பாட்டாலும் அவனே அஞ்சுதற்குற்றம் கூறப் பட்டது. (6)

**பெண்ஏவல் செய்தொழுகும் ஆண்மையின் நாண்உடைப்**
**பெண்ணே பெருமை உடைத்து. 907**

*பெண் ஏவல் செய்து ஒழுகும் ஆண்மையின் - நாண் இன்றித் தன் இல்லாளது ஏவல் தொழிலைச் செய்து திரிகின்றவனது ஆண்*



*தன்மையின், நாண் உடைப் பெண்ணே பெருமை உடைத்து - நாணினையுடைய அவள் பெண் தன்மையே மேம்பாடு உடைத்து.*

*'நாணுடைப் பெண்' என வேண்டாது கூறியது அவன் ஏவல் செய்வானது நாணின்மை முடித்தற் காதலின், அம் மறுதலைத் தொழில் வருவிக்கப்பட்டது. ஏவல் - ஆகு பெயர். இறுதிக்கண் 'பெண்' என்பதூஉம் அது. ஏவல செய்திதலுக் கோடற சிறப்புத் தோன்றப் பெண்ணே எனப் பிரித்தார்.* (7)

தட்டார் குறைமுடியார் நன்றுஆற்றார் நல்நுதலாள்
பெட்டாங்கு ஒழுகு பவர். 908

*நன்னுதலாள பெட்டாங்கு ஒழுகுபவா - தாம் வேண்டியவ றன்றித் தம் மனையாள வேண்டியவாறு ஒழுகுவார், நட்டார்குறை முடியார் - தம்மொடு நட்புச் செய்தார் உற்ற குறை முடிக்கமாட் டார், நன்று ஆற்றார் - அதுவேயன்றி மறுமைக்குத துணையாய அறஞ் செய்யவும் மாட்டாா.*

*'நன்னுதலாள்' என்பதனை "அமையார்தோள" (குறள 906) என்புழிப் போலக் கொளக. அவள தானே அறிந்து ஏவலும் பொருள் கொடுத்தலும் கூடாமையின், இருமைக்கும் வேண்டு வன செய்யமாட்டாா என்பதாம.* (8)

அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ஏவல் செய்வார்கண் இல். 909

அறவினையும் - அறச் செயலும், ஆன்ற பொருளும் - அது முடித்தற்கு ஏதுவாய பொருட் செயலும், பிறவினையும் - இவ் இரண்டின் வேறாய இன்பச் செயல்களும், பெண் ஏவல் செய்வார் கண் இல - தம் மனையாள் ஏவல் செய்வார்மாட்டு உளவாகா.

புலன்கள் ஐந்து ஆகலின், 'பிறவினை' எனப் பன்மையாயிற்று. அவை நோக்கி அறச் செயல் பொருட் செயல்கள் முன்னே ஒழிந்தார்க்குத் தலைமை அவள் கண்ணதாகலின், பின் அவை தாமும் இலவாயின என்பது தோன்ற, அவற்றைப் பிரித்துக் கூறினார்.

இவை மூன்று பாட்டானும் அவள் ஏவல் செய்த குற்றம் கூறப்பட்டது. (9)

**எண்சேர்ந்த நெஞ்சத்து இடன்உடையார்க்கு எஞ்ஞான்றும்**
**பெண்சேர்ந்தாம் பேதைமை இல். 910**

எண் சேர்ந்த நெஞ்சத்து இடன் உடையார்க்கு - கருமச் சூழ்ச்சிக்கண் சென்ற நெஞ்சத்தினையும் அதனால் ஆய செல்வத்தினையும் உடையராய வேந்தர்க்கு, பெண் சேர்ந்து ஆம் பேதைமை எஞ்ஞான்றும் இல் - மனையாளைச் சேர்தலான் விளையும் பேதைமை எக்காலத்தும் உண்டாகாது.



"இடன் இல் பருவத்தும்" (குறள் 218) எனவும் "இடன் இன்றி இரந்தோர்க்கு" (கலித். பாலை. 1) எனவும் வந்தமையான், 'இடன்' என்பது அப்பொருளாதல் அறிக. இளமைக் காலத்தும் என்பார், 'எஞ்ஞான்றும்' என்றார். அப் பேதைமையாவது மேற் சொல்லிய விழைதல், அஞ்சல், ஏவல் செய்தல் என்னும் மூன்றற்கும் காரணமாயது.

எதிர்மறைமுகத்தான் அம் மூன்றும் இதனால் தொகுத்துக் கூறப்பட்டன. (10)

## 92. வரைவின் மகளிர்

அஃதாவது தம் நலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவிலாத மகளிரது இயல்பு; ஆதலால் தமக்குரிய மகளிரான் வருங் குற்றத்தின் பின் வைக்கப்பட்டது.

அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொல் இழுக்குத் தரும். 911

*அன்பின் விழையார் பொருள் விழையும் ஆய்தொடியார்* - ஒருவனை அன்புபற்றி விழையாது பொருள் பற்றி விழையும் மகளிர், *இன்சொல் இழுக்குத் தரும்* - அது கையுறுந்துணையும் தாம் அன்புபற்றி விழைந்தாராகச் சொல்லும் இனியசொல் அவனுக்குப் பின் இன்னாமையைப் பயக்கும்.

பொருள் என்புழி 'இன்' விகாரத்தால் தொக்கது. ஆய்ந்த தொடியினையுடையார் என்றதனாலும், இனிய சொல் என்றதனாலும், அவர் கருவி கூறப்பட்டது. அச்சொல் அப்பொழுதைக்கு இனிதுபோன்று பின் வறுமை பயத்தலின், அது கொள்ளற்க என்பதாம். (1)

பயன்தூக்கிப் பண்புஉரைக்கும் பண்புஇல் மகளிர்
நயன்தூக்கி நள்ளா விடல். 912

*பயன் தூக்கிப் பண்பு உரைக்கும் பண்பு இல் மகளிர்* - ஒருவனுக்கு உள்ள பொருளை அளந்தறிந்து அஃது எய்துந்துணையும் தம் பண்புடைமை சொல்லும் பண்பிலாத மகளிரது, *நயன் தூக்கி நள்ளா விடல்* - ஒழுகலாற்றினை ஆராய்ந்தறிந்து அவரைப் பொருந்தாது விடுக.

பண்பு சொல்லின்கண் அல்லது தம்கண் இல்லாமை தோன்றப் "பண்பு இல் மகளிர்" என்றும், அவர்க்கு அது சாதி தருமமாதலதனானேயன்றி அவர் செயலானும் அறிந்து என்பார் 'நயன் தூக்கி' என்றும், அவ் அறிவு அவரை விடுதற்கு உபாயம் என்பது தோன்றப்பின் 'நள்ளாவிடல்' என்றும் கூறினார். (2)



பொருட்பெண்டிர் பொய்ம்மைமுயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று. 913

பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்கம் - கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும் பொது மகளிரது பொய்ம்மையையுடைய முயக்கம், இருட்டு அறையில் ஏதில பிணம் தழீஇயற்று - பிணமெடுப்பார் இருட்டறைக்கண்ணே முன்னறியாத பிணத்தைத் தழுவினாற்போலும்.

பொருட்கு முயங்கும் மகளிர், கருத்தும் செயலும் ஆராயாது சாதியும் பருவமும் ஒவ்வாதாரை முயங்குங்கால அவர் குறிப்புக் கூலிக்குப் பிணம் எடுப்பார் காணப்படாத ஓரிடத்தின்கண் இயைபில்லாததோர் பிணத்தை எடுக்குங்கால் அவர் குறிப்போடு ஒக்கும் எனவே, அகத்தால் அருவரா நின்றும் பொருள்நோக்கிப் புறத்தால் தழுவுவர், அதனை ஒழிக என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் அவர் சொல்லும் செயலும் பொய் என்பது கூறப்பட்டது. (3)

**பொருட்பொருளார் புன்னலம்தோயார் அருட்பொருள்
ஆயும் அறிவி னவர். 914**

பொருட் பொருளார் புன்னலம் - இன்பமாகிய பொருளை இகழ்ந்து பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது புல்லிய நலத்தை, அருட்பொருள் ஆயும் அறிவினவர் தோயார் - அருளொடு கூடிய பொருளை ஆராய்ந்து செய்யும் அறிவினையுடையார் தீண்டார்.

அறம் முதலிய நான்கும் பொருள் எனப்படுதலின், 'பொருட் பொருளார்' என விசேடித்தார். புன்மை இழிந்தார்க்கே உரித்தாதல். தாம் விரும்புகின்ற அறத்திற்கு அவர் மெய்ந் நலம் மறுதலையாகலின், தோயார் என்பதாம். (4)

**பொதுநலத்தார் புன்னலம் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறிவி னவர். 915**

மதி நலத்தின் மாண்ட அறிவினவர் - இயற்கையாகிய மதி நன்மையான் மாட்சிமைப்பட்ட செயற்கை அறிவினையுடையார், பொது நலத்தார் புன்னலம் தோயார் - பொருள் கொடுப்பார்க்கெல்லாம் பொதுவாய ஆசையினையுடைய மகளிரது புல்லிய நலத்தைத் தீண்டார்.

மதி நன்மை முற்பிறப்புக்களில் செய்த நல்வினைகளான் மனம் தெளிவுடைத்தாதல். அதனை அன்றிக் கல்வியறிவு மாட்சிமைப் படாமையின், 'மதிநலத்தின் மாண்ட அறிவினவர்' என்றும், அவ் வறிவுடையார்க்கு அவராசையது பொதுமையும் மெய்ந் நலத்தது புன்மையும் விளங்கித் தோன்றலின் 'தோயார்' என்றும் கூறினர். (5)



**தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்**
**புன்னலம் பாரிப்பார் தோள். 916**

*தகை செருக்கிப் புன்னலம் பாரிப்பார் தோள்*—ஆடல், பாடல், அழகு என்பனவற்றால் களித்துத் தம் புல்லிய நலத்தை விலை கொடுப்பார் யாவராமாட்டும் பரப்பும் மகளிர் தோள்களை, *தம் நலம் பாரிப்பார் தோயார்*—அறிவொழுக்கங்களானாய தம்புகழை உலகத்துப் பரப்புதற்குரிய உயர்ந்தோர் தீண்டார்.

ஆடல் முதலிய மூன்றும் உடைமை அவர்க்கு மேம்பாடாகலின் 'தகை' என்றும், தோயின் அறிவொழுக்கங்கள் அழியும் ஆகலின் அவற்றால் புகழ் பரப்புவார் 'தோயார்' என்றும் கூறினர். தந்நலம் என்புழி நலம் ஆகுபெயர்.

இவை மூன்று பாட்டானும் அவரை உயர்ந்தோர் தீண்டார் என்பது கூறப்பட்டது. (6)

நிறை நெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சில்
பேணிப் புணர்பவர் தோள். 917

நெஞ்சின் பிறபேணிப் புணர்பவர் தோள - நெஞ்சினாற் பிற வற்றை ஆசைப்பட்டு அவை காரணமாகக் கொடுப்பாரை மெய் யாற் புணரும் மகளிர் தோள்களை, நிறை நெஞ்சம இல்லவர் தோய்வர் - நிறையால் திருந்திய நெஞ்சம இல்லாதார் தோய்வர்.

பொருளும் அதனால் படைக்கப்படுவனவும விரும்பும் நெஞ்சு அவற்றின்மேலதாகலின், புணர்வது உடம்புமாத்திரம என்பது அறிந்து அது வழி ஓடாது நிற்கும நெஞ்சினையுடையார் தோயா மையின், அஃதிலார் 'தோய்வர்' என்றார். (7)

ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கு என்ப
மாய மகளிர் முயக்கு. 918

மாய மகளிர் முயக்கு - உருவு சொற் செயல்களான் வஞ்சித்தலை வல்ல மகளிரது முயக்கத்தை, ஆயும அறிவினர் அல்லார்க்கு அணங்கு என்ப - அவ் வஞ்சனை ஆராய்ந்தறியும அறிவுடையார் அல்லார்க்கு அணங்கு தாக்கு என்று சொல்லுவர் நூலோர்.

அணங்கு காமநெறியான் உயிர்கொள்ளும் தெய்வமகள். தாக்கு-தீண்டல். இவ் உருவகத்தான் அம் முயக்கம் முன் இனிது போன்று பின் உயிர்கோடல்பெறும். இது நூலோர் துணிவு என்பது தோன்ற அவர்மேல வைத்துக் கூறினார். அப்பெயர் அவர் நிலையான் வந்தது (8)

வரைவுஇலா மாணிழையார் மென்தோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு. 919

வரைவு இலா மாண் இழையார் மென்தோள் - உயர்ந்தோர் இழிந்தோர் என்னாது விலைகொடுப்பார் யாவரையும் முயங்கும் மகளிரது மெல்லியதோள்கள், புரை இலாப் பூரியர்கள் ஆழும் அளறு - அக் குற்றத்தையறியும் அறிவில்லாத கீழ்மக்கள் புக்கு அழுந்தும் நிரயம்.

உயர்தற்கு ஏதுவாகலின், 'புரை' எனப்பட்டது. சாதியான் இழிந்தாரின் நீக்குதற்குப் 'புரை இலாப் பூரியாகள்' என்றும், அவர் ஆழ்தற்கு ஏதுவாகிய உருவம் முதலிய மூன்றும் என்பது தோன்ற 'மாணிழையார் மென்தோள' என்றும, அவாக்கு அளற்றின் இடையின்றிப் பயக்கும் என்பது தோன்ற உருவகமாக்கியும் கூறினர். (9)

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. 920

இருமனப் பெண்டிரும் களளும் கவறும் - கவாநத மனததினையுடைய மகளிரும் களளும் சூதும் என இம் மூன்றும், திருநீக்கப்பட்டார் தொடர்பு - திருமகளால் துறக்கப்பட்டார்க்கு நட்பு.

இருமனம் - ஒருவனேடு புணர்தலும் புணராமையும் ஒரு காலத்தேயுடைய மனம். கவறு - ஆகுபெயர். ஒத்த குற்றத்த வாகலின், கள்ளும் சூதும உடன் கூறப்பட்டன. வடநூலாரும் இக் கருத்தான் விதனம என உடன் கூறினர். வருகின்ற அதிகார முறைமையும் இதனுன் அறிக. திணைவிராய் எண்ணிய வழிப் பன்மைபற்றி முடிபுகோடலின், ஈண்டு, அஃறிணையாற் கொண்டது. திரு நீக்கப்பட்டமை இக் குறிகளான் அறியப் படும் என்பதாம்.

இவை நான்கு பாட்டானும சேரவார் இழிநதோர் என்பது கூறப்பட்டது. (10)

## 93. கள் உண்ணுமை

இனி, ஒழுக்கமும உணர்வும் அழிதற்கண் அவ் வரைவின் மகளிரோடு ஒப்பதாய களளினை உண்ணுமைபது சிறப்பு எதிர்மறைமுகததால கூறுகின்றூா.

உட்கப் படாஅர் ஒளியிழப்பர் எஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழுகு வார். 921

*கள்காதல் கொண்டு ஒழுகுவார் - கள்ளின்மேற்காதல் செய்தொழுகும் அரசர், எஞ்ஞான்றும் உட்கப்படார் - எஞ்ஞான்றும் பகைவரான் அஞ்சப்படார்; ஒளி இழப்பர் - அதுவே அன்றி முன் எய்தி நின்ற ஒளியினையும் இழப்பர்.*



*அறிவின்மையால் பொருள் படை முதலியவற்றாற் பெரியராய காலத்தும் பகைவர் அஞ்சார், தம்முன்னோரான் எய்திநின்ற ஒளியினையும் இகழற்பாட்டான் இழப்பர் என்பதாம்.*

*இவை இரண்டானும் அரசு இனிது செல்லாது என்பது இதனான் கூறப்பட்டது.* (1)

உண்ணற்க கள்ளை உணில்உண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார். 922

*கள்ளை உண்ணற்க - அறிவுடையராயினார் அஃதிலராதற்கு ஏதுவாய கள்ளினை உண்ணாதொழிக, உணில் சான்றோரான் எண்ணப்பட வேண்டாதார் உண்க - அன்றியே உண்ணல் வேண்டுவார் உளராயின், நல்லோரால் எண்ணப்படுதலை வேண்டாதார் உண்க.*

*பெறுதற்கரிய அறிவைப் பெற்று வைத்தும் கள்ளான் அழித்துக்கொள்வாரை இயல்பாகவே அஃது இல்லாத விலங்குகளுடனும் எண்ணுவராகலின் 'சான்றோரான் எண்ணப்பட வேண்டாதார் உண்க' என்றார்.* (2).

ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி. 923

*ஈன்றாள் முகத்தேயும் களி இன்னாது - யாதுசெய்யினும் உவக்குமதாய் முன்பாயினும் கள்ளுண்டு களித்தல் இன்னாதாம், மற்றுச் சான்றோர் முகத்து என்? - ஆனபின், குற்றமயாதும் பொறாத சான்றோர் முன்பு களித்தல் அவர்க்கு யாதாம்?*

மனம் மொழி மெய்கள் தம் வயத்த அன்மையான் நாண் அழியும், அழியவே, ஈன்றாட்கும் இன்னாதாயிற்று, ஆனபின், கள் இருமையும் கெடுத்தல் அறிந்து சேய்மைக்கண்ணே கடியும் சான்றோர்க்கு இன்னாதாதல் சொல்லவேண்டுமோ என்பதாம். (3).

**நாண்என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்என்னும்**
**பேணாப் பெருங்குற்றத் தார்க்கு. 924**

கள் என்னும் பேணாப் பெருங்குற்றத்தார்க்கு - கள் என்று சொல்லப்படுகின்ற யாவரும் இகழும் மிக்க குற்றத்தினையுடையாரை, நாண் என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் - நாண் என்று சொல்லப்படுகின்ற உயர்ந்தவள் நோக்குதற்கு அஞ்சி அவர்க்கு எதிர்முகமாகாள்

காணுதற்கும் அஞ்சி உலகத்தார் சேய்மைக்கண்ணே நீங்குவராகலின் 'பேணா' என்றும், பின் ஒருவாற்றானும் கழுவப்படாமையின், 'பெருங்குற்றம்' என்றும், இழிந்தோர்பால் நில்லாமையின் 'நல்லாள்' என்றும் கூறினார். பெண்பாலாக்கியது வடமொழி முறைமைபற்றி.



இவை மூன்று பாட்டானும் ஒளியிழத்தற் காரணம் கூறப்பட்டது. (4)

**கையறி யாமை உடைத்தே பொருள்கொடுத்து**
**மெய்யறி யாமை கொளல். 925**

பொருள் கொடுத்து மெய் அறியாமை கொளல் - ஒருவன் விலைப்பொருளைக் கொடுத்துக் கள்ளால் தனக்கு மெய்ம்மறப்பினைக் கொள்ளுதல், கை அறியாமை உடைத்து - அவன் பழவினைப்பயனைச் செய்வதறியாமையைத் தனக்குக் காரணமாக உடைத்து.

' தன்னை அறியாமை சொலலவே, ஒழிந்தன யாவும் அறியாமை சொல்லல் வேண்டாவாயிற்று. கை அப்பொருட்டாதல் "பழு னுடைப் பெருமரம் வீழுகதெனக் கையற்று" (புறநா. 20, 209) என்பதனுனும் அறிக. அறிவார் விலைகொடுத்து ஒன்றனைக் கொளளுங்கால் நியதுகொளளாமையின் மெய்யறியாமைகொளல முன்னை அறியாமையான் வந்தது என்பதாம். (5)

**துஞ்சினுர் செத்தாரின் வேறுஅல்லர் எஞ்ஞான்றும்**
**நஞ்சுண்பார் கள்உண் பவர். 926**

துஞ்சினர் செததாரின் வேறு அல்லர் - உறங்கினா செத தாரின் வேருதல் உடையரேனும் அக்காலதது அறிவின்மையான் வேறு எனப்பட்டார், கள உண்பவர் எஞ்ஞான்றும் நஞசு உண் பார்-அவ்வாறே களளுண்பாா நஞ்சுண்பாரின் வேருதல உடைய ரேனும், எக்காலததும அறிவின்மையான் வேறு எனப்படார், அவர்தாமே யாவா.

உறங்கினர்க்கும் கள உண்பாாக்கும வேற்றுமை உயிர்ப்பு நிற்றல். வேருதலும் வேறன்மையும் உடைமை காட்டற்கு உவமை புணர்க்கப்பட்டது. இதனை நிரல நிரை யாக்கி, 'திரிக்கப்படுதலால் உறங்கினுரும் நஞ்சுண்பாரும் ஒப்பா, கைவிடப்படுதலான் செத தாரும் கள உண்பாரும் ஒப்பர்' என்று உரைப்பாரும் உளர். அதிகாரப்பொருள் பின்னதாயிருக்க யாதும் இயைபில்லாத நஞ் சுண்பார்க்கு உவமைபுணர்தது ஈண்டுக் கூறல பயனின்ருகலானும், சொற்கிடக்கை நிரலநிரைக்கு ஏலாமையானும், அஃது உரை யன்மை அறிக.

இவை இரண்டு பாட்டானும் அவரது அறிவிழததற்குற்றம் கூறப்பட்டது. (6)

**உள்ஒற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்**
**கள்ஒற்றிக் கண்சாய் பவர். 927**

கள் ஒற்றிக் கண் சாய்பவர் - கள்ளை மறைந்துண்டு அக் களிப்பால் தம் அறிவு தளர்வார், உள்ளூர் உள் ஒற்றி எஞ்ஞான்

றும் கசப்பவர் - உள்ளூர் வாழ்பவரான் உள் நிகழ்கின்றது உய்த்துணர்ந்து எஞ்ஞான்றும் நகுதல் செய்யப்படுவர்.

உள்ளூர் - ஆகுபெயர். 'உண்டு' என்பது அவாய்நிலையான் வந்தது. உய்த்துணர்தல் - தளர்ச்சியால் களிப்பினை உணர்ந்து அதனால் களளுண்டது உணர்தல். (7)

களித்தறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்து
ஒளித்ததூஉம் ஆங்கே மிகும். 928

களித்து அறியேன் என்பது கைவிடுக - மறைந்துண்டுவைத்து யான் கள்ளுண்டறியேன் என்று உண்டபொழுது தம் ஒழுக்கம் கூறுதலையொழிக, நெஞ்சத்து ஒளித்ததும் ஆங்கே மிகும் - அவ் உண்டபொழுதே பிறராறியின் இழுக்காம் என்று முன் நெஞ்சத்து ஒளித்த குற்றமும் முன்னையளவின் மிக்கு வெளிப்படுதலான்.

'களித்தறியேன்' எனக்காரணத்தைக் காரியத்தாற் கூறினார்.

இவை இரண்டு பாட்டானும் அது மறைக்கப்படாது என்பது கூறப்பட்டது. (8)

களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று. 929

களித்தானைக் காரணம் காட்டுதல் - கள்ளுண்டு களித்தான் ஒருவனை இஃது ஆகாதென்று பிறனொருவன் காரணம் காட்டித் தெளிவித்தல், நீர்க் கீழக் குளித்தானைத் தீத் துரீஇயற்று - நீருள் மூழ்கினான் ஒருவனைப் பிறனொருவன் விளக்கினால் நாடுதலை யொக்கும்.

'களித்தானை' என்னும் இரண்டாவது "அறிவுடை யந்தணன் அவளைக்காட் டென்றானோ" (கலித். மருதம். 7) என்புழிப்போல நின்றது. நீருள் விளக்குச் செல்லாதாற்போல அவன் மனத்துக் காரணம் செல்லாது என்பதாம்.

இதனான் அவனைத் தெளிவித்தல் முடியாது என்பது கூறப்பட்டது. (9)

கள்உண்ணாப் போழ்தில் களித்தானைக் காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு. 930

கள உண்ணுப் போழ்தில கனிததானை - களஉண்பானெருவன் தான் அஃது உண்ணுது தெளிந்திருந்த பொழுதின்கண் உண்டு களித்த பிறனைக் காணுமன்றே, காணுங்கால் உண்டதன் சோவு உவளான்கொல - காணுங்கால தான் உண்டபொழுது உளதாம் சோர்வினை அவன் சோர்வால் அதுவும் இற்றென்று கருதான் போலும்?.

.. சோர்வு மனமொழி மெய்கள தன்வயத்த அல்லவாதல்.



கருதலளவையான் அதன் இழுக்கினை உய்த்துணரின் ஒழியும் -என இதனுல் அஃது ஒழிதற் காரணம் கூறப்பட்டது. (10)

## 94. சூது

இனி, அக்கள்ளுண்டல்போல அறம்பொருள இன்பங்கட்கு இடையீடாகிய சூதாடலும் பிணியுழத்தலும் கூறுவான் தொடங்கி, முதற்கண் சூதினது இயல்பு கூறுகின்ருர்.

**வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்**
**தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. 931**

வென்றிடினும் சூதினை வேண்டற்க - தான்வெல்லும் ஆற்றல் உடையனுயினும் சூதாடலை விரும்பாதொழிக, வென்றதூஉம் தூண்டிற் பொன் மீன் விழுங்கியற்று - வென்று பொருளெய்துவார் உளரால் எனின் அவ் வென்றபொருள் தானும் இரையான் மறைந்த தூண்டிலிரும்பினை இரை எனக் கருதி மீன் விழுங்கினற் போலும்.

வேறல் ஒருதலையன்மையின் 'வென்றிடினும' என்றும், கருமங்கள பலவும் கெடுதலின், 'வேண்டற்க' என்றும் கூறினர். எய்தியபொருள சூதாடுவார் நீங்காமைக்கு இட்டதோர் தனை என்பதூஉம், அதனுல் பின் துயருழததலும், உவமையால் பெற்ரும். (1)

**ஒன்றுஎய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்**
**நன்றெய்தி வாழ்வதோர் ஆறு. 932**

ஒன்று எய்தி நூறு இழக்கும் சூதர்க்கும் - அதனாண்டிற் பொன் போன்ற ஒன்றனை முன்பெற்று இன்னும் பெறுதும் என்னும் கருத்தால் நூற்றினை இழந்து வறியராம் சூதர்க்கும், நன்று எய்தி வாழ்வது ஓராறு உண்டாங்கொல் - பொருளால் அறனும் இன்பமும் எய்தி வாழ்வதொரு நெறியுண்டாமோ, ஆகாது.

அவ்வாற்றால் பொருளிழந்தே வருதலான் அதனால் எய்தும் பயனும் அவர்க்கு இல்லை என்பதாம். (2)

உருள்ஆயம் ஓவாது கூறின் பொருள்ஆயம்
போஒய்ப் புறமே படும். 933

உருள் ஆயம் ஓவாது கூறின் - உருளும் கவற்றின்கண் பட்ட ஆயத்தை இடைவிடாது கூறிச் சூதாடுமாயின், பொருள் ஆயம் போஒய்ப் புறமே படும் - அரசன் ஈட்டிய பொருளும் அவன் பொருள்வருவாயும் அவனைவிட்டுப்போய்ப் பகைவர் கண்ணே தங்கும்.

கவற்றினது உருட்சியை அதனுடைய ஆயத்தின்மேல் ஏற்றியும், சூதாடலை அது கூறலாகிய காரணத்தின்மேலிட்டும் கூறினார்.



பொருளாயம் என்பது உம்மைத்தொகை. ஆயம் வடமொழித் திரிசொல். காத்தற்கண்ணும் இயற்றற்கண்ணும் கருத்திலனாகலின், அவை இரண்டும் பகைவர்பாற் செல்லும் என்பதாம். (3)

சிறுமை பலசெய்து சீர்அழிக்கும் சூதின்
வறுமை தருவதுஒன்று இல். 934

சிறுமை பல செய்து சீர் அழிக்கும் சூதின் - தன்னை விழைந்தார்க்கு முன்னில்லாத துன்பங்களை பலவற்றையும் விளைத்து உள்ள புகழையும் கெடுக்கும் சூதுபோல், வறுமை தருவது ஒன்று இல் - நல்குரவினைக் கொடுக்கவல்லது பிறிதொன்று இல்லை.

அத் துன்பங்களை முன்னர்க் கூறுப. நல்வினைகளையும் நல் வினைதைையும் நீக்கித் தீவினைகளையும் தீயினதையும் கூட்டுதலால், 'சீர் அழிக்கும்' என்றார். வறுமைக்கு எல்லையாவர் என்பதாம்.(4)

கவறும் கழகமும் கையும் தருக்கி
இவறியார் இல்லாகி யார். 935

இல்லாகியார் - முற்காலத்தும் தாம் உளராகியே இலராகி ஒழுகினார், கவறும் கழகமும் கையும் தருக்கி இவறியார்-கவற்றினை யும் அஃது ஆடும் களத்தினையும் அவ் ஆடற்குவேண்டும் கைத் தொழிலினையும் மேற்கொண்டு கைவிடாத வேந்தர்.

கைத்தொழில் - வெல்லும் ஆயம்படப் பிடித்தெறிதல். அவ் இவறுதலால் பாண்டவர்தம் அரசுவிட்டு வனத்திடைப்போய் ஆண்டுமறைந்தொழுகினார் என அநுபவம் காட்டியவாறு.

இவை ஐந்து பாட்டானும் அதனது வறுமைபயத்தற் குற்றம் கூறப்பட்டது. (5)

அகடுஆரார் அல்லல் உழப்பர்சூது என்னும்
முகடியான் மூடப்பட் டார். 936

சூது என்னும் முகடியான் மூடப்பட்டார் - தன் பெயர் சொல்லல் மங்கலம் அன்மையின் சூது என்று சொல்லப்படும் முகடியான் விழுங்கப்பட்டார், அகடு ஆரார் அல்லல் உழப்பர் - இம்மைக்கண் வயிறுநிரப்பெறார், மறுமைக்கண் நிரயத்துன்பம் உழப்பர்.

செல்வங்கெடுத்து நல்குரவு கொடுத்தல் தொழில் வேறு படாமையின் 'சூது என்னும் முகடி' என்றும், வெற்றிதோல்விகள் நோக்கி ஒருபொழுதும் விடாராகலின் ஈண்டு 'அகடு ஆரார்' என் றும், பொய்யும் களவும் முதலிய பாவங்கள் ஈட்டலின் ஆண்டு 'அல்லல் உழப்பர்' என்றும் கூறினார். வயிறாராமை சொல்லவே, ஏனைப்புலன்கள் நுகரப் பெறாமை சொல்லவேண்டாவாயிற்று. உழப்பர் என்பது எதிர்காலவினைச் சொல். (6)

**பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்**
**கழகத்துக் காலை புகின். 937**

காலை கழகத்துப் புகின் - அறம் பொருள் இன்பங்கட்கு அடைத்த காலம் அரசனுக்குச் சூதாடு களத்தின்கண் கழியுமாயின் பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும் - அக் கழிவு தொன்று தொட்டுவந்த அவன் செல்வத்தினையும் நற்குணங்களையும் போக்கும்.

'பழகிய' என்பது பண்புடனும் இயையும். தான் செய்து கொள்ளும் அறம் முதலியவே யன்றி முன்னோரைத் தொடங்கி வருகின்ற செல்வமும் முன்செய்த நல்வினையின் பயனாய பண்பும் இலவாம் என்பதாம். (7)

**பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள்கெடுத்து**
**அல்லல் உழப்பிக்கும் சூது. 938**

சூது - சூது, பொருள் கெடுத்து - தன்னைப்பயின்றவன் பொருளைக் கெடுத்து, பொய் மேற்கொளீஇ - பொய்யை மேற் கொள்ளப்பண்ணி, அருள் கெடுத்து - மனத்து எழும் அருளைக் கெடுத்து, அல்லல் உழப்பிக்கும் - இவ்வாற்றான் அவனை இருமையினும் துன்பம் உறுவிக்கும்.

இத்தொழில்கள் மூன்றற்கும் சூது வினைமுதலாகவும், தோல்வி, வெற்றி, செற்றம் என்பன முறையே கருவிகளாகவும் கொள்க. முன்னதனான் இம்மையினும், ஏனையவற்றான் மறுமையினும் ஆம். 'பொருள்கொடுத்து' என்பது பாடமாயின், அவ் எச்சத்திற்கு முடிவு 'மேற்கொளீஇ' என்புழி மேற்கோடலாகிய வினைமுதல்வினை. (8)

**உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்**
**அடையாவாம் ஆயம் கொளின். 939**

ஆயம் கொளின் - அரசன் சூதினைத் தனக்கு விநோதத் தொழிலாக விரும்புமாயின், ஒளி கல்வி செல்வம் ஊண் உடை என்று ஐந்தும் அடையாவாம் - அவனை ஒளியும் கல்வியும் செல்வமும் ஊணும் உடையும் என்று இவ்வைந்தும் சாராவாம்.

ஆயம் - ஆகுபெயர். இச் சிறப்புமுறை செய்யுள் நோக்கிப் பிறழ்கின்றது. செல்வம் அறுவகை உறுப்புக்கள். ஊண் உடை என்பனவற்றால் துப்புரவுகளெல்லாம் கொள்ளப்படும். காலமும்

கிருத்தும் பெருமையின், இவை உளவாகா என்பதாம்.

இவ் நான்கு பாட்டானும் சிறுமை பல செய்து அவற்றன் திருமையும் கெடுத்தல் கூறப்பட்டது. (9)

**இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்**
**உழத்தொறூஉம் காதற்று உயிர். 940**



*இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல்* - சூதாடுவான் இருமைப் பயன்களையும் இழக்குந்தோறும் அதன்மேற் காதல் செய்யும் சூதன்போல, *துன்பம் உழத்தொறூஉம் காதற்று உயிர்* - உடம்பான் மூவகைத் துன்பங்களையும் அனுபவிக்கும் தோறும் அதன்மேற் காதலை உடைத்து உயிர்.

சூது - ஆகுபெயர். உயிரினது அறியாமை கூறுவார் போன்று சூதனது அறியாமை கூறுதல் கருத்தாகலின், அதனை யாப்புறுத்தற்பொருட்டு உவமமாக்கிக் கூறினர். இதன் எதிர் மறைமுகத்தால், சூதினை வெறுத்தொழிவானை யொக்கும் உடம் பினை வெறுத்தொழியும் உயிர் எனவும் கொள்க.

இதனான் அஃது ஒழிதற்கு அருமையும் ஒழிந்தாரது பெருமையும் கூறப்பட்டன. (10)

## 95. மருந்து

*பழவினையானும் காரணங்களானும் மக்கட்கு வாதம் முதலிய பிணிகள்வரும், அவற்றுள் பழவினையான் வருவன அதன் கழிவின்கண் அல்லது தீராமையின் அவை ஒழித்து, ஏனைக்காரணங்களான் வருவனவற்றைத் தீர்க்கும் மருந்தின் திறம் கூறுகின்றார். காரணங்களாவன உணவுசெயல்களது ஒவ்வாமையாகலின், பிணிகளும் காரணத்தான் வருவன வாயின.*

**மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்**
**வளிமுதலா எண்ணிய மூன்று. 941**

மிகினும் குறையினும் - உணவும் செயல்களும் ஒருவன் பகுதிக்கு ஒத்த அளவின் அன்றி அதனின் மிகுமாயினும் குறையுமாயினும், நூலோர் வளிமுதலா எண்ணிய மூன்றும் நோய் செய்யும் - ஆயுள் வேதமுடையாரால் வாதமுதலாக எண்ணப்பட்ட மூன்று நோயும் அவனுக்குத் துன்பஞ்செய்யும்.

'நூலோர் எண்ணிய' எனவே, அவர் அவற்றான் வகுத்த வாதப்பகுதி பித்தப்பகுதி ஐயப்பகுதி என்னும் பகுதிப்பாடும் பெற்றாம். அவற்றிற்கு உணவு ஒத்தலாவது சுவை வீரியங்களானும் அளவானும் பொருந்துதல். செயல்கள் ஒத்தலாவது மனமொழி மெய்களாற்செய்யுந் தொழில்களை அவை வருந்துவதற்கு முன்னே ஒழிதல். இவை இரண்டும் இங்ஙனமின்றி மிகுதல் குறைதல் செய்யின், அவை தத்தம் நிலையின் நிலலாவாய் வருத்தும் என்பதாம். காரணம் இரண்டும் அவாய்நிலையான் வந்தன. முற்று உம்மை விகாரத்தால் தொக்கது. இதனால் யாக்கைக்கு இயல்பாகிய நோய் மூவகைத்து என்பதூஉம், அவை துன்பஞ்செய்தற்காரணம் இருவகைத்து என்பதூஉம் கூறப்பட்டன. இன்பம் செய்தற்காரணம் முன்னர்க் கூறுப. (1)



**மருந்து என வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது**
**அற்றது போற்றி உணின். 942**

அருந்தியது அற்றது போற்றி உணின் - ஒருவன் முன்னுண்டது அற்றபடியைக் குறிகளால் தெளிய அறிந்து பின் உண்ணுமாயின், யாக்கைக்கு மருந்து என வேண்டாவாம்-அவன் யாக்கைக்கு மருந்து என்று வேறுவேண்டாவாம்.

குறிகளாவன - யாக்கை நொய்ம்மை, தேக்கின் தூய்மை, கரணங்கள் தொழிற்குரியவாதல், பசிமிகுதல் என இவை முதலாயின. பிணிகள் யாக்கையவாகலின், 'யாக்கைக்கு' என்றார் 'உணின்' என்பது அதன் அருமை தோன்ற நின்றது. (2)

**அற்றால் அளவறிந்து உண்க அஃதுஉடம்பு**
**பெற்றான் நெடிது உய்க்கும் ஆறு. 943**

அற்றால் அறும் அளவு அறிந்து உண்க-முன்னுண்டது அற்றல் பினனுண்பதனை அளவு அறிந்து அவ்வளவிற்றாக உண்க, உடம்பு பெற்றான் நெடிது உய்க்கும் ஆறு அது - இறப்பவும பலவாய பிற யாக்கைகளிற் பிழைத்துப் பெறற்கு அரிய இம் மானுடயாக் கையைப் பெற்றான் அதனை நெடுங்காலம் கொண்டு செலுத்தும் நெறி அதுவாகலான்.

இம்மை மறுமை வீடுபேறுகள் எய்தற்பாலது ஈது ஒன்று மேயாகலின், 'உடம்பு பெற்றான்' என்றும், அது நெடிதுநின்றுழி அவைபெருகச்செய்து கொள்ளலாம ஆகலின், 'நெடிது உய்க்கு மாறு' என்றும் கூறினா. 'பெற்றால்' என்று பாடம் ஓதுவாரும் உளா. (3)

அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து. 944

அற்றது அறிந்து - முன்னுண்டது அற்றபடியையறிந்து, துவ ரப்பசித்து-பின் மிகப்பசித்து, மாறல்ல கடைப்பிடித்துத் துய்க்க- உண்ணுங்கால் மாறுகொள்ளாத உணவுகளைக் குறிக்கொண்டு உண்க.

'அற்றது அறிந்து' என்னும் பெயர்த்துரை அதனை யாப்புறுத் தற்பொருட்டு. உண்டது அற்றாலும் அதன் பயனாகிய இரதம் அறாதாகலான் அதுவும் அறல்வேண்டும் என்பார், 'மிகப் பசித்து' என்றார். பசித்தல்வினை ஈண்டு உடையான்மேல் நின்றது. மாறுகொள்ளாமையாவது உண்பான் பகுதியோடு மாறுகொள் ளாமையும், கால இயல்போடு மாறுகொள்ளாமையும், சுவை வீரியங்களால் தம்முள் மாறுகொள்ளாமையும் ஆம். அவையா வன: முறையே வாதபித்த ஐகளானாய பகுதிகட்கு ஆகாதவற்றைச் செய்வனவாதலும், பெரும்பொழுது சிறுபொழுது என்னும கால வேறுபாடுகளுள் ஒன்றற்காவன பிறிதொன்றற்கு ஆகாமையும்,

தேனும் நெய்யும் தம்முள் அளவொத்து நஞ்சாதல் போல்வனவும் ஆம். அவற்றைக் குறிக்கொள்ளாது மனம்பட்டவாற்றால் துய்ப்பின் அதனானே நோயும் மரணமும் வருதலின், 'கடைப்பிடித்து' என்றார். (4)

## மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துஉண்ணின்
## ஊறுபாடு இல்லை உயிர்க்கு. 945

மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின் - அம்மூவகை மாறுகோளும் இல்லாத உணவைத் தன் உள்ளம் வேண்டியவளவினன் அன்றிப் பிணிவாராவளவினால் ஒருவன் உண்ணுமாயின், உயிர்க்கு ஊறுபாடு இல்லை - அவன் உயிர்க்குப் பிணிகளால் துன்பம் விளைதல் உண்டாகாது.

உறுவதனை 'ஊறு' என்றார், அஃது இன்பத்திற் செல்லாதாயிற்று- இல்லை என்பது தொடாபாகலின். துன்பமுறுவது உயிரேயாகலின், அதன்மேலவைத்துக் கூறினார். மாறுபாடு இல்வழியும் குறைதல் நன்று என்பதாம்,

இவை நான்கு பாட்டானும் உண்ணப் படுவனவும், அவற்றது அளவும், காலமும், பயனும் கூறப்பட்டன. (5)

## இழிவுஅறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
## கழிபேர் இரையான்கண் நோய் 946

இழிவு அறிந்து உண்பான்கண் இன்பம்போல் - அக்குறைதலே நன்று என்று அறிந்து அவ்வாறே உண்பவன்மாட்டு இன்பம் நீங்காது நிலைநிற்குமாறு போல, கழிபேர் இரையான்கண் நோய் நிற்கும் - மிகப்பெரிய இரையை விழுங்குவான்மாட்டு நோய் நீங்காது நிலைநிற்கும்.

அவ்வாறே உண்டல், உண்ணலாம் அளவில் சிறிது குறைய உண்டல். இன்பமாவது வாதமுதலிய மூன்றும் தத்தம் நிலையில் திரியாமையின் மனம் மொழி மெய்கள் அவன் வயத்தவாதலும், அதனான் அறம் முதலிய நான்கும் எய்தலும் ஆம். இரையை அளவின்றி எடுத்தது அதனான் வருந்தும் விலங்கோடு ஒத்தலின், 'இரையான்' என்றார். விதி எதிர்மறைகளை உவமமும் பொரு

ளும் ஆக்கியது இரண்டானும் பெறுதற்கு. (6)

**தீயள வன்றித் தெரியான் பெரிதுஉண்ணின்**
**நோய்அள வின்றிப் படும். 947**

*தெரியான் தீ அளவு அன்றிப் பெரிது உண்ணின் - தன் பகுதியும் அதற்கு ஏற்றஉணவும் காலமும் ஆராயாது வேண்டியதோர் உணவை வேண்டியதோர் காலத்து வயிற்றுத் தீ அளவன்றி ஒருவன் மிக உண்ணுமாயின், நோய் அளவு இன்றிப் படும் - அவன்மாட்டு நோய்கள் எல்லையற வளரும்.*



*தெரியாமை வினைக்குச் செயப்படுபொருள்கள அதிகாரத்தான் வந்தன. நோய் - சாதியொருமை.*

*இவை இரண்டு பாட்டானும் அவ்வளவு உண்ணுவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.* (7)

**நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்**
**வாய்நாடி வாய்ப்பச் செயல். 948**

*நோய் நாடி - மருத்துவனாயினான் ஆதுரன்மாட்டு நிகழுகின்ற நோயை அதன் குறிகளான் இன்னது என்று துணிந்து, நோய் முதல் நாடி - பின் அது வருதற் காரணத்தை ஆராய்ந்து, அது தணிக்கும் வாய் நாடி - பின் அதுநீக்கும் உபாயத்தினை அறிந்து, வாய்ப்பச் செயல் - அதனைச் செய்யும்வழிப் பிழையாமற் செய்க.*

*காரணம் - உணவு செயல் என முற்கூறிய இரண்டும். அவற்றை ஆயுள்வேதமுடையார் நிதானம் என்ப. அவை நாடுதற்பயன் - நோயினையும் வாயினையும் ஐயமறத் துணிதல். மருந்து செய்தல், உதிரங் களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு, 'அதுதணிக்கும் வாய்' என்றார். "கழுவாயும்உள" (புறநா. 34) என்றார் பிறரும். பிழையாமை பழைய மருத்துவர் செய்துவருகின்ற முறைமையின் தப்பாமை.()*

உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல். 949

கற்றான்-ஆயுள்வேதத்தினைக் கற்ற மருத்துவன், உற்றான் அளவும் பிணி அளவும் காலமும் கருதிச் செயல் - அவ் உபாயத்தினைச் செய்யுங்கால், ஆதுரன் அளவினையும் அவன்கண் நிகழ்கின்ற நோயின் அளவினையும் தன்செயற்கு ஏற்ற காலத்தினை

யும் அந்நூல் நெறியால் நோக்கி, அவற்றோடு பொருந்தச் செய்க.

ஆதுரன் அளவு - பகுதி பருவம் வேதனை வலிகளின் அளவு. பிணி அளவு - சாத்தியம், அசாத்தியம், யாப்பியம் என்னும் சாதி வேறுபாடும், தொடக்கம் நடு ஈறு என்னும் அதன் பருவ வேறுபாடும், வன்மை மென்மைகளும் முதலாயின. காலம் - மேற் சொல்லியன. இம்மூன்றும் பிழையாமல் நூல்நெறியானும் உணர்வு மிகுதியானும் ஆராய்ந்து செய்க என்பார் 'கற்றான் கருதிச் செயல்' என்றார்.

இவை இரண்டு பாட்டானும் அவ் இழுக்குப்பட்டுழி மருத்துவன் தீர்க்குமாறு கூறப்பட்டது. (9)

உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வான்என்று
அப்பால்நாற் கூற்றே மருந்து. 950

மருந்து - பிணிக்கு மருந்தாவது, உற்றவன் - அதனையுற்றவன், தீர்ப்பான் - அதனைத் தீர்க்கும் மருத்துவன், மருந்து - அவ



னுக்குக் கருவியாகிய மருந்து, உழைச் செல்வான் என்ற அப்பால் நாற்கூற்று - அதனைப் பிழையாமல் இயற்றுவான் என்று சொல்லப்பட்ட நான்கு பகுதியையுடைய நான்கு திறத்தது.

நான்கு என்னும் எண் வருகின்றமையின், அதுநோக்கி 'அப்பால்' என்றொழிந்தார். 'நாற்கூற்றது' எனபது விகாரமாயிற்று. அவற்றுள் உற்றவன்வகை நான்காவன: பொருளுடைமை, மருத்துவன்வழிநிற்றல், நோய்நிலை உணர்த்தல்வன்மை, மருந்துத் துன்பம் பொறுத்தல் என்பன இவை. தீர்ப்பான்வகை நான்கா

வன கோய்கண்டு அனுனாமை, ஆசிரியனைவழி பட்டு ஓதிய கல்வி யும நுணணறிவும உடைமை, பலகாலும தீரதது வருதல, மன மொழிமெய்கள தூயவாதல என இவை. மருநதின் வகை நானகா வன பலபிணிகட்கும் ஏறறல, சுவை வீரியம் விளைவாற்றல் களான் மேம்படுதல, எளிதின எயதப்படுதல், பகுதியோடு பொருநதுதல என இவை. இயறறுவான்வகை நான்காவன ஆதுரன்மாட்டு அன்புடைமை, மனமொழிமெயகள தூயவாதல, சொலலியன அவ்வாறே செயதல வனமை, அறிவுடைமை என இவை. இவையெல்லாம் கூடியவழியலலது பிணி தீராமையின், இத தொகுதியையும 'மருநது' என்றார். ஆயுளவேதமுடையாரும் இவை காலகளாக நடக்கும என்பதுபற்றி 'பாதம' என்றும், இவை மாறுபட்டவழிச சாததியமும மூதிரநது அசாததியமாம் என்றும கூறினர்.

இதனுல அதனைத தீரததறகு வேணடுவன எல்லாம் தொகுத் துக் கூறப்பட்டன. (10)

அங்க இயல முறறும.

—:o:—

# ஒழிபு இயல்

—:o:—

இனி, அவ அரசியலினும் அங்க இயலினும அடஙகாது ஒழிநதவற்றது இயலபு பதின்மூன்று அதிகாரததால கூறு வான்தொடஙகி, முதறகண குடிமை கூறுகின்றார்.

## 96. குடிமை.

அஃதாவது உயாநத குடியின்கண் பிறநதாரது தன்மை உயாநத குடிப்பிறப்பு காலவகைவருணததாக்கும இன்றியமையாதாகலின், அசசிறப்புப்பற்றி இது முன வைக் கப்பட்டது.

**இற்பிறந்தார் கண்ணல்லது இல்லை இயல்பாகச்**
**செப்பமும் நாணும் ஒருங்கு.** **951**

11

செப்பமும் நாணும் ஒருங்கு - செம்மையும் நாணும் சேர, இற்பிறந்தார்கண் அல்லது இயல்பாக இல்லை - குடிப்பிறந்தார் மாட்டல்லது பிறர்மாட்டு இயற்கையாக உளவாகா.

'இல்' 'குடி' 'குலம்' என்பன ஒருபொருள. ஈண்டு உயர்ந்தவற்றின்மேல. செம்மை கருத்தும் சொல்லும் செயலும் தம்முள் மாறுகோளின்மை. நாண் - பழிபாவங்களின் மடங்குதல். இவை இற்பிறந்தார்க்காயின் ஒருவர் கற்பிக்கவேண்டாமல் தாமே உளவாம், பிறர்க்காயின் கற்பித்தவழியும் நெடிது நில்லா என்பதாம். (1)

ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார். 952

குடிப்பிறந்தார் உயர்ந்த குடியின்கண் பிறந்தார், ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும் இழுக்கார்-தமக்குரிய ஒழுக்கம் மெய்ம்மை நாண் எனப்பட்ட இம்மூன்றன்கண்ணும் கலவியான் அன்றித் தாமாகவே வழுவார்.

ஒழுக்கம் முதலியன மெய் மொழி மனங்களினவாகலின், அம்முறையவாயின. இழுக்குதல் அறியாது வருகின்றமையின், 'இழுக்கார்' என்றார். (2)

நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு. 953

வாய்மைக் குடிக்கு-எக்காலத்தும் திரிபில்லாத குடியின்கண் பிறந்தார்க்கு, நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும் வகை என்ப-முகமலர்ச்சியும், உள்ளன கொடுத்தலும், இன்சொற்சொல்லுதலும், இகழாமையும் ஆகிய இந் நான்கும் உரிய கூறு என்று சொல்லுவர் நூலோர்.

பொய்ம்மை திரிபுடைமையின் திரிபின்மையை 'வாய்மை' என்றும், 'இல்லாரை எல்லாரும் எள்ளுவர்' ஆகலின் இகழாமையை அவர் கூறுக்கேயும் கூறினார். 'குடி' ஆகுபெயர். 'நான்கின் வகை' என்பது பாடமாயின், வாய்மைக் குடிப்பிறந்தாருக்குப் பிறரின் வேறுபாடு இந் நான்கான் உளதாம் என்று உரைக்க.

இவை மூன்று பாட்டானும் குடிப்பிறந்தாரது இயல்பு கூறப்பட்டது. (3)

அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர். 954

*அடுக்கிய கோடி பெறினும் - பலவாக அடுக்கிய கோடி அளவிற்றாய பொருளைப் பெறுவாராயினும், குடிப்பிறந்தார் குன்றுவ செய்தல் இலர் - உயர்ந்த குடியின்கண் பிறந்தார் தம் ஒழுக்கம் குன்றும் தொழில்களைச் செய்யார்.*



*'அடுக்கியகோடி' என்பது, ஈண்டு எண்ணப்படும் பொருள் மேல் நின்றது. குன்றும் தொழில்கள் குன்றுதற்கு ஏதுவாய தொழில்கள்.* (4)

வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பின் தலைப்பிரிதல் இன்று. 955

*பழங்குடி - தொன்றுதொட்டு வருகின்ற குடியின்கண் பிறந்தார், வழங்குவது உள்வீழ்ந்தக்கண்ணும் - தாம் கொடுக்கும் பொருள் பண்டையின் சுருங்கியவிடத்தும், பண்பின் தலைப்பிரிதல் இன்று - தம் பண்புடைமையின் நீங்கார்.*

*தொன்றுதொட்டு வருதல் - 'சேர சோழ பாண்டியர்' என்றாற் போலப் படைப்புக் காலந்தொடங்கி மேம்பட்டு வருதல். அவர்க்கு நல்குரவாவது வழங்குவது உள்வீழ்வது ஆகலின், அதனையே கூறினார்.* (5)

சலம்பற்றிச் சால்பில செய்யார்மாசு அற்ற
குலம்பற்றி வாழ்தும் என்பார். 956

*மாசு அற்ற குலம் பற்றி வாழ்தும் என்பார் - வசையற்று வருகின்ற நம் குடிமையோடு ஒத்து வாழக்கடவேம் என்று கருதி அவ்வாறு வாழ்வார், சலம் பற்றிச் சால்பு இல செய்யார் - வறுமையுற்றவழியும், வஞ்சனையைப் பொருந்தி, அமைவில்லவாய தொழில்களைச் செய்யார்.*

*அமைவின்மை அம்மரபிற்கு ஏலாமை.*

*இவை மூன்று பாட்டானும் அவர் வறுமையுற்றவழியும் அவ்வியல்பின் வேறுபடார் என்பது கூறப்பட்டது.* (6)

குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து. 957

குடிப் பிறந்தார்கண் குற்றம்-உயர்ந்த குடியின்கண் பிறந்தார் மாட்டு உளதாம் குற்றம், விசும்பின் மதிக்கண் மறுப்போல உயர்ந்து விளங்கும் - தான் சிறிதேயாயினும் விசும்பின்கண் மதியிடத்து மறுப்போல ஓங்கித் தோன்றும்.

உயர்குடி முதலிய பொருள்வகை மூன்றற்கும் விசும்பு முதலிய உவமவகை ஒத்துப் பால் மாறுபட்டது. குடியது உயர்ச்சியானும் மதிபோன்ற அவர் நற்குணங்களோடு மாறுதலானும், உலகெங்கும் பரந்து வெளிப்படும் என்பதாம். (7)

**நலத்தின்கண் நார்இன்மை தோன்றின் அவனைக்**
**குலத்தின்கண் ஐயப் படும். 958**

நலத்தின்கண் நார் இன்மை தோன்றின்-குலநலமுடையனாய் வருகின்றவன்கண்ணே நார் இன்மை உளதாமாயின், அவனைக்



குலத்தின்கண் ஐயப்படும் அவனை அக் குலப்பிறப்பின்கண்ணே ஐயப்படும் உலகம்.

நலமும் குலமும் ஆகுபெயர். நாரின்மையால் கொடாமையும் கடுஞ்சொல்லும் முதலிய கூறப்பட்டன. தோன்றின் என்பது தோன்றாமை விளக்கி நின்றது. நலனுடையனாய் வருதலினிடையே இவை தோன்றலின், உளதாய ஐயமாயிற்று. உலகம் என்பதும் அவாய் நிலையான் வந்தது. ஐயப்படல் என்பது பாடமாயின், ஐயப்படுக என விதியாக்கி உரைக்க.

இவை இரண்டு பாட்டானும் வேறுபட்ட வழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. (8)

**நிலத்திற் கிடந்தமை கால்காட்டும் காட்டும்**
**குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். 959**

நிலத்திற் கிடந்தமை கால் காட்டும் - நிலத்தினியல்பை அதன்கண் முளைத்த முளை காட்டும், குலத்திற் பிறந்தார் வாய்ச்சொல் காட்டும் - அதுபோலக் குலத்தின் இயல்பை அதன்கண் பிறந்தார் வாயிற் சொல் காட்டும்.

கிடந்தமை உள்ளபடி முளைத்தமாத்திரத்தானே நன்மையும் தீமையும் தெரிதலின், இலை முதலிய கூறாராயினார், ஆகவே,

பொருளினும செயல முதலியன வேண்டாவாயின. குலதது இயல்பு அறிதற்கருவி கூறுவார் போன்று, இனசொல் வேணடு மென்ற வாறாயிற்று. (9)

நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு. 960

நலம் வேண்டின் நாண் உடைமை வேண்டும் - ஒருவன் தனக்கு நலனுடைமையை வேண்டுவனாயின், தான் நாணுடையன் ஆதலே வேண்டுக, குலம் வேண்டின் யார்க்கும் பணிவு வேண்டுக- குலனுடைமையை வேண்டுவானாயின் பணியப்படுவார் யாவர் மாட்டும் பணிதலே வேண்டுக.

நலம் - புகழ் புண்ணியங்கள். வேண்டும் என்பது விதிப் பொருட்டாய் நின்றது, "வினைப்படு தொகுதியின் உம்மை வேண்டும்" (தொல். சொல. கிளவி. 33) என்புழிப்போல. "அந் தணர் சான்றோர் அருந்தவததோர் தம்முன்னோர், தந்தை தாய் என்றிவர்" எல்லாரும் அடங்க 'யார்க்கும்' என்றார். பணிவு இருக்கை எழுவும் எதிர்செலவும் முதலாயின.

இவை இரண்டு பாட்டானும் குடிமைக்கு வேண்டுவன கூறப் பட்டன. (10)



# 97. மானம்

இனி, குடிப்பிறந்தார்க்கு உரியவாய குணங்கள கூறு வான் தொடங்கி, முதற்கண் மானம் கூறுகின்றார். அஃதா வது எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழாமையும், தெய்வத தால் தாழ்வு வநதுழி உயிர்வாழாமையும் ஆம். இஃது அக் குடிப்பிறப்பினை நிறுததுதலுடைமையின், அச் சிறப்புப்பற்றி முன் வைக்கப்பட்டது.

இன்றி அமையாச் சிறப்பின ஆயினும்
குன்ற வருப விடல். 961

இன்றி அமையாச் சிறப்பின ஆயினும் - செயயாதவழித் தாம் அமையாத சிறப்பின உடையவேயெனினும், குன்ற வருப விடல - தம் குடிப்பிறப்புத தாழவரும் செயலகளை ஒழிக.

அமையாமை - இறததல. 'குடிப்பிறப்பு' என்பது அதிகார முறைமையான் வந்தது. 'இறப்பவருவழி இளிவந்தன செய்தாயி னும உயக' என்னும வடநூல் முறைமையை மறுத்து, உடம் பினது நிலையின்மையையும் மானததினது நிலையுடைமையையும் தூக்கி அவை செய்யற்க என்பதாம். (1)

சீரினும் சீர்அல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். 962

சீரினும் சீர் அல்ல செய்யார - புகழ்செய்யுமிடத்தும் தம் குடிமைக்கு ஒவ்வாத இளிவரவுகளைச் செய்யார், சீரொடு பேராண்மை வேண்டுபவா - புகழுடனே மானததை நிறுததுதலை விரும்புவார.

எவ்விடததும் நிலைகுலையாத திண்மையான் உளதாதல பற்றி 'பேராண்மை' எனப்பட்டது. நிலையுடைய புகழின்பொருட்டாக வும செய்யார என்பதாம. (2)

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு. 963

பெருக்கததுப் பணிதல வேண்டும - குடிப்பிறந்தார்க்கு நிறைந்த செலவம் உளதாயவழி யாவாமாட்டும் பணிவு வேண்டும், சிறிய சுருக்கதது உயர்வு வேண்டும் - குறைந்த நல்குரவுளதாய வழிப் பணியாமை வேண்டும்.

பணியாமை - தாழவு வாராமற் பழைய உயர்ச்சிக்கண்ணே நிற்றல். செல்வுக்காலை அஃது உயர்ச்சி செய்யத தாம் தாழ்த லும், அல்லற்காலை அது தாழவு செய்யத தாம் உயர்தலும் வேண்டும் என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் தாம் தாழ்தற்கு ஏதுவாயின செய்யாமைச் சிறப்புக் கூறப்பட்டது. (3)

தலையின் இழிந்த மயிர்அனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை. 964

மாந்தர் - குடிப்பிறந்த மாந்தர், நிலையின் இழிந்தக்கடை - தம் உயர்ந்த நிலையை விட்டு அதனினின்றும் தாழ்ந்தவழி, தலையின் இழிந்த மயிர் அனையர் - தலையைவிட்டு அதனினின்றும் வீழ்ந்த மயிரினை ஒப்பர்.

அந் நிலையை விடாது நின்றவழிப் பேணப்படுதலும், விட்டுத் தாழ்ந்தவழி இழிக்கப்படுதலும உவமையாற் பெற்றும். (4)

குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின். 965

குன்றின் அனையாரும் - குடிப்பிறப்பான் மலைபோல உயர்ந்தோரும், குன்றுவ குன்றி அனைய செயின் குன்றுவர் - தாழ்தற்கு ஏதுவாகிய செயல்களை ஒரு குன்றி அளவாயினும் செய்வராயின் தாழ்வர்.

'குன்றியனையவும்' என்னும இழிவுசிறப்பு உம்மை விகாரத்தால் தொக்கது. தாழ்தற்கு ஏதுவாய செயல்களாவன' இனி வருதன. சொற் பின் வருகிலே. (5)

புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை. 966

இகழ்வார் பின் சென்று நிலை - மானத்தை விட்டுத் தன்னை அவமதிப்பார் பின்னே ஒருவன்சென்று நிற்கின்றநிலை, புகழ் இன்று-இவ்வுலகத்துப் புகழ் பயவாது, புத்தேள் நாட்டு உய்யாது ஏனைப் புத்தேளுலகத்துச் செலுத்தாது, மற்று என் - இனி

அவனுக்கு அது செய்வது யாது?.

புகழ் பயப்பதனை 'புகழ்' என்றார். பயனுடைய இவ் இரண்டும் இன்றிக் கொன்னே மானம் கெடுகின்றது என்னை என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் அவை செய்தற் குற்றம் கூறப்பட்டது. (6)

**ஒட்டார்பின் சென்றுஒருவன் வாழ்தலின் அந்நிலையே**
**கெட்டான் எனப்படுதல் நன்று. 967**

ஒட்டார் பின் சென்று ஒருவன் வாழ்தலின் - தன்னை இகழ்வார் பின்னே சென்று பொருள் பெற்று அதனால் ஒருவன் உயிர் வாழ்தலின், அந்நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று - அது செய்யாது இறந்தான் என்று சொல்லப்படுதல் அவனுக்கு நன்று.



ஒட்டுதல் - பொருந்துதல். 'அந்நிலையே' என்றது செல்லாத முன்னை நிலைக்கண்ணே நின்று என்றவாறு, அப்பொழுதே என்றும் ஆம். 'புகழும் புத்தேள் நாடும் பயவாதேனும் பொருள் பெற்று உயிர்வாழ்வாம்' என்பாரை நோக்கிக் கூறியது. (7)

**மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை**
**பீடுஅழிய வந்த இடத்து. 968**

பெருந்தகைமை பீடு அழிய வந்த இடத்து - உயர்குடிப்பிறப்புத் தன்வலியாகிய மானம் அழியவந்துழி, ஊன் ஓம்பும் வாழ்க்கை மற்று மருந்தோ - இறத்தலொழிந்து பயனில்லாத உடம்பினைக் காக்கும் வாழ்க்கை பின்னும் இறவாமைக்கு மருந்தாமோ?

'மற்று' என்பது மேற்சொல்லிய இறப்பினை மாற்றி நின்றது. நற்குணங்கட்கு எல்லாம் இடனாதல் சிறப்புப்பற்ற, 'பெருந்தகைமை' என்றும், அவை எல்லாவற்றுள்ளும் அத்தகு வலியாதற்சிறப்புப்பற்றி, 'பீடு' என்றும், அஃது அழிந்தால் நின்ற

வெற்றுடம்பு இழிக்கப்படுதலின், அதனை 'ஊன்' எனவும், பின்னும் இறத்தல் ஒருதலை என்பார் 'மருந்தோ' எனவும் கூறினார். மானத்தின்தொழில் அதற்கு இடனாகிய குடிப்பிறப்பின் மேல நின்றது. (8)

**மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்**
**உயிர்நீப்பர் மானம் வரின். 969**

*மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்* தன் மயிர்த்திரளின் ஒருமயிர் நீங்கினும் உயிர்வாழாத கவரிமாவை ஒப்பார், *மானம் வரின் உயிர் நீப்பர்* - உயிர் நீக்கத்தான் மானம் எய்தும் எல்லை வரின், அதனைத் தாங்காது இறப்பர்.

இழிவு சிறப்பு உம்மை விகாரத்தால் தொக்கது. உயிரும் மானமும் உடன் நில்லாமைக்கண் பின்னும் போவதாய உயிரை நீத்து என்றும் நிற்பதாய மானத்தை எய்துவர் என்பதாம். உவமை அவர்க்கு அஃது இயல்பு என்பது விளக்கி நின்றது. (9)

**இளிவரின் வாழாத மானம் உடையார்**
**ஒளிதொழுது ஏத்தும் உலகு. 970**

*இளி வரின் வாழாத மானம் உடையார் ஒளி* - தமக்கு இழிவு வந்துழிப் பொறுத்து உயிர்வாழாது அதனைநீத்த மானமுடையாரது புகழ்வடிவினை, *தொழுது ஏத்தும் உலகு* - என்றும் தொழுது துதியாநிற்பர் உலகத்தார்.

"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவன் ஏவா வானவூர்தி - எய்துவர்" (புறநா. 27) ஆகலின், துறக்கச்செலவு சொல்ல வேண்டாவாயிற்று.

இவை நான்கு பாட்டானும் மானப்பொருட்டாய இறப்பினது சிறப்புக் கூறப்பட்டது. (10)



# 98. பெருமை

அஃதாவது செயற்கு அரிய செய்தல, தருக்கு இன்மை, பிறர் குற்றம் கூறுமை என்றிவை முதலிய நற் குணங்களாற் பெரியாரது தன்மை. நிலையினும் மேன் மேல் உயர்த்தல் பயத்தவாயல் இவை உளவாவது நிலையில் தாழாமை உளவழியாகலின், இது மானத்தின் பின் வைக்கப் பட்டது.

ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை இளியொருவற்கு
அஃதுஇறந்து வாழ்தும் எனல். 971

ஒருவற்கு ஒளி உள்ள வெறுக்கை - ஒருவனுக்கு ஒளியாவது பிறரால் செயற்கரிய செய்வேம் என்று கருதும் ஊக்கமிகுதி, ஒரு வற்கு இளி அஃது இறந்து வாழ்தும் எனல் - ஒருவனுக்கு மாசாவது அச் செயலையொழிந்து உயிர்வாழக்கடவேம் என்று கருதுதல்.

ஒளி: தான் உளனுய காலத்து மிக்குத தோன்றுதலுடைமை' "ஒளிநிறுன் ஒக்கு புகழ் செய்யான்" (நாலடி. 9) என்றார் பிறரும்' மேலும் 'செயற்கரிய செய்வார் பெரியர்' (குறள். 26) என்றார் ஆயினும், ஈண்டு அவை அளவிறந்த ஒப்புரவு ஈகை முதலியவாம். அவற்றினுடைய பெருமையை அதன் காரணத்தின்மேலிட்டு 'உள்ள வெறுக்கை'யென்றும், அது தன்னையே அதன்காரியமாகிய ஒளி ஆக்கியும் கூறினார். இவ்வாறு இதன் எதிர்மறைக்கண்ணும் ஒக்கும்.

இதனுன் பெருமையின் சிறப்புக் கூறப்பட்டது. (1)

பிறப்புஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்புஒவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். 972

எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒக்கும் - எல்லா மக்களுயிர்க்கும் பொதுவாகிய பிறப்பியல்பு ஒக்குமேயெனினும், சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமையான் - பெருமை சிறுமை எனப்பட்ட சிறப்பியல்புகள ஒவ்வா அவை செய்யும் தொழில்களது வேறு பாட்டான்.

வேறுபாடு: நல்லனவும், தீயனவும், இரண்டுமாயினவும், இரண்டுமல்லவாயினவுமாய அளவிறந்த பாகுபாடுகள. வினை வயத்தாற் பஞ்சபூதபரிணும மாகிய யாக்கையைப் பொருந்தி

நின்று, அதன் பயன் அநுபவித்தல் எல்லா வருணத்தார்க்கும் ஒத்தலின் 'பிறப்பு ஒக்கும்' என்றும், பெருமை சிறுமைகட்குக் கட்டளைக்கல்லாகிய தொழிற்பாகுபாடுகள் வருணந்தோறும் யாக்கைதோறும் வேறுபடுதலின், 'சிறப்பு ஒவ்வா' என்றும் கூறினர். (2)



மேல்இருந்தும் மேலல்லார் மேல்அல்லர் கீழ்இருந்தும்
கீழ்அல்லர் கீழல்ல வர். 973

*மேல் அல்லார் மேல் இருந்தும் மேல் அல்லர்* - செயற்கரிய செய்கலாது சிறிய ராயினர், உயர்ந்த அமளி முதலியவற்றின் மிசை இருந்தாராயினும் பெரியராகார்; *கீழ் அல்லவர் கீழ் இருந்தும் கீழ் அல்லர்* - அவைசெய்து பெரியராயினர், தாழ்ந்த வறு நிலத்திருந்தாராயினும் சிறியராகார்.

மேலிருத்தல் கீழிருத்தல்களால் செல்வ நல்குரவுகளும், மேல் கீழ்களால் பெருமை சிறுமைகளும், கருதப்பட்டன.

இவை இரண்டு பாட்டானும் முறையே குடிமைமாத்திரத் தானும் செல்வமாத்திரத்தானும் அஃது உளதாகாமை கூறப் பட்டது. (3)

ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டுஒழுகின் உண்டு. 974

*ஒருமை மகளிரே போல* - கவராதமனத்தினையுடைய மகளிர் நிறையின் வழுவாமல் தம்மைத் தாம் காத்துக் கொண்டொழுகு மாறுபோல, *பெருமையும் தன்னைத் தான் கொண்டு ஒழுகின் உண்டு* - பெருமைக்குணனும், ஒருவன் நிறையின் வழுவாமல் தன்னைத் தான் காத்துக்கொண்டொழுகுவானாயின், அவன்கண் உண்டாம்.

பொருளின் தொழில் உவமையினும் வந்தது. கற்புண்டாதல் தோன்ற நின்றமையின், உம்மை எச்ச உம்மை. ஒழுகுதல் - மனம்மொழி மெய்களை ஒடுக்கி ஒப்புரவு முதலிய செய்துபோதல்.

இதனான் அஃது உளதாமாறு கூறப்பட்டது. (4)

பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல். 975

*பெருமை உடையவர் - அவ்வாற்றால் பெருமையுடையராயினார், அருமை உடைய செயல் ஆற்றின் ஆற்றுவார் - தாம் வறியராயவழியும் பிறரால் செய்தற்கு அரியவாய தம் செயல்களை விடாது அவை செய்யும் நெறியால் கடைபோகச்செய்தலை வல்லராவர்.*

*'வறியராயவழியும்' என்பது, முன்செய்து போந்தமை தோன்றப் 'பெருமை உடையவர்' என்றதனானும், 'ஆற்றுவார்' என்றதனானும் பெற்றாம்.*

*இதனான் அதனை உடையார் செய்தி கூறப்பட்டது.* (5)

சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேம்என்னும் நோக்கு. 976



*பெரியாரைப் பேணிக் கொள்வேம் என்னும் நோக்கு - அப்பெற்றியராய பெரியாரை வழிப்பட்டு அவர் இயல்பினை யாம் கோடும் என்னும் கருத்து, சிறியார் உணர்ச்சியுள் இல்லை மற்றைச் சிறியராயினார் மனத்தின்கண் உளதாகாது.*

*குடிமை, செல்வம், கலவி என்று இவற்றது உண்மை மாத்திரத்தால் தம்மை வியந்திருப்பார்க்கு, அவை தமக்கு இயல்பு என்று அமைந்திருப்பாரை வழிபட்டு, அஃது உடையராதல் கூடாது என்பதாம்.* (6)

இறப்பே புரிந்த தொழிற்றுஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கண் படின். 977

*சிறப்பு தானும் - தனக்கு ஒக்கும் பெரியாரிடத்து அமைந்திருத்தலைச் செய்வதாய சிறப்புத்தானும், சீர் அல்லவர்கண் படின் - தனக்கு ஒவ்வாத சிறியாரிடத்துப் படுமாயின், இறப்பே புரிந்த தொழிற்றும் - அதனை ஒழிந்து தருக்கின் கண்ணே மிக்க செயலை உடைத்தாம்.*

தருக்கினை மிகச்செய்யும் என்பதாயிற்று. சிறப்பு குடிமை, செல்வம், கல்விகளினாய மிகுதி.

இவை இரண்டு பாட்டானும் அஃதிலார் செய்தி கூறப் பட்டது. (7)

பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து. 978

பெருமை என்றும் பணியும்-பெருமையுடையார் அச் சிறப்பு உண்டாய ஞான்றும் தருக்கின்றி அமைந்தொழுகுவர், சிறுமை (என்றும்) தன்னை வியந்து அணியும்-மற்றைச் சிறுமையுடையார் அஃதில்லாதஞான்றும் தம்மை வியந்து புனையாநிற்பார்.

பொருளின் தொழில்கள் பண்பின்மேல ஏற்றப்பட்டன. இஃது 'அற்றம் மறைக்கும் பெருமை' (குறள் 980) என்புழியும் ஒக்கும். என்றும் என்பது பின்னும் வந்து இயைந்தது. ஆம் என்பன இரண்டும் அசை. புனைதல் - பிறரின் தமக்கு ஓர் மிகுதியை ஏற்றுக்கோடல். இதற்கு, 'உயர்ந்தார் தாழுவார் தாழ்ந்தார் உயர்வார், இஃதொரு விரோதம் இருந்தவாறு என்?' என உலகியலை வியந்து கூறிற்று ஆக்குவாரும் உளர். (8)

பெருமை பெருமிதம் இன்மை சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல். 979

பெருமை பெருமிதம் இன்மை - பெருமைக்குணமாவது காரணமுண்டாயவழியும் அஃது இயல்பாதல் நோக்கித் தருக்கின்றியிருத்தல், சிறுமை பெருமிதம் ஊர்ந்து விடல் - சிறுமைக் குணமாவது அஃது இல்வழியும் அதனை ஏற்றுக்கொண்டு தருக்கின் முடிவின்கண்ணே நின்றுவிடுதல்.



அளவறத் தருக்குதல் என்பதாயிற்று. 'விடும்' என்று பாடம் ஓதுவாரும் உளர்; முற்றுத்தொடரும் எழுவாய்த் தொடரும் தம்முள் இயையாமையின், அது பாடமன்மை உணர்க.

அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். 980

பெருமை அற்றம் மறைக்கும் - பெருமையுடையார் பிறர் மானத்தையே கூறி அவமானத்தை மறையா நிற்பர், சிறுமை குற்றமே கூறிவிடும் - மற்றைச்சிறுமையுடையார் பிறர்குணத்தை மறைத்துக் குற்றத்தையே கூறிவிடுவர்.

மறைத்தலும் கூறலும் ஏனையிடத்தும் இயைந்தன. அற்றம்-ஆகுபெயர். தான் என்பது அசை.

இவை மூன்று பாட்டானும் இருவர் செயலும் ஒருங்கு கூறப்பட்டன. (10)

## 99. சான்றாண்மை

அஃதாவது பல குணங்களானும் நிறைந்து அவற்றை ஆளுதல் தன்மை. 'பலகுணங்களானும்' என்பது சாலுதல் தொழிலால் பெறப்படுதலின் 'அவற்றை' என்பது வருவிக்கப்பட்டது. பெருமையுள் அடங்காத குணங்கள் பலவற்றையும் தொகுத்துக்கொண்டு நிற்றலின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

கடன்என்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. 981

கடன் அறிந்து சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு - தமக்குத் தகுவது இது என்று அறிந்து சான்றாண்மையை மேற்கொண்டொழுகுவார்க்கு, நல்லவை எல்லாம் கடன் என்ப - நல்லனவாய குணங்கள் எல்லாம் இயல்பாயிருக்கும் என்று சொல்லுவர் நூலோர்.

சில குணங்கள் இல்வாய வழியும், உள்ளன செய்துகொண்டனவாயவழியும் சான்றாண்மை என்னும் சொற்பொருள் கூடாமையின், நூலோர் இவ் ஏதுப்பெயர் பற்றி அவர் இலக்கணம் இவ்வாறு கூறுவர் என்பதாம். (1)

குணநலம் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத் துள்ளதூஉம் அன்று. 982

*சான்றோர் நலன் குணநலமே - சான்றோர் நலமாவது குணங்களாகிய நலமே, பிற நலம் எந்நலத்தும் உள்ளது அன்று—அஃது ஒழிந்த உறுப்புக்களாகிய நலம் ஒருநலத்தினும் உள்ளதன்று.*



*அகநலத்தை முன்னே பிரித்தமையின், ஏனைப் புறநலத்தை 'பிறநலம்' என்றும், அது குடிப்பிறப்பும் கல்வியும் முதலாக நூலோர் எடுத்த நலங்களுள் புகுதாமையின் எந்நலத்துள்ளதூஉம் அன்று என்றும் கூறினார்.*

*இவை இரண்டு பாட்டானும் சால்பிற்கு ஏற்ற குணங்கள் பொதுவகையால் கூறப்பட்டன.* (2)

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண். 983

*அன்பு - சுற்றத்தார்மேலேயன்றிப் பிறர்மேலும் உளதாய அன்பும், நாண் - பழிபாவங்களின் நாணலும், ஒப்புரவு - யாவர் மாட்டும் ஒப்புரவு செய்தலும், கண்ணோட்டம் - பழையார்மேல் கண்ணோடலும், வாய்மையொடு - எவ்விடத்தும் மெய்ம்மை கூறலும் என, சால்பு ஊன்றிய தூண் ஐந்து - சால்பு என்னும் பாரத்தைத் தாங்கிய தூண்கள் ஐந்து.*

*எண்ணொடு முன்னவற்றோடும் கூடிற்று. இக்குணங்கள் இல்வழிச் சால்பு நிலைபெறாமையின், இவற்றைத் 'தூண்' என்றார். ஏகதேச உருவகம்.* (3)

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. 984

கோன்மை கொலலா நலததது – பிற அறங்களும் வேண்டு மாயினும் தவம் ஓர் உயிரையும கொலலாத அறததின்கண்ணதாம், சாலபு பிறாதிமை சொல்லா நலததது – அதுபோலப் பிற குணங் களும் வேண்டுமாயினும் சால்பு பிறர் குறறததைச் சொலலாத குணததின் கணணதாம்.

நலம என்னும் ஆகுபெயர்ப்பொருள இரண்டனையுந் தலைமை தோன்ற, இவ்இரண்டற்கும் அதிகாரமாக்கிக்கூறினர். தவததிற்குக் கொல்லா வரம சிறநதாறபோலச் சால்பிற்குப் பிறா குற்றஞ் சொலலாக் குணம் சிறநதது என்பதாம். (4)

ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை. 985

ஆற்றவார் ஆற்றல் பணிகல் - ஒரு கருமத்தைச் செய்து முடிப்பாரது ஆற்றலாவது அதறகுத துணையாவாரைத் தாழ்ந்து கூட்டிக்கொளளுதல, சான்றோா மாற்றாரை மாற்றும் படை அது - இனிச் சாலபுடையாா தம பகவரைப் பகைமையொழிக்குங் கருவியும் அதுவே.

ஆற்றல் அது வல்லராந் தன்மை. இறந்தது தழீஇய எச்ச உம்மை விகாரததால் தொக்கது. சால்பிற்கு ஏற்ற பணிதற் குணத்தது சிறப்புக் கூறுவார், ஏனையதும் உடன் கூறினர். (5)



சால்பிற்குக் கட்டளை யாதுஎனின் தோல்வி
துலைஅல்லார் கண்ணும் கொளல். 986

சால்பிற்குக் கட்டளை யாது எனின்–சாலபாகிய பொன்னின் அளவறிதற்கு உரைகல்லாகிய செயல் யாது எனின், தோல்வி துலை அலலாா கண்ணும் கொளல்-அது தமமின் உயாநதார்மாட்டுக் கொளளும் தோலவியை இழிநதாாமட்டும கோடல.

துலை - ஒப்பு. எச்ச உமமையான் இருதிறததார் கண்ணும் வேண்டுதல பெற்றும். கொளளுதல வெலலும ஆறறலுடையரா யிருநதே ஏறறுக்கொளளுதல. இழிநதாரை வெலலுதல கருதித் தம்மோடு ஒப்பிததுக்கொளளாது, தோலவியான் அவரினும் உயர் வராயின், அதனால சாலபளவு அறியப்படும என்பதாம. (6)

இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு. 987

*இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் - தமக்கு இன்னாதவற்றைச் செய்தார்க்கும் சால்புடையார் இனியவற்றைச் செய்யாராயின், சால்பு என்ன பயத்தது - அச் சால்பு வேறு என்ன பயனை உடைத்து.*

*சிறப்பு உம்மை அவர் இன்னாசெய்தற்கு இடனாதல் விளக்கி நின்றது. ஓகாரம் அசை. வினா - எதிர்மறைப்பொருட்டு. தாமும் இன்னாசெய்வராயின், சால்பால் ஒருபயனுமில்லை என்பதாம்.*

*இவை ஐந்து பாட்டானும் சிறப்புவகையால் கூறப்பட்டது.*(7)

இன்மை ஒருவற்கு இளிவன்று சால்புஎன்னும்
திண்மைஉண் டாகப் பெறின். 988

*சால்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின்—சால்பு என்று சொல்லப்படும் வலி உண்டாகப்பெறின், ஒருவற்கு இன்மை இளிவு அன்று - ஒருவனுக்கு நல்குரவு இளிவாகாது.*

*தளராமை நாட்டுதலின் வலியாயிற்று. இன்மையான் வருவதனை இன்மையாக உபசரித்துக் கூறினார். சால்புடையார் நல்கூர்ந்தவழியும் மேம்படுதலுடையார் என்பதாம்.* (8)

ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார். 989

*சான்றாண்மைக்கு ஆழி எனப்படுவார் - சால்புடைமையாகிய கடற்குக் கரை என்று சொல்லப்படுவார், ஊழி பெயரினும் தாம் பெயரார் - ஏனைக்கடலும் கரையுள் நில்லாமற் காலந் திரிந்தாலும் தாம் திரியார்.*

*சான்றாண்மைக்குப் பெருமைதோன்ற அதனைக்கடலாக்கியும், அதனைத் தாங்கிக் கொண்டுநிற்றலின் அஃதுடையாரைக் கரை*



*யாக்கியும் கூறினார், "பெருங்கடற்கு ஆழியனையன் மாதோ" (புறநா. 330) என்றார் பிறரும். ஏகதேச உருவகம்.* (9)

சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை. 990

*சான்றவர் சான்றாண்மை குன்றின் - பலகுணங்களானும் நிறைந்தவர் தம் தன்மை குன்றுவராயின், இருநிலந்தான் பொறை தாங்காது - மற்றை இருநிலந்தானும் தன்பொறையைத் தாங்காத தாய் முடியும்.*

*'தானும்' என்னும் எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. அவர்க்கு அது குன்றாமையும் அதற்கு அது தாங்கலும் இயல் பாகலான், அவை என்றான்றும் உளவாகா என்பது தோன்ற நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம் அசை. இதற்கு 'இரு நிலம் பொறை தாங்குவது சான்றவர் துணையாக வருதலான்' அதுவும் அது தாங்கலாற்றாது என்று உரைப்பாரும் உளர்.*

*இவை மூன்று பாட்டானும் அவற்றான் நிறைந்தவரது சிறப் புக் கூறப்பட்டது.* (10)

## 100. பண்பு உடைமை

*அஃதாவது பெருமை சான்றாண்மைகளில் தாம் வழு வாதுநின்றே எல்லார் இயல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதல்; "பண்பெனப் படுவது பாடறிந்தொழுகல்" (கலித். நெய்தல். 16) என்றார் பிறரும். அதிகாரமுறைமையும் இத னானே விளங்கும்.*

எண்பதத்தால் எய்தல் எளிதுஎன்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு. 991

*யார்மாட்டும் எண்பதத்தால் - யாவர்மாட்டும் எளிய செவ்வி யராதலால், பண்புடைமை என்னும் வழக்கு எய்தல் எளிது என்ப - அரிதாய பண்புடைமை என்னும் நன்னெறியினை எய்துதல் எளிது என்று சொல்லுவர் நூலோர்.*

*குணங்களால் நிறைந்து செவ்வி எளியருமாயக்கால் பண் புடைமை தானே உளதாம் ஆகலின், எண்பதத்தால் எய்தல் எளிது என்றும், அஃது உலகத்தையெல்லாம் வசிகரித்தற் பயத்ததாகலின் அதனைத் தொல்லோர் சென்ற நன்னெறியாக்கி யும், அதனை எளிதின் எய்துதற்கு இது நூலோர் ஒதிய உபாயம் என்பார் அவர்மேல வைத்தும் கூறினார்.* (1)

அன்புஉடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்இரண்டும்
பண்புஉடைமை என்னும் வழக்கு. 992



*அன்பு உடைமை ஆன்ற குடிப் பிறத்தல் இவ் இரண்டும் - பிறர்மேல் அன்பு உடையனுதலும் உலகததோடு அமைந்த குடியின்கண் பிறததலும் ஆகிய இவ்இரண்டும், பண்பு உடைமை என்னும் வழக்கு-ஒருவனுக்குப் பண்பு உடைமை என்று உலகத்தார் சொலலும நன்னெறி.*

*அமைதல ஒததுவருதல். 'குடிப்பிறததல்' என்றது பிறந்தார் செயலே. தனிததவழி ஆகாது இரண்டும கூடியவழியே ஆவதென் பது தோன்ற, முற்றுமமை கொடுததார். காரணங்கள காரியமாக உபசரிக்கப்பட்டன.*

*இவை இரண்டு பாட்டானும பண்பு உடையர் ஆதற்காரணம் கூறப்பட்டது.* (2)

உறுப்புஒத்தல் மக்கள்ஒப்பு அன்றுல் வெறுத்தக்க
பணபுஒத்தல ஒப்பதாம் ஒப்பு. 993

*உறுப்பு ஒததல மக்கள ஒப்பு அன்று - செறியத்தகாத உடமபால ஒததல ஒருவனுக்கு நன்மக்களோடு ஒப்பாகாமையின் அது பொருநதுவதன்று, ஒப்பதாம ஒப்பு வெறுததக்க பண்பு ஒததல - இனிப் பொருந்துவதாய ஒப்பாவது செறியத தக்க பண்பால ஒததல.*

*வடநூலார் 'அங்கம்' என்றமையின் 'உறுப்பு' என்முர். ஒருவனுக்கு நன்மக்களொடு பொருந்துவதும ஒப்பாவது உயிரின் வேறாய் நிலையுதல இல்லா உடமபு ஒததல அன்று, வேறன்றி நிலையுத லுடைய பண்பு ஒததலாகலான், அபபெற்றிததாய அவர் பண்பினையுடையன் ஆக என்பதாம.* (3)

நயனெடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு. 994

நயனொடு நன்றி புரிந்தபயன் உடையார் பண்பு - நீதியையும் அறத்தையும் விரும்புதலால் பிறர்க்கும் தமக்கும் பயன்படுதல் உடையாரது பண்பினை, உலகு பாராட்டும் - உலகத்தார் கொண்டாடாநிற்பர்.

'புரிந்த' என்னும் பெயரெச்சம் ஈண்டு காரணப்பொருட்டு. நயனொடு நன்றி புரிதலும் பயனுடைமையும் பண்புகாரணமாக வந்தமையின், 'அதனைப்பாராட்டும்' என்றார். (4)

**நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்**
**பண்புஉள பாடறிவார் மாட்டு.** 995

இகழ்ச்சி நகையுள்ளும் இன்னாது-தன்னையிகழ்தல் ஒருவற்கு விளையாட்டின் கண்ணும் இன்னாது, பாடு அறிவார்மாட்டுப் பகை

யுள்ளும் * பண்பு உள - ஆகலாற் பிறர் பாடு அறிந்தொழுகுவார் மாட்டுப் பகைமையுள் வழியும் அஃது உளதாகாது இனியவாய பண்புகளே உளவாவன.



'பாடறிவார்' எனவே, அவ் இன்னாமையறிதலும் பெற்றாம். அதனை அறிந்தவர் பின் அது செய்யார்; இனியவே செய்வார் என்பது கருத்து. இதற்குப் பிறரெல்லாம் இரண்டு தொடரும் தம்முள் இயையாமல் உரைப்பாரும், 'இன்னாது' என்னும் சொற் குப் பிறவாது என்று உரைப்பாருமாயினார். (5)

**பண்புஉடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்**
**மண்புக்கு மாய்வது மன்.** 996

பண்பு உடையார்ப் பட்டு உலகம் உண்டு - பண்புடையார் கண்ணே படுதலால் உலகியல் எஞ்ஞான்றும் உண்டாய் வாரா நின்றது, இன்றேல் அது மண்புக்கு மாய்வது-அண்டுப்படுதலில்லை யாயின், அது மண்ணின்கண் புக்கு மாய்ந்துபோவதாம்.

'பட' என்பது திரிந்து நின்றது. உலகம் - ஆகுபெயர். மற்றைப் பண்பிலலார் சார்பன்மையின் ஓர்சார்புமின்றி மண் ணின்கண் புக்கு மாய்மது வேண்டாவாயிற்று என்பது பட நின்ற மையின், மன் ஒழியிசைக்கண் வந்தது.

இவை நான்கு பாட்டானும் அதனையுடையாரது உயர்ச்சி

கூறப்பட்டது. (6)

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர். 997

*மக்கட் பண்பு இல்லாதவர்-நன்மக்கட்கே உரிய பண்பிலலாத வர், அரம்போலும கூர்மையரேனும் – அரததின் கூர்மை போலும் கூாமையை உடையரேயாயினும், மரம் போல்வர் - ஓர் அறிவிற்றுய மரததினை ஒப்பர்.*

*அரம்-ஆகுபெயர். ஓர் அறிவு – ஊற்றினையறிதல. உவமை இரண்டனுள, முன்னது தான் மடிவின்றித தன்னையுறற பொருளை கனை மடிவித்தலாகிய தொழிலபறறி வநதது, ஏனையது விசேடவறி வின்மையாகிய பண்புபறறி வநதது. அவ் விசேட அறிவிறகுப் பயனுய மக்கட்பண்பு இனமையின், அதுதானும இலலை என்பதாயிற்று.* (7)

நன்புஆற்ரு ராகி நயமில செய்வார்க்கும்
பண்புஆற்ரு ராதல் கடை. 998

*நண்பு ஆற்ருராகி நயம் இல செய்வாக்கும் – தம்மொடு நட்பினைச செயயாது பகைமையைச் செய்தொழுகுவார்மாட்டும், பண்பு ஆற்ருராதல் கடை – தாம் பண்புடையராய் ஒழுகாமை அறிவுடையார்க்கு இழுக்காம்.*

*நயம் – ஈரம். சிறப்பு உம்மை அவர் பண்பாற்ருமைக்கிடனு தல் தோன்றநின்றது. அதனைச் செயயின் தாமும் அவர் தன்மையராவர் என்பார், 'கடை' என்ருர்.* (8)



தகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள். 999

*தகல் வல்லர் அல்லார்க்கு - பண்பின்மையான் ஒருவரோடும் கலந்து உளமகிழ்தல்மாட்டாதார்க்கு, மாயிரு ஞாலம் பகலும் இருட்பாற் பட்டன்று – மிகவும் பெரிய ஞாலம் இருளில்லாத*

பகறபொழுதினும் இருளின்கண் கிடக்ததாம.

எலலாரோடும் கலநதறியப்பெறுமையின் பண்பில்லார்க்கு உலகியல் தெரியாது என்பார், 'உலகம் இருளின்கண்பட்டது' என்றார். 'பாழுபட்டன்று இருள' என்று பாடம் ஓதி, 'இருள நீக்கிறறன்று' என்று உரைப்பாரும உளா. (9)

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று. 1000

பண்பு இலான் பெறற பெருஞசெலவம் – பண்பில்லாதவன் முன்னைநல் வினையான் எய்திய பெரிய செலவம் அக்குறறத்தால் ஒருவற்கும் பயன்படாது கெடுதல், நன்பால கலந்தீமையால திரிந் தற்று - நல்ல ஆன்பால ஏறற கலததின் குற்றத்தால் இன்சுவைத் தாகாது கெட்டாற்போலும.

'கலததீமை' என்பது மெலிந்துநின்றது. தொழிலுவமமாக வின் பொருளின்கண் ஒதத தொழில வருவிக்கப்பட்டது. படைக் கும ஆற்றலஇலலாதல தோன்ற 'பெற்ற' என்றும,எலலாப்பயனும் கோடறகு ஏறற இடனுடைமைதோன்ற, 'பெருஞ்செலவம்' என்றும் கூறினா. அச செல்வமும பயன்படாது என்ற இதனான் வருகின்ற அதிகாரப் பொருண்மையும் தோறறுவாய் செய்யப் பட்டது.

இவை நான்கு பாட்டானும அஃதுஇலலாரது இழிவு கூறப் பட்டது. (10)

## 101. நன்றியில் செல்வம்

அஃதாவது ஈட்டியாறகும் பிறர்க்கும் பயன்படுதல இல்லாத செலவத்ினது இயலபு. உடையானது குறறம் செலவததின்மேல ஏறறப்பட்டது. அதிகார முறைமைமேல தோறறுவாய செயத அதனுன் பெறறும.

வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுஉண்ணான்
செத்தான் செயக்கிடந்தது இல். 1001

வாய்சான்ற பெருமபொருள வைததான் அஃது உண்ணான் - தன்மனை அகலமெல்லாம நிறைதறகு ஏதுவாய பெருமபொருளை ஈட்டிவைத்து உலோபததால அதனை உண்ணாதவன், செததான் செயக் கிடந்தது இல – உளனாயினும செததானும, அதன்கண அவனால் செயக்கிடநததோர் உரிமை இன்மையான்.

வைத்தான் என்பது முற்றெச்சம். உண்ணுதல் அதனுன் ஐம்புலன்களையும் நுகர்தல். 'வாய்சான்றபெருமபொருளை வைததாஞெருவன் அதனையுண்ணுது செததவழி அதன்கண் அவனுற்செய்யக் கிடக்ததோர உரிமையிலலையாகலான், வையாது பெற்றபொழுதே நுகாக' என்று உரைப்பினும் அமையும. இதற்கு 'செததான்' என்பது எசசம்.

இதனல ஈட்டியானுக்குப் பயன்படலின்மை கூறப்பட்டது. ()

பொருளான்ஆம் எல்லாம்என்று ஈயாது இவறும்
மருளான்ஆம் மாணுப் பிறபபு. 1002

பொருளான் எல்லாம் ஆம் என்று - பொருளொன்றும் உண்டாக அதனுல எல்லாம உண்டாம என்றறிநது அதனை ஈட்டி, ஈயாது இவறும மருளான் - பின் பிறாக்கு ஈயாது பற்றுளளம்செயயும மயக்கததாலே, மாணுப் பிறப்பு ஆம் - ஒருவனுக்கு நிறைதலிலலாத பேயப்பிறப்பு உணடாம.

இருமையினும எயதும இன்பங்கள பலவும அடங்க 'எலலாம்' என்றும, ஈட்டுதற்கு முன் உணடாய அறிவு பின மயக்குதலின், 'மருள' என்றும், பொருளுணடாயிருக்கப் பிறாபசி கணடிருந்த தீவினைபற்றி உணவுகள உளவாயிருக்கப் பசிததுவருநதும் பிறப்பு உளதாம் என்றும் கூறினா. (2)

ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம நிலக்குப் பொறை. 1003

ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர் தோற்றம் - யாம் பிறரின்மிக ஈட்டுதும் என்று பொருளினது ஈட்டல மாததிரததை யேவிரும்பி அதன் பயனுய புகழை விரும்பாத மக்களது பிறப்பு, நிலக்குப் பொறை - நிலததிற்குப் பாரமாம அததுணையே.

இசை இருமைக்கும உறுதியாய அறமாகலின் ஈகையான்

அதனையே வேண்டல் செய்யாது பட்டல் துன்பத்தையும் காத்தல் துன்பத்தையும் வேண்டிய அறிவின்மை பற்றி 'நிலக்குப்பொறை' என்றார். பிறப்பு என்றது அதற்கு உரிய உடம்பினை. (3)

எச்சம்என்று என்எண்ணுங் கொல்லோ ஒருவரான்
நச்சப் படாஅ தவன் 1004

ஒருவரான் நச்சப்படாதவன் - ஒருபொருளும் ஈத்தறியாமை யின் ஒருவராலும் நச்சப்படுதல் இல்லாதவன், எச்சம் என்று என் எண்ணுங்கொல் - தான் இறந்தவழி ஈண்டு ஒழிந்து நிற்பதாக யாதனைக்கருதுமோ?

ஈண்டு ஒழிந்து நிற்கும்புகழ ஈவான்மேலன்றி நில்லாமையின், அவனுக்கு அதனோடு யாதும் இயைபு இல்லை என்பார், 'என் எண்ணும்கொல்லோ' என்றார். ஓகாரம் - அசை.



இவை மூன்று பாட்டானும் பிறர்க்குப் பயன்படலின்மை கூறப்பட்டது. (4)

கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
கோடிஉண் டாயினும் இல் 1005

கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு - பிறர்க்கு ஈவதும் தாம் நுகர்வதுமாய இரண்டு செய்கையும் உடையரல்லாதார்க்கு, அடுக்கிய கோடி உண்டாயினும் இல் - பலவாக அடுக்கிய கோடிப் பொருளுண்டாயினும் ஒன்றும் இல்லை.

இன்பத்தினும் அறம் சிறத்தலமையின், கொடுத்தல் தொழில் முற்கூறப்பட்டது. 'அடுக்கியகோடி' என்றது ஈண்டு எண்ணப் படும் பொருள்மேல் நின்றது. ஒன்றுமில்லார் போலப் பயனிரண் டும் இழத்தலின், 'இல்' என்றார். (5)

ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்குஒன்று
ஈதல் இயல்பிலா தான். 1006

தான் துவ்வான் தக்கார்க்கு ஒன்றுஈதல்இயல்பிலாதான்-தான் நுகராதே அதன்மேலும் தகுதியுடையார்க்கு அவர்வேண்டிய

தோன்றனை ஈதலியற்கை இலனாயினன், பெரும செல்வம் ஏதம்- இரண்டும் செய்தற்கு இடனுடைத்தாய செல்வத்திற்கு ஒரு நோய்.

தகுதி - தானம் கோடற்கு ஏற்புடைமை. ஏதம் - ஆகுபெயர். நுகரப்படுதலும் ஈயப்படுதலுமாகிய தொழிற்கு உரியதனை அன் றாக்கினமையின், 'நோய்' என்றார். 'ஈதல் இயல்பிலாதானது பெருஞ்செல்வம் அவனுக்குப் பட்டல் காத்தல் முதலியவற்றால் துன் பமேயாம்' என்று உரைப்பாரும் உளர்.

இவை இரண்டு பாட்டானும் அவ் இருமையும் உடன் கூறப் பட்டன. (6)

## அற்றார்க்குஒன்று ஆற்றாதான் செல்வம் மிகுநலம்
## பெற்றாள் தமியள்மூத் தற்று. 1007

அற்றார்க்கு ஒன்று ஆற்றாதான் செல்வம் - ஒருபொருளுமில ராயினார்க்கு அவர் வேண்டியதொன்றனைக் கொடாதானது செல வம் கொன்னே கழிதல், மிகுநலம் பெற்றாள் தமியள் மூத்தற்று- பெண்டிரின் மிக்க நலத்தினைப் பெற்றாளொருத்தி கொடுப்பாரின்

மையின் கொழுநன் இன்றித் தமியளாய் மூத்த தன்மைத்து.

நலம்-வடிவின் நன்மையும் குணத்தின் நன்மையும். இரண்டும் ஒருக்கு பெறுதல் அரிதாகலின், 'பெற்றாள்' என்றார். கொடுப் பாரும் கொழுநனுமேயன்றித் தானும் பயன் இழந்து கழிந்த குமரி யோடு உவமை கூறினமையின், தானும் ஏற்பானுமேயன்றிச் செல்வமும் பயனிழந்து கழியும் என்பதாயிற்று. (7)



## நச்சப் படாதவன் செல்வம் நடுஊருள்
## நச்சு மரம்பழுத் தற்று. 1008

நச்சப்படாதவன் செல்வம் - வறியார்க்கு அணியனாயிருந்தும் ஒன்றுங்கொடாமையின் அவரான் நச்சப்படாதவன் செல்வ மெய்துதல், ஊர் நடுவுள் நச்சுமரம் பழுத்தற்று-ஊரிடைநிற்பதோர் நச்சுமரம் பழுத்தாற்போலும்.

'நடுவூர்' என்பது பின்முன்னாகத்தொக்க ஆறும்வேற்றுமைத் தொகை. அண்மை உடைமைகளாற் பயனில்லை என்பதாம். (8)

அன்புஒரீஇத் தற்செற்று அறம்நோக்காது ஈட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர். 1009

அன்பு ஒரீஇ - ஒருவன் கொடாமைப்பொருட்டுச் சுற்றத்தார் நட்டார் கண் அன்பு செய்தலையொழிந்து, தன்செற்று - வேண்டுவன நுகராது தன்னைச்செறுக்க, அறம் நோக்காது - வறியார்க்கு ஈதல் முதலிய அறத்தை நினைப்பதும செய்யாது, ஈட்டிய ஒண் பொருள கொளவார் பிறா - ஈட்டிய ஒளளிய பொருளைக்கொண்டு போய்ப் பயன்பெறுவாா பிறர்.

பயனுய அறனும இன்பமும் செய்துகொளளாதானுக்குப் பொருளாலுளளது ஈட்டல துன்பமே என்பது தோன்ற 'ஈட்டிய' என்றும், அவன்வழியினுளளாாக்கும உதவாது என்பதுதோன்ற 'பிறர்' என்றும் கூறினா. (9)

சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனையது உடைத்து. 1010

சீர் உடைச் செல்வர் சிறுதுனி - புகழுடைத்தாய செல்வத்தினையுடையவரது நிற்கும் காலம சிறிதாய வறுமை, மாரி வறங் கூர்ந்தனையது உடைதது - உலகததை யெலலாம் நிலைநிறுததும மேகம் வறுமை மிக்காறபோல்வதோர் இயலபினையுடைதது.

துனி - வெறுப்பு, அதனைச் செய்தலால, துனி எனப்பட்டது. யாவாக்கும் பயன் பட்டார் அதனை் வறியராயவழியும் அவ் வறுமை கடிதின் நீங்குதலின் பின்பும் செலவராய்ப் பயன்படுவா என்பது உவமையால் பெறப்பட்டது; படவே, நன்றியில்லாத செல்வம் எஞ்ஞான்றும் பயன்படாது என்பதாயிற்று. இதற்கு, சீர் உடைச்செல்வர் இரவலரோடு வெறுக்கும் நிலையில் வெறுப்பு 'மாரிவறங்கூர்ந்தனைய தன்மையை உடைதது' என அதிகாரத தோடு பொருந்தாமை மேலும் ஓர்பொருள் தொடர்புபடாமல் உரைப்பாரும் உளர்.

இவை நான்கு பாட்டானும் அச் செல்வத்தது குற்றம் கூறப் பட்டது. (10)

ஒழிபு இயல 341

## 102. நாண் உடைமை

அஃதாவது மேற்சொல்லிய சால்பு பண்பு முதலிய குணங்களான் உயர்ந்தோர் தமக்கு ஒவ்வாத கருமங்களில் நாணுதல் உடையராந் தன்மை. அதிகாரமுறைமையும் இத னானே விளங்கும்.

கருமத்தான் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற. 1011

நாணுக் கருமத்தால் நாணுதல்-நன்மக்கள் நாணுவது இழிந்த கருமங் காரணமாக நாணுதல், பிற திரு நுதல் நல்லவர் நாணு - அஃதன்றி மனமொழிமெய்களது ஒடுக்கத்தான் வருவனவோ வெனின், அவை அவரளவல்ல, அழகிய நுதலினையுடைய குலமக ளிர் நாண்கள்.

'பிற குலமகளிர் நாண்' என்றதனான் ஈணையது நன்மக்கள நாண் என்பதும், 'நாணுதல்' என்றதனால் கருமத்தது இழிவும பெறரும். 'திருநுதல் நல்லவர்' என்பது புகழ்ச்சிக்குறிப்பு. அதுப் பன்மைபற்றி 'பிற' என்றார். இனி, 'அறமமறத்தல் முதலியன பொதுமகளிர் நாணோடு ஒக்கும்' என்று உரைப்பாரும் உளர், அவர்க்கு நாண கேடு பயக்கும் என விலக்கப்பட்டமையானும், அவர்பெயரால் கூறப்படாமையானும் அஃது உரையன்மை அறிக.

இதனான் நாணினது இலக்கணம கூறப்பட்டது. (1)

ஊண்உடை எச்சம் உயிர்க்குஎல்லாம் வேறல்ல
நாண்உடைமை மாந்தர் சிறப்பு. 1012

ஊண் உடை எச்சம் உயிர்க்கு எல்லாம் வேறு அல்ல - ஊணும் உடையும் அவையொழிந்தனவும மக்களுயிர்க்கெல்லாம் பொது மாந்தர் சிறப்பு நாண் உடைமை - நன்மக்கட்குச் சிறப்பா வது நாணுடைமையே, அவையல்ல.

ஒழிந்தன உறக்கமும அச்சமும் காமமும். சிறப்பு - அவ் உயிர்களின் வேறுபாடு. 'அச்சம' என்று பாடமோதுவாரும் உளர். (2)

ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாண்என்னும்
நன்மை குறித்தது சால்பு. 1013

உயிர் எல்லாம் ஊனைக்குறித்த - எல்லா உயிர்களும் உடம் பினைத் தமக்கு நிலைக்களனாகக்கொண்டு அதனைவிடா, சால்பு

நாண் என்னும நன்மை குறித்தது - அதுபோலச் சால்பு நாண் என்னும் நன்மைக்குணத்தைத் தனக்கு நிலைக்களனாகக்கொண்டு அதனை விடாது.



உடம்பு என்பது சாதியொருமை. நன்மை - ஆகுபெயர். உயிர் உடம்பொடு கூடியல்லது பயனெய்தாதவாறுபோலச் சால்பு நாணொடுகூடியல்லது பயன் எய்தாது என்பதாம். 'நன்மைக் குறித்த' என்று பாடம் ஓதுவாரும் உளர். (3)

அணியன்றோ நாண்உடைமை சான்றோர்க்கு அஃதுஇன்றேல்
பிணியன்றோ பீடு நடை. 1014

சான்றோர்க்கு நாண்உடைமை அணியன்றோ - சான்றோர்க்கு நாண்உடைமை ஆபரணமாம், அஃது இன்றேல பீடுநடை பிணியன்றோ - அவ் ஆபரணம் இல்லையாயின் அவர் பெருமிததனை யுடைய நடை கண்டார்க்குப் பிணியாம்.

அழகு செய்தலின் 'அணி' என்றும், பொறுததற்கு அருமை யின் 'பிணி' என்றும் கூறினர். ஓகார இடைச்சொற்கள எதிர் மறைக்கண் வந்தன.

இவை மூன்று பாட்டானும் அதன் சிறப்புக் கூறப்பட்டது.(4)

பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு. 1015

பிறர் பழியும் தம் பழியும் நாணுவார் - பிறர்க்கு வரும் பழி யையும் தமக்கு வரும்பழியையும் ஒப்ப மதிதது நாணுவாரை,

உலகு நாணுக்கு உறைபதி என்னும் - உலகததார் நாணுக்கு உறைவிடம் என்று சொலலுவர்.

ஒப்பமதிததல - அதுவும தமக்கு வந்ததாகவே கருததல. அக் கருத்துடையார பெரியராகலின், அவரை உயர்ந்தோர்

யாவரும் புகழுவர் என்பதாம்.

இதனுன் அதனை உடையாரது சிறப்புக் கூறப்பட்டது. (5)

நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். 1016

மேலாயவர் - உயர்ந்தவர், வேலி நாண் கொள்ளது - தமக்கு ஏமமாக நாணினைக் கொள்வதன்றி, வியன் ஞாலம் பேணலர் - அகன்ற ஞாலத்தைக் கொள்ள விரும்பார்.

பழிபாவங்கள் புகுதாமற்காததலின், 'வேலி' என்ருர் நாணும் ஞாலமும் தம்முள் மாறுயவழி அந்நாணினைக் கொள்வதல்லது

அவைபுகுதும் நெறியாய ஞாலத்தினைக்கொள்ள விரும்பார் என்பதாம். மன்னும் ஓவும் அசை. 'நாணுகிய வேலியைப் பெற்றல்லது ஞாலம்பெற விரும்பார்' என்று உரைப்பாரும் உளர். (6)

நாணல் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாண்ஆள் பவர். 1017



நாண் ஆள்பவர் - நாணினது சிறப்பு அறிந்து அதனை விடாதொழுகுவார், நாணல் உயிரைத் துறப்பர் - அந்நாணும் உயிரும் தம்முள் மாறுயவழி நாண்சிதையாமைப் பொருட்டு உயிரை நீப்பர், உயிர்ப்பொருட்டு நாண் துறவார் - உயிர் சிதையாமைப் பொருட்டு நாணினை நீக்கார்.

உயிரினும் நாண் சிறந்ததென்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் அவர்செயல் கூறப்பட்டது. (7)

பிறர்நாணத் தக்கது தான்நாணன் ஆயின்
அறம்நாணத் தக்கது உடைத்து. 1018

பிறர் நாணத்தக்கது தான் நாணன் ஆயின்-கேட்டாரும் கண்டாரும் நாணத்தக்க பழியை ஒருவன் தான் நாணுது செய்யுமாயின், அறம் நாணத்தக்கது உடைத்து - அந் நாணுமை அவனை அறம் விட்டு நீங்கத் தக்க குற்றத்தினை யுடைத்து.

*தான் எனச் செய்வாரைப் பிரிக்கின்றார் ஆகலின் 'பிறர்' என்றார். நாணோடு இயைபு இல்லாதானை அறம் சாராது என்பதாம்.*

குலம்சுடும் கொள்கை பிழைப்பின் நலம்சுடும்
நாண்இன்மை நின்றக் கடை. 1019

*கொள்கை பிழைப்பின் குலம் சுடும் - ஒருவனுக்கு ஒழுக்கம் பிழைக்குமாயின் அப்பிழைப்பு அவன் குடிப்பிறப்பொன்றனையும் கெடுக்கும், நாணின்மை நின்றக்கடை நலம் சுடும் - ஒருவன் மாட்டு நாணின்மை நின்றவழி அந்நிலை அவன் நலம் யாவற்றையும் கெடுக்கும்.*

*நிற்றல் - ஒருபொழுதும் நீங்காமை. நலம் சாதிப்பொருமை யாகலின், பிறப்பு, கல்வி, குணம், செயல், இனம் என்றிவற்றான் வந்தனவெல்லாம் கொள்ளப்படும். ஒழுக்க அழிவினும் நாண் அழிவு இறப்பத் தீது என்பதாம்.* (9)

நாண்அகத்து இல்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று. 1020

*அகத்து நாண் இல்லார் இயக்கம் - தம் மனத்தின்கண் நாண் இல்லாத மக்கள் உயிருடையார்போன்று இயங்குகின்ற இயக்கம் மரப்பாவை நாணால் உயிர் மருட்டியற்று - மரத்தாற்செய்த பாவை இயந்திரக் கயிற்றினானாய தன் இயக்கத்தால் உயிருடைத்தாக மயக்கினாற்போலும்.*

*கருவியே கருத்தாவாயிற்று. நாணில்லாத மக்கள் இயக்கம் நாணுடைய பாவை இயக்கம்போல்வதல்லது உயிரியக்கம் அன்று என்பதாம்.*

*இவை மூன்று பாட்டானும் நாணில்லாரது இழிவு கூறப் பட்டது.* (10)



## 103. குடி செயல் வகை

*அஃதாவது ஒருவன் தான் பிறந்த குடியை உயரச் செய்தலின் திறம். இது தாழ்வின்கண் நாணுதலுடையார்க்கு உளதாவது ஆகலின் நாணுடைமையின் பின் வைக்கப் பட்டது.*

கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்
பெருமையின் பீடுடையது இல். 1021

கருமம் செயக் கைதூவேன் என்னும் பெருமையின் - தன் குடி செய்தற் பொருட்டுத் தொடங்கிய கருமம் முடியாமையின் எண்ணிய கருமம் செய்தற்கு யான் கையொழியேன் என்னும் ஆள்வினைப்பெருமைபோல, ஒருவன் பீடு உடையது இல் - ஒருவனுக்கு மேம்பாடுடைய பெருமை பிறிது இல்லை.

'குடிசெயற்கு' என்பது அதிகாரத்தான் வந்தது. பல வகைத்தாய கருமச்செயலாற் செல்வமும் புகழும் எய்திக் குடிஉயரும் ஆகலின், 'பீடுடையது இல' என்றார். குடிசெய்தற் கருமமே நடத்தலால் 'தன்' கருமஞ் செய்ய என்றும் 'பிறர்' கருமஞ் செய்ய என்றும் உரைப்பாரும் உளர். தன் கருமமும் அதுவேயாகலானும், பிறர் ஏவல் செய்தல் தலைமையன்மையானும், அவை உரையன்மை அறிக. (1)

ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்
நீள்வினையான் நீளும் குடி. 1022

ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் நீள்வினையான் - முயற்சியும் நிறைந்த அறிவும் என்று சொல்லப்பட்ட இரண்டினையுமுடைய இடையறாத கருமச்செயலால், குடி நீளும் - ஒருவன் குடி உயரும்.

நிறைதல் - இயற்கையறிவு செயற்கையறிவோடு கூடி நிரம்புதல். ஆள்வினை-மடி புகுதாமற்பொருட்டு. ஆன்ற அறிவு - உயர்தற்கு ஏற்ற செயல்களும் அவை முடிக்குந்திறமும் பிழையாமல் எண்ணுதற்பொருட்டு.

இவை இரண்டு பாட்டானும் அச் செயற்குக் காரணம் கூறப்பட்டது. (2)

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். 1023

குடி செய்வல் என்னும் ஒருவற்கு - என் குடியினை உயரச் செய்யக் கடவேன் என்று கொண்டு அதற்கு ஏற்ற கருமங்களின் முயலும் ஒருவனுக்கு, தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும் - தெய்வம் ஆடையைத் தற்றுக்கொண்டு தான் முந்துற்று நிற்கும்.

முயற்சியை அதன் காரணத்தால் கூறினர். தற்றுதல் இறுக உடுத்தல். முன் கடப்பார்செயல் நியதிமேல் ஏறறப்பட்டது. (3)

சூழாமல் தானே முடிவுஎய்தும் தங்குடியைத்
தாழாது உஞற்று பவர்க்கு. 1024

தம் குடியைத் தாழாது உஞற்றுபவர்க்கு-தம குடிக்காம் வினையை விரைந்து முயலவார்க்கு, சூழாமல தானே முடிவெய்தும் – அவ்வினை முடிக்குந் திறம் அவர் சூழவேண்டாமல தானே முடிவெயதும்.

குடி-ஆகுபெயர். தெய்வம் முந்துறுதலாற் பயன்கூறியவாறு. இவை இரண்டுபாட்டானும் அதற்குத் தெய்வம் துணையாதல் கூறப்பட்டது. (4)

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு. 1025

குற்றம் இலனாய்க் குடி செய்து வாழ்வானை - குற்றமாயின செய்யாது தன் குடியை உயரச் செய்தொழுகுவானை, சுற்றமாச் சுற்றும் உலகு - அவனுக்குச் சுற்றமாகவேண்டித் தாமே சென்று சூழுவர் உலகத்தார்.

குற்றமாயின அறநீதிகட்கு மாறுதலையாய செயல்கள். தாமும் பயன் எய்தல் நோக்கி யாவரும் சென்று சார்வர் என்பதாம். (5)

நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல். 1026

ஒருவற்கு நல்லாண்மை என்பது – ஒருவனுக்கு நல்லாண்மை என்று உயர்த்துச் சொல்லப்படுவது, தான்பிறந்த இல்லாண்மை ஆக்கிக்கொளல் - தான் பிறந்த குடியினையாளுந் தன்மையைத் தனக்குளதாக்கிக் கோடல்.

போர்த்தொழிலின் நீக்குதற்கு 'நல்லாண்மை' என விசேடித்தார். குடியினையாளுந் தன்மை - குடியினுள்ளாரை உயரச்

செய்து தன்வழிப்படுத்தல். அதனைச்செய்து கோடல் நல்லாண்மையாமாறு வருகின்ற பாட்டால் பெறப்படும். (6)

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை. 1027

அமரகத்து வன்கண்ணர் போல - களத்தின்கண் சென்றார் பலராயினும் போர்தாங்குதல் வன்கண்ணர்மேலதானாற்போல,

தமரகத்தும் பொறை ஆற்றுவார் மேற்றே - குடியின்கண் பிறந்தார் பலராயினும் அதன் பாரம் பொறுத்தல் அது வல்லார் மேலதாம்.



பொருட்கு ஒக்க வேண்டும் சொற்கள் உவமைக்கண் வருவிக்கப்பட்டன. நன்கு மதிக்கப்படுவார் அவரே என்பதாம்.

இவை மூன்று பாட்டானும் அதுசெய்வார் எய்தும் சிறப்புக் கூறப்பட்டது (7)

குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும் 1028

மடி செய்து மானம் கருதக் கெடும் - தம் குடியினை உயரச் செய்வார் அச் செயலையே நோக்காது காலத்தை நோக்கி மடியினைச் செய்துகொண்டு, மானத்தையும் கருதுவராயின் குடி கெடும், குடி செய்வார்க்குப் பருவம் இல்லை - ஆகலான் அவர்க்குக் காலநியதி இல்லை.

காலத்தை நோக்கி மடி செய்தல் - வெயில் மழை பனி என்பன உடைமை நோக்கிப் பின்னர்ச் செய்தும் என்று ஒழிந்திருத்தல். மானம் கருதுதல் - 'இக்குடியிலுள்ளார் யாவரும் இனம்பமுற இக்காலத்துத் துன்பமுறுவேன் யானே' என்று உட்கோடல், மேல் "இகல் வெல்லும் வேந்தர்க்கு வேண்டும் பொழுது" (குறள். 481) என்றது உட்கொண்டு இவர்க்கும் வேண்டுமோ? என்று கருதினும் அது கருதற்க என்று மறுத்தவாறு. (8)

இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்றம் மறைப்பான் உடம்பு. 1029

குடும்பத்தைக் குற்றம் மறைப்பான் உடம்பு - மூவகைத் துன்பமும் உறற்பாலதாய தன் குடியை அவை உறாமற் காக்க முயல்வானது உடம்பு, இடும்பைக்கே கொள்கலங்கொல் - அம் முயற்சித் துன்பத்திற்கே கொள்கலமாம் அத்துணையோ? அஃது ஒழிந்து இன்பத்திற்கு ஆதல் இல்லையோ?

"உறைப்பெயல் ஓலை போல, மறைக்குவன் பெரும நிற் குறித்து வருவேலே" (புறநா. 290) என்புழியும் மறைத்தல் இப் பொருட்டாயிற்று. என் குடிமுழுதும் இன்புற்றுயயாவே நான் இருமையும் எய்துதலான் இம் மெய்வருத்தம் மாத்திரம் எனக்கு நன்று என்று முயலும் அறிவுடையான் அஃதொருஞான்றும் ஒழியாமை நோக்கி, 'இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ' என்றார். இது குறிப்பு மொழி.

இவை இரண்டு பாட்டானும் அவர் அது செய்யும் இயல்பு கூறப்பட்டது. (9)

**இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்**
**நல்லாள் இலாத குடி.** 1030

இடுக்கண் கால் கொன்றிட வீழும் - துன்பமாகிய நவியம் புகுந்து தன்முதலை வெட்டிச் சாய்க்க ஒருபற்றின்றி வீழா நிற்கும்,



அடுத்து ஊன்றும் நல்லாள் இலாத குடி - அக்காலத்துப் பற்றுவன கொடுத்துத் தாங்கவல்ல நல்ல ஆண் மகன் பிறவாத குடியாகிய மரம்.

முதல் - அதன் வழிக்கு உரியார். வளர்ப்பாரைப் பெற்றுழி வளர்ந்து பயன்படுதலும் அல்லாவழிக் கெடுதலும் உடைமையின், மரமாக்கினார், "தூங்குசிறை வாவலுறை தொல் மரங்கள் அன்ன, ஒக்கு குலம் கையற்று ஊட்பிறந்த வீரர், தாங்கலகடன்" (சீவக. காந்தருவ. 6) என்றார் பிறரும். இது குறிப்பு உருவகம்.

இதனான் அவர் இல்லாத குடிக்கு உளதாம் குற்றம் கூறப்பட்டது. (10)

## 104. உழவு

அஃதாவது சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தாய உழுதல் தொழில். செய்விக்குங்கால் ஏனையோர்க்கும் உரித்து. இது, மேல் குடி உயர்தற்கு ஏது என்ற ஆள்வினைவகையாகலின், குடிசெயல் வகையின் பின் வைக்கப்பட்டது.

**சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்**
**உழந்தும் உழவே தலை. 1031**

சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம் - உழுதலான் வரும் மெய் வருத்தம் நோக்கிப் பிறதொழில்களைச் செய்து திரிந்தும், முடிவில் ஏருடையார் வழியதாயிற்று உலகம், அதனால் உழந்தும் தலை உழவே - ஆதலான் எல்லாவருத்த முற்றும், தலையாய தொழில் உழவே.

ஏர்-ஆகுபெயர். பிறதொழில்களால் பொருளெய்திய வழியும் உணவின் பொருட்டு உழுவார்கண் செலல்வேண்டுதலின் 'சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்' என்றும், வருத்தமில வேறும் பிற தொழில்கள் கடை என்பது போதர, 'உழந்தும் உழவே தலை' என்றும் கூறினார்.

இதனான் உழவினது சிறப்புக் கூறப்பட்டது. (1)

**உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃது ஆற்றாது**
**எழுவாரை எல்லாம் பொறுத்து. 1032**

அஃது ஆற்றாது எழுவாரை எல்லாம் பொறுத்து - அவ் உழுதலைச் செய்யமாட்டாது பிறதொழில்கள் மேல்செல்வார் யாவரையும் தாங்குதலால், உழுவார் உலகத்தார்க்கு ஆணி - அது வல்லார் உலகத்தாராகிய தேர்க்கு அச்சாணியாவார்.

"காடுகொன்று நாடாக்கிக் குளந்தொட்டு" (பட்டினப்.) என்றாற் போல உழுவார் என்றது உழுவிப்பார்மேலுஞ் செல்லும். 'உலகத்தார்' என்றது ஈண்டு அவரையொழிந்தாரை. கலக்காமல் நிறுத்தற்கண் ஆணிபோறலின், 'ஆணி' என்றார்.

பொருத்தலான் என்பது திரிந்து நின்றது. ஏக தேச உருவகம். 'அந்த ஆற்றுர் தொழுவாரே எல்லாம் பொறுதது' என்று பாடம் ஓதி, 'அதுமாட்டாதார் புரப்பார் செய்யும் பரிபவமெல்லாம் பொறுதது அவரைத் தொழுவாரே யாவர்' என்று உரைப்பாரும் உளர். (2)

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற்று எல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர். 1033

உழுது உண்டு வாழவாரே வாழவார - யாவரும் உண்ணும் வகை உழுதலைசெய்து அதனலை தாமும உணடு வாழகின்ருரே தமக்குரியராய் வாழகின்றவா, மற்றெலலாம தொழுது உண்டு பின்செல்பவர் - மறறையாரெலலாம் பிறரைத தொழுது அதனுல் தாம் உண்டு அவரைப் பின்செலகின்றவர்.

மற்று என்பது வழக்குப்பற்றி வநதது. தாமும் மக்கட் பிறப்பினராய வைததுப் பிறரைத தொழுது அவா சில கொடுப்பத தம் உயிரோம்பி அவர்பின் செலவாா தமக்குரியரல்லர் என்பது கருதது. (3)

பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுஉடை நீழ லவர். 1034

அலகு உடை நீழலவர் - உழுதல தொழிலான் நெல்லினையுடையராய தண்ணளியுடையோா, பலகுடை நீழலும் தம் குடைக்கீழ்க் காண்பர் - பலவேநதர் குடை நிழலதாய மண் முழுதினையும் தம் வேநதர்குடைக்கீழே காணபர்.

அலகு - கதிர், அஃது ஈண்டு ஆகுபெயராய் நெலமேலதாயிற்று. 'உடைய' என்பது குறைந்து நின்றது. நீழலபோறலின், நீழல் எனப்பட்டது. நீழலவர் என்றது இரப்போர்க்கெலலாம் ஈதல் நோக்கி, ஒற்றுமைபறறி 'தங்குடை' என்ருர். குடை நீழல் என்பதூஉம் ஆகுபெயர், "ஊன்றுசால மருங்கின் ஈன்றதன் பயனே" (புறநா. 35) என்றதனலை தம் அரசனுக்குக் கொற்றம் பெருக்கி மண் முழுதும் அவனதாகக் கண்டிருப்பர் என்பதாம், "இரப்போர் சுற்றமும் புரப்போா கொற்றமும உழவிடை விளைப் போர்" (சிலப். நாடு காண். 149) என்ருர் பிறரும். (4)

இரவார் இரப்பார்க்கு ஒன்றுஈவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர் 1035

கைசெய்து ஊண் மாலையவர் இரவார்-தம் கையால் உழுது உண்டலை இயல்பாகவுடையார் பிறரைத் தாம் இரவார். இரப்பார்க்கு ஒன்று கரவாது ஈவர்-தம்மை இரப்பார்க்கு அவர்வேண்டியதொன்றனைக் கரவாது கொடுப்பர்.



'செய்து' என்பதற்கு உழுதலை எனவருவிக்க. 'கைசெய்தூண் மாலையவர்' என்பது ஒருஞான்றும் அழிவில்லாதசெல்வமுடையர் என்னும் ஏதுவை உட்கொண்டுநின்றது. (5)

உழவினர் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேம் என்பார்க்கு நிலை. 1036

உழவினர் கை மடக்கின்-உழுதலையுடையார் கை அதனைச் செய்யாது மடக்குமாயின், விழைவதூஉம் விட்டேம் என்பார்க்கு நிலை இல்லை-யாவரும் விழையும் உணவும் யாம் துறந்தேம் என்பார்க்கு அவ் அறத்தின்கண் நிற்றலும் உளவாகா.

உம்மை இறுதிக்கண்ணும் வந்து இயைந்தது. உணவின்மையால், தாம் உண்டலும் இல்லறஞ் செய்தலும் யாவர்க்கும் இல்லையாயின. அவர் உறுப்புமாத்திரமாய கை வாளாவிருப்பின் உலகத்து இம்மை மறுமை வீடு என்னும் பயன்கள் நிகழா என்பதாம். 'ஒன்றனை மனத்தால் விழைதலும் ஒழிந்தேம் என்பார்க்கு' என உரைப்பாரும் உளர்.

இவை ஐந்து பாட்டானும் அதனைச் செய்வாரது சிறப்புக் கூறப்பட்டது. (6)

தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். 1037

தொடிப்புழுதி கஃசா உணக்கின்—ஒருநிலத்தினை உழுதவன் ஒருபலப் புழுதி கஃசாம்வண்ணம் அதனைக் காயவிடுவானாயின், பிடித்தது எருவும் வேண்டாது சாலப் படும்—அதன்கண்செய்த பயிர் ஒருபிடியின்கண் அடங்கிய எருவும் இடவேண்டாமல் பணைத்து விளையும்.

பிடித்தது பிடியின்கண்ணது. 'பிடித்த' என்பதன்விகாரம் என்பாரும் உளர். 'வேண்டாமல், சான்று' என்பன திரிந்து நின்றன. (7)

ஏரினும் நன்றால் எருஇடுதல் கட்டபின்
நீரினும் நன்றுஅதன் காப்பு. 1038

ஏரினும் எரு இடுதல் நன்று—அப் பயிர்க்கு அவ் உழுதலினும் எருப்பெய்தல் நன்று, கட்டபின் அதன் காப்பு நீரினும் நன்று—இவ் இரண்டும் செய்து களைகட்டால் அதனைக் காத்தல் அதற்கு நீர்கால் யாத்தலினும் நன்று.

ஏர்—ஆகுபெயர். காத்தல் பட்டிமுதலியவற்றான் அழிவெய்தாமல் காத்தல். உழுதல், எருப்பெய்தல், களைகட்டல், நீர்கால் யாத்தல், காத்தல் என்று இம்முறையவாய இவ் ஐந்தும் வேண்டும் என்பதாம். (8)



செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும். 1039

கிழவன் செல்லான் இருப்பின்—அந் நிலத்திற்குரியவன் அதன்கண் நாடோறும் சென்று பார்த்து அடுப்பன செய்யாது மடிந்திருக்குமாயின், நிலம் இல்லாளின் புலந்து ஊடிவிடும்—அஃது அவன் இல்லாள்போலத் தன்னுள்ளே வெறுத்துப் பின் அவனோடு ஊடிவிடும்.

செல்லுதல்—ஆகுபெயர். பிறரை ஏவியிராது தானேசேறல் வேண்டும் என்பது போதர, 'கிழவன்' என்றார். தன் கண்சென்று வேண்டுவன செய்யாது வேறிடத்திருந்த வழி மனையாள் ஊடுமாறு போல என்றது அவன் போகம் இழத்தல் நோக்கி.

இவைமூன்று பாட்டானும் அதுசெய்யுமாறு கூறப்பட்டது.(9)

இலம்என்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலம்என்னும் நல்லாள் நகும் 1040

இலம் என்று அசைஇ இருப்பாரைக்காணின்—யாம் வறியேம் என்று சொல்லி மடிந்திருப்பாரைக் கண்டால, நிலம் என்னும் நல்லாள நகும் - நிலமகள என்று உயர்த்துச்சொல்லப்படுகின்ற நல்லாள தன்னுவளே நகாநிற்கும்.

உழுதல் முதலிய செயவார் யாவர்க்கும் செல்வங்கொடுத்து வருகின்றவாறு பற்றி 'நல்லாள' என்றும், அதுகண்டுவைத்தும் அதுசெய்யாது வறுமையுறுகின்ற பேதைமைபற்றி, 'நகும்' என்றுங்கூறினர். 'இரப்பாரை' என்று பாடம ஓதுவாரும் உளர்.

இதனன் அதுசெய்யாத வழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. வருகின்ற அதிகாரமுறைமைக்குக் காரணமும இது. (10)

## 106. நல்குரவு

அஃதாவது நுகரப்படுவனயாவும் இல்லாமை.

இன்மையின் இன்னாதது யாதுஎனின் இன்மையின்
இன்மையே இன்னா தது. 1041

இன்மையின் இன்னாதது யாது எனின் - ஒருவனுக்கு வறுமை போல இன்னாதது யாது என்று வினவின், இன்மையின் இன்னா தன இன்மையே - வறுமைபோல இன்னாதது வறுமையே, பிறி திலலே.

இன்னாதது: துன்பஞ்செய்வது. ஒப்பது இல்லை எனவே, மிக்கது இன்மை சொலல வேண்டாவாயிற்று. (1)

இன்மை எனஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும். 1042

இன்மை என ஒருபாவி - வறுமை என்று சொல்லப்படுவதொரு பாவி, மறுமையும் இம்மையும் இன்றி வரும் - ஒருவனுழை வருங்கால் அவனுக்கு மறுமையின்பமும் இம்மையின்பமும் இல்லையாக வரும்.

'இன்மையென ஒருபாவி' என்பதற்கு மேல் "அழுக்காறென ஒருபாவி" (குறள். 168) என்புழி உரைத்தாங்கு உரைக்க. மறுமை இம்மை என்பன ஆகுபெயர். ஈயாமையானும் துவ்வாமையானும் அவை இலவாயின. 'இன்றிவிடும்' என்று பாடம் ஓதிப் 'பாவியால்' என விரித்துரைப்பாரும் உளர். (2)

தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக
நல்குரவு என்னும் நசை. 1043

நல்குரவு என்னும் நசை - நல்குரவு என்று சொல்லப்படும் ஆசை, தொல் வரவும் தோலும் தொகையாகக் கெடுக்கும் - தன்னால் பற்றப்பட்டாருடைய பழைய குடிவரவினையும் அதற்கு ஏற்ற சொல்லினையும் ஒருங்கே கெடுக்கும்.

நசையில் வழி நல்குரவும் இல்லையாகலின் நல்குரவையே நசையாக்கி, அஃது அக்குடியின் தொல்லோர்க்கு இல்லாத இழிதொழில்களையும் இளிவந்த சொற்களையும் உளவாக்கலான் அவ் இரண்டனையும் ஒருங்கு கெடுக்கும் என்றார். "குடிப்பிறப்பு அழிக்கும் விழுப்பம் கொல்லும்" (மணி. 11, 76) என்றார் பிறரும். தோலாவது "இழுமென் மொழியால் விழுமியது நுவறல்" (தொல். பொருள். செய்யு. 239) என்றார் தொல்காப்பியனாரும். இதற்கு 'உடம்பு' என்று உரைப்பாரும் உளர், அஃது அதற்குப் பெயராயினும் உடம்பு கெடுக்கும் என்றற்கு ஓர் பொருட் சிறப்பு இல்லாமை அறிக. (3)

இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த
சொற்பிறக்கும் சோர்வு தரும் 1044

இற்பிறந்தார் கண்ணேயும் - இளிவந்த சொற்பிறவாத குடிப் பிறந்தார் மாட்டேயும், இளிவந்த சொற்பிறக்கும் சோர்வு இன்மை தரும் - அது பிறத்தற்கு ஏதுவாகிய சோர்வினை நல்குரவு உண்டாக்கும்.

சிறப்பு உம்மை அவர்மாட்டு அது பிறவாமை தோன்ற நின்றது. இளிவந்த சொல் - இளிவருதற்கு ஏதுவாகிய சொல். அஃ

தாவது எமக்கு ஈயவேண்டும என றல். சோாவு-தாம உறுகின்ற துன்பம மிகுதிபற்றி ஒரோவழித தம் பிறபபினை மறந்து அது சொல்லுவதாக நினைததல். (4)

நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும். 1045



நல்குரவு என்னும் இடும்பையுள் - நல்குரவு என்று சொல்லப் படும் துன்பம் ஒன்றனுளளே, பல் துன்பங்கள சென்றுபடும் - பலதுன் பங்களும் வநது விளையும்.

குரை - இசைநிறை. செலவு - விரைவின் கண் வந்தது.

துன்பமுந்தானும் உடனே நிகழதலின் நல்குரவைத் துன்பமாக்கி யும், அத துன்பமடியாகச் செல்வர் கடை நோக்கிச் சேறல் துன்ப

மும், அவரைக் காண்டல துன்பமும், கண்டால் மறுததுழி நிகழும் துன்பமும், மறுவழியும் அவர் கொடுததது வாங்கல் துன்பமும், அதுகொடுவநது நுகர்வன கூட்டல் துன்பமும் முதலாயின நாள தோறும் வேறுவேறாக வருதலின் எல்லாத துன்பங்களும் உள வாம் என்றும் கூறினர்.

இவை ஐந்து பாட்டானும் நல்குரவின் கொடுமை கூறப் பட்டது. (5)

நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். 1046

நற்பொருள நன்கு உணர்ந்து சொல்லினும் - மெய்ந்நூற் பொருளைத தெளிய அறிநது சொன்னாராயினும், நலகூர்ந்தார்

சொற் பொருள சோாவு படும் - நலகூர்நதாா சொல்லுஞ்சொல பொருளின்மையைத தலைப்படும்.

பொருளின்மையைத தலைப்படுதலாவது 'யாம் இவர் சொல்

வியன விரும்பிக் கேட்குமாயின் கண்ணோடி இவர் உறுகின்ற குறைமுடிக்க வேண்டும்' என்று அஞ்சி யாவரும கேளாமையிற் பயனில்சொலலாய் முடிதல். கலவியும் பயன்படாது என்பதாம்.()

அறம்சாரா நல்குரவு ஈன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். 1047

*அறம் சாரா நல்குரவு—அறத்தோடு இயைபில்லாத நல்குர வுடையான், ஈன்ற தாயானும் பிறன்போல நோக்கப்படும்-தன்னை ஈன்ற தாயானும் பிறனைக் கருதுமாறு போலக் கருதி நோக்கப் படும்.*

*அறததோடு கூடாமை· காரண காரியங்களுள ஒன்றானும் இயையாமை. நல்குரவு - ஆகுபெயர். சிறப்பு உம்மை அவளது இயற்கையன்புடைமை விளக்கி நின்றது. கொளவதின்றுதலே யன்றிக் கொடுப்பது உண்டாதலும் உடைமையின், அது நோக் கிச் சுற்றததார் யாவரும் துறப்பர் என்பதாம.* (7)

இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு 1048

*நெருநலும் கொன்றதுபோலும் நிரப்பு—நெருநற்றும் கொன் றது போன்று எனக்கு இன்னாதவற்றைச் செய்த நல்குரவு, இன்*



*றும் வருவது கொல்லோ - இன்றும் என்பால் வரக்கடவதோ, வந்தால் இனி யாது செய்வேன்?*

*அவ் இன்னாதனவாவன—மேற்சொல்லிய (குறள். 1045) துன் பங்கள். நெருநல் மிக வருந்தித தன் வயிறு நிறைத்தானொருவன் கூற்று.* (8)

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதொன்றும் கண்பாடு அரிது. 1049

*நெருப்பினுள துஞ்சலும் ஆகும் - மந்திரம் மருந்துகளான் ஒருவனுக்கு நெருப்பிடையே கிடந்து உறங்கலும் ஆம், நிரப்பினுள் யாதொன்றும் கண்பாடு அரிது - நிரப்புவந்துழி யாதொன்றானும் உறக்கம் இலலை.*

*நெருப்பினும் நிரப்புக் கொடிது என்றவாறாயிற்று. இதுவும் அவன் கூற்று.*

இவை நான்கு பாட்டானும் ஈலகூாநதார்க்கு உளதாம் குற்றம் கூறபபட்டது. (9)

துப்புரவு இல்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று. 1050

துப்புரவு இலலாா துவரத துறவாமை-நுகரப்படும் பொருள கூளிலலாதாா தமமாற செயற்பாலது முறறத துறததலேயாகவும் அது செய்யாதொழிதல, உப்பிறகும காடிக்கும கூற்று - பிறர் இலலிலுளவாய உப்பிற்கும காடிக்கும் கூறறும்.

மானம அழியாமைபின் செயற்பாலது அதுவேயாயிற்று. முற்றத துறததல சுறறநதானே விடடமையின் ஒருவாற்றால் துறநதாராயினா நின்ற தம உடமபினையும் துறததல். அது செய்யாது கொண்டிருததல இரண்டனையும் மானப்பண்ணுதலின், அதனை அவறறிற்குக் கூறறு என்றாா. இனி, 'முற்றத்துறத்தலாவது துப்புரவிலலாமையின் ஒருவாற்றால் துறந்தாராயினா பின் அவற்றை மனததால் துறவாமை' என்று உரைப்பாரும் உளர்.

இதனான் அஃது உளதாயவழிச் செய்வது கூறப்பட்டது. (10)

## 106. இரவு

இனி 'மானக கெடா இரவு இரவாமையோடு ஒத்தலின், அதனானும வீடெய்தற் பயததராய உடம்பு ஓம்பப்படும்' என்

னும் அறநூல் வழக்குப்பற்றி மேல எய்திய துவரத்துறத்தல் விலக்குதற்பொருட்டு 'இரவு' கூறுகின்றார். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்
அவர்பழி தம்பழி அன்று. 1051

12

இரத்தக்கார்க் காணின் இரக்க - நல்கூர்ந்தார் இரத்தற்கு ஏற்புடையாரைக் காணில, அவர்மாட்டு இரக்க; கரப்பின் அவர் பழி தம் பழி அன்று - இரந்தால அவர் கரந்தாராயின் அவர்க்குப் பழியாவதல்லது தமக்குப் பழியாகாமையான்.

'இரவு' என்னும் முதனிலைதொழிற்பெயரது இறுதிக்கண் நான்கன் உருபு விகாரததால் தொக்கது. இரததற்கு ஏற்புடைய ராவார் உரையாமைமுன் உணரும் ஒண்மையுடையராய் மாற்றாது ஈவார். அவர் உலகதது அரியராகலின் 'காணின்' என்றும், அவா மாட்டு இரந்தார்க்கு இரவான்வரும் இழிவு இன்மையின், 'இரக்க' என்றும், அவர் ஈதலின் குறைகாட்டாமையின 'கரப்பின்' என் றும், காட்டுவாராயின் அப் பழி ஆவெளஅறுவைக்கண் மாசு போல அவர்கண் கடிதுசேறலின் 'அவாபழி' என்றும, ஏறபிலார் மாட்டு இரவன்மையின் 'தமபழியன்று' என்றும கூறினா. (1)

இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை
துன்பம் உறுஅ வரின். 1052

ஒருவற்கு இரத்தல் இன்பம் - ஒருவறகு இரததல் தானும் இன்பத்திற்கு ஏதுவாம், இரந்தவை துன்பம உறு வரின் - இரந்த பொருளகள ஈவாரது உணர்வு உடைமையால தான் துன்புறாமல வருமாயின்.

இன்பம் - ஆகுபெயர். 'உறாமல' என்பது கடைக்குறைகது நின்றது. துன்பம் - சாதியொருமைப்பெயர். அவையாவன ஈவார்கண் காலமும் இடனும் அறிகது சேறலும, அவர் குறிப்பறி தலும், அவரைத் தம் வயத்தராக்கலும், அவா மனம்நெகிழுவன நாடிச்சொல்லலும் முதலியவற்றான் வருவனவும், மறுததுழி வரு வனவும் ஆம். அவையுறாமல வருதலாவது அவர் முன்னுணர்ந்து ஈயக்கோடல. 'இரந்தவர் துன்பமுறுவரின்' என்று பாடம் ஓதி, இரக்கப்பட்டவர் பொருளின்மை முதலியவறறால துன்புறது எதிர் வந்து ஈவராயின் என்று உரைப்பாரும உளர்.

இவை இரண்டு பாட்டானும் நல்குரவான் உயிர் நீங்கும் எல்லைக்கண் இளிவில்லா இரவு விலக்கப்படாது என்பது கூறப் பட்டது. (2)

கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் முன்நின்று
இரப்பும்ஓர் ஏஎர் உடைத்து. 1053

கரப்பிலா நெஞ்சின் கடன் அறிவார் முன் நின்று இரப்பும் - கரத்தல இல்லாத நெஞ்சினையுடைய மானம் அறிவார்முன்னர் நின்று அவர்மாட்டு ஒன்று இரத்தலும், ஓர் ஏஎர் உடைத்து - கல கூர்த்தார்க்கு ஓர் அழகு உடைத்து.

"சிறியசுருக்கத்துவேண்டும் உயர்வு" (குறள். 963) என்றதனால், அவர்க்கு அது கடன் எனப்பட்டது. அதனை அறிதல் சொல்லுதலுற்று உரைக்கலாகாமைக்கு ஏதுவாய அதன் இயல்



பினை அறிதல். அவ் அறிவுடையார்க்கு முன் நிற்றல் மாத்திரமே அமைதலின், 'முன் நின்று' என்றும், சொல்லுதலான் வரும் சிறுமை எய்தாமையின், 'ஓர் ஏஎருடைத்து' என்றும் கூறினர். உம்மை அதன் இழிபு விளக்கிநின்றது. (3)

இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு. 1054

கரத்தல் கனவிலும் தேற்றாதார்மாட்டு இரத்தலும் - தமக்குள்ளது கரத்தலைக் கனவின்கண்ணும் அறியாதார்மாட்டுச் சென்று ஒன்றனை இரத்தலும், ஈதலே போலும் - வறியார்க்கு ஈதலே போலும்.

உம்மை - ஈண்டும் அவ்வாறு நின்றது. தான் புகழ்பயவாதாயினும் முன்னுளதாய புகழ் கெட வாராமையின் 'ஈதலேபோலும்' என்றார். ஏகாரம் - பிறிதுநீக்கம். (4)

கரப்பிலார் வையகத்து உண்மையான் கண்ணின்று
இரப்பவர் மேற்கொள் வது. 1055

கண்ணின்று இரப்பவர் மேற்கொள்வது - சொல்லுதன் மாட்டாது முன் நிற்றல் மாத்திரத்தான் இரப்பார் உயிரோம்பற் பொருட்டு அதனை மேற்கொண்டு போதுகின்றது, கரப்பு இலார் வையகத்து உண்மையான் - அவர்க்கு உள்ளது கரவாது கொடுப்பார் சிலர் உலகத்து உளராய தன்மையானே, பிறிதொன்றான் அன்று.

அவர் இல்லையாயின், மானம் நீக்க மாட்டாமையின் உயிர் நீப்பர் என்பதாம். (5)

**கரப்புஇடும்பை இல்லாரைக் காணின் நிரப்புஇடும்பை**
**எல்லாம் ஒருங்கு கெடும். 1056**

*கரப்பு இடும்பை இல்லாரைக் காணின்* - உள்ளது கரத்தலாகிய நோயில்லாரைக் கண்டால், *நிரப்பு இடும்பை எல்லாம் ஒருங்கு கெடும்* - மானம்விடாது இரப்பார்க்கு நிரப்பான் வரும் துன்பங்களெல்லாம் சேரக்கெடும்.

கரத்தல் - ஒருவற்கு வேண்டுவதொன்றன்மையின் அதனை 'நோய்' என்றும், அஃது இல்லாத இரக்கத்தக்காரைக் கண்ட பொழுதே அவர் கழிஉவகையராவர் ஆகலின் 'எல்லாம் ஒருங்கு கெடும்' என்றும் கூறினார். இடும்பை ஆகுபெயர். 'முழுதும் கெடும்' என்று பாடம் ஓதி, 'எஞ்சாமற் கெடும்' என்று உரைப்பாரும் உளர். (6)

**இகழ்ந்துஎள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்துஉள்ளம்**
**உள்ளுள் உவப்பது உடைத்து. 1057**



*இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின்*—தம்மை அவமதித்து இழிவு சொல்லாது பொருள்கொடுப்பாரைக் கண்டால், *உள்ளம் மகிழ்ந்து உள்ளுள் உவப்பது உடைத்து*—அவ் இரப்பாரது உள்ளம் மகிழ்ந்து உள்ளுள்ளே உவக்கும் தன்மையுடைத்து.

இகழ்ந்து எள்ளாது எனவே, நன்கு மதித்தலும் இனியவை கூறலும் பெறுதும். நிரப்பு இடும்பை கெடுதலளவேயன்றி ஐம்புலன்களானும் பேரின்பம்எய்தினராகக்கருதலான், 'உள்ளுள் உவப்பதுஉடைத்து' என்றார்.

இவை ஐந்து பாட்டானும் அவ் இரத்தக்காரது இயல்பு கூறப்பட்டது. (7)

**இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்**
**மரப்பாவை சென்றுவந் தற்று. 1058**

இரப்பார் இல்லாயின்—வறுமையுற்று இரப்பார் இல்லையாயின், ஈர்ங்கண்மா ஞாலம்—குளிர்ந்த இடத்தையுடைய பெரிய ஞாலத்துள்ளார் செலவு வரவுகள், மரப்பாவை சென்று வந்தற்று— உயிரில்லாத மரப்பாவை இயந்திரக் கயிற்றால் சென்று வந்தாற் போலும்.

ஈகாரம் - அசைநிலை. ஞாலம் என்னும் ஆகு பெயர்ப் பொருட்கு உவமையோடு ஒத்த தொழில் வருவிக்கப்பட்டது. ஞாலத்துள்ளார் என்றது அவரை ஒழிந்தாரை. அவர்க்கு ஈதலைச் செய்து புகழும் புண்ணியமும் எய்தாமையின், உயிருடையரல்லர் என்பதாம், "ஈவாரும் கொள்வாரும் இல்லாத வானத்து, வாழ்வாரே வன்க ணவர்" என்றார் பிறரும். இத் தொடையின்பம் நோக்காது 'இரப்பவர் இல்லாயின்' என்று பாடம் ஓதுவாரும் உளர். (8)

ஈவார்கண் என்னுண்டாம் தோற்றம் இரந்துகோள்
மேவார் இலாஅக் கடை. 1059

இரந்துகோள மேவார் இலாஅக்கடை - அவர்பாற்சென்று ஒன்றனை இரந்துகோடலை விரும்புவார் இல்வழி, ஈவார்கண் தோற்றம் என் உண்டாம் - கொடுப்பார்மாட்டு என்ன புகழுண்டாம்? யாதுமில்லை.

தோற்றம் - ஆகுபெயர். மேவுவார் என்பது விகாரமாயிற்று. கொடுத்தல் வன்மை வெளிப்படாமையின், அதனால் புகழெய்தார் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் உலகிற்கு இரப்பார்வேண்டும் என்பது கூறப்பட்டது. (9)

இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்புஇடும்பை
தானேயும் சாலும் கரி. 1060

இரப்பான் வெகுளாமை வேண்டும் - ஈவானுக்குப் பொருள் உதவாவழி இவன் எனக்கு ஈகின்றிலன் என்று அவனை இரப்பான் வெகுளாதொழிதல்வேண்டும்; நிரப்பு இடும்பை தானேயும் கரி சாலும் - அது வேண்டியபொழுது உதவாது என்பதற்கு வேறு சான்று வேண்டா, நிரப்பாகிய தன் இடும்பை தானேயுஞ் சான்றாதல் அமையும்.

யாவர்க்கும் பெறவேண்டுதலும் இல்லின்மையும் முதலிய பிறசான்றும் உண்டு என்பதுபட நின்றமையின், உம்மை எச்ச உம்மை. தனக்கேயன்றி மற்றைப்பிறந்தார்க்கும் அற்றைக்கன்று பொருள் கடைக்கூட்டற்கு அவனுறும் துன்பத்தைத் தனக்கே யாகவைத்துத் தானுறுந் துன்பம் தான் அறிந்து வெகுளற்க என்பதாம்.

இதனான் அவர்க்கு இன்றியமையாததோர் இயல்பு கூறப்பட்டது. (10)

## 107. இரவு அச்சம்

அஃதாவது மானந் தீரவரும் இரவிற்கு அஞ்சுதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

**கரவாது உவந்துஈயும் கண்ணன்னார் கண்ணும்**
**இரவாமை கோடி யுறும். 1061**

கரவாது உவந்து ஈயும் கண் அன்னார் கண்ணும் இரவாமை- தமக்கு உள்ளது கரவாது இவர் வரப்பெற்றேம் என்று உள மகிழ்ந்து கொடுக்கும் கண்போலச் சிறந்தார்மாட்டும் இரவாதே ஒருவன் வறுமை கூர்தல், கோடி உறும்-இரந்து செல்வம் எய்தலின் கோடிமடங்கு நன்று.

நல்குரவு மறைக்கப்படாத நட்டார்மாட்டும் ஆகாது என்பதுபட நின்றமையின், உம்மை உயர்வுசிறப்பின்கண் வந்தது. அவ்விரவான் மானந் தீராது என்னுந் துணையல்லது அதற்கு பிறிது கூடாமையின், வல்லதோர் முயற்சியான் உயிரோம்பலே நல்லது என்பது கருத்து. (1)

**இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து**
**கெடுக உலகுஇயற்றி யான். 1062**

உலகு இயற்றியான் இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் - இவ் உலகத்தைப் படைத்தவன் இதன்கண் வாழ்வார்க்கு முயன்று உயிர்வாழ்தலையன்றி இரந்தும் உயிர்வாழ்தலை வேண்டி விதித்தானாயின், பரந்து கெடுக - அக் கொடியோன்தானும் அவரைப் போன்று எங்கும் அலமந்து கெடுவானாக.

மக்களுயிர்க்கெல்லாம் வாழ்நாளும், அதற்கு வேண்டுவதாய உண்டியும், அதற்கு ஏதுவாய செய்தொழிலும், பழவினைவயத்தால் கருவொடுகலந்தவன்றே அவன் கற்பிக்குமன்றே? அவற்றுள் சில



உயிர்க்கு இரத்தலையும் ஒரு செய்தொழிலாகக் கற்பித்தானாயின் அத் தீவினையால் தானும் அத் துன்பமுறல்வேண்டும் என்பதாம்.

இவை இரண்டு பாட்டானும் அவ் இரவின் கொடுமை கூறப்பட்டது. (2)

**இன்மை இடும்பை இரந்துதீர் வாம்என்னும்**
**வன்மையின் வன்பாட்டது இல். 1063**

இன்மை இடும்பை இரந்து தீர்வாம் என்னும் வன்மையின் - வறுமையான் வருந் துன்பத்தை முயன்று நீக்கக்கடவேம் என்று கருதாது இரந்து நீக்கக் கடவேம் என்று கருதும் வன்மைபோல, வன்பாட்டது இல-வலிமைப்பாடுடையது பிறிது இல்லை.

நெறியாய முயற்சி நிற்க நெறியல்லாத இரவால் தீர்க்கக் கருதுதலின், வன்மையாயிற்று. வன்பாடு - முருட்டுத் தன்மை; அஃதாவது ஓராது செய்துநிற்றல்.

இதனான் வறுமை தீர்தற்கு நெறி இரவன்று என்பது கூறப்பட்டது. (3)

**இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே இடம்இல்லாக்**
**காலும் இரவுஒல்லாச் சால்பு. 1064**

இடம் இல்லாக்காலும் இரவு ஒல்லாச் சால்பு - நுகரவேண்டுவன இன்றி நல்கூர்ந்தவழியும் பிறர்பாற்சென்று இரத்தலை உடம்படாத அமைதி, இடமெல்லாம் கொள்ளாத தகைத்தே - எல்லா உலகும் ஒருங்கு இயைந்தாலும் கொள்ளாத பெருமையுடைத்து.

அவ் இரத்தலைச் சால்பு விலக்குமாகலின், இரவு ஒல்லாமை அதன்மேல் ஏற்றப்பட்டது. இதனான் அறநெறியல்லதனைச் சால்புடையார் செய்யார் என்பது கூறப்பட்டது. (4)

**தெண்ணீர் அடுபுற்கை ஆயினும் தாள்தந்தது**
**உண்ணலின் ஊங்குஇனியது இல். 1065**

*தாள் தந்தது தெண்ணீர் அடுபுற்கையாயினும் - நெறியாய முயற்சி கொடுவந்தது தெளிந்தநீர்போலும் அடுபுற்கையேயாயினும், உண்ணலின் ஊங்கு இனியது இல - அதனையுண்டற்கு மேல் இனியது இல்லை.*

தாள் தந்தகூழ் செறிவின்றித் தெண்ணீர் போன்றதாயினும் இழிவாய இரவான்வந்ததன்றித் தம் உடைமையாகலின், அமிழ்தத்தோடு ஒக்கும் என்பதாம்.

இதனான் நெறியின்வந்தது சிறிதேனும், அது செய்யும் இன்பம் பெரிது என்பது கூறப்பட்டது. (5)

**ஆவிற்கு நீர்என்று இரப்பினும் நாவிற்கு**
**இரவின் இளிவந்தது இல். 1066**



*ஆவிற்கு நீர் என்று இரப்பினும் - தண்ணீர்பெறாது இறக்கும் நிலைமைத்தாயதோர் ஆவினைக் கண்டு அறம்நோக்கி இதற்குத் தண்ணீர் தரல்வேண்டும் என்று இரந்து சொல்லுங்காலும், இரவின் நாவிற்கு இளிவந்தது இல-அவ்விரவுபோல ஒருவன்நாவிற்கு இளிவந்தது பிறிது இல்லை.*

ஆ காத்தோம்பல் பேரறமாகலின் 'ஆவிற்கு' என்றும், பொருள் கொடுத்துக் கொள்ளவேண்டாத எண்மைத்தாகலின் 'நீர்' என்றும் இரக்கின்றானுக்கு இல்வழி அச்சொல் அளவே ஆகலின் 'நாவிற்கு' என்றும், அதுதான் எல்லா இளிவினும் மேற்படு

தலின், 'இரவாது இல' என்றும் கூறினார்.

இதனான் அறமும் முயன்று செய்வதல்லது இரந்து செய்யற்க என்பது கூறப்பட்டது. (6)

இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பின்
கரப்பார் இரவன்மின் என்று. 1067

இரப்பாரை எல்லாம் இரப்பன்-இரப்பாரையெல்லாம் யான் இரவாநின்றேன், இரப்பின் கரப்பார் இரவன்மின் என்று - யாது சொல்லியெனின், நுமக்கு இரக்கவேண்டுமாயின் நுமக்குள்ளது கரப்பாரை இரவாதொழிமின் என்று சொல்லி.

இரண்டாவது விகாரத்தால் தொக்கது. இவ்வாறன்றி அச்செயலான் ஈட்டியவழியும் உடம்பு நில்லாதாகலின் இரவுவேண்டா என்பது தோன்ற 'இரப்பன்' என்றார்.

இதனான் மானம் நோ வருவது இரவு விலக்கப்பட்டது. (7)

இரவுஎன்னும் ஏமாப்புஇல் தோணி கரவுஎன்னும்
பார்தாக்கப் பக்கு விடும். 1068

இரவு என்னும் ஏமாப்பு இல் தோணி - இவ்வறுமை என்னும் கடலை இதனால் கடத்தும் என்று கருதி ஒருவன் ஏறிய இரவு என்னும் சேமமற்ற தோணி, கரவு என்னும் பார் தாக்கப் பக்கு விடும் - அதன் கண் ஓடுங்கால் கரத்தல் என்னும் வன்னிலத்தோடு தாக்குமாயின் பிளந்துபோம்.

முயற்சியால் கடப்பதனை இரவால் கடக்குறுவார் அதன் கரை காணாமையின், 'ஏமாப்பு இல் தோணி' என்றார். ஏமாப்பு இன்மை தோணிமேல் ஏற்றப்பட்டது. அது கடத்தற்கு ஏற்றது அன்மையானும் நிலம் அறியாது செலுத்தியவழிப் படுதலானும், அதன்கண் ஏறற்க என்பதாம். இஃது அவயவ உருவகம். (8)

இரவுஉள்ள உள்ளம் உருகும் கரவுஉள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும். 1069

இரவு உள்ள உள்ளம் உருகும் - உடையார் முன் இல்லார் சென்று இரந்து நிற்றலின் கொடுமையை நினைக்குங்கால் எம்உள்ளம் கரைந்து உருகாநிற்கும், கரவு உள்ள உள்ளதூஉம் இன்றிக்

கெடும் - இனி அந்நிலையைக் கண்டுவைத்தவர் இல்லை என்றலின் கொடுமையை நினைந்தால அவ் உருகுமளவுதானும் இன்றிப் பொன்றிவிடும்.

"இரவினை, உளளுங்கால் உள்ளம் உருகுமால் என்கொலோ கொளளுங்கால கொளவார் குறிப்பு" (நாலடி. 305) என்றார்

பிறரும். இரவினும் காவு கொடிது என்பதாம. இதற்குப் பிற ரெலலாம் 'இரக்கின்றவா' உளளம் உருகும் என்று உரைததார்()

கரப்பவர்க்கு யாங்குஒளிக்கும் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர். 1070

சொலலாட இரப்பவர் உயிா போம் - கரப்பாா இல்லை என்று சொல்லாடிய துணையானே இரப்பார்க்கு உயிரபோகா நின்றது, கரப்பவாக்கு யாஙகு ஒளிக்கும்கொல - இனிச சொல் லாடுகின்ற அவர்தமக்கு உயிா பின்னும் நிற்றலான் அப்பொழுது எப்புரையுள புக்கொளிததுநிற்கும்?

உயிர்போகலாவது இனி யாம் என் செய்தும் என்று ஏங்கிச் செயலற்று நிற்றல்; "அகநிலையே, மாயாதோ மாற்றிவிடின்" (நாலடி. 308) என்றார் பிறரும். கேட்டாரைக்கொலலவற்றாய சொல, சொலவாரைக் கோறல சொலலவேண்டாவாயினும் அது காண்கின்றிலம் இஃது என்னோ என்பதாம. 'வறுமையுற்றுழி மறையாது இரக்கப்படுவாராய கேளிாகட்கும் அதனைச் சொல லாட உயிரபோம் ஆனபின், மறைக்கப்படுவாராய பிறர்க்குச் சொலலாடியக்கால் போகாது எஙகே ஒளிததுநிற்கும்' இரண் டானும் போமேஅன்றோ' என இரவஞ்சினான்ஒருவன் கூற்றாக்கி உரைப்பாரும் உளர்.

இவை மூன்று பாட்டானும் அவ் இரவின் குற்றமும் கரவின் குற்றமும ஒருங்கு கூறப்பட்டன. (10)

## 108. கயமை

அஃதாவது மேல் அரசு இயலுள்ளும் அங்க இயலுள்ளும் சிறப்புவகையாற் கூறப்பட்ட குணங்களுள் ஏற்புடையன குறிப்பினால் யாவர்க்கும் எய்த வைத்தமையின், ஆண்டுக் குறிப்பாற் கூறியனவும், ஈண்டு ஒழிபு இயலுள் வெளிப்படக் கூறியனவுமாய குணங்கள் யாவும் இலராய கீழோரது தன்மை. அதனால் இஃது எல்லாவற்றிற்கும் பின் வைக்கப்பட்டது.

**மக்களே போல்வர் கயவர் அவரன்ன**
**ஒப்பாரி யாம்கண்டது இல்.** 1071

*மக்களே போல்வர் கயவர் - வடிவான் முழுதும் மக்களே ஒப்பர் கயவர்; அவர் அன்ன ஒப்பாரி யாம் கண்டது இல் - அவர் மக்களையொத்தாற் போன்ற ஒப்பு வேறு இரண்டு சாதிக்கண் யாம்கண்டதில்லை.*



*முழுதும் ஒத்தல் தேற்றேகாரத்தால் பெற்றாம். அவர் என்றது அவர்மாட்டுளதாய ஒப்புமையை. மக்கட்சாதிக்கும் கயச்சாதிக்கும் வடிவு ஒத்தலின் குணங்களது உண்மைஇன்மைகளானல்லது வேற்றுமை அறியப்படாது என்பதாம்.*

*இதனான் கயவரது குற்றமிகுதி கூறப்பட்டது.* (1)

**நன்றுஅறி வாரின் கயவர் திருவுடையர்**
**நெஞ்சத்து அவலம் இலர்.** 1072

*நன்று அறிவாரின் கயவர் திரு உடையர் - தமக்குறுதியாவன அறிவாரின் அவையறியாத கீழ்மக்கள் நன்மையுடையர், நெஞ்சத்து அவலமிலர் - அவர்போல அவைகாரணமாகத் தம்நெஞ்சத்தின்கண் கவலையிலராகலான்.*

*நன்று என்பது சாதியொருமை. உறுதிகளாவன இம்மை மறுமை வீடுகட்கு உரியவாய புகழ், அறம், ஞானங்கள். இவற்றை அறிவார் இவை செய்யாநின்றே மிகச் செயப்பெறுகின்றிலேம் என்*

றும், செய்கின்ற இம்மைக்கு இடையூறு வருங்கொல் என்றும், இவற்றின் மறுதலையாய பழி பாவம் அறியாமை என்பனவற்றான் யாதுவிளையுமோ என்றும், இவ்வாற்றால் கவலை எய்துவர்; கயவர் அப்புகழ்முதலிய ஒழித்துப் பழிமுதலிய செய்யாநின்றும் யாதும் கவலையுடையரல்லராகலான் திருவுடையர் எனக் குறிப்பால் இகழ்ந்தவாறு.

இதனான் பழி முதலியவற்றிற்கு அஞ்சார் என்பது கூறப்பட்டது. (2)

**தேவர் அனையர் கயவர் அவருந்தாம்**
**மேவன செய்தொழுக லான்.** 1073

தேவர் அனையர் கயவர் - தேவரும் கயவரும் ஒருதன்மையர், அவரும் தாம் மேவன செய்து ஒழுகலான் - அஃது யாதனான் எனின், தேவரைப்போன்று தாமும் நியமிப்பாரின்றிக் கயவரும் தாம் விரும்பியவாற்றைச் செய்தொழுகலான்.

உயர்ச்சியும் இழிவுமாகிய தம் காரண வேறுபாடு குறிப்பால் தோன்ற நின்றமையின், இது புகழ்வார் போன்று பழித்தவாறா யிற்று.

இதனை விலக்குவாரின்றி வேண்டிய செய்வர் என்பது கூறப்பட்டது. (3)

**அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்**
**மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ்.** 1074

கீழ்* கீழாயினான், அகப்பட்டி ஆவாரைக் காணின் - தன்னிற்* சுருங்கிய பட்டியாய் ஒழுகுவாரைக் கண்டானாயின், அவரின்

மிகப்பட்டுச் செம்மாக்கும் - அவ் ஒழுக்கத்தின்கண் அவரின் தான் மேம்பட்டு அதனால் தன்மிகுதி காட்டி இறுமாக்கும்.

அகப்பட்டி - அகமாகியபட்டி. பட்டிபோன்று வேண்டிய வாறே ஒழுகலின், 'பட்டி' என்றார்; "நோதக்க செய்யும் சிறு பட்டி" (கலித். குறிஞ்சி. 15) என்றார் பிறரும்.

இதனான் அவர் மேம்படுமாறு கூறப்பட்டது. (4)

**அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்**
**அவாவுண்டேல் உண்டாம் சிறிது** 1075

கீழ்களது ஆசாரம் அச்சமே - கயவரதாய ஆசாரம் கண்டது உண்டாயின் அதற்குக் காரணம் அரசனான் ஏதம் வரும் என்று அஞ்சும் அச்சமே, எச்சம் அவா உண்டேல் சிறிது உண்டாம் - அஃதொழிந்தால், தம்மால் அவாவப்படும் பொருள் அதனை உண்டாமாயின் சிறிது உண்டாம்.

ஆசாரத்தின் காரணத்தை 'ஆசாரம்' என்றும், அவாவப்படுவதனை 'அவா' என்றும் கூறினார். எச்சத்தின்கண் என்னும் ஏழாவது இறுதிக்கண் தொக்கது. பெரும்பான்மை அச்சம், சிறுபான்மை பொருட்பேறு இவ் இரண்டானும் அன்றி இயல்பாக உண்டாகாது என்பதாம்.

வேண்டியசெய்தலே இயல்பு, ஆசாரம் செய்தல் இயல்பன்று என்பது இதனான் கூறப்பட்டது. (5)

**அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட**
**மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான்.** 1076

தாம் கேட்ட மறை உய்த்துப் பிறர்க்கு உரைக்கலான் - தாம் கேட்ட மறைகளை இடந்தோறும் தாங்கிக்கொண்டு சென்று பிறர்க்குச் சொல்லுதலான், கயவர் அறை பறை அன்னர் - கயவர் அறையப்படும் பறையினை ஒப்பர்.

மறை - வெளிப்படின் குற்றம் விளையுமென்று பிறரை மறைத்து ஒருவன் சொல்லிய சொல். பிறர் - அம் மறைதற் குரியார். 'உய்த்து' என்றார், அவர்க்கு அது பெரும்பாரமாதல் நோக்கி. பறை ஒருவன் கையால் தன்கண் அறிவித்ததொன்றனை இடந்தோறும் கொண்டு சென்று யாவரையும் அறிவிக்குமாறு லான், இது தொழில் உவமம்.

இதனான் அவரது செறிவின்மை கூறப்பட்டது. (6)

**ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுஉடைக்கும்**
**கூன்கையர் அல்லா தவர்க்கு.** 1077

கயவர் கொடிறு உடைக்கும் கூன் கையர் அல்லாதவர்க்கு - கயவர் தம் கதுப்பினை நெரிப்பதாக வளைந்த கையினை உடையரல்லாதார்க்கு, ஈர்ங்கை விதிரார் - தாம் உண்டு பூசிய கையைத் தெறித்தல் வேண்டும் என்று இரந்தாலும் தெறியார்.

வளைந்த கை; முறுக்கிய கை. மெலியார்க்கு யாதும்கொடார்; வலியார்க்கு எல்லாம் கொடுப்பர் என்பதாம். (7)



சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ். 1078

சொல்லப் பயன்படுவர் சான்றோர் - மெலியார் சென்று தம் குறையைச் சொல்லிய துணையானே இரங்கிப் பயன்படுவர் மேலாயினார், கீழ் கரும்புபோல கொல்லப் பயன்படும் - மற்றைக் கீழாயினார் கரும்புபோல வலியார் நைய நெருக்கிய வழிப் பயன்படுவர்.

பயன்படுதல் உள்ளது கொடுத்தல். கீழாயினாரது இழிவு தோன்ற, மேலாயினாரையும் உடன் கூறினார்.

இவை இரண்டு பாட்டானும் அவர் கொடுக்குமாறு கூறப்பட்டது. (8)

உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ். 1079

உடுப்பதூஉம் உண்பதூஉம் கீழ் காணின் - பிறர் செல்வத்தால் பட்டும் துகிலும் உடுத்தலையும் பாலோடு அடிசில் உண்டலையும் கீழாயினான் காணுமாயின், பிறர்மேல் வடுக் காண வற்றாகும் - அவற்றைப் பொறாது அவர்மாட்டு வடுவில்லையாகவும் உண்டாக்க வல்லதாம்.

உடுப்பது உண்பது என்பன ஏனைய அவ்விரு தொழிலின் மேல நின்றன. அவற்றால், பூண்பன முதலிய பிறதொழில்களும் கொள்ளப்படும். அவற்றைக் கண்ட துணையானே பொறாமையெய்தலின் 'காணின்' என்றும், கேட்டார் இது கூடும் என்று இயையப் படைத்தல் அரிது ஆகலின் 'வற்றாகும்' என்றும் கூறினார்.

இதனான் பிறர் செல்வம் பொறாமை கூறப்பட்டது. (9)

**எற்றிற்கு உரியர் கயவர்ஒன்று உற்றக்கால்**
**விற்றற்கு உரியர் விரைந்து. 1080**

*கயவர் ஒன்று உற்றக்கால் விரைந்து விற்றற்கு உரியர் - கயவர் தம்மை யாதானும் ஒரு துன்பம் உற்றக்கால் அதுவே பற்றுக் கோடாக விரைந்து தம்மைப் பிறர்க்கு விற்றற்கு உரியர், எற்றிற்கு உரியர் - அதுவன்றி வேறு எத்தொழிற்கு உரியர்?*

*உலகின்மையாகப் பிறிதாக ஒன்று வந்து உற்ற துணையான் என்பது தோன்ற 'ஒன்று உற்றக்கால்' என்றும், கொள்கின்றார் தம் கயமை அறிந்து வேண்டார் என்றதற்கு முன்னே விற்றுநிற்றலின் 'விரைந்து' என்றும் கூறினார். ஒருதொழிற்கும் உரியரல்லர் என்பது குறிப்பெச்சம்.*

*இதனான் தாம் பிறர்க்கு அடிமையாய் நிற்பர் என்பது கூறப் பட்டது.* (10)

ஒழிபியல் முற்றும்
பொருட்பால் முற்றும்

—:o:—

# காமத்துப் பால்

—:0:—

இனி, அப்பொருளைத் துணைக்காரணமாக உடைத்தாய இம்மையே பயப்பதாய இன்பம் கூறுவான் எடுத்துக்கொண்டார். ஈண்டு இன்பம் என்றது ஒரு காலத்து ஒரு பொருளான் ஐம்புலனும் நுகர்தற்சிறப்புடைத்தாய காம இன்பத்தினை. இச் சிறப்புப் பற்றி வடநூலுள் போசராசனும் 'சுவைபல என்று கூறுவார்

கூறுக, யாம் கூறுவது இன்பச்சுவை ஒன்றனையுமே' என இதனையே மிகுத்துக் கூறினன். இது புணர்ச்சி, பிரிவு என இரு வகைப்படும். ஏனை, இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவோ எனின், இவர் பொருட்பாகுபாட்டினை அறம், பொருள், இன்பம் என வடநூல் வழக்குப் பற்றி ஓதுதலான், அவ்வாறே அவற்றைப் பிரிவின்கண் அடக்கினர் என்க.

# களவு இயல்

—:o:—

இனி, அவை தம்மையே தமிழ் நூல்களோடும் பொருந்த, புணர்ச்சியை 'களவு' என்றும் பிரிவை 'கற்பு' என்றும் பெரும்பான்மை பற்றி வகுத்து, அவற்றைச் சுவை மிகுதி பயப்ப உலகினடையோடு ஒப்பும் ஒவ்வாமையும் உடையவாக்கிக் கூறுகின்றார். அக் கைக்கோள் இரண்டனுள்ளும் களவாவது பிணிமூப்பு இறப்புக்கள் இன்றி எஞ்ஞான்றும் ஒருதன்மையராய் உருவும் திருவும் பருவமும் குலனும் குணனும் அன்பும் முதலியவற்றால் தம்முள் ஒப்புமை உடையராய தலைமகனும் தலைமகளும் பிறர்கொடுப்பவும் அடுப்பவும் அன்றிப் பால்வகையால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது. அதனை ஏழு அதிகாரத்தால் கூறுவான்தொடங்கி, முதற்கண் தகை அணங்கு உறுத்தல் கூறுகின்றார்.

## 109. தகை அணங்கு உறுத்தல்

அஃதாவது பொழிலின்கண் விளையாட்டு விருப்பான் ஆயம் நீங்க அதன்கண் தமியளாய் நின்றாளை, வேட்ட விருப்பான் இளையர் நீங்கத் தமியனாய்வந்து கண்ணுற்ற தலைமகன், அவள் வனப்புத் தன்னை வருத்தம் உறுவித்ததனைச் சொல்லுதல். இது, கண்ணுற்றபொழுதே நிகழ்வதாகலின், முதற்கண் கூறப்பட்டது.

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் நெஞ்சு. 1081

*தலைமகளை உருவு முதலியன முன்கண்டறிவன அன்றிச் சிறந்தமையின் அவளைத் தலைமகன் ஐயுற்றது.*

*கனங்குழை - இக்கனவிய குழையை உடையாள், அணங்கு கொல் - இப்பொழிற்கண் உறைவாளோர் தெய்வமகளோ? ஆய் மயில்கொல் - அன்றி ஒருமயில் விசேடமோ? மாதர்கொல் - அன்றி ஒருமானுடமாதரோ, என் நெஞ்சு மாலும் - இவளை இன்னள் என்று துணியமாட்டாது என் நெஞ்சு மயங்காநின்றது.*

*ஓ - அசை. ஆய்மயில் - படைத்தோன் விசேடமாக ஆய்ந்து படைத்த மயில் பிற சாதியுள் தெரிந்தெடுத்த மயில் என்றும் ஆம். கனங்குழை - ஆகுபெயர். 'கணங்குழை' என்று பாடம் ஓதி, 'பலவாய்த் திரண்ட குழை' என்று உரைப்பாரும் உளர். எழுதலாகா உருவும் தன் வருத்தமும் பற்றி 'அணங்குகொல்' என்றும் சாயலும் பொழில்வயின் நிற்றலும் பற்றி, 'ஆய்மயில்கொல்' என்றும், தன் நெஞ்சு சென்றமையும் அவள் எதிர்நோக்கியவாறும் பற்றி 'மாதர்கொல்' என்றும் கூறினான்.* (1)

நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்னது உடைத்து. 1082

*மானுட மாதராதல் தெளிந்த தலைமகன் அவள் நோக்கினையும் வருத்தமும் கூறியது.*

*நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் - இப் பெற்றித்தாய வனப்பினை உடையாள் என் நோக்கிற்கு எதிர்நோக்குதல், தாக்கு அணங்கு தானைக்கொண்டன்னது உடைத்து - தானே தாக்கி வருத்துவதோர் அணங்கு தாக்குதற்குத் தானையையும் கொண்டு வந்தாற்போலும் தன்மையை உடைத்து.*

*மேலும், 'அணங்குகொல் ஆய்மயில் கொல்' என்றமையான், இகரச்சுட்டு வருவிக்கப்பட்டது. எதிர் நோக்குதல் என்றமையின், அது குறிப்பு நோக்காயிற்று. வனப்பால் வருத்துதல் மேலும் குறிப்பு நோக்கால் வருத்துதல் கூறியவாறு. 'நோக்கினாள்' என்பதற்கு 'என்னால் நோக்கப்பட்டாள்' என்று உரைப்பாரும் உளர்.* (2)

பண்டுஅறியேன் கூற்றுஎன் பதனை இனியறிந்தேன்
பெண்டகையான் பேரமர்க் கட்டு 1083

இதுவும் அது.

கூற்று என்பதனைப் பண்டு அறியேன் - கூற்றென்று நூலோர்சொல்வதனைப் பண்டு கேட்டு அறிவதல்லது கண்டறியேன், இனி அறிந்தேன் - இப்பொழுது கண்டறிந்தேன், பெண்



தகையான் பேர் அமர்க் கட்டு - அது பெண்தகையுடனே பெரியவாய் அமர்த்த கண்களை உடைத்து.

பெண்தகை - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் குணங்கள். அவை அவ்வக்குறிகளான் அறியப்பட்டன. அமர்த்தல் - அமர்செய்தல், பெயரடியாயவினை. பெண்தகையால் இன்பம் பயத்தலும் உண்டேனும் துன்பம் பயத்தல் மிகுதிபற்றிக் கூற்றாக்கிக் கூறினான். (3)

கண்டார் உயிர்உண்ணும் தோற்றத்தான் பெண்தகை
பேதைக்கு அமர்த்தன கண். 1084

இதுவும் அது.

பெண்தகைப் பேதைக்குக் கண் - பெண்தகையை உடைய இப் பேதைக்கு உளவாய கண்கள், கண்டார் உயிர் உண்ணும் தோற்றத்தான் அமர்த்தன - தம்மைக்கண்டார் உயிர் உண்ணும் தோற்றத்துடனே கூடி அமர்த்திருந்தன.

அமர்த்தல் - மாறுபடுதல். குணங்கட்கும் பேதைமைக்கும் ஏலாது கொடியவாயிருந்தன என்பதாம். (4)

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து. 1085

இதுவும் அது.

கூற்றமோ-என்னை வருத்துதல் உடைமையான் கூற்றமோ, கண்ணோ-என்மேல் ஓடுதல் உடைமையான் கண்ணோ, பிணையோ - இயல்பாக வெருவுதலுடைமையான் பிணையோ, அறிகின்றிலேன்;

மடவரல் நோக்கம் இம் மூன்றும் உடைத்து - இம மடவரல் கண்களின் நோக்கம் இம் மூன்றன் தன்மையையும உடைத்தாயிரா நின்றது.

இன்பமும் துன்பமும் ஒருங்குசெய்யாநின்றது என்பதாம். தொழிலபற்றி வந்த ஐயநிலை உவமம். (5)

**கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்குஅஞர்**
**செய்யல மன்இவள் கண்.** 1086

*இதுவும் அது.*

கொடும் புருவம் கோடா மறைப்பின்-ஈரியாநட்பாய கொடும் புருவங்களதாம் செப்பமுடையவாய் விலக்கினவாயின், இவள கண் நடுங்கு அஞர் செய்யல - அவற்றைக் கடந்து இவள கண்கள எனக்கு நடுங்கும் துயரைச் செய்யமாட்டா.

கட்டாரைக் கழறுவார்க்குத தாம் செம்மையுடையராதல் வேண்டலின் 'கோடா' என்றும், செய்கின்ற அவற்றிற்கும் உறுகின்ற தனக்கும் இடைநின்று விலக்குங்காலும் சிறிது இடை



பெறின் அதுவழியாக வந்து அஞர்செய்யுமாகலின் 'மறைப்பின்' என்றும் கூறினான். நடுங்கு அஞர் - நடுங்கற்கு ஏதுவாய அஞர். தாம இயல்பாகக் கோடுதல் உடைமையான் அவற்றை'மிகுதிக்கண் மேற்சென்று இடிக்கமாட்டா'வாயின என்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. (6)

**கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்**
**படாஅ முலைமேல் துகில்.** 1087

*அவள முலைகளினியை வருத்தம் கூறியது.*

மாதர் படா முலைமேல துகில் - இம்மாதர் படாமுலைகளின் மேலிட்ட துகில, கடாக் களிற்றின்மேல கட்படாம் - அவை கொல்லாமற் காத்தலின், கொல்வதாய மதக்களிற்றின் மேலிட்ட முகபடாத்தினை ஒக்கும.

கண்ணை மறைத்தல பற்றி 'கட்படாம' என்றான். துகிலான் மறைத்தல நாணுடை மகளிர்க்கு இயல்பாகலின், அத்துகிலோடே அவற்றின் வெம்மையும பெருமையும கண்டு இத்துணையாற்றலுடையன இவை என்றுணர்ந்தான், வந்த சாயலின் ஏறாக் கருதி 'படாமுலை' என்றான். உவமம சிறிது மறையாவழி உவை கொல்லும என

பது தோன்ற நின்றது. (7)

**ஒண் நுதற்கு ஓஒ உடைந்ததே ஞாட்பினுள்**
**நண்ணாரும் உட்கும்என் பீடு.** 1088

ஆற்றலழிவு வருத்தம் கூறியது.

ஞாட்பினுள் நண்ணாரும் உட்கும் என் பீடு - போர்க்களத்து வந்து நேராத பகைவரும் நேர்நின்றார்வாய்க் கேட்டு அஞ்சுதற்கு ஏது ஆய என்வலி, ஒண்ணுதற்கு உடைந்ததே - இம்மாதரது ஒள்ளிய நுதலொன்றற்குமே அழிந்து விட்டது.

'மாதர்' என்பது அதிகாரத்தான் வந்தது. 'ஞாட்பினுள்' என்றதனான் பகைவராதல் பெறாம். 'பீடு' என்ற பொதுமையான் மனவலியும் காயவலியும் கொள்க. 'ஓஒ' என்னும் வியப்பின்கண் குறிப்பு அவ் வலிகளது பெருமையும் நுதலது சிறுமையும் தோன்ற நின்றது. கழிந்ததற்கு இரங்கலின் தற்புகழ்தல் அன்றாயிற்று. (8)

**பிணைஏர் மடநோக்கும் நாணும் உடையாட்கு**
**அணிஎவனோ ஏதில தந்து.** 1089

அணிகலத்தானாய வருத்தம் கூறியது.

பிணை ஏர் மடநோக்கும் நாணும் உடையாட்கு - புறத்து மான் பிணை ஒத்த மடநோக்கினையும் அகத்து நாணினையும் உடையளாய இவட்கு, ஏதில தந்து அணி எவன்? - ஒற்றுமை உடைய இவ் அணிகளே அமைந்திருக்க வேற்றுமையுடைய அணிகளைப் படைத்து அணிதல் என்ன பயனுடைத்து?



மடநோக்கு-வெருவுதல் உடைய நோக்கு. இவட்குப் பாரமாதலும் எனக்கு அணங்காதலும் கருதாமையின், அணிந்தார் அறிவிலர் என்பதாம். (9)

**உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்**
**கண்டார் மகிழ்செய்தல் இன்று.** 1090

தலைமகள் குறிப்பறிதல் உற்றான் சொல்லியது.

அடுநறா - அடப்படும் நறா, உண்டார்கண் அல்லது - தன்னை உண்டார் மாட்டு மகிழ்ச்சியைச் செய்வதல்லது, காமம்போல்

கண்டார் மகிழ்செய்தல் இன்று - காமம்போலக் கண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்தல் உடைத்தன்று.

அடுநறா - வெளிப்படை. 'காமம' என்றது ஈண்டு அது நுகர்தற்கு இடனாகியாரை. 'கண்டார்கண்' என்னும் ஏழாவது இறுதிக் கண்தொக்கது. மகிழ்செய்தற்கண் காமம் நறவினும சிறந்ததே எனினும், இவள் குறிப்பு ஆராய்ந்து அறியாமையின், யான் அது பெற்றிலேன் எனக் குறிப்பெச்சம் வருவித்துரைக்க, "அரிமயிர்த் திரள் முன்கை" (புறநா. 11) என்னும் புறப்பாட்டிற் குறிப்புப் போல. (10)

## 110. குறிப்பு அறிதல்

அஃதாவது தலைமகன் தலைமகள் குறிப்பினை அறிதலும், தோழி குறிப்பினை அறிதலும், அவள்தான் அவ் இருவர் குறிப்பினையும் அறிதலுமாம். தகை அணங்குற்ற தலைமகன் தலைமகளைக்கூடுங்கால் இதுவேண்டுமாகலின், தகை அணங்கு உறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

இருநோக்கு இவள்உண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்குஒன்று அந்நோய் மருந்து. 1091

தலைமகன் தலைமகள் உளப்பாட்டுக் குறிப்பினை அவள் நோக்கினான் அறிந்தது.

இவள் உண்கண் உள்ளது இருநோக்கு - இவளுடைய உண்கண் அகத்ததாயநோக்கு இதுபொழுது என்மேல் இரண்டுநோக்காயிற்று, ஒரு நோக்கு நோய் நோக்கு ஒன்று அந்நோய் மருந்து - அவற்றுள் ஒருநோக்குஎன்கண் நோய்செய்யும் நோக்கு, ஏனையது அந் நோய்க்கு மருந்தாய நோக்கு.

உண்கண் - மையுண்டகண். நோய்செய்யும் நோக்கு அவள் மனத்திலுள்ள காமக்குறிப்பினை வெளிப்படுக்கின்ற நோக்கு. மருந்தாய நோக்கு தன்கண் நிகழ்கின்ற அற்பு நோக்கு. நோய்செய்யும் நோக்கினைப்பொதுநோக்கு என்பாரும் உளர் அது நோய்செயின் கைக்கிளையாவதல்லது அகமாகாமை அறிக. இவ்வருத்தந் தீரும் வாயிலும் உண்டாயிற்று என்பதாம். (1)

கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமதத்தின்
செம்பாகம் அன்று பெரிது 1092

இதுவும் அது.

கண் களவுகொள்ளும் சிறுநோக்கம் - இவள்கண்கள் யான் காணமல் என்மேல் நோக்குகின்ற அருகிய நோக்கம், காமத்தின் செம்பாகம் அன்று பெரிது - மெய்யுறுபுணர்ச்சியின் ஒத்த பாதிஅளவன்று; அதனினும மிகும்.

தான் நோக்கியவழி நாணி இறைஞ்சியும், நோக்காவழி உற்று நோக்கியும் வருதலான் 'களவு கொள்ளும்' என்றும், அஃது உளதாம்காலம சிறிதாகலின் 'சிறு நோக்கம்' எனறும, அஃது உளப்பாடுளவழி நிகழ்வதாகலின், இனிப்புணர்தல ஒருதலை என்பான் 'செமபாகம அன்று பெரிது' என்றும கூறினன். (2)

நோக்கினள் நோக்கி இறைஞ்சினள் அஃதுஅவள்
யாப்பினுள் அட்டிய நீர். 1093

நோக்கினும் நாணினும அறிந்தது.

நோக்கினள - யான் நோக்காஅளவில தான் என்னை அன்போடு நோக்கினள, நோக்கி இறைஞ்சினள-நோக்கி ஒன்றனையுட்கொண்டு நாணி இறைஞ்சினள, அஃது யாப்பினுள அவள அட்டிய நீர் - அக்குறிப்பு இருவேமிடையும தோன்றிய அற்புப் பயிர வளர அதன கண் அவள வார்த்த நீராயிறறு.

அஃது என்னும சுட்டுப்பெயர அச செயலைக்கு ஏதுவாய குறிப்பின்மேல் நின்றது. பாத்தியுள்ளயதனை, 'யாப்பு' என்றார். ஏகதேச உருவகம். (3)

யான்நோக்கும் காலை நிலன் நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும். 1094

நாணினும்ம மகிழ்ச்சியினும்ம அறிந்தது.

யான் நோக்குங காலை நிலன் நோக்கும் - யான் தன்னை நோக்குங்கால தானெதிர்நோக்காது இறைஞசி நிலத்தை நோக்கா நிற்கும, நோக்காக்கால தான நோக்கி மெலல நகும் - அஃது அறிந்து யான் நோக்காக்கால தான் என்னை நோக்கித் தன்

னுளளே மகிழாநிற்கும்.

மெல்ல - வெளிப்படாமல. மகிழ்ச்சியால் புணர்தற்குறிப்பு இனிது விளங்கும். 'மெலல ாகும' என்பதற்கு முறுவலிக்கும் என்று உரைப்பாரும உளர். (4)

**குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்**
**சிறக்கணித்தாள் போல நகும். 1095**

இதுவும் அது.



குறிக்கொண்டு நோக்காமை அல்லால் - நேரே குறிக்கொண்டு நோக்காத்துணையல்லது, ஒருகண் சிறக்கணித்தாள் போல நகும் - ஒருகண்ணைச் சிறக்கணித்தாள்போல என்னை நோக்கிப் பின் தன்னுளளே மகிழாநிற்கும.

சிறக்கணித்தாள என்பது செய்யுள விகாரம். சிறக்கணித்தல்-சுருங்குதல். அது தானும் வெளிப்படநிகழாமையின், 'போல' என்றான். 'நோக்கி' என்பது சொலலெச்சம். இனி இவளை எய்துதல் ஒருதலையென்பது குறிப்பெச்சம். (5)

**உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்**
**ஒல்லை உணரப் படும். 1096**

தோழி சேண்படுததவழி அவள குறிப்பு அறிந்த தலைமகன் தன்னுள்ளே சொலலியது.

உறாதவாபோல சொலினும் - புறதது நொதுமலாபோலக் கடுஞ்சொற் சொன்னாராயினும, செறாா சொலஒல்லை உணரப்படும- அகத்துச் செறுதலிலாதாா சொல பிறபயந்தல குறையுறுவால் கடிதின் அறியப்படும.

கடுஞ்சொல என்பது 'இவ இடம காவல மிகுதிஉடைத்து- வரற்பாலிர்அல்லீர்' என்றல முதலாயின. 'செறாா' எனவே, அருள உடைமை பெறப்பட்டது. தன்குறை முடிக்கக்கருதியே சேண்படுக் கின்றமை குறிப்பான் அறிந்து, உலகியல மேலிட்டுக் கூறியவாறு. இது வருகின்றபாட்டிற்கும் ஒக்கும். (6)

**செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்**
**உறாஅர்போன்று உற்றார் குறிப்பு. 1097**

இதுவும் அது.

செருச சிறுசொலலும - பின் இனிதாய் முன் இன்னாதாய சொல்லும், செறளாபோல நோக்கும - அகததுச செறுதிருநதே புறத்துச் செறளர்போன்ற வெகுளி நோக்கும, உளாபோன்று உறளா குறிப்பு - கொதுமலா போன்று படபாயினாக்கு ஒரு குறிப்புப்பறறி வருவன.

குறிப்பு - ஆகுபெயா. இவை உளளே ஒரு பயன்குறித்து செய்கின்றன; இயலபலல, ஆகலான், இவற்றிறகு அஞ்சவேண்டா என்பதாம. (7)

அசையியற்கு உண்டுஆண்டுஓர் ஏஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும். 1098

தன்னை நோக்கி மகிழ்ந்த தலைமகளைக் கண்டு தலைமகன் கூறியது.

யான் நோக்கப் பசையினள் பைய நகும் - என்னை அகற்றுகின்ற சொற்கு ஆற்றாது யான் இரந்து நோக்கியவழி அஃது



அறிந்து நெகிழ்ந்து உள்ளே மெல்ல நகாநின்றாள், அசையியற்கு ஆண்டு ஓர் ஏஎர் உண்டு-அதனால் நுடங்கிய இயல்பினை உடையாட்கு அந் நகையின்கண்ணே தோன்றுகின்றதோர் நன்மைக் குறிப்பு உண்டு.

ஏர் - ஆகுபெயர். அக் குறிப்பு இனிப் பழுதாகாது என்பதாம். (8)

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே உள. 1099

தோழி மதியுடம்படுவாள தன்னுள்ளே சொல்லியது.

ஏதிலார் போலப்பொதுநோக்கு நோக்குதல்-முன்னறியாதார் போல ஒருவரையொருவர் பொதுநோக்கத்தான் நோக்குதல், காதலா கண்ணே உள-இக்காதலையுடையாகண்ணே உளவாகாநின்றன.

பொதுநோக்கு - யாவர்மாட்டும் ஒரு தன்மைத்தாய நோக்கு. நோக்குதல தொழில், ஒன்றேயாயினும இருவர்கண்ணும் நிகழ் தலானும, ஒருவாகண்தானும் குறிப்பு வேறு பாட்டால் பலவாம் ஆகலானும் 'உள' எனப்பன்மையாற் கூறப்பட்டது. இருவரும்

" மதமறைப்புணடோர் மகிழ்சசிபோல உளளதனனே மகிழ " (இறையனா. 8) தலின் அதுபற்றிக் காதலார என்றும், அது புறததுவெளிப்படாமையின் 'ஏதிலாரபோல' என்றும் கூறினள.

**கண்ணொடு கண்ணிணை நோக்குஒக்கின் வாய்ச்சொற்கள்**
**என்ன பயனும் இல. 1100**

இதுவும் அது.

கண்ணொடு கண்இணை நோக்கு ஒக்கின் - காமததிற்கு உரிய இருவருள ஒருவா கணகளோடு ஒருவர்கண்கள நோக்கால் ஒக்கு மாயின், வாய்சசொறகள என்ன பயனும் இல - அவர் வாய்மை தோன்றச் சொலலுகின்ற வாயச்சொறகள ஒருபயனும் உடைய அலல.

நோக்கால ஒததல காதலநோக்கினவாதல. வாய்ச்சொற்கள: மனததின்கண இன்றி வாயளவில தோன்றுகின்ற சொறகள். இருவர்சொலலும கேட்டு உலகியல மேலவைத்துக் கூறியவாறு. இருவர்சொலலுமாவன அவள புனங்காவல்மேலும், அவன் வேட்டத்தின்மேலும் சொல்லுவன. பயனில் சொற்களாகலின், இவை கொளளப் படா என்பதாம். இவை புணர்தல நிமித்தம்.

## 111. புணர்ச்சி மகிழ்தல்

அஃதாவது அங்ஙனம் குறிப்பறிந்து புணர்ந்த தலை மகன் அப் புணர்ச்சியினை மகிழ்ந்துகூறல். அதிகாரமுறை மையும் இதனானே விளங்கும்.



**கண்டுகேட்டு உண்டு உயிர்த்து உற்றஅறியும் ஐம்புலனும்**
**ஒண்டொடி கண்ணே உள. 1101**

இயற்கைப் புணர்ச்சி இறுதிக்கண் சொல்லியது.

கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும் — கண்ணால் கண்டும் செவியால் கேட்டும் நாவால் உண்டும் மூக்கால் மோந்தும் மெய்யால் தீண்டியும் அனுபவிக்கப்படும் ஐம்புலனும், ஒண்டொடி கண்ணே உள - இவ் ஒள்ளிய தொடியையுடையாள் கண்ணே உளவாயின.

உம்மை முற்றும்மை. தேற்றேகாரம் வேறிடத்து இன்மை விளக்கி நின்றது. வேறு வேறு காலங்களில் வேறுவேறு பொருள்களான் அனுபவிக்கப்படுவன ஒருகாலத்து இவள் கண்ணே அனுபவிக்கப்பட்டன என்பதாம். வடநூலார் இடக்கர்ப்பொருள வாகச் சொல்லிய புணர்ச்சித் தொழில்களும் ஈண்டு அடக்கிக் கூறப்பட்டன. (1)

பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து. 1102

இடந்தலைப்பாட்டின்கண் சொல்லியது.

பிணிக்கு மருந்து பிற - வாதம் முதலிய பிணிகட்கு மருந்தாவன அவற்றிற்கு நிதானமாயினவன்றி மாறாய இயல்பினையுடையனவாம், அணியிழை தன் நோய்க்கு மருந்து தானே—அவ்வாறன்றி இவ் அணியிழையினை உடையாள் தன்னானாய பிணிக்கு மருந்தும் தானேயாயினாள்.

இயற்கைப் புணர்ச்சியை நினைந்து முன் வருந்தினான் ஆகலின் தன்நோய் என்றும், அவ் வருத்தம் தமியாளை இடத்து எதிர்ப்பட்டுத் தீர்தலின் 'தானே மருந்து' என்றும் கூறினான். இப் பிணியும் எளியவாயவற்றால் தீரப்பெறாமை என்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது.

தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு. 1103

நிரதிசய இன்பத்திற்குரிய நீ இச் சிற்றின்பத்திற்கு இன்னை யாதல் தகாது என்ற பாங்கற்குத் தலைவன் சொல்லியது.

தாம் வீழ்வார் மென் தோளதுயிலின் இனிதுகொல்-ஐம்பு லன்களையும் நுகர்வார்க்குத தாம் விரும்பும மகளிர் மெலிய தோளின் கண் துயிலும் துயில்போல வருந்தாமல் எய்தலாமோ, தாமரைக்கண்ணன் உலகு?-அவற்றைத துறந்த தவயோகிகள எய்தும செங்கண்மால உலகம்''

ஐம்புலன்களையும் நுகர்வார் என்னும் பெயர் அவாய் நிலையான் வந்தது. இப் பெற்றித்தாய துயிலைவிட்டுத் தவயோகங்



களான் வருந்த வேண்டுதலின், எம்மனோர்க்கு ஆகாதுஎன்னும் கருத்தால், 'இனிதுகொல்' என்றான். இந்திரன்உலகு என்று உரைப் பாரும் உளர்: தாமரைக்கண்ணன் என்பது அவனுக்குப் பெயரன் மையின், அஃது உரையன்மையறிக. (3).

நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்என்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள். 1104

பாங்கற கூட்டத்து இறுதிக்கண் சொல்லியது.

நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்என்னும் தீ-தன்னை அகன்றுழிச் சுடாநிற்கும், அணுகுழிக்குளிராநிற்கும் இப்பெற்றித தாய தீயை, இவள யாண்டுப் பெற்றாள?-என்கண் தருதற்கு இவள எவ்வுலகததுப் பெற்றாள?

கூடாமுன் துன்புறுதலின் 'நீங்கின் தெறூஉம்' என்றும், கூடியபின் இன்புறுதலின், 'குறுகுங்கால் தண் என்னும்' என் றும், இப் பெற்றியதோர் தீ உலகதது இல்லையாமாகலின் 'யாண் டுப் பெற்றாள' என்றும் கூறினான். தன் காமத்தீ தன்னையே அவள தநதாளாகக் கூறினான், அவளான் அது வெளிப்படுத லின். (4).

வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள். 1105.

தோழியிற கூட்டதது இறுதிக்கண் சொல்லியது.

வேட்டபொழுதின் அவையவை போலுமே - மிக இனிய வாயபொருளகளைப் பெறாது அவற்றின்மேல விருப்பங்கூர்ந்த பொழுதின்கண அவையவைதாமே வநது இன்பஞசெய்யுமாறு போல இன்பஞ செயயும், தோட்டார கதுப்பினுள தோள - எப்பொழுதும பெற்றுப் புணரினும, பூவினை அணிநத தழைநத கூநதலினை யுடையாள தோளகள.

தோடு-ஆகுபெயர். இயறகைப்புணர்ச்சி, இடநதலைப்பாடு, பாங்கற் கூட்டததுக்கண் முன்னரே நிகழநதிருக்க, பின்னரும் புதியவாய் நெஞசம் பிணிததலின், அவ்ஆரரமைபறறி இவ்வாறு கூறினன் தொழிலுவமம்.

உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலான் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள். 1106

இதுவும் அது.

உயிர் உறுதோறு தளிர்ப்பத தீண்டலான்-தன்னைப் பெறாது வாடிய என்னுயிா பெற்றுறுநதோறுந் தளிர்க்கும்வகை தீண்டுதலான், பேதைக்குத் தோள அமிழ்தின் இயன்றன - இப் பேதைக்குத தோள்கள் தீண்டப்படுவதோர் அமிழ்தினால் செய்யப்பட்டன..



ஏதுவாகலான் தீண்டல் அமிழ்திற்கு எய்திற்று. வாடிய உயிரைத் தளிர்ப்பித்தல் பற்றி, அவை 'அமிழ்தின் இயன்றன' என்றான். தளிர்த்தல்-இன்பத்தால் தழைத்தல். (6)

தம்இல் இருந்து தமதுபாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு. 1107

இவளை நீ வரைந்துகொண்டு உலகோர் தம் இல்லிருந்து தமது பாத்துண்ணும் இல்லறத்தோடுபடல்வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது.

அம்மா அரிவை முயக்கு - அழகிய மாமைநிறத்தையுடைய அரிவையது முயக்கம், தம்மில இருநது தமது பாதது உண்டற்று

– இன்பம்பயததற்கண் தமக்குரிய இலலின்கண் இருகது உல கோர் தம் தாளான் வந்த பொருளைத தென்புலததார் தெய்வம

விருந்து ஒக்கல்கட்குப் பகுததுத தம் கூற்றை உண்டாற்போலும.
தொழில் உவமம். இலலறஞ்செய்தா எய்தும் துறக்கதது

இன்பம் எனக்கு இப்புணாச்சியே தரும என வரைவு உடன் படான் கூறியவாருயிற்று. (7)

வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு. 1108

ஒதத அன்புடைய நமக்கு ஒருபொழுதும் விடாத முயக் கமே இனியது என வரைவுகடாய தோழிக்குச் சொல்லியது.

(நீ சொல்லுகின்றதொக்கும) வளி இடை போழப்படா முயக்கு - ஒருபொழுதும் நெகிழாமையின காறறுல இடையறுக்கப்படாத முயக்கம், வீழும் இருவர்க்கு இனிதே - ஒருவரையொருவா விழை வார் இருவர்க்கும் இனிதே.

முற்று உம்மை விகாரத்தால் தொக்கது. ஏகாரம் - தேற்றத தின்கண் வந்தது. ஈண்டு இருவர் இல்லை, இன்மையான், இஃது ஒவ்வாது என்பது கருத்து. களவிற்புணாச்சியை மகிழ்நது வரைவு உடன்படான் கூறியவாறு. (8)

ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன். 1109

கரத்தல வேண்டாமையின் இடையறவு இல்லாத கூட்ட மே இன்பப் பயனுடைத்து என வரைவுகடாவியாட்குச சொலலியது.

ஊடல் உணர்தல் புணர்தல் இவை-புணர்ச்சி இனிதாதற்பொ ருட்டு வேண்டுவதாய ஊடலும், அதனை அளவறிந்து நீக்குதலும் அதன்பின் நிகழ்வதாய அப்புணர்ச்சிதானும் என இவைஅன்றே, காமம் கூடியார் பெற்ற பயன் – வரைந்து கொண்டு காமத்தை இடைவிடாது எய்தியவர் பெற்ற பயன்கள.

ஆடவர்க்கு பிரிவு என்பது ஒன்று உளதாதல்மேலும், அது தான் பரத்தையர்மாட்டாதலும், அதனையறிந்து மகளிர் ஊடிநிற்றலும், அவ் ஊடலைத் தவறுசெய்தவர் தாமே தம் தவறின்மை கூறி நீக்கலும், பின்னும் அவ் இருவரும் ஒத்த அன்பினராய்க் கூடலுமன்றே முன்வரைத்தெய்தினோர் பெற்றபயன்? அப்பயன் இருதலைப்புள்ளின் ஓருயிராய உழுவலன்புடைய எமக்கு வேண்டா என அவ் வரைத்தெய்தலை இகழ்ந்து கூறியவாறு. (9)

அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு. 1110

புணர்ந்து உடன் போகின்றான் தன்னுள்ளே சொல்லியது

அறிதோறு அறியாமை கண்டற்று - நூல்களானும் நுண்ணுணர்வானும் பொருள்களை அறிய அறிய முன்னை அறியாமை கண்டாற்போலக் காணப்படாநின்றது, சேயிழைமாட்டுச் செறிதோறும் காமம் - சிவந்த இழையினையுடையாளை இடைவிடாது செறியச்செறிய இவள்மாட்டுக் காதல்.

களவொழுக்கத்திற் பல இடையீடுகளான் எய்தப்பெறாது அவாவுற்றான் இதுபொழுது நிரந்தரமாக எய்தப் பெற்றமையின், 'செறிதோறும்' என்றான். அறிவிற்கு எல்லை இன்மையான் மேன்மேல் அறிய அறிய முன்னையறிவு அறியாமையாய் முடியுமாறு போலச் செறிவிற்கு எல்லையின்றி மேன்மேற் செறியச்செறிய முன்னைச்செறிவு செறியாமையாய் முடியாநின்றது எனத் தன் ஆராமை கூறியவாறு. இப் புணர்ச்சிமகிழ்தல் தலைமகட்கும் உண்டேனும் அவள்மாட்டுக் குறிப்பான் நிகழ்வதல்லது கூற்றான் நிகழாமை அறிக. (10)

## 112. நலம் புனைந்து உரைத்தல்.

அஃதாவது தலைமகன் தலைமகளது நலத்தைப் புனைந்து சொல்லியது. இது, புணர்ச்சி மகிழ்ந்துழி நிகழ்வதாகலின், புணர்ச்சி மகிழ்தலின்பின் வைக்கப்பட்டது.

நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள் 1111

இயற்கைப்புணர்ச்சி இறுதிக்கண்சொல்லியது.

அனிச்சமே வாழி நன்னீரை-அனிச்சப்பூவே, வாழ்வாயாக மென்மையால் நீ எல்லாப் பூவினும் நல்ல இயற்கையையுடையை, யாம் வீழ்பவள் நின்னினும் மென்னீரள் - அங்ஙனமாயினும் எம் மால் விரும்பப்பட்டவள் நின்னினும் மெல்லிய இயற்கையை உடையவள்.

அனிச்சம் - ஆகுபெயர். 'வாழி' என்பது உடன்பாட்டுக் குறிப்பு. இனி'யானே மெல்லியன்' என்னும் தருக்கினை ஒழிவாயாக என்பதாம். அது பொழுது உற்றறிந்தானாகலின், ஊற்றின் இனி



மையையே பாராட்டினான். 'இன்னீரள்' என்று பாடம் ஓதுவாரும் உளர். (1)

மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று. 1112

இடந்தலைப்பாட்டின்கண்சொல்லியது.

நெஞ்சே - நெஞ்சே, இவள் கண் பலர்காணும் பூ ஒக்கும் என்று - யானே காணப்பெற்ற இவள் கண்களைப் பலரானும் காணப்படும் பூக்கள் ஒக்கும் என்று கருதி, மலர்காணின் மையாத்தி - தாமரை, குவளை, நீலம் முதலிய மலர்களைக் கண் டால் மயங்கா நின்றாய், நின் அறிவு இருந்தவாறென்?

மையாத்தல் ஈண்டு ஒவ்வாத வற்றை ஒக்கும் எனக்கோடல், இறுமாத்தல், செம்மாத்தல் என்பன போல ஒரு சொல். இயற்கைப்புணர்ச்சி நீக்கம் முதலாகத் தலைமகள் கண்களைக் காணப் பெறுமையின் அவற்றோடு ஒருபுடையொக்கும் மலர்களைக் கண்டுழி யெல்லாம் அவற்றின்கண் காதல்செய்துபோந்தான், இது பொழுது அக்கண்களின் நலம் முழுதும் தானே தமியாளை இடத் தெதிர்ப்பட்டு அனுபவித்தானாகலின், அம்மலர்கள் ஒவ்வாமை கண்டு, ஒப்புமை கருதிய நெஞ்சை இகழ்ந்து கூறியவாறு. (2)

முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேல்உண்கண் வேய்த்தோ ளவட்கு. 1113

கூட்டுதலுற்ற பாங்கற்குத் தலைமகன் தலைமகளது இயல்பு கூறியது.

வேய்த்தோளவட்கு - வேய்போலும் தோளினையுடையவட்கு, மேனிமுறி - நிறம் தளிர் நிறமாயிருக்கும். முறுவல் முத்தம் - பல முத்தமாயிருக்கும், நாற்றம் வெறி - இயல்பாய நாற்றம் நறு நாற்றமாயிருக்கும், உண்கண் வேல் - உண் கண்கள் வேலா யிருக்கும.

பெயரடையானும் ஊர இயல்பு கூறப்பட்டது. முறி, முறுவல் என்பன ஆகுபெயர். உருவகவகையால் கூறினமையின், புணர்ந்துரையாயிற்று, நின்னாற் கருதப்பட்டாளை அறியேன் என்று சேண்படுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியதூஉம் ஆம். (3)

**காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்**
**மாண்இழை கண்ஒவ்வேம் என்று. 1114**

பாங்கற்கூட்டத்துச்சென்று சார்தலுறுவான் சொல்லியது.

குவளை - குவளைப்பூக்கள்தாமும், காணின் - காண்டல் தொழிலையுடையவாயின், மாண் இழை கண் ஒவ்வேம் என்று



கவிழ்ந்து நிலன் நோக்கும் - மாண்ட இழையினை உடையாள் கண்களை யாம் ஒவ்வேம் என்று கருதி அந்நாணினால் இறைஞ்சி நிலத்தினை நோக்கும்.

பண்பானேயன்றித் தொழிலானும் ஒவ்வாது என்பான் 'காணின்' என்றும், கண்டால் அவ்வொவ்வாமையால் நாணு டைத்தாம் என்பது தோன்றக் 'கவிழ்ந்து' என்றும் கூறினான். காட்சியும் நாணும் இன்மையின் செம்மாந்து வானை நோக்கின என்பதாம். (4)

**அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு**
**நல்ல படாஅ பறை. 1115**

பகற்குறிக்கண் பூஅணி கண்டு சொல்லியது.

அனிச்சப்பூக் கால் களையாள் பெய்தாள் - இவள் தன் மென்மை கருதாது அனிச்சப்பூவை முகிழ் களையாது சூடினாள்: நுசுப்பிற்கு நல்ல பறை படா - இனி இவள் இடைக்கு நல்ல பறை கள ஒலியா.

அம முகிழ்ப்பாரம் பொருமையின் இடைமுரியும், முரிந்தால் அதற்குச் செததாக்கு உரிய நெய்தற்பறையே படுவது என்ப தாம, மக்கட்கு உரிய சாக்காடும் பறைபடுதலும் இலக்கணைக் குறிப்பால நுசுப்பின்மேல ஏறறப்பட்டன. (5)

மதியும் மடந்தை முகனும் அறியா
பதியின் கலங்கிய மீன். 1116

இரவுக்குறிக்கண் மதிகண்டு சொல்லியது

மீன்-வானத்து மீன்கள, மதியும் மடந்தை முகனும் அறியா- வேறுபாடு பெரிதாகவும் தம் மதியினையும் எம் மடந்தை முகத்தினையும் இதுமதி இதுமுகம் என்று அறியமாட்டாது, பதியின் கலங்கிய - தம் நிலையினின்றும் கலங்கித் திரியாநின்றன.

ஓரிடதது நில்லாது எப்பொழுதும் இயங்குதல் பற்றிப் 'பதியிற் கலங்கிய' என்றான். வேறுபாடு, வருகின்ற பாட்டால் பெறப்



படும். இனி 'இரண்டனையும் பதியிற்கலங்காத மீன்கள அறியு மலலது கலங்கின மீன்கள அறியா' என்றுரைப்பினும் அமையும். (6)

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுஉண்டோ மாதர் முகத்து. 1117

இதுவும் அது.

(அம்மீன்கள் அங்ஙனம் கலங்குதற்குக் காரணம் யாது?) அறுவாய் நிறைந்த அவிர் மதிக்குப்போல - முன் குறைந்தஇடம் வந்து நிரம்பியே விளங்கும் மதிக்கண்போல, மாதர் முகத்து மறு உண்டோ - இம் மாதர் முகத்து மறுவுண்டோ?

இடம் - கலை. மதிக்கு என்பது வேற்றுமை மயக்கம். தேய்தலும் வளர்தலும் மறுவுடைமையும் இன்மை பற்றி வேறுபாடறியலாகிருக்க அறிந்தில என இகழ்ந்து கூறியவாறு. (7)

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி. 1118

இதுவும் அது.

மதி வாழி–மதியே வாழ்வாயாக; மாதர் முகம்போல ஒளிவிட வல்லையேல காதலை – இம் மாதர்முகம்போல யான் மகிழும் வகை ஒளிவீச வல்லையாயின், நீயும் என் காதலையுடையையாதி.

மறு உடைமையின் அதுமாட்டாய், மாட்டாமையின் என்னால் காதலிக்கவும் படாய் என்பதாம். 'வாழி' என்பது இகழச்சிக் குறிப்பு. (8)

மலர்அன்ன கண்ணாள் முகம் ஒத்தியாயின்
பலர்காணத் தோன்றல் மதி. 1119

இதுவும் அது.

மதி - மதியே, மலர் அன்ன கண்ணாள முகம ஒததியாயின் – இம் மலர்போலும் கண்ணையுடையாள் முகத்தை நீ ஒக்கவேண்டுதியாயின், பலர் காணத தோன்றல் – இதுபோல யான்காணத தோன்று; பலர் காணத் தோன்றுதொழி.

தானே முகத்தின் நலம் முழுதும் கண்டு அனுபவித்தான் ஆகலின் ஈண்டும், பலர். காணததோன்றலை இழித்துக் கூறினான். தோன்றின் நினக்கு அவ் ஒப்பு உண்டாகாது என்பதாம. (9)

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். 1120

உடன்போக்கு உரைத்த தோழிக்கு அதனது அருமைகூறி மறுத்தது.

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் - உலகத்தாரான் மென்மைக்கு எடுக்கப்பட்ட அனிச்சப் பூவும் அன்னப்புள்ளின் சிறகும் ஆகிய இரண்டும், மாதர் அடிக்கு நெருஞ்சிப்பழம் - மாதரடிக்கு நெருஞ்சிப் பழம்போல வருத்தஞ் செய்யும்.

முள் வலிதாதலுடைமையின் 'பழம்' என்றான். இத் தன்மைத்தாய அடி "பாத்தி அன்னகுடுமிக் கூர்ங்கல" (அகநா. களிற். 5) கனையுடைய வெஞ்சுரத்தை யாங்ஙனம் கடக்கும் என்பது குறிப்பாற் பெறப்பட்டது. செம்பொருளே யன்றிக் குறிப்புப் பொருளும் அடிநலனழியாமையாகலின், இதுவும் இவ் அதிகாரத்த தாயிற்று. (10)



## 113. காதற் சிறப்பு உரைத்தல்

அஃதாவது தலைமகன் தன் காதல் மிகுதி கூறலும், தலைமகள் தன் காதல் மிகுதி கூறலும் ஆம். இது, புணர்ச்சியும் நலனும் பற்றி நிகழ்வதாகலின், புணர்ச்சிமகிழ்தல், நலம்புனைந்து உரைத்தல்களின்பின் வைக்கப்பட்டது.

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வால்எயிறு ஊறிய நீர். 1121

இயற்கைப்புணர்ச்சி இறுதிக்கண் தலைமகன் தன்நயப்பு உணர்த்தியது.

பணிமொழி வால் எயிறு ஊறிய நீர் - இம் மெல்லிய மொழியினையுடையாளது வாலிய எயிறூறிய நீர், பாலொடு தேன்கலந் தற்று – பாலுடனே தேனைக் கலந்த கலவைபோலும்.

'கலந்ததற்று' என்பதுவிகாரமாயிற்று; கலக்கப்பட்டதுஎன்றவாறு. பாலொடுதேன் என்றஅதனால் அதன் சுவைபோலுஞ்சுவையினைஉடைத்து என்பதாயிற்று. எயிறூறிய என இடத்துநிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல நின்றது. வேறுவேறறியப்பட்ட சுவையவாய பாலும் தேனும் கலந்துழி அக் கலவை இன்னது என்று அறியலாகாத இன்சுவைத்தாம் ஆகலின், அது பொருளாகிய நீர்க்கும் எய்துவிக்க. (1)

உடம்பொடு உயிரிடை என்ன மற்றுஅன்ன

மடந்தையொடு எம்மிடை நட்பு. 1122

பிரிவு அச்சம கூறியது.

உடம்பொடு உயிரிடை என்ன அன்ன - உடம்போடு உயிரிடை உளவாய நட்புக்கள் எத்தன்மைய அத்தன்மைய; மடந்தையொடு எம்மிடை நட்பு-இம் மடந்தையோடு எம்மிடை உளவாய நட்புக்கள.

என்ன எனப் பன்மையாறகூறியது, இரண்டும் தொன்றுதொட்டு வேறறுமையின்றிக் கலந்துவருதல், இன்ப துன்பங்கள ஒக்க அனுபவிததல, இன்றியமையாமை என்றிவற்றை நோக்கி. தெய்வப் புணாச்சியாகலான் அதுபொழுது உணர்ச்சியிலனாகி யாாவ பின் உடையனாமன்றே, ஆயவழி இவன் யாவன்கொல் எனவும், என் கண் அன்புடையன் கொல எனவும், இன்னும் இவனைத தலைப்பெய்தல் கூடுங்கொல எனவும் அவள மனத்தின்கண் நிகழும. அந் நிகழவனவற்றைக் குறிப்பான் அறிந்து அவை நிரக் கூறியவாறு. 'என்னை' என்று பாடம் ஓதுவாரும் உளர். (2).

கருமணியிற் பாவாய்நீ போதாய்யாம் வீழும்
திருநுதற்கு இல்லை இடம். 1123.



இடத்தலைப்பாட்டின்கண் தலைமகள்நீக்கத்துச் சொல்லியது.

கருமணியிற் பாவாய் நீ போதாய் - என் கண்ணிற் கருமணியின் கண் உறையும் பாவாய், நீ அங்குநின்றும் போதருவாயாக; யாம் வீழும் திருநுதற்கு இடம் இல்லை - போதராதிருத்தியாயின் எம்மால் விரும்பப்பட்ட திருநுதலையுடையாட்கு இருக்க இடமில்லையாம்.

யான் காணுது அமையாமையின் இவள புறததுப் போகற்பாலளன்றி என்கண்ணுள இருக்காற்பாலள; இருக்குங்கால நின்னொடு ஒருங்கு இருக்க இடம்போதாமையின், நின்னினும் சிறந்த இடததைக்கொடுதது நீ போதுவாயாக என்பதாம. (3)

வாழ்தல் உயிர்க்குஅன்னள் ஆயிழை சாதல்
அதற்குஅன்னள் நீங்கு மிடத்து. 1124

பகற்குறிக்கண் புணர்ந்துநீங்குவான் சொல்லியது.

ஆயிழை உயிர்க்கு வாழ்தல் அன்னள் - தெரிந்த இழையினை யுடையாள் எனக்குப் புணருமிடத்து உயிர்க்கு உடம்போடு கூடி வாழ்தல்போலும்; நீங்குமிடத்து அதற்குச் சாதல் அன்னள் - பிரியுமிடத்து அதற்கு அதனின் நீங்கிப் போதல் போலும்.

எனக்கு என்பதும் புணருமிடத்து என்பதும் அவாய்நிலை யான் வந்தன. வாழும் காலத்து வேற்றுமையின்றி வழிநிற்றலா னும், சாம் காலத்து வருத்தம் செய்தலானும், அவற்றை அவள் புணர்வு பிரிவுகட்கு உவமையாக்கினான். (4)

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்புஅறியேன்
ஒள்அமர்க் கண்ணாள் குணம். 1125

ஒருவழித்தணந்து வந்த தலைமகன் நீயிர் தணந்தஞான்று எம்மை உள்ளியும் அறிதிரோ? என்ற தோழிக்குச் சொல் லியது.

ஒள் அமர்க் கண்ணாள் குணம் யான் மறப்பின் உள்ளுவன் - ஒள்ளியவாய் அமரைச் செய்யும் கண்ணினையுடையாள் குணங் களை யான் மறந்தேனாயின், நினைப்பேன், மறப்பு அறியேன் - ஒருபொழுதும் மறத்தலையறியேன், ஆகலான் நினைத்தலையும் அறியேன்.

மன் - ஒழியிசைக்கண் வந்தது. குணங்கள் - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலாயின.

இத்துணையும் தலைமைகன் கூற்று, மேல் தலைமகள் கூற்று. ()

கண்ணுள்ளில் போகார்இமைப்பின் பருவரார்
நுண்ணியர்எம் காத லவர். 1126

ஒருவழித்தணப்பின்கண் தலைமகனைத் தோழி இயற்பழிக் கும் என்று அஞ்சி அவள் கேட்பத் தன்னுள்ளே சொல்லியது:

'தாம் காணாமை பற்றிச் சேய்மைக்கண் போயினார் என்று கருதுவார் கருதுக' எம் காதலர் கண்ணுள்ளில் போகார் - எம்முடைய காதலர் எம் கண்ணகத்து நின்றும் போகார்; இமைப்பின் பருவரார் - யாம் அறியாது இமைத்தேமாயின் அதனால் வருந்துவதும் செய்யார், நுண்ணியர் - ஆகலான் காணப்படா நுண்ணியர்.

இடைவிடாத நினைவின் முதிர்ச்சியான் எப்பொழுதும் முன்னே தோன்றலின் 'கண்ணுள்ளில் போகார்' என்றும், இமைத்தழியும் அது நிற்றலான் 'இமைப்பின் பருவரார்' என்றும் கூறினாள். (6)

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து. 1127

இதுவும் அது.

காதலவர் கண் உள்ளாராகக் கண்ணும் எழுதேம் - காதலர் எப்பொழுதும் எம் கண்ணின் உள்ளார் ஆகலான் கண்ணினை அஞ்சனத்தால் எழுதுவதும் செய்யேம், கரப்பாக்கு அறிந்து - அதுணைக் காலமும் அவர் மறைதலை அறிந்து.

இழிவுசிறப்பு உம்மை மாற்றப்பட்டது. கரப்பாக்கு என்பது வினைப்பெயர். வருகின்ற வேபாக்கு என்பதும் அது. யான் இடையீடின்றிக் காண்கின்றவரைப் பிரிந்தார் என்று கருதுமாறு என்னை என்பது குறிப்பெச்சம்.

நெஞ்சத்தார் காத லவராக வெய்துஉண்டல்
அஞ்சுதும் வேபாக்கு அறிந்து. 1128

இதுவும் அது.

காதலர் நெஞ்சத்தாராக வெய்து உண்டல் அஞ்சுதும் - காதலர் எம் நெஞ்சினுள்ளார் ஆகலான் உண்ணுங்கால் வெய்தாக உண்டலை அஞ்சாநின்றேம், வேபாக்கு அறிந்து - அவர் அதனான் வெய்துறலை அறிந்து.

எப்பொழுதும் எம் நெஞ்சின்கண் இருக்கின்றவரைப் பிரிந்தார் என்று கருதுமாறென்னை என்பது குறிப்பெச்சம். (8)

இமைப்பின் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே
ஏதிலர் என்னும்இவ் வூர். 1129

வரைவிடை வைத்துப் பிரிவின்கண் தலைமகளாற்றுதற் பொருட்டுத் தோழி தலைமகனை இயற்பழித்தவழி அவளஇயற் பட மொழிந்தது.

இமைப்பிற் கரப்பாக்கு அறிவல் - என்கண் இமைக்குமாயின் உள்ளிருக்கின்ற காதலர் மறைதலை அறிந்து இமையேன்; அனைத்



திற்கே ஏதிலர் என்னும் இவ்வூர்-அவ்வளவிற்கு அவரைத் துயிலா நோய்செய்தார் அன்பிலர் என்று சொல்லா நிற்கும் இவ் வூர்.

தன் கருத்து அறியாமைபற்றிப் புலந்து சொல்லுகின்றாள ஆகலின், தோழியை வேறு படுத்து இவ் வூர் என்றாள. ஒரு பொழுதும் பிரியாதவரைப் பிரிந்தார் என்று பழிக்கற்பாலையல்லை என்பதாம். (9)

உவந்துஉறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துஉறைவர்
ஏதிலர் என்னும்இவ் வூர். 1130

இதுவும் அது.

என்றும் உளளத்துள் உவந்து உறைவர் - காதலர் எஞ்ஞான்றும் என்உளளத்துள்ளே உவந்து உறையாநிற்பர்; இகந்து உறைவர் ஏதிலர் என்னும் இவ் வூர் - அதனை அறியாது அவரைப் பிரிந்து உறையாநின்றார், அன்பிலர் என்று சொல்லாநிற்கும் இவ் வூர்.

'உவந்து உறைவர்' என்றதனால் அன்புடைமை கூறினாள். பிரியாமையும் அன்பும் உடையாரை இலா எனப் பழிக்கற்பாலை யல்லை என்பதாம். (10)

## 114. நாணுத்துறவு உரைத்தல்

அஃதாவது சேட்படுக்கப்பட்டு ஆற்றாளுய தலைமகன் தோழிக்குத தன் நாண் துறவு உரைத்தலும், அறத்தோடு நிற்பிக்க லுற்ற தலைமகள அவட்குத தன் நாண் துறவு உரைத தலும் ஆம். இது காதல் மிக்குழி நிகழுவது ஆகலின், காதற சிறப்பு உரைததலின் பின் வைக்கப்பட்டது.

**காமம் உழந்து வருந்தினர்க்கு ஏமம்**
**மடல்அல்லது இல்லை வலி.** 1131

சேட்படுக்கப்பட்டு ஆற்றாளுய தலைமகன் சொலலியது.

காமம் உழந்து வருநதினர்க்கு - அரியராய மகளிரோடு காமததை அனுபவிததுப் பின் அதுபெறாது துன்புறற ஆடவர்க்கு, ஏமம் மடல் அலலது வலி இலலை-பண்டும் ஏமமாய் வருகின்ற மடல அல்லத, இனி எனக்கு வலியாவதிலலை.

ஏமமாதல் அத துன்பம் நீங்கும வகை அவ் அனுபவத்தினைக் கொடுத்தல. வலி - ஆகுபெயர். பண்டும் ஆடவராயினா இன் பம் எய்திவருகின்றவாறு கிற்க, கின்னை அதற்குத் துணை என்று கருதிக் கொன்னே முயன்ற யான் இதபொழுது அலாமையை அறிந்தேன் ஆகலான் இனி யானும் அவ்வாற்றான் அதனை எய்து வல் என்பது கருத்து. (1)



**நோனா உடம்பும் உயிரும் மடல் ஏறும்**
**நாணினை நீக்கி நிறுத்து.** 1132

நாணுடைய நுமக்கு அது முடியாது என மடல்விலக்கல் உற்றாட்குச் சொல்லியது.

நோனா உடம்பும் உயிரும் மடல் ஏறும் - அவ் வருத்தத்தினைப் பொறாத உடமபும உயிரும் அதற்கு ஏமமாய மடலமாவினை ஊரக் கருதாநின்றன, நாணினை நீக்கி நிறுத்து - அதனை விலக்குவதாய நாணினை அகற்றி.

'வருந்தினாக்கு' என மேல் வந்தமையின் செயப்படுபொருள் ஈண்டுக் கூறார் ஆயினார். மடல-அருபெயர். நீக்கிநிறுத்து என்பது ஒரு சொல்நீர்மைதது. அதுவும் இது பொழுது நீங்கிற்று என்பான், 'உடம்பும் உயிரும்' என்றான். அவைதாம் தம்முள நீங்காமற் பொருட்டு மடலேறும் என்றது அவள தன் ஆற்றாமையறிந்து கடிதிற் குறைநேர்தல் நோக்கி. (2)

**நாணொடு நல்லாண்மை பண்டுஉடையேன் இன்றுஉடையேன்**
**காமுற்றார் ஏறும் மடல். 1133**

*நாணேயன்றி நலலாண்மையும் உடைமையின் முடியாது என்றாட்குச் சொலலியது.*

*நாணொடு நல்லாண்மை பண்டு உடையேன் - நாணும் மிக்க ஆண்தகைமையும் யான் பண்டுஉடையேன், காமுற்றார் ஏறும் மடல் இன்று உடையேன் - அவை காமததான் நீங்குதலான், அக் காம மிக்கார் ஏறும மடலினை இன்று உடையேன்.*

*நாண் - இழிவாயினசெய்தற்கண் விலக்குவது. ஆண்மை - ஒன்றற்கும் தளராது நிற்றல். அவை பண்டு உளளன, இன்று உளளது இதுவேயாகலின் கடிதின்முடியும் என்பதாம்.* (3)

**காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு**
**நல்லாண்மை என்னும் புணை. 1134**

*நாணும் நல்லாண்மையும் காமவெள்ளத்திற்குப் புணையாகலின் அதனல அவை நீங்குவனஅல்ல என்றாட்குச் சொல்லியது.*

*நாணொடு நல்லாண்மை என்னும் புணை - யான் தன்னைக் கடத்தற்குக் கொண்ட நாணும் நலலாண்மையும் ஆகிய புணைகளை, காமக் கடும் புனல உய்க்குமே - என்னிற் பிரிதலுக் காமமாகிய கடிய புனல் கொண்டுபோகாநின்றது.*

*அது செய்யமாட்டாத ஏனைப்புனலின் நீக்குதறகு, 'கடும் புனல்' என்றான். இப் புனற்கு அவை புணையாகா; அதனான் அவை நீங்கும் என்பதாம்.* (4)

தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை உழக்கும் துயர். 1135

இவ் ஆற்றாமையும் மடலும் நுமக்கு எவ்வாறு வந்தன என்றாட்குச் சொல்லியது.

மாலை உழக்கும் துயர் மடலொடு - மாலைப்பொழுதின்கண் அநுபவிக்கும் துயரினையும் அதற்கு மருந்தாய மடலினையும் முன் அறியேன், தொடலைக் குறுந்தொடி தந்தாள் - இதுபொழுது எனக்கு மாலைபோலத் தொடர்ந்த சிறு வளையினை உடையாள் தந்தாள்.

காமம் எல்லாப்பொழுதுகளினும் உளதேனும் மாலைக்கண் மலர்தல் உடைமையின் 'மாலை உழக்கும் துயர்' என்றும், மடலும் அதுபற்றி வந்ததாகலின் அவை இரண்டும் அவளால் தரப் பட்டது என்றும், அவள்தான் நீ கூறியதே கூறும் இளையள் என் பது தோன்ற 'தொடலைக் குறுந்தொடி' என்றும் கூறினான்.

அப்பெயர் உவமைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. இவை அவள் தந்தனவாகலின் நின்னால் நீங்கும் என் பது கருத்து. (5)

மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற
படல்ஒல்லா பேதைக்குஎன் கண். 1136

மடலூரும்பொழுது இறைக்கும் கழிந்தது என்றாட்குச் சொல்லியது.

பேதைக்கு என் கண் படல ஒல்லா - நின்பேதைகாரணமாக என்கண்கள் ஒருகாலும் துயிற்லைப்பொருந்தா, யாமத்தும் மன்ற மடலூர்தல் உள்ளுவேன் - அதனால் எல்லாரும் துயிலும் இடை யாமத்தும் யான் இருந்து மடலூர்தலையே கருதாநிற்பேன்.

பேதை என்றது பருவம் பற்றி அன்று, மடமை பற்றி. இனிக் குறைமுடிப்பது நாளை என வேண்டா என்பதாம். (6)

கடல்அன்ன காமம் உழந்தும் மடல்ஏறாப்
பெண்ணிற் பெருந்தக்கது இல் 1137

பேதைக்கு என்கண் படல் ஒலலா என்பது பற்றி அறிவில ராய மகளிரினும் அஃது உடையராய ஆடவரன்றே ஆற்றற் பாலர் என்றாட்குச் சொல்லியது.

கடல் அன்ன காமம் உழந்தும் மடல் ஏறாப் பெண்ணின் - கடல்போலக் கரையற்ற காமநோயினை அனுபவித்தும் மடலூர் தலைச்செய்யாது ஆற்றியிருக்கும் பெண் பிறப்புப்போல, பெருந் தக்கது இல் - மிக்க தகுதியுடைய பிறப்பு உலகத்து இல்லை.

பிறப்பு விசேடத்தால் அவ் அடக்கம் எனக்கு இல்லையாகா நின்றது ; நீ அஃது அறிகின்றிலை என்பதாம்.



இத்துணையும் தலைமகன் கூற்று. மேல் தலைமகள் கூற்று. (7)

திறை அரியர் மன் அளியர் என்னது காமம்
மறைஇறந்து மன்று படும். 1138

காப்புச் சிறைமிக்குக் காமம்பெருகியவழிச் சொல்லியது.

நிறை அரியர் (என்னது) - இவர் நிறையால் காம மிதூர்தற்கு அரியர் என்று அஞ்சுதல செய்யாது, மன் அளியர் என்னது - மிக வும் அளிக்கத்தக்கார் என்று இரங்குதல் செய்யாது, காமம் மறை இறந்து மன்றுபடும் - மகளிர் காமமும் அவர் மறைத்தலைக் கடந்து மன்றின் கண்ணே வெளிப்படுவதா யிருந்தது.

'என்னது' என்பது முன்னும் கூட்டி மகளிர் என்பது வரு விக்கப்பட்டது. எச்ச உம்மை விகாரத்தால் தொக்கது. மன்று என் பது தங்கை தன்னையரை நோக்கி. உலகத்துப் பெண்பாலார் காமத்து இயல்பு கூறுவாளபோன்று, தன் காமம் பெருகிய வாறும் இனி அறத்தோடு நிற்றல் வேண்டும் என்பதும் குறிப்பால் கூறியவாறுமிற்று. (8)

அறிகிலார் எல்லாரும் என்றேஎன் காமம்
மறுகின் மறுகும் மருண்டு. 1139

இதுவும் அது.

எல்லாரும் அறிகிலார் என்று - யான் முன் அடங்கி நிற்ற லான் எல்லாரும் என்னை அறிதல் இலர், இனி அவ்வாறு நில்லாது யானே வெளிப்பட்டு அறிவிப்பல என்று கருதி, என் காமம்

மறுகில் மருண்டு மறுகும்-என் காமம் இவ் வூர் மறுகின்கண்ணே மயங்கிச் சுழலாநின்றது.

மயங்குதல் - அம்பலாதல். மறுகுதல் - அலராதல். அம்பலும் அலருமாயிற்று. இனி அறத்தோடு நிற்றல் வேண்டும் என்பதாம். அறிவிலார் என்பதூஉம் பாடம். (9)

யாம்கண்ணிற் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு. 1140

செவிலிக்கு அறத்தோடு நின்றுவைத்து 'யான் நிற்குமாறு என்னை' என்று நகையாடிய தோழியொடு புலந்து தன்னுள்ளே சொல்லியது.

யாம் கண்ணிற் காண அறிவில்லார் நகுப - யாம் கேட்குமாறு மன்றிக் கண்ணாற் காணுமாறு எம்மை அறிவிலார் நகாநின்றார், யாம் பட்ட தாம் படாவாறு - அவர் அங்ஙனஞ் செய்கின்றது யாம் உற்றநோய்கள் தாம் உறாமையான்.

கண்ணின் என்றது முன் கண்டறியாமை உணர்த்தி நின்றது. அறத்தொடு நின்றமை அறியாது வரைவு மாட்சிமைப்படுமென்றி

13



லன் எனப்புலக்கின்றாள் ஆகலின், ஏதிலாளாக்கிக் கூறினாள். இது, நகாநின்று சேண்படுக்குந்தோழிக்குத் தலைமகன் கூறியதாகலால், அதிகாரத்திற்கு ஏலாமை அறிக. (10)

## 115. அலர் அறிவுறுத்தல்

அஃதாவது களவொழுக்கம் வேண்டிய தலைமகன் பிறர்கூறுகின்ற அலர் தனக்காகின்றவற்றைத் தோழிக்கு அறிவுறுத்தலும், வரைவாக உடன்போக்காக ஒன்றுவேண்டிய தலைமகளும் தோழியும் அவ் அலரை அவன்தனக்கு அறிவுறுத்தலும் ஆம். இது நாணுத் துறந்தவழி நிகழ்வதாகலான், நாணுத்துறவு உரைத்தலின் பின் வைக்கப்பட்டது.

அலர்எழ ஆர்உயிர் நிற்கும் அதனைப்
பலர்அறியார் பாக்கியத் தால். 1141

அல்ல குறிப்பிட்ட பிற்றைஞான்று வந்த தலைமகனைத் தோழி அலர்கூறி வரைவுகடாயவழி அவன் சொல்லியது.

அலர் எழ ஆர் உயிர் நிற்கும் - மடந்தையொடு எம்மிடை நட்பு ஊரின்கண் அலராயெழுதலான் அவளைப் பெறாது வருந்தும் என் அரிய உயிர் பெற்றதுபோன்று நிலை பெறும், அதனைப் பாக்கியத்தால் பலர் அறியார் - அந் நிலைபேற்றை தெய்வததால் யானே அறிவ தல்லது கூறுகின்ற பலரும் அறியார்.

அல்ல குறிப்பட்டுத் தலைமகளை எய்தப்பெறாத வருத்தமெல்லாம் தோன்ற அரிய உயிர் என்றும், அவ்வலர் அரியாளை எளியளாக்கி எடுக்கின்றமையின் அஃது அவ் ஆருயிர்க்குப் பற்றுக்கோடாக நின்றது என்பான் 'அலர் எழ ஆருயிர் நிற்கும்' என்றும், 'பற்றுக் கோடாதலை அவ் ஏதிலார் அறியின் தூற்றாது ஒழிவர்; ஒழியவே ஆருயிர் போம்; ஆகலான் அவரறியாதொழிகின்றது தெய்வததான்' என்றும் கூறினான். முற்று உம்மை விகாரத்தால் தொக்கது. (1)

மலர்அன்ன கண்ணாள் அருமை அறியாது
அலர்எமக்கு ஈந்ததுஇவ் வூர். 1142

இதுவும் அது.

மலர் அன்ன கண்ணாள் அருமை அறியாது - மலர்போலும் கண்ணை யுடையாளது எய்தற்கு அருமை அறியாது, இவ் வூர் அலர் எமக்கு ஈந்தது - இவ் வூர் அவளை எளியளாக்கி அவளோடு அலர் கூறலை எமக்கு உபகரித்தது.

அருமை - அல்லகுறிப்பாட்டானும் இடையீடுகளானும் ஆயது. ஈந்தது என்றான் தனக்குப் பற்றுக்கோடாகலின், அலர்கூறுவாரை அவர் செய்த உதவிபற்றி 'இவ் வூர்' என்றான். (2)



உறாஅதோ ஊர்அறிந்த கௌவை அதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து. 1143

இதுவும் அது.

ஊர் அறிந்த கௌவை உறுதோ - எங்கட்குக் கூட்டம் உண்மை இவ் ஊர் அறிதலான் விளைந்த அலர் எனக்குறுவ தொன்றன்றே, அதனைப் பெறாது பெற்றன்ன நீர்த்து - அது கேட்ட என்மனம் அக் கூட்டத்தைப் பெறாதிருந்தே பெற்றாற் போலும் நீர்மையுடைத்து ஆகலான்.

பெற்றன்னநீர்மை பெற்றவழி உளதாம் இன்பம் போலும் இன்பமுடைமை. 'நீர்த்து' என்பதற்கு ஏற்ற 'மனம்' என்னும் வினைமுதல் வருவிக்கப்பட்டது.

கவ்வையால் கவ்விது காமம் அதுஇன்றேல்
தவ்வென்னும் தன்மை இழந்து. 1144

இதுவும் அது.

காமம் கவ்வையால் கவ்விது - என் காமம் இவ் ஊர் எடுக் கின்ற அலரானே அலர்தலையுடைத்தாயிற்று; அது இன்றேல் தன்மை இழந்து தவ்வென்னும் - அவ் அலர் இல்லையாயின், தன் இயல்பு இழந்து சுருங்கும்.

அலர்தல் - மேன்மேல் மிகுதல். செவ்வையுடையதனைச் செவ் விது என்றாற்போலக் கவ்வையுடையதனைக் 'கவ்விது' என்றார்.

இயல்பு - இன்பம் பயத்தல். தவ்வென்னும் என்பது குறிப்பு மொழி; "நாலகால் யாத்த மாலை வெண்குடை, தவ்வென் றசைஇத் தாழ்துளி மறைப்ப" (நெடுநல். 184 185) என்புழியும் அது.

களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறும் இனிது 1145

இதுவும் அது.

களித்தொறும் கள உண்டல் வேட்டற்று - களுண்பார்க்குக் களிக்குந்தோறும் கள்ளுண்டல் இனிதாமாறுபோல, காமம் வெளிப்படுந்தோறும் இனிது - எனக்குக் காமம் அலராந்தோறும் இனிதாகா நின்றது.

வேட்கப்பட்டற்றால் என்பது 'வேட்டற்றால்'என நின்றது. வேட்கை மிகுதியால் அலரும் இன்பஞ்செய்யாநின்றது என்பதாம். (5)

கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று. 1146

*இடைப்பீடுகளானும் அல்லகுறியானும் தலைமகனை எய்தப் பெறாத தலைமகள் அவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் அலரறிவுறீஇ வரைவுகடாயது.*



கண்டது ஒருநாள - யான் காதலரைக் கண்ணுறப்பெற்றது ஒரு ஞான்றே. அலர் திங்களைப் பாம்புகொண்டற்று - அதனி னுய அலர் அவ்வளவிற்றன்றித் திங்களைப்பாம்பு கொண்ட அலர் போன்று உலகெங்கும் பரந்தது.

காரியத்தைக் காரணமாக உபசரித்து, 'பாம்புகொண்டற்று' என்றாள். இருவழியும் மன்னும் உம்மையும் அசைநிலை. காட்சி யின்றியும் அலர்பரக்கின்ற இவ் ஒழுக்கம் இனியாகாது, வரைந்து கோடல் வேண்டும் என்பதாம. (6)

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும் இந் நோய். 1147

*வரைவுநீட ஆற்றாளாய தலைமகளைத் தலைமகன் சிறைப் புறத்தானாதல் அறிந்த தோழி ஊரவர் அலரும் அன்னைசொல லும் நோக்கி ஆற்றல்வேண்டும் எனச் சொலலெடுப்பியவழி அவள் சொல்லியது.*

இந் நோய் - இக் காமநோயாகிய பயிர், ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல் நீராக நீளும் - இவ் ஊரின்மகளிர் எடுக் கின்ற அலர் எருவாக, அது கேட்டு அன்னை வெகுண்டுசொல்லு கின்ற வெஞ்சொல் நீராக, வளரா நின்றது.

'ஊரவர்'என்பது தொழிலான் ஆணொழிந்துநின்றது. ஏக

நேச உருவகம். சுருங்குதற்கு ஏதுவாவனதாமே விரிதற்கு ஏதுவாகாநின்றன என்பதாம். வரைவாகுதல் பயன். (7)

நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல். 1148

இதுவும் அது.

கௌவையால் காமம் நுதுப்பேம் எனல் - ஏதிலார் எடுக்கின்ற அலரால் நாம் காமத்தை அவித்தும் என்று கருதுதல் - நெய்யால் எரி நுதுப்பேம் என்றற்று - நெய்யால் எரியை அவித்தும் என்று கருதலோடு ஒக்கும்.

மூன்றனுருபுகள் கருவிக்கண் வந்தன. வளர்தற் காரணமாய அலரால் அவித்தல் கூடாது என்பதாம். (8)

அலர்நாண ஒல்வதோ அஞ்சல்ஓம்பு என்றார்
பலர்நாண நீத்தக் கடை. 1149

வரைவிடைவைத்துப் பிரிவின்கண் ஆற்றாளாய தலைமகள் அவன் வந்து சிறைப்புறத்தானாதல் அறிந்து அலரஞ்சி ஆற்றல் வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது.

அஞ்சல் ஓம்பு என்றார் பலர் நாண நீத்தக்கடை - தம்மை எதிர்ப்பட்ட ஞான்று நின்னிற் பிரியேன் அஞ்சல் ஓம்பு என்றவர் தாமே இன்று கண்டார் பலரும் நாணுமவகை கைவிட்டுத்துறந்தபின்,



அலர் நாண ஒல்வதோ - நாம் ஏதிலார் கூறும் அலருக்கு நாணக் கூடுமோ? கூடாது.

'நாண' என்னும் வினையெச்சம் 'ஒல்வது' என்னும் தொழிற்பெயருள் ஒல்லுதல் தொழிலோடு முடிந்தது. கண்டார் நாணும் நிலைமையமாய யாம் நாணுதல் யாண்டையது என்பதாம. (9)

தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்
கௌவை எடுக்கும்இவ் வூர். 1150

தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய் அலரறிவுறீஇ அவன் உடன்போக்கு நயப்பச் சொல்லியது.

யாம் வேண்டும் கௌவை இவ் ஊர் எடுக்கும் - உடன்போக்கிற்கு ஏதுவாகல் நோக்கி யாம் பண்டே விரும்புவதாய அலரை இவ் ஊர் தானே எடாநின்றது, காதலர் தாம் வேண்டின் நல்குவர் - இனிக் காதலர்தாமும் யாம் வேண்டியக்கால் அதனை இனிதின் நேர்வர், அதனால் இவ் அலர் நமக்கு நன்றாய் வந்தது.

எச்ச உம்மை விகாரத்தால் தொக்கது. நம்கண் காதல் உடைமையின் மறார் என்பது தோன்ற 'காதலர்' என்றாள். இவ் இருபது பாட்டும் புணர்தல் நிமித்தம். (10)

கனவு இயல் முற்றும்.

—:0:—

# கற்பு இயல்

—:0:—

இனி, கற்புப் பதினெட்டு அதிகாரத்தால் கூறுவான் தொடங்கி, முதற்கண் பிரிவு ஆற்றாமை கூறுகின்றார்.

## 116. பிரிவு ஆற்றாமை

அஃதாவது வரைந்தெய்தியபின் தலைமகன் அறம் பொருள் இன்பங்களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினும் தலைமகளைப் பிரிந்துசெலலும், செலலும் ஞான்று அப்பிரிவினை அவள் ஆற்றாளாம்தன்மை. அஃது ஈண்டுப் பிரிவு உணர்த்திய தலைமகற்குத் தோழி கூறலும், அவள் தனக்குத் தலைமகள் தானே அவன் குறிப்பான் உணர்ந்து கூறலும், பிரிவுணர்த்தியவழிக் கூறலும், தலைமகன் பிரிந்துழி ஆற்றுவிக்கும் தோழிக்குத் தலைமகள் மறுத்துக் கூறலும் என நால்வகையால் கூறப்படும்.

**செல்லாமை உண்டேல் எனக்குஉரை மற்றுநின்**
**வல்வரவு வாழ்வார்க்கு உரை. 1151**



பிரிந்து கடிதின் வருவல் என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

செல்லாமை உண்டேல் எனக்கு உரை - நீ எம்மைப் பிரியாமை உண்டாயின் அதனை எனக்குச் சொல், மற்று நின் வல்வரவு வாழ்வார்க்கு உரை - அஃதொழியப் பிரிந்துபோய் விரைந்து வருதல் சொல்லுவையாயின் அதனை அப்பொழுது உயிர்வாழ்வார்க்குச் சொல்.

தலைமகனை ஒழித்து எனக்கு என்றாள், 'தான் அவள்' என்னும் வேற்றுமை இன்மையின். அக்காலமெல்லாம் ஆற்றியிருந்து அவ்வரவு காணவல்லளல்லன்; பிரிந்தபொழுதே இறந்துபடும் என்பதாம். அழுங்குவித்தல் - பயன். இதனைத் தலைமகன் கூற்றாக்கி உரைப் பாரும் உளர். (1)

இன்கண் உடைத்துஅவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்கண் உடைத்தால் புணர்வு. 1152

பிரிவு தலைமகன் குறிப்பான் அறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

அவர் பார்வல் இன்கண் உடைத்து - தழையும் கண்ணியும் கொண்டு பின்னின்ற ஞான்று அவர் நோக்குமாத்திரமும் புணர்ச்சி குறித்தமையான் நமக்கு இன்பமுடைத்தாயிருக்கும், புணர்வு பிரிவஞ்சும் புன்கண் உடைத்து - இன்று அப் புணர்ச்சி தான் நிகழாநிற்கவும் அது பிரிவர் என்று அஞ்சும் அச்சத்தினை உடைத்தாயிற்று: அவரன்பின் நிலைமை இது.

'பார்வல்' என்றதனுதல் புணர்ச்சிபெறாத பின்னிலைக்காலம் பெறப்பட்டது. புன்கண் என்னும் காரணப்பெயர் காரியத்தின் மேலாயிற்று. அவ் அச்சத்தினை உடைத்தாதலாவது "முளைநிறமுறுவலாய்... மகிழ்செய்யும் ... என் ஒளியிழை திருத்தும்" (கலித. பாலை. 3) பண்டையிற் சிறப்பால் அவன் பிரிதற்குறிப்புக் காட்டி அச்சம் செய்தலுடைமை. அழுங்குவித்தல் - பயன். (2)

அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவுஓர் இடத்துஉண்மை யான். 1153

இதுவும் அது.

அறிவு உடையார் கண்ணும் - பிரியேன் என்ற தம்சொல்லும் நம் பிரிவாற்றாமையும் அறிதலுடையராய காதலர்கண்ணும், ஓர் இடத்துப் பிரிவு உண்மையான் - ஒரோவழிப் பிரிவு நிகழ்தலான், தேற்றம் அரிது - அவர் சொல்லும் தலையளியும்பற்றி நம்மாட்டு அன்புடையர் எனத் தேறும்தேற்றம் அரிதாயிருந்தது.

அரோ - அசைநிலை. உம்மை - உயர்வுசிறப்பின்கண் வந்தது.



அளித்துஅஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க்கு உண்டோ தவறு. 1154

இதுவும் அது.

அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின் - எதிர்ப்பட்டஞான்றே தலையளி செய்து 'நின்னிற்பிரியேன் அஞ்சல்' என்றவர்தாமே பின் பிரிவராயின், தெளித்த சொல் தேறியார்க்குத் தவறு உண்டோ - அவர்க்கன்றி அவர் தெளிவித்த சொல்லை மெய்யெனத் தெளிந்தார்க்குக் குற்றம் உண்டோ?

'தேறியார்' என்பது தன்னைப் பிறர்போற்கூறல். சொல்லும் செயலும் ஒவ்வாமைக்குற்றம் அவர்க்கு எய்தும், அஃது எய்தா வகை அழுக்குவி யென்பது கருத்து. (4)

ஓம்பின் அமைந்தார் பிரிவுஓம்பல் மற்றுஅவர்
நீங்கின் அரிதால் புணர்வு. 1155

இதுவும் அது.

ஓம்பின் அமைந்தார் பிரிவு ஓம்பல் - என்னுயிரைச் செல்லாமல் காத்தியாயின், அதனை ஆளுதற்கு அமைந்தாருடைய செலவினை அழுக்குவிப்பாயாக; மற்று அவர் நீங்கின் புணர்வு அரிது - அழுக்குவிப்பாரின்றி அவர் செல்வராயின் அவரால் ஆளப்பட்ட உயிரும் செல்லும்; சென்றால், பின் அவரைக்கூடுதல் எனக்கு அரிதாம்.

ஆளுதற்கு அமைதல் - இறைவராதற்குத் தெய்வத்தால் ஏற்புடையராதல். மற்று - வினைமாற்றின்கண் வந்தது. (5)

பிரிவுஉரைக்கும் வன்கண்ண ராயின் அரிதுஅவர்
நல்குவர் என்னும் நசை. 1156

தலைமகன் பிரிவுணர்த்தியவாறு வந்து சொல்லிய தோழிக்குச் சொல்லியது.

அவர் பிரிவு உரைக்கும் வன்கண்ணராயின் - நம் கலவுக் கடுமையறிந்த தலைவர் தாமே நம்முன்னின்று தம் பிரிவினை உணர்த்தும் வன்கண்மை உடையராயின், நல்குவர் என்னும் நசை அரிது - அததன்மையரார் பின்பு நம் ஆற்றாமை அறிந்து வந்து தலையளி செய்வர் என்று இருக்கும் ஆசை விடப்படும்.

அருமை - பயன்படுதல இல்லாமை, கூடியிருந்தே அன்பின்றிப் பிரிவு எண்ணுதலும் உணர்த்தலும் வலலராயினர் பிரிந்து போய் அன்புடையராய் நம்மை நினைந்துவந்து நல்குதல் யாண்டையது என்பதாம். அழுங்குவித்தல் பயன். (6)

துறைவன் துறந்தமை தூற்றுகொல் முன்கை
இறைஇறவா நின்ற வளை. 1157



இதுவும் அது.

துறைவன் துறந்தமை - துறைவன் என்னைப் பிரியலுற்றமையை, முன்கை இறை இறவாநின்றவளை தூற்றுகொல் - அவன் உணர்த்தாமல் தாமே உணர்ந்து என்முன்கையின் இறையினின்றும் கழலாநின்ற வளைகள எனக்கு அறிவியாவோ, அவன் உணர்த்த உணர்ந்துவந்து நீ அறிவித்தல் வேண்டுமோ ?

முன்னே நிகழ்ந்தமையின் 'துறந்தமை' என்றும், கேட்டதனையான் மெலிந்த ஆற்றாமையின் 'இறவாநின்ற' என்றும் கூறினள். அழுங்குவித்துவாரது கூறற்பாலை யல்லைபாய் நீயும் இவ் வளைகள் செய்தனவே செய்தாய் எனப் புலந்து கூறியவாறு. (7)

இன்னாது இனன்இல்ஊர் வாழ்தல் அதனினும்
இன்னாது இனியார்ப் பிரிவு. 1158

இதுவும் அது.

இனன் இல் ஊர் வாழ்தல் இன்னாது-மகளிர்க்குத் தம் குறிப்பு அறியும்தோழியர் இல்லாத வேற்றூரின்கண் வாழ்தல் இன்னாது; இனியார்ப்பிரிவு அதனினும இன்னாது - அதன்மேலும் தம் காதலரைப் பிரிதல் அதனினும் இன்னாது.

தலைவன் செலவினை அழுங்குவித்து வாராது உடன்பட்டு வந்தமைபற்றிப் புலக்கின்றாளாகலின் 'இனன் இல ஊர்' என்றாள். உலகியல் கூறுவாளபோன்று தனக்கு அவ் இரண்டும் உண்மை கூறியவாறு. (8)

தொடின்சுடின் அல்லது காமநோய் போல
விடின்சுடல் ஆற்றுமோ தீ. 1159

காமம் தீயேபோன்று தான்கின்றஇடத்தைச் சுடுமாகலான் நீ ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

தீத் தொடின் சுடின் சுடலல்லது - தீத் தன்னைத்தொட்டாற் சுடுமாயின் சுடுதலல்லது, காமநோய்போல விடின் சுடல் ஆற்றுமோ - காமமாகிய நோய் போலத் தன்னை அகன்றால் தப்பாது சுடுதலை வற்றோ! மாட்டாது.

சுடுமாயின் என்பது மந்திர மருந்துகளான் தப்பிக்கப்படாதாயின் என்றவாறு. காமத்திற்கு அதுவும் இலலை என்பாள வாளா 'சுடல்' என்றாள். அகறல்-துகராமை. சுடல் என்பது மூன்றும் கூட்டப்பட்டது. தீயினும் கொடியதனை யான் ஆற்றுமாறு என்னை என்பதாம். (9)

அரிதுஆற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவுஆற்றிப்
பின்இருந்து வாழ்வார் பலர் 1160

தலைவியர் பலரும் பிரிவாற்றியிருப்பர், அது நீ செய்யின் றில்லை என்ற தோழிக்குச் சொல்லியது.

நீ சொல்லுகின்ற நோக்கும், அரிது ஆற்றி அல்லல்நோய் நீக்கி - பிரிவுணர்த்தியவழி அதற்கு உடம்பட்டுப் பிரி..க்கால் நிக ழும் அல்லல் நோயினையும் நீக்கி, பிரிவு ஆற்றிப் பின் இருந்து வாழ்வார் பலர் - பிரிந்தால் அப் பிரிவுதன்னை..ம் ஆற்றி பின்னும் இருந்து உயிர்வாழும மகளிர் உலகத்துப் பலர்.

பண்டையிற்சிறப்புத் தலையளிபெற்று இன்புறுகின்ற எல் லைக் கண்ணே, அஃது இழந்து துன்புறுதற்கு உடம்படுதல் அரிய தொன்றாகலின், அரியதனைச் செய்து என்றும், செலவுநேர்ந்தது அவர்க்கு யாது நிகழும் என்றும், வருந்துவேம் யாம் ஆற்றி யிருக்குமாறு என் என்றும், அவ் வரவுதான் என்றாம் வந்தெய் தும் என்றும் இவ்வாறுஎன் நிகழுமகவலை மனத்துநீங்காதாகலான் 'அல்லல நோய நீக்கி' என்றும், பிரிகதாலவருந்துவேணயும் அகத்து நிகழும் காமவேதனையும் புறதது யாழிசை, மதி, தென்றல என் றிவைபு தலாக வகது இதனை வளர்ப்பனவும் ஆற்றலரிய.வாகலின் 'பிரிவாற்றி' என்றும், தம் காதலரை இன்றியமையா மகளிருள் இவையெல்லாம் பொறுததுப் பின்னும் இருநது உயிர்வாழ்வார் ஒருவரும் இல்லை என்பது குறிப்பால் தோன்றப் 'பின் இருந்து வாழவார் பலர்' என்றும் கூறினாள். அரிது என்பது வினைக் குறிப்புப் பெயர். பிரிவின்கண் நிகழ்வனவற்றை, பிரிவு என்றாள். செயது, நீக்கி, ஆற்றி என்பன ஓசைவகையான் அவ் அவறறது அருமையுணர நின்றன. சிறப்பு உம்மை விகாரத்தால தொக்கது. யானும் இறந்து படுவல் என்பது கருத்து. (10)

## 117. படர் மெலிந்து இரங்கல்

அது படரான்மெலிந்து இரங்கல் என விரியும். அஃதா வது பிரிவாற்றாளாய தலைமகள தான் உறுகின்ற துன்பத்தினை எப்பொழுதும் நினைததலின் அந் நினைவான் மெலிந்து இரங்கு தல. அதிகாரமுறைமையும இதனானே விளங்கும்.

**மறைப்பேன்மன் யான்இஃதோ நோயை இறைப்பவர்க்கு ஊற்றுநீர் போல மிகும்.** **1161**

காமநோயை வெளிப்படுத்தல் நின் நாணுக்கு ஏலாது என்ற தோழிக்குச் சொல்லியது.

நோயை யான் மறைப்பேன் - இந்நோயைப் பிறரறிதல் நாணி யான் மறையாநின்றேன்; இஃதோ இறைப்பவர்க்கு ஊற்று நீர் போல மிகும் - நிற்பவும் இஃது அந்நாண்வரை நில்லாது நீர் வேண்டும் என்று இறைப்பவர்க்கு ஊற்றுநீர் மிகுமாறு போல் மிகாநின்றது.

'அம் மறைத்தலால் பயன் என்?' என்பதுபட நின்றமையின் மன் ஒழியிசைக்கண் வந்தது. "இஃதோ செலவாக்கொத்தனென்



யான்" என்புழிப்போல ஈண்டு சுட்டுப் பெயர்ஈறு திரிந்து நின்றது. 'இஃதோர் நோயை' என்று பாடம் ஓதுவாரும் உளர்; அது பாடமன்மை அறிக. இனி அதற்கடுத்தது நீ செயல்வேண்டும் என்பதாம். (1)

**கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய்செய்தார்க்கு உரைத்தலும் நாணுத் தரும்.** **1162**

ஈண்டையார் அறியாமல் மறைத்தல், ஆண்டையார் அறியத் தூதுவிடுதல் என்னும் இரண்டனுள் ஒன்றுசெயல் வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது.

இந்நோயைக் கரத்தலும் ஆற்றேன் - இந்நோயை ஈண்டை அறியாமல் மறைத்தலும் வல்லேனாகின்றிலேன்; நோய் செய்தார்க்கு உரைத்தலும் நாணுத் தரும் - ஆகாக்கால், நோய் செய்தவர்க்கு உரைக்க எனின், அதுவும் எனக்கு நாணினைத் தாரா நின்றது; இனி என் செய்கோ?

ஒருகாலைக்கு ஒருகால மிகுதலின் 'கரத்தலும் ஆற்றேன்' என்றும், சேயிடைச் சென்றவர்க்கு இதுசொல்லித் தூதுவிட்டால் இன்னும் இருந்தேன் என்பது பயக்கும் என்னும் கருத்தால், 'நாணுத் தரும்' என்றும் கூறினள். (2)

காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்
நோனா உடம்பின் அகத்து. 1163

இதுவும் அது.

காமமும் நாணும் - காமநோயும் அதனைச் செய்தவர்க்கு உரைக்கல் ஒல்லாத நாணும், நோனா என் உடம்பின் அகத்து-தம்மைப் பொறாத என்னுடம்பின் கண்ணே, உயிர் காவாத்தூங்கும் - உயிர் காத்தண்டாக, அதன் இருதலையிலும் தூங்கா நின்றன.

பொருமை மெலிவானையது. தூங்கும் என்பது, ஒன்றினொன்று மிகாது இரண்டும் ஒத்தசீர என்பது தோன்ற நின்றது. தூதுவிடவும் ஒழியவும், பண்ணுவனவாய காம, நாண்கள தம்முள ஒத்து உயிரினை இறுவியா நின்றன.யான் அவற்றுள ஒன்றின்கண் நிற்க மாட்டாமையின், இஃது இற்றே விடும் என்பதாம். (3)

காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல். 1164

தலைவியர் காமக்கடற்படார், படினும் அதனை ஏற்றபுணை யான் நீந்திக் கடப்பார் என்ற தோழிக்குச் சொல்லியது.

உண்டு காமக்கடலே - யாவர்க்கும் உளவாய்வருகின்ற இவ் இரண்டனுள்ளும் எனக்கு உண்டாகின்றது காமக்கடலே; அது நீந்தும் ஏமப் புணை இல் - அதனை நீந்தும் அரணாகிய புணை இல்லை.



இருவழியும் மன்னும் உம்மும் அசைநிலை. தூதுவிட்டு இதற்குப் புணையாகற்பாலையாய் நீயும் ஆயிற்றிலை என்பது கருத்து. (4)

துப்பின் எவனாவர் மற்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர். 1165

தூதுவிடாமைநோக்கித் தோழியோடு புலந்து சொல்லியது.

நட்பினுள் துயர்வரவு ஆற்றுபவர் - இன்பஞ்செய்தற்குரிய நட்பின் கண்ணே துன்பவரவினைச் செய்யவல்லவர், துப்பின் எவ னுவர்கொல் - துன்பம் செய்தற்குரிய பகைமைக்கண் என்செய் வர் கொல்லோ?

துப்புப் பகையுமாதல் "துப்பெதிர்ந்தோர்க்கே யுள்ளாச் சேய்மையன், நட்பெதிர்ந் தோர்க்கே அங்கையண்மையன்" (புறநா. 380) என்பதனாலும் அறிக. அப் பகைமை ஈண்டுக் காணாமையின் அவர் செய்வது அறியப் பெற்றிலேம் என்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. துயர்வருதலை விலக்கலாயிருக்க அதுசெய்கின்றிலை எனப் புலக்கின்றமையின் துயர்வரவு செய்தாளாக்கியும் பிறளாக்கியும் கூறினாள். (5)

இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதுஅடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது. 1166

காமத்தான் இன்பமுற்றார்க்கு அதனினாய துன்பம் வரும் என்ற தோழிக்குச் சொல்லியது.

காமம் இன்பம் கடல் - காமம் புணர்வால் இன்பஞ்செய்யுங் கால், அவ் இன்பம் கடல்போலப் பெரிதாம்; மற்று அஃது அடுங் கால் துன்பம் அதனிற்பெரிது - இனி அதுதானே பிரிவால் துன் பஞ் செய்யுங்கால், அத் துன்பம் அக் கடலினும் பெரிதாம்.

மற்று வினைமாற்றின் கண் வந்தது. அடுங்கால என வந்தமை யின், மறுதலையெச்சம் வருவிக்கப்பட்டது. பெற்ற இன்பத்தோடு ஒத்துவரின் ஆற்றலாம்; இஃது அதனது அளவன்று என்பது கருதது. (6)

காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன். 1167

காமக்கடல் நிறைபுணையாக நீந்தப்படும் என்றாட்குச் சொலலியது.

காமம் கடும்புனல் நீந்திக் கரைகாணேன் - காமமாகிய கடல் நீந்தாதேனல்லேன்; நீந்தியும் அதற்குக் கரைகாண்கின்றிலேன், யாமத்தும் யானே உளேன் - அக்காணாமைக் காலந்தான்; எல் லாரும் துயிலும் அரையிருளாயிற்று; இருட்கண்ணும் அதற்கு ஒருதுணையின்றி யானேயாயினேன்; ஆயும் இறந்துபட்டியைந்து

போகாது உளனாகாநின்றேன்; ஈதொரு தீவினைப் பயன் இருந்தவாறென்?

கடுமை ஈண்டு மிகுதிக்கண் நின்றது. உம்மை முன்னும் கூட்டப்பட்டது. யானே ஆயினேன் என்பது நீ துணையாயிற்றிலை என்னும் குறிப்பிற்று. (7)

மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்துஇரா
என்னல்லது இல்லை துணை 1168

இரவின் கொடுமை சொல்லி இரங்கியது.

இரா அளித்து - இவ் இரா அளித்தாயிருந்தது; மன் உயிர் எல்லாம் துயிற்றி என்னல்லது துணை இல்லை - உலகத்து நிலைபெறுகின்ற உயிர்களையெல்லாம் தானே துயிலப்பண்ணுதலான், என்னையல்லாது வேறு துணை உடைத்தாயிற்றில்லை.

துயிற்றி எனத் திரிந்துநின்ற வினையெச்சம் அவாய்நிலையான் வந்த உடைத்தாதலோடு முடிந்தது. துணையோடு ஒன்றுகின்ற உயிர்களெல்லாம் விட்டு இறந்துபடும் எல்லையேனும் என்னையே துணையாகக்கோடலின். அறிவின்று என்பது பற்றி 'அளித்து' என்றாள்; இகழ்ச்சிக்குறிப்பு.

கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா 1169

இதுவும் அது.

இந்நாள் நெடிய கழியும் இரா - காதலரோடு யாம் இன்புற்ற முன்னைநாள்களிற் குறியவாய், அவர்பிரிவாற்றேமாகின்ற இந்நாளிலே நெடியவாய்ச் செல்கின்ற கங்குல்கள், கொடியார் கொடுமையின் தாம் கொடிய - அக் கொடியாரது கொடுமைக்கு மேலே தாம் கொடுமை செய்யாநின்றன.

தன்னாற்றாமை கருதாது பிரிதலின், 'கொடியார்' என்றாள். கொடுமை - கடிதின் வாராது நீட்டித்தல். அவர் பிரிவானும் நீட்டிப்பானும் உளதாய ஆற்றாமைக்குக் கண்ணோட்டமின்மைமேலும் பண்டையின் நெடியவாய்க் கொடியவாகாநின்றன என்பதாம். (9)

உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோஎன் கண். 1170

நின்கண்கள பேரழகு அழிகின்றனவாகலின் அழற்பாலை யல்லை என்றாட்குச் சொல்லியது.

உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் - மனம்போலக் காதலருள்ள தேயத்துக் கடிதிற்செல்லவல்லனஆயின், என் கண் வெள்ளநீர் நீந்தல - என்கண்கள இங்ஙனம் வெள்ளமாகிய தம் நீரை நீந்தா.



அது மாட்டாமையின் இனி அவற்றிற்கு நீந்துதலேயுள்ளது என்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண்வந்தது. மனத் திற்குச செல்வாவது நினைவேயாகலின் 'உள்ளம்போன்று' என் றும, மெய்க்கு நடந்துசெலலவேண்டுதலின் கண்கள அதனொடு சென்று காதலரைக்காண்டல கூடாது என்னும கருததால 'செல் கிற்பின்' என்றும கூறினள். இதனான் வருகின்ற அதிகாரமும் தோற்றுவாய் செய்யப்பட்டது. (10)

## 118. கண் விதுப்பு அழிதல்

அஃதாவது கண்கள் தம் காட்சி விதுப்பான் வருந்து தல். காட்சிவிதுபபுத தலைமகனைக் காணடற்கு விரைதல். இது படரான் மெலிகதவழி நிகழுவதாகலின், படாமெலிநது இரங்கலின் பின் வைக்கப்பட்டது.

கண்தாம் கலுழ்வது எவன்கொலோ தண்டாநோய்
தாம்காட்ட யாம்கண் டது. 1171

நின் கண்கள கலுழ்ந்து தம் அழகு இழவாநின்றன நீ ஆற் றல்வேண்டும் என்ற தோழிக்குத் தலைமகள சொல்லியது.

தண்டா நோய் யாம் கண்டது தாம் காட்ட - இத் தணியா நோயை யாம் அறிந்தது தாம் எமக்குக் காதலரைக் காட்டலா னன்றே; கண் தாம கலுழ்வது எவன் கொல் - அன்று அததொழில வாய கண்கள இன்று எம்மைக் காட்டச் சொல்லி அழுகின்றது என்கருதி?

காட்ட என்பதற்கு ஏற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. இன்றும் தாமே காட்டுதல் அல்லது யாம் காட்டுதல் யாண்டையது என்பதாம். (1)

தெரிந்துஉணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப்
பைதல் உழப்பது எவன். 1172

இதுவும் அது.

தெரிந்து உணரா நோக்கிய உண்கண் - மேல்விளைவதனை ஆராய்ந்தறியாது அன்று காதலரை நோக்கிநின்ற உண்கண்கள், பரிந்து உணராப் பைதல் உழப்பது எவன் - இன்று இது நம்மால் வந்ததாகலின் பொறுத்தல் வேண்டும் எனக் கூறுபடுத்துணராது துன்பம் உழப்பது என்கருதி?

விளைவது: பிரிந்துபோயவர் வாராமையின் காண்டற்கு அரியராய் வருந்துதல். முன்னே வருவதறிந்து அது காவாதார்க்கு அது வந்தவழிப் பொறுத்தலன்றேயுள்ளது. அதுவும் செய்யாது வருந்துதல் கழிமடச்செய்கை என்பதாம். (2)



இதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்கது உடைத்து. 1173

இதுவும் அது.

தாம் கதுமென நோக்கித் தாமே கலுழும் இது - இக் கண்கள் அன்று காதலரைத் தாமே விரைந்து நோக்கி இன்றும் தாமே இருந்தழுகின்ற இது, நகத்தக்கது உடைத்து - நம்மால் சிரிக்கத் தக்க இயல்பினை உடைத்து.

கண்கள் என்பது அதிகாரத்தான் வந்தது. இது என்றது மேற்கூறிய கழிமடச் செய்கையை. அது வருமுன்னர்க் காப்பார்க்கு நகைவிளைக்கும் ஆகலான் 'நகத்தக்கது உடைத்து' என்றாள். (3)

பெயல்ஆற்றா நீர்உலர்ந்த உண்கண் உயல்ஆற்றா
உய்வில்நோ யென்கண் நிறுத்து. 1174

இதுவும் அது.

உண்கண் - உண்கண்கள், உயலாற்ரு உய்வு இல் நோய் என் கண் நிறுத்து - அன்று யான் உய்யமாட்டாமைக்கு ஏதுவாய ஒழிவில்லாத நோயை என் கண்ணே நிறுத்தி, பெயலாற்ரு நீர் உலர்ந்த - தாமும் அழுதலைமாட்டா வண்ணம் நீர் வற்றிவிட்டன.

நிறுத்தல் - பிரிதலும் பின் கூடாமையும் உடையாரைக்

காட்டி அதனுல் நிலைபெறச் செய்தல், முன் எனக்கு இன்ஞத செய்தலாற் பின் தமக்கு இன்ஞதன தாமே வந்தன என்பதாம்.

படல்ஆற்ரு பைதல் உழக்கும் கடல்ஆற்ருக்
காமநோய் செய்தஎன் கண். 1175

இதுவும் அது.

கடல் ஆற்ருக் காமநோய் செய்த என்கண் - எனக்குக் கடலும் சிறிதாம் வண்ணம் பெரியதாய காமநோயைச் செய்த என் கண்கள, படல் ஆற்ரு பைதல் உழக்கும் - அத்தீவினையால் தாமும் துயில்இலவாய்த் துன்பத்தையும் உழவாநின்றன.

காமநோய் காட்சியான் வந்ததாகலின், அதனைக் கண்களே செய்ததாக்கிக் கூறினள். துன்பம் அழுதலானுயது. (5)

ஓஒ இனிதே எமக்குஇந்நோய் செய்தகண்
தாஅம் இதன்பட் டது. 1176

இதுவும் அது

எமக்கு இந்நோய் செய்த கண் தாம் இதன்பட்டது—எமக்கு இக் காம நோயினைச் செய்த கண்கள தாமும் இத் துயிலாது அழுதற் கண்ணேபட்டது, ஓஒ இனிதே - மிகவும் இனிதாயிற்று.



ஓ என்பது மிகுதிப்பொருட்கண்வந்த குறிப்புச்சொல். தம்மால் வருத்தமுற்ற எமக்கு அது தீர்ந்தாற்போன்றது என்பதாம்.

உழந்துழந்து உண்ணீர் அறுக விழைந்துஇழைந்து
வேண்டி அவர்க்கண்ட கண். 1177

இதுவும் அது

விழைந்து இழைந்து வேண்டி அவர்க் கண்ட கண் - விழைந்து உள் நெகிழ்ந்து விடாதே அன்று அவரைக் கண்ட கண்கள், உழந்துழந்து உளநீர் அறுக - இன்று இத் துயிலாது அழுங்கலாய துன்பத்தின் உழந்து தம் அகத்துள்ள நீர் அறவே போக.

அடுக்கு இடைவிடாமைக்கண் வந்தது. அறுதலாகிய இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. (7)

பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றவர்க்
காணாது அமைவில கண். 1178

காதலர் பிரிந்துபோயினாரல்லர் அவர் ஈண்டுளர் அவரைக் காணுமளவும் நீ ஆற்றலவேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

பேணாது பெட்டார் உளர் - நெஞ்சால் விழையாதுவைத்துச் சொல மாத்திரத்தால் விழைந்தவர் இவ்விடத்தே உளர்; மற்று அவர்க் கண் காணாது அமைவில - அவ் உண்மையாற் பயன்யாது, அவரைக் கண்கள் காணாது அமைகின்றன இல்லையாயின.

செயலாற் பிரிந்து நின்றமையின் 'பேணாது' என்றும், முன் கலம் பாராட்டிப் பிரிவசசமும் வன்புரையும் கூறினாராகலின். 'பெட்டார்' என்றும் கூறினாள். மன் ஒழியிசைக்கண் வந்தது. மற்று, வினைமாற்றின் கண் வந்தது. 'ஓகாரம்' அஃசினில

யான் ஆற்றவும், கண்கள் அவரைக் காண்டற்கு விரும்பாநின்றன என்பதாம். இனிக் கொண்கனை என்று பாடமாயின், என் கண்

கள் தம்மைக் காணாது அமைகின்ற கொண்கனைத் தாம்காணா தமைகின்றனவில்லை. இவ்வாறே தமமையொருவர் விழையாதிருக் கத் தாம் அவரை விழைந்தார் உலகத்துளரோ என்று உரைக்க. இதற்கு மன் அசைநிலை.

வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண். 1179

நீயும் ஆற்றி நின்கண்களும் துயிலவனவாதல் வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது.

வாரற்கால் துஞ்சா - காதலர் வாராத ஞான்று அவர் வரவு பார்த்துத் துயிலா; வரின் துஞ்சா - வந்தஞான்று அவர் பிரிவு அஞ்சித் துயிலா; ஆயிடைக் கண் ஆரஞர் உற்றன - ஆதலான்



அவ் இருவழியும் என் கண்கள் பொறுத்தற்கரிய துன்பத்தினை உடைய.

'ஆயிடை' எனச் சுட்டு நீண்டது. இனி அவற்றிற்குத் துயில் ஒரு ஞான்றும் இல்லை என்பதாம். (9)

**மறைபெறல் ஊரார்க்கு அரிதன்றால் எம்போல்**
**அறைபறை கண்ணா ரகத்து. 1180**

காதலரை இவ்வூர் இயற்பழியாமல் அவர்கொடுமையை மறைக்க வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது.

எம்போல் அறைபறை கண்ணார் அகத்து மறை பெறல்- எம்மைப் போலும் அறைபறையாகிய கண்ணினையுடையார் தம் நெஞ்சின் கண் அடக்கிய மறையையறிதல், ஊரார்க்கு அரிதன்று - இவ் வூரின் கண் உள்ளார்க்கு எளிது.

மறை என்றது ஈண்டு மறைக்கப்படுவதனை. அகத்து நிகழ்வதனைப் புறத்துள்ளார்க்கு அறிவித்தலாகிய தொழிலான் ஒப்புமை உண்மையின், அறைபறையாகிய கண் என்றாள். இங்ஙனம் செய்யுள் விகாரமாக்காது, 'அறைபறைக் கண்ணார்' என்று பாடம் ஓதுவாரும் உளர். யான் மறைக்கவும் இவை வெளிப்படுத்தாநின்றன என்பதாம். (10)

## 119. பசப்புறு பருவரல்

அது பசப்புற்ற பருவரல் என விரியும். அஃதாவது பசப்புறுதலானாய வருத்தம். இதனைப் "பசதெறித்த வயா" (கலித். குறிஞ். 3) என்பது போலக்கொள்க. பசப்பாவது பிரிவாற்றாமையான் வருவதோர் நிறவேறுபாடு. இது, தலைமகனைக் காணப்பெறாதவழி நிகழ்வதாகலின், கண் விதுப்பு அழிதலின் பின் வைக்கப்பட்டது.

**நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தஎன்**
**பண்புயார்க்கு உரைக்கோ பிற. 1181**

முன் பிரிவுடம்பட்ட தலைமகள் அஃது ஆற்றாது பசந்தவழித் தன்னுள்ளே சொல்லியது.

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் - என்னை நயந்தவர்க்கு அது பொழுது பிரிவை உடம்பட்ட நான், பசந்த என் பண்பு யார்க்கு உரைக்கோ - அதனை ஆற்றாது இதுபொழுது பசந்த என் இயல்பினை யார்க்குச் சொல்லுவேன்.

பிற என்பது அசைநிலை. உடம்படாவழி ஒழிதல் குறித்துப் பிரிவுணர்த்தினாராகலின் அவர் அன்புடையர் என்னும் கருத்தான் 'நயந்தவர்' என்றும், இதுவே உடம்பாடாக மேலும் பிரிவு நிகழுமாகலின், இனி அவரைக் கூடுதலரிது என்னும் கருத்தான்



'நல்காமை' என்றும், முன்னர் உடம்படுதலும் பின்னர் ஆற்றாது பசத்தலும் பிறர்செய்தன வல்ல என்பாள 'பசந்த என்பண்பு' என்றும், யான் செய்துகொண்ட துன்பத்தினை இனி ஒருவர்க்குச் சொல்லலும் பழியாம் என்னும் கருத்தால் 'யார்க்கு உரைக்கோ' என்றும் கூறினாள். (1)

**அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்துஎன்**
**மேனிமேல் ஊரும் பசப்பு. 1182**

ஆற்றாள் எனக்கவன்ற தோழிக்கு ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது.

(யான்ஆற்றியுளேனாகவும்,) பசப்பு-இப்பசப்புத்தான், தந்தார் அவர் என்னும் தகையால்-தன்னையுண்டாக்கினர் அவர் என்னும் பெருமிததான், என் மேனிமேல இவர்ந்து ஊரும்-என் மேனியை மேலகொண்டு செலுத்தாநின்றது.

"குருதிகொப் புளிக்கும் வேலான் கூர்ந்தன்மா இவர்ந்து செல்ல" (சீவக. விமலை. 1) என்புழியும் இவர்தல் இப்பொருட்டாதல் அறிக. இஃது உரிமைபற்றி ஊர்கின்றது, இதற்கு நீ கவலல் வேண்டா என்பதாம். (2)

சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையும் தந்து. 1183

*அழகும் நாணும் அழியாமல் நீ ஆற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.*

*கைம்மாறா நோயும் பசலையும் தந்து - பிரிகின்றஞான்றே அவ் இரண்டற்கும் தலைமாறாக இக் காமநோயினையும் பசலையையும் எனக்குத் தந்து, சாயலும் நாணும் அவர் கொண்டார் - என் மேனியழகினையும் நாணினையும் அவர் கொண்டு போயினர்.*

*எதிர்நிரல்நிறை. அடக்குந்தோறும் மிகுதலான், நோய் நாணிற்குத் தலைமாறாயிற்று. இனி அவர் தந்தாலல்லது அவை உளவாகலும் இவை இலவாகலும் கூடா என்பதாம.* (3)

உள்ளுவன் மன்யான் உரைப்பது அவர்திறமால்
கள்ளம் பிறவோ பசப்பு. 1184

*பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும் அவர் நல்திறங்களையும் அறிதி யாகலின் நீட்டியாது வருவர் என்றவழிச் சொல்லியது.*

*யான் உள்ளுவன் - அவர் சொற்களை யான் மனத்தால் நினையா நிற்பேன், உரைப்பது அவர்திறம் - வாக்கால் உரைப்பதும் அவர் நல்திறங்களையே, பசப்புக்கள்ளம்-அங்ஙனம் செய்யா நிற்கவும்,பசப்பு வந்து நின்றது, இது வஞ்சனையாயிருந்தது.*

பிறவும், ஓவும் அசைநிலை. மெய் மற்றை மனவாக்குக்களின் வழித்தாகலின், அதன்கண்ணும் வரம்பாற்றன்றாயிருக்க வந்தமை யின், இதன்செயல் கள்ளமாயிருந்தது எனத்தான் ஆற்றுகின் றமை கூறியவாறாயிற்று. (4)

உவக்காண்எம் காதலர் செல்வார் இவக்காண்என்
மேனி பசப்புஊர் வது. 1185

காதலர் பிரிந்து அணித்தாயிருக்கவும் ஆற்றுகின்றிலை என்ற தோழிக்கு முன் நிகழ்ந்தது கூறியது.

எம் காதலர் உவக்காண் செல்வார் - பண்டும் நம் காதலர் உங்கேசெல்வாராக, என்மேனி பசப்பூர்வது இவக்காண் - என் மேனி பசப்பூர்வது இங்கேயன்றே? அப்பெற்றியது இன்று பிறி தொன்றோமோ?

உவக்காண், இவக்காண்-என்பன ஒட்டிநின்ற இடைச்சொற் கள். தேய அண்மையாற் காலஅண்மை கருதப்பட்டது. அவர் செலவும் பசப்பினது வரவும் பகல் இரவுகளின் செலவும் வரவும் போலவது அறிந்துவைத்து அறியாதாய்போல நீசொலலுகின்றது என்னை என்பதாம். (5)

விளக்குஅற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்குஅற்றம் பார்க்கும் பசப்பு. 1186

இதுவும் அது.

விளக்கு அற்றம் பார்க்கும் இருளேபோல் - விளக்கினது மெலிவு பார்த்து நெருங்கிவரும் இருளேபோல, கொண்கன் முயக்கு அற்றம் பார்க்கும் பசப்பு - கொண்கன் முயக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவரும் இப் பசப்பு.

பார்க்கும் என்பன இலக்கணைச்சொல். முன் பிரியாதிருக்க வும் தனக்கு அவகாசம் பார்த்துவரும் பசப்புப் பிரிவுபெற்றால் என்செய்யாது என்பதாம். (6)

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு. 1187

இதுவும் அது.

புல்லிக்கிடக்தேன் புடைபெயர்க்தேன்-முன்னொரு ஞான்று காதலரைப்புல்லிக்கிடக்தயான் அறியாது புடைபெயர்க்தேன்; அவ் வளவில் பசப்பு அளளிக்கொள்வற்று - அப் புடைபெயர்ந்த அள விலே பசப்பு அள்ளிக்கொளவதுபோல வந்து செறிந்தது.

கொள்வது என்பது குறைந்துநின்றது. அளளிக்கொளவது-அள்ளிக்கொளளப்படும் பொருள. அப் புடைபெயர்ச்சி மாத்திரத் திற்கு அவ்வாறுயது இப் பிரிவின்கண் ஆமாறு சொல்லவேண் டுமோ என்பதாம். (7)



பசந்தாள் இவள்என்பது அல்லால் இவளைத்
துறந்தார் அவர்என்பார் இல். 1188

நீ இவ்வனம் பசக்கற்பாலையல்லை என்ற தோழியோடு புலந்து சொல்லியது.

இவள பசந்தாள் என்பது அல்லால் - இவள ஆற்றியிராது பசந்தாள என்று என்னைப்பழிகூறுவதல்லது, இவளை அவர் துறந் தார் என்பார் இல் - இவளை அவர் துறந்துபோயினர் என்று அவரைக் கூறுவார் ஒருவரும் இலலை.

என்பார் என வேறுபடுத்திக்கூறினள, தன்னையே நெருங்கு தல் பற்றிப் புலக்கின்றமையின் (8)

பசக்கமன் பட்டாங்குஎன் மேனி நயப்பித்தார்
நன்னிலையர் ஆவர் எனின். 1189

இதுவும் அது.

நயப்பிததார் நன்னிலையர் ஆவர் எனின்-இப் பிரிவை யானே உடம்படும் வகை சொல்லியவர் இன்று நின் கருத்தான் நல்ல நிலையினர் ஆவராயின், என்மேனி பட்டாங்கு பசக்க என்மேனி பட்டதுபடப் பசப்பதாக.

கன்னிலையராதல் நன்மைக்கண்ணே நிற்றலை உடையராதல. பட்டாக்காக என ஆக்கம் விரித்து உரைக்க. முன் இப் பிரிவின் கொடுமையறியாத என்னை இதற்கு உடம்படுத்திப் பிரிந்தவர் தவறிலராகவே வேண்டுவது, என் மேனியும் பசப்பும் யாது செய் யின் என்? என்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. (9)

பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றார் எனின். 1190

தலைமகள் ஆற்றுதற்பொருட்டுத் தோழி தலைமகனை இயற் பழித்தவழி அவள இயற்படமொழிந்தது.

நயப்பித்தார் நல்காமை தூற்றார் எனின் அன்று தாம் குறை நயப்பித்துக் கூடியவர்க்கு இன்று நல்காமையை நட்டோர் தூற்று ராயின், பசப்பு எனப் பேர் பெறுதல நன்றே - பசப்புற்றாள என வேற்றுமை பானன்றிப்பசப்புத்தான் ஆயினாள என ஒற்றுமையால் தாம் சொல்ல அப் பெயரைப் பெறுதல் எனக்கு நன்று.

நட்டார் என்பது அவாய்நிலையான் வந்தது. இயற்பழித் தல்பொறாதுபுலக்கின்றாளாகலின், இகழ்ச்சிக்குறிப்பால் கூறினாள். அவரை அருளிலர் என்றதை இன்னும் பசந்தாள இவள் என் கையே யான் ஆற்றும் நெறியாவது என்பதாம். (10)



## 120. தனிப் படர் மிகுதி

அது தனியாகிய படர்மிகுதி என விரியும். அஃதாவது படர்மிகுதி தலைவன்கண் இன்றித் தன் கண்ணதேயாதல் கூறுதல். அறமும் பொருளும் நோக்கிப் பிரிதலின் அவன் கண் இல்லையாயிற்று. இது, பசப்புற்று வருந்தியாட்கு உரிய தாகலின், பசப்புறு பருவரலின் பின் வைக்கப்பட்டது.

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழ்இல் கனி. 1191

'காதலரும் நின்னினும் ஆற்றாராய்க் கடிதின் வருவர்; அவரோடு பேரின்பம் நுகர்தி' என்ற தோழிக்குச் சொல்லியது.

தாம் வீழ்வார் தம் வீழப் பெற்றவர் - தம்மாற்காதலிக்கப் படும் கணவர் தம்மைக் காதலிக்கப்பெற்ற மகளிர், பெற்றாரே காமத்துக் காழ் இல கனி - பெற்றாரன்றே காமநுகர்ச்சி என்னும் பரல் இல்லாத கனியை.

காமம் - ஆகுபெயர். அத்து - அல்வழிக்கண் வந்தது. முன்னை நல்வினை இல்வழிப் பெறப்படாமையின் பெற்றார் என்றும், அவரால் தடையின்றி நுகரப்படுதலின் 'காழிலகனி' என்றும் கூறினள். நம் காதலர் பிரிதலையன்றிப் பின் வாராமையும் உடைமையின், அக் கனி யாம் பெற்றிலேம் என்பதாயிற்று. (2)

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி. 1192

இதுவும் அது.

வீழ்வார்க்கு வீழ்வார் அளிக்கும் அளி - அறமும் பொருளும் நோக்கிப் பிரிதலால் தம்மை இன்றியமையா மகளிர்க்கு அவரை இன்றியமையாக் கணவர் அளவறிந்து வந்து செய்யும் தலையளி,

வாழ்வார்க்கு வானம் பயந்தற்று - தன்னையே நோக்கி உயிர்வாழ் வார்க்கு வானம் அளவறிந்து செய்தாற்போலும்.

நம் காதலர் நம்மை விழையாமையின், அத்தலையளி இல்லையா கலான், மழை வறந்துழி அதனான் வாழ்வார்போல இறந்துபடு தலே நமக்கு உள்ளது என்பதாம். (2)

வீழுநர் வீழப் படுவார்க்கு அமையுமே
வாழுநம் என்னும் செருக்கு. 1193

இதுவும் அது.

வீழப்படுவார்க்கு அமையுமே - தாம் விழையும் கணவரான் விழையப்படும் மகளிர்க்கு அமைவுடைத்து, வாழுநம் என்னும்

செருக்கு - காதலர் பிரிந்தாராயினும் நம்மை நினைந்து கடிதின் வருவா. வதால நாம் இன்புற்று வாழ்தும என்றிருக்கும் தருக்கு.

நாம் அவரான் விழுப்படாமையின், நமக்கு அமைவது இறந்துபாடு என்பதாம். (3)

விழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
விழப் படாஅர் எனின். 1194

காதலரை இயற்பழித்தலை அஞ்சி அவரருளின்மை மறைதத நீ கடவுட் கற்பினையாகலின் கற்புடைமகளிரால் நன்கு மதிக்கப்படுதி என்ற தோழிக்குச் சொல்லியது.

விழப்படுவார் - கறபுடைமகளிரால் நன்கு மதிக்கப்படுவாரும், தாம் வீழ்வார் விழப்படார் எனின் கெழீஇயிலர் - தாம விரும்பும் கணவரான் விரும்பப்படாராயின் தீவினையாட்டியர்.

சிறப்பு உம்மை விகாரததால தொக்கது. கெழீஇயின்மை - நல்வினையின்மை, அஃது அருததாபததியான தீவினையுடைமையாற் சிற்று. தீவினையுடையேற்கு அக நன்கு மதிப்பால பயனிலலை என்பதாம். (4)

நாம்காதல் கொண்டார் நமக்குஎவன் செய்பவோ
தாம்காதல் கொள்ளாக் கடை. 1195

அவர்மேற் காதலுடைமையின் அவர் கருத்தறிந்து ஆற்றி யை என்ற தோழிக்குச சொலலியது.

நாம் காதல் கொண்டார் நமக்கு எவன் செய்ப - நம்மால் காதல செய்யப்பட்டவர் நமக்கு என்ன இன்பத்தைச் செயவர், தாம் காதல கொளளாக்கடை - அவ்வாறே தாமும் நம்கண் காதல செயயாவழி.

எச்ச உம்மை விகாரத்தால் தொக்கது. அக் காதலுடைமை யால் நாம் பெற்றது துன்பமே என்பதாம. (5)

ஒருதலையான் இன்னாது காமம்காப் போல
இருதலை யானும் இனிது. 1196

இதுவும அது.

காமம் ஒருதலையான் இன்னாது - மகளிர் ஆடவர் என்னும் இருதலையினும் வேட்கை ஒருதலைக் கண்ணேயாயின் அஃது இன்னாது, காப்போல இருதலையானும் இனிது காவினது பாரம்போல இருதலைக்கணணும் ஒப்பின், அஃது இனிது.

மூன்றன் உருபுகள் ஏழனபொருண்மைக்கண் வந்தன. கா-ஆகு பெயர். என மாட்டு உண்டாய வேட்கை அவர்மாட்டும் உண்டாயின், யான் இவ்வாறு துன்பமுழத்தல் கூடுமோ என்பதாம். (6)



பருவரலும் பைதலுங் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான். 1197

இதுவும் அது.

ஒருவர்கண் நின்று ஒழுகுவான் காமன்-காமம் நுகர்தற்கு உரிய இருவரிடத்தும் ஒப்பநிற்றல் ஒழிந்து ஒருவரிடத்தே நின்று பொருகின்ற காமக் கடவுள, பருவரலும் பைதலும் காணான் கொல்-அவ்விடத்துப் பசப்பானுய பருவரலும் படர் மிகுதியும் அறியான் கொல்லோ!

விழைவும் வெறுப்பும் இன்றி எல்லார்கண்ணும் நிகழ்தன அறிதற்குரிய கடவுளும் என்கண் வேறுபட்டான, இனி யான் உய்யுமாறு என்னை என்பதாம். (7)

வீழ்வாரின் இன்சொற் பெறாஅது உலகத்து
வாழ்வாரின் வன்கணார் இல். 1198

தலைமகன் தூதுவரக் காணாது சொல்லியது.

வீழ்வாரின் இன்சொல் பெறாது வாழ்வாரின் - தம்மால் விரும்பப்படுங் காதலர் திறத்து நின்றும் ஓர் இன்சொல்லளவும் பெறாதே பிரிவாற்றி உயிர் வாழ்கின்ற மகளிர் போல, வன்கணார் உலகத்து இல—வன்கண்மையுடையார் இவ் உலகத்து இல்லை.

காதலர் திறத்துச் சொல் யாதானும் எனக்கு இனிது என்னும் கருத்தால் 'இன்சொல்' என்றாள். இழிவு சிறப்பு உம்மை விகாரத் தால் தொக்கது. யான் வன்கண்ணேனாகலின் அதுவும் பெறாது உயிர்வாழா நின்றேன் என்பதாம். (8)

நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்டு
இசையும் இனிய செவிக்கு. 1199

இதுவும் அது.

நசைஇயார் நல்கார் எனினும்—என்னால் நச்சப்பட்ட காதலர் என்மாட்டு அன்பிலரேயாயினும், அவர்மாட்டு இசையும் செவிக்கு இனிய - அவர் திறத்து யாதானும் ஓர் சொலலும் என் செவிக்கு இனியவாம்.

இழிவு சிறப்பு உம்மை, அவர் வாரலர் என்னுஞ் சொலலா யினும் அமையும் என்பது பட நின்றது. அதுவும் பெற்றிலேன் என்பதாம். (9)

உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு. 1200

தலைமகன் தூதுவரப் பெறாது தான் தூதுவிடக் கருதியாள நெஞ்சொடு சொல்லியது.

உளர்க்கு உறுநோய் உரைப்பாய் நெஞ்சு - நின்னொடு உறுதார்க்கு நின்று நோயை உரைக்கலுற்ற நெஞ்சே, கடலைச் செறுவ்-நீ ஆற்றுயாயினும் அரிதாய அதனை யொழிந்து, நினக்குத் துயரஞ் செய்கின்ற கடலைத் தூர்க்க முயல்வாயாக, அஃது எளிது.

உரைக்கலுற்றது அளவிறந்த நோயாகலானும், கேட்பார் உறவினராகலானும், அது முடிவதொன்று அன்று; முடிந்தாலும் பயன் இல்லை என்பது கருதாது, முயலாநின்றாய் என்னும் குறிப்பான் 'வாழிய' என்றாள். (10)

## 121. நினைந்தவர் புலம்பல்

அஃதாவது முன்கூடிய ஞான்றை இன்பத்தினை நினைந்து தலைமகள் தனிமை எய்தலும், பாசறைக்கண் தலை மகன் தனிமை எய்தலுமாம். இவ்வாறு இருவர்க்கும் பொது வாதல் பற்றிப் பன்மைப்பாலாற் கூறப்பட்டது. இது படர் மிகுதி தன்கண்ணதாக நினைந்த தலைமகட்கும் உரித்தாக லின், அவ் இயைபு பற்றித் தனிப்படர் மிகுதியின் பின் வைக்கப்பட்டது.

உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது. 1201

தூதாய்ச் சென்ற பாங்கனுக்குத் தலைமகன் சொல்லியது.

உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்-முன் கூடிய ஞான்றை இன்பத்தினைப் பிரிந்துழி நினைதாலும் அதுபொழுது பெற்றாற்போல நீங்காத மிக்க மகிழ்ச்சியைத் தருதலால், களளி னும் காமம் இனிது உண்டுழியல்லது மகிழ்ச்சி செய்யாத களளி னும் காமம் இன்பம் பயத்தலுடைத்து.

தன் தனிமையும் தலைமகனை மறவாமையும் கூறியவாறு. (1)

எனைத்துஒன்று இனிதேகாண் காமம்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதுஒன்று இல். 1202

இதுவும் அது.

தாம் வீழ்வார் நினைப்ப வருவது ஒன்று இல் - தம்மால் விரும்பப்படுவாரைப் பிரிவின்கண் நினைத்தால அந் நினைவார்க்கு அப்பிரிவான் வருவதோர் துன்பம் இல்லை பாம்; காமம் எனைத்து இனிது ஒன்றேகாண் - அதனால் காமம் எத்துணையேனும் இனி தொன்றேகாண்.

புணர்ந்துழியும் பிரிந்துழியும் ஒப்ப இனிது என்பான், 'எனைத் தும் இனிது' என்றான். சிறப்பு உம்மை விகாரத்தால் தொக்கது. தான் ஆற்றிய வகை கூறியவாறு. (2)



நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும். 1203

தலைமகனை நினைந்து வருந்துகின்ற தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

தும்மல் சினைப்பதுபோன்று கெடும் - எனக்குத் தும்மல் எழு வது போன்று தோன்றிக் கெடா நின்றது; நினைப்பவர் போன்று நினையார்கொல் - அதனால் காதலர் என்னை நினைப்பார் போன்று நினையாராகல் வேணடும்.

சினைத்தல் - அரும்புதல். சேய்மைக் கண்ணராய கேளிர் நினைந்துழி அந்நினைக்கப்பட்டார்க்குத் தும்மல் தோன்றும் என்னும உலகியல் பற்றித் தலைமகன் எடுத்துக் கொண்ட வினை முடிவது போன்று முடியாமையுணர்ந்தாள சொல்லியதாயிற்று.()

யாமும் உளங்கொல் அவர்நெஞ்சத்து எம்நெஞ்சத்து
ஓஒ உளரே அவர். 1204

இதுவும் அது.

எம் நெஞ்சத்து அவர் ஓ உளரே—எம்முடைய நெஞ்சத்து அவர் எப்பொழுதும் உளரேயாய்இரா நின்றார், அவர் நெஞ்சத்து யாமும் உளங்கொல் - அவ்வகையே அவருடைய நெஞ்சத்தும் யாமும் உளமாதுமோ, ஆகேமோ?

ஓகார இடைச் சொல் ஈண்டு இடைவிடாமை உணர்த்தி நின்றது. உளமாயும், வினைமுடியாமையின் வாராராயினரோ, அது முடிக்கும் இலமாகலின் வாராராயினரோ என்பது கருத்து. (4)

தம்நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்
எம்நெஞ்சத்து ஓவா வரல். 1205

இதுவும் அது.

தம் நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் - தம்முடைய நெஞ்சின் கண்ணே யாம் செல்லாமல் எம்மைக் காவல் கொண்ட காதலர், எம் நெஞ்சத்து ஓவாவரல் நாணார்கொல் - தாம் எம்முடைய நெஞ்சின்கண் ஒழியாது வருதலை நாணார் கொல்லோ?

ஒருவரை தங்கண் வருதற்கு ஒருகாலும் உடம்படாது, தாம் அவர்கண் பலகாலுஞ் சேறல் நாணுடையார் செயலன்மையின், 'நாணார்கொல்' என்றாள். (5)

மற்றுயான் என்னுளேன் மன்னோ அவரொடுயான்
உற்றநாள் உள்ள உளேன். 1206

அவரோடு புணர்ந்த ஞான்றை இன்பத்தை நினைந்து இறந்துபாடெய்தா நின்றாய், அது மறத்தல்வேண்டும் என்றாட்குச் சொல்லியது.

யான் அவரோடு உற்ற நாள் உள்ள உளேன்-யான் அவரோடு புணர்ந்த ஞான்றை இன்பத்தை நினைதலான் இத் துன்ப வெள்ளத்தும் உயிர் வாழ்கின்றேன்; மற்று யான் என்னுளேன் - அது இன்றாயின், வேறு எத்தால் உயிர் வாழ்வேன்.

நாள - ஆகுபெயர். உயிர் வாழுதற்கு வேறும் உள, அவை பெற்றிலேன் என்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. அவை அவன் தூது வருதல், தன் தூது சேறல் முதலாயின. அவையாவும் இன்மையின், இதுவல்லது எனக்குப் பற்றுக்கோடு இல்லை என்பது கருத்து. (6)

மறப்பின் எவனாவன் மற்கொல் மறப்புஅறியேன்
உள்ளினும் உள்ளம் சுடும். 1207

இதுவும் அது.

மறப்பு அறியேன் உள்ளினும் உள்ளம் சுடும் - அவ் இன்பத்தை மறத்தலறியேனாய் இன்று உள்ளா நிற்கவும், பிரிவு என் உள்ளத்தைச் சுடா நின்றது, மறப்பின் எவனாவன் - அங்ஙனம் பிரிவாற்றாத யான் மறந்தால் இறந்து படாது உளனாவது எத்தால்?

செயப்படுபொருள் அதிகாரத்தான் வந்தது. மன் ஈண்டும் அதுபட நின்று ஒழியிசையாயிற்று. கொல்-அசைநிலை. (7)

எனைத்து நினைப்பினும் காயார் அனைத்துஅன்றோ
காதலர் செய்யும் சிறப்பு. 1208

இத் துன்பம் அறிந்து வந்து காதலர் நினக்கு இன்பம் செயவர் என்றாட்குச் சொல்லியது.

எனைத்து நினைப்பினும் காயார்-தம்மை யான் எத்துணையும் மிக நினைத்தாலும் அதற்கு வெகுளார்; காதலர் செய்யும் சிறப்பு அனைத்து அன்றோ - காதலர் எனக்குச் செய்யும் இன்பமாவது அவ்வளவன்றோ?

வெகுளாமை - அதற்கு உடன்பட்டு நெஞ்சின்கண் நிற்றல். தனக்கு அவ்வின்பத்திற சிறந்தது இன்மையின், அதனை, 'சிறப்பு' என்றாள். 'காதலர் நம்மாட்டருள்' என்றும், 'செயயுங் குணம்' என்றும் பாடம் ஓதுவாரும் உளர். தோழி கூறிய அதனைக் குறிப்பான் இகழ்ந்து கூறியவாறு. (8)

விளியும்என் இன்உயிர் வேறல்லம் என்பார்
அளியின்மை ஆற்ற நினைந்து. 1209

தலைமகன் தூதுவரக் காணாது வருந்துகின்றாள் வற்புறுத்தும் தோழிக்குச் சொல்லியது.

வேறு அல்லம் என்பார் அளியின்மை ஆற்ற நினைந்து - முன்பெல்லாம் நாம் இருவரும் வேறல்லம் என்று சொல்லுவாரது



அளியின்மையை மிகவும் நினைந்து, என் இன்னுயிர் விளியும் - எனது இனிய உயிர் கழியா நின்றது.

அளியின்மை - பின்வருவராகலுமாய்ப் பிரிதலும், பிரிந்து வாராமையும், ஆண்டு நின்றுழித் தூது விடாமையும் முதலாயின. பிரிவாற்றல் வேண்டும் என வற்புறுத்தாட்கு என்னுயிர் கழிகின்றது பிரிவிற்கு அன்று; அவரன்பின்மைக்கு என எதிர் அழிந்து கூறியவாறு (9)

விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி வாழி மதி. 1210

வன்புறை எதிரழிந்தாள் காமம் மிக்க கழிபடரால் சொல்லியது.

மதி - மதியே, விடாது சென்றாரைக் கண்ணினால் காணப் படாதி - என் நெஞ்சின் இடைவிடாதிருந்தே விட்டுப் போயினாரை யான் என் கண்ணளவாலுயினும் எதிர்ப்படும் வகை நீ படாதொழி

வாயாக.

கண்ணளவான் எதிர்ப்படுதலாவது மதி இருவராலும் நோக்கப் படுதலின் இருவர் கண்ணும் அதன் கண்ணே சேர்தல், முதலொடு சினைக்கு ஒற்றுமை உண்மையின், 'சென்றாரைக் காண' என்றும், குறையுறுகின்றாளாகலின், 'வாழி' என்றும் கூறினாள். இனிப் படாது என்பது பாடமாயின், கனவிடைக் கண்ணினாற் காணுமாறு மதிபடுகின்றதில்லை என அதனால் துயில் பெறாது வருந்துகின்றாள் கூற்றாக்குக. இப் பொருட்கு வாழி என்பது அசை நிலை. (10)

## 122. கனவு நிலை உரைத்தல்

அஃதாவது தலைமகள் தான்கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லுதல். அக் கனவு நனவின்கண் நினைவுமிகுதியாற் கண்டதாகலின் இது நினைந்தவர் புலம்பலின் பின் வைக்கப்பட்டது.

காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
யாதுசெய் வேன்கொல் விருந்து. 1211

தலைமகன் தூதுவரக் கண்டாள் சொல்லியது.

காதலர் தூதொடு வந்த கனவினுக்கு - யான் வருந்துகின்றது அறிந்து அது தீரக் காதலர் விடுத்த தூதினைக்கொண்டு என் மாட்டு வந்த கனவினுக்கு, விருந்து யாது செய்வேன் - யான் விருந்தாக யாதினைச் செய்வேன்?

விருந்து என்றது விருந்திற்குச் செய்யும் உபசாரத்தினை. அது கனவிற்கு ஒன்று காணாமையின், 'யாது செய்வேன்' என்றாள். (1)



கயலுண்கண் யான்இரப்பத் துஞ்சின் கலந்தார்க்கு
உயலுண்மை சாற்றுவேன் மன். 1212

தூதுவிடக் கருதியாள் சொல்லியது.

கயல் உண்கண் யான் இரப்பத் துஞ்சின் - துஞ்சாது வருந்து கின்ற என் கயல்போலும் உண் கண்கள யான் இரந்தால் துஞ்சு மாயின், கலந்தார்க்கு உயல் உண்மை சாற்றுவேன் - கனவிடைக் காதலரைக் காண்பேன், கண்டால் அவர்க்கு யான் ஆற்றியுளே னாய தன்மையை யானே விரியச் சொல்வேன்.

'கயலுண்கண்' என்றாள், கழிந்த நலத்திற்கு இரங்கி. உயல் - காம நோயக்குத் தப்புதல். ஏதர்க்குச் சொல்லாத யாம் அடக்கு வனவும் சொல்லுவனவற்றனைத்தும் சுருக்குவனவற்றின் பரப் பும் தோன்றச் சொல்வேன் என்னும் கருத்தால் 'சாற்றுவேன்' என்றாள். இனி, அவையும் துஞ்சா; சாற்றலும் கூடாது என்பது பட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. முன்னும் கண்டாள கூற்றாகலின், கனவு நிலையுரைத்தலாயிற்று. (2)

நனவினான் நல்கா தவரைக் கனவினான்
காண்டலின் உண்டுஎன் உயிர். 1213

ஆற்றாள் எனக் கவன்றாட்கு ஆற்றுவல் என்பது படச் சொல்லியது.

நனவினான் நல்காதவரை - நனவின்கண் வந்து தலையளிசெய் யாதாரை, கனவினாற் காண்டலின் என் உயிர் உண்டு - யான் கன வின்கண் கண்ட காட்சியானே என்னுயிர் உண்டாகா நின்றது. மூன்றனுருபுகள ஏழன்பொருண்மைக்கண் வந்தன. அக் காட்சியானே யான் ஆற்றியுளேனாகின்றேன். நீ கவலல்வேண் டாம் என்பதாம். (3)

கனவினான் உண்டாகும் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு. 1214

இதுவும் அது.

நனவினான் நல்காரை நாடித் தரற்கு - கனவின்கண் வந்து தலையளி செய்யாதாரை அவர் சென்றுழி நாடிக் கொண்டுவந்து கனவு தருதலான், கனவினான் காமம் உண்டாகும் - இக் கனவின் கண்ணே எனக்கு இன்பமுண்டாகா நின்றது.

காமம் - ஆகுபெயர். நான்காவது மூன்றன் பொருண்மைக் கண் வந்தது. நனவினான் நல்காதவரை அவர் சென்ற தேயம் அறிந்து சென்று கொண்டு வந்து தந்து நல்குவித்த கனவால் யான் ஆற்றுவல் என்பதாம். (4)

**நனவினான் கண்டதூஉம் ஆங்கே கனவும்தான்**
**கண்ட பொழுதே இனிது. 1215**



இதுவும் அது.

நனவினான் கண்டதூஉம் (இனிது) ஆங்கே - முன் நனவின் கண் அவரைக் கண்டு நுகர்ந்த இன்பமதானும் இனிதாயிற்று அப் பொழுதே கனவுந்தான் கண்ட பொழுது இனிது இன்று கனவின் கண் கண்டு நுகர்ந்த இன்பமும் அக் கண்டபொழுதே இனிதாயிற்று. அதனான் எனக்கு இரண்டும் ஒத்தன.

'இனிது' என்பது முன்னும் கூட்டப்பட்டது. கனவு - ஆகு பெயர். முன்னும் யான் பெற்றது இவ்வளவே, இன்னும் அது கொண்டு ஆற்றுவல் என்பதாம். (5)

**நனவுஎன ஒன்றுஇல்லை ஆயின் கனவினான்**
**காதலர் நீங்கலர் மன் 1216**

இதுவும் அது.

நனவென ஒன்று இல்லையாயின் - நனவு என்று சொல்லப்படு கின்ற ஒரு பாவி இல்லையாயின், கனவினான் காதலர் நீங்கலர் - கனவின்கண் வந்துகூடிய காதலர் என்னைப் பிரியார்.

ஒன்று என்பது அதன் கொடுமை விளக்கி நின்றது. அஃது இடையே புகுந்து கனவைப் போக்கி அவரைப் பிரிவித்தது என்பது படநின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. கனவிற் பெற்று ஆற்றுகின்றமை கூறியவாறு. (6)

நனவினான் நல்காக் கொடியார் கனவினான்
என்எம்மைப் பீழிப் பது. 1217

விழித்துழிக் காணாளாயினாள் கனவிற்கூட்டம் நினைந்து ஆற்றாளாய்ச் சொல்லியது.

கனவினான் நல்காக் கொடியார் - ஒருஞான்றும் நனவின்கண் வந்து தலையளிசெய்யாத கொடியவர், கனவினான் எம்மைப் பீழிப்பது என் - நாடோறும் கனவின்கண்வந்து எம்மை வருத்துவது எவ் இயைபுபற்றி?

பிரிதலும் பின் நினைந்து வாராமையும் நோக்கி 'கொடியார்' என்றும், கனவில் தோள மேலராய் விழித்துழிக் கரத்தலின், அதனானும் துன்பமாகாநின்றது என்பாள 'பீழிப்பது' என்றும் கூறினாள். நனவின் இல்லது கனவினும் இல்லை என்பர்; அது கண்டிலம் என்பதாம். (7)

துஞ்சுங்கால் தோள்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து. 1218

தான்ஆற்றுதற்பொருட்டுத் தலைமகனை இயற்பழித்தாட்கு இயற்பட மொழிந்தது.



துஞ்சுங்கால் தோள்மேலராகி - என் நெஞ்சுவிடாதுறைகின்ற காதலர் யான் துஞ்சும்பொழுது வந்து என் தோளமேலராய், விழிக்குங்கால் விரைந்து நெஞ்சத்தராவர் - பின் விழிக்கும்பொழுது விரைந்து பழைய நெஞ்சின் கண்ணராவர்.

கலவி விட்டு மறையும் கடுமைபற்றி 'விரைந்து' என்றாள். ஒரு காலும் என்னின் நீங்கி அறியாதாரை நீ நோவற்பாலையல்லை என்பதாம். (8)

நனவினான் நல்கா ரை நோவர் கனவினான்
காதலர்க் காணா தவர். 1219

இதுவும் அது.

கனவினான் காதலர்க் காணாதவர் - தமக்கு ஒருகாதலர் இன்மையின் அவரைக் கனவிற்கண்டறியாத மகளிர், கனவினான் நல்

காரை கோவர் - தாம் அறிய கனவின்கண் வந்து நல்காத நம் காதலரை அன்பிலர் என கோவாநிற்பா.

இப்பழித்தது பொழுது புக்கின்றுள ஆகலின், அயன்மை தோன்றக் கூறினாள். தமக்கும் காதலருளராய் அவரைக் கனவிற் கண்டறிவாராயின், நம் காதலர் கனவின்கண் ஆற்றி நல்குதல் அறிந்து கோவார் என்பதாம். (9)

நனவினான் நம்நீத்தார் என்பர் கனவினான்
காணார்கொல் இவ்வூ ரவர். 1220

இதுவும் அது.

இவ் ஊரவர் கனவினான் நம் நீத்தார் என்பார் - இவ் ஊரின் மகளிர் கனவின்கண் நம்மை நீத்தார் என்று நம் காதலரைக் கொடுமை கூறுநிற்பர், கனவிலன் காணார் கொல் - அவர் கனவின் கண் நீங்காது வருதல் கண்டறியாரோ?

என்னொடு தன்னிடை வேறுபாடின்றாயின் யான் கண்டது தானும் கண்டமையும், அது காணாது அவரைக் கொடுமை கூறு கின்றமையின் அயலாளோயாம் என்னும் கருத்தால், இவ் ஊரவர் என்றாள். (1)

## 123. பொழுது கண்டு இரங்கல்.

அஃதாவது மாலைப்பொழுது வந்துழி அதனைக்கண்டு தலைமகள் இரங்குதல் 'கனாமுந்துறாத வினையில்லை' (பழமொழி. 2) என்பதுபற்றிப் பகற்பொழுது அதற்கு இருதாட்கு உரிய தாகலின் இது கனவுநிலை உரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

மாலையோ அல்லை மணந்தார் உயிர்உண்ணும்
வேலைநீ வாழி பொழுது. 1221

பொழுதொடு புலந்து சொல்லியது.



பொழுது - பொழுதே, நீ மாலையோ அல்லை - நீ முன்னாளி னின் வந்த மாலையோ எனின், அல்லை; மணந்தார் உயிர் உண்

னும் வேலை இருக்த ஆற்றான் அக்காட் காதலரை மணக்த மகளிர் உயிரை புண்ணும் இருதிக்காலமாய் இருந்தாய்.

முன்னுள - கூடியிருந்த கான. அக்கால மணக்தார் எனவே பின் பிரிகதாராதல் பெறுதும். 'வாழி' என்பது குறிப்புச்சொல்: "வாலிழை மகளிர் உயிரப்பொதி அவிழக்குக்காலை" (கலித். கெய்தல். 2) என்றாற்போல ஈண்டு பொதுலமையாற் கூறப்பட்டது. மாலை நீ அல்லை எனவும் பாடம். வேலை என்பது ஆகுபெயர். வேலை என்பதற்கு வேலாயிருந்தாய் என்பாரும் உளர். (1)

புன்கண்ணை வாழி மருள்மாலை எம்கேள்போல்
வன்கண்ண தோநின் துணை. 1222

தன்னுட்கையாற்றை அதன்மேலிட்டுச் சொல்லியது.

மருளமாலை-மயங்கிய மாலாய், புன்கண்ணை - நீயும் எம் போலப் புன்கணுடையையாயிருந்தாய், நின் துணை எக்கேள் போல் வன்கண்ணதோ-நின்துணையும் எம் துணைபோல் வன் கண்மையுடையதோ, கூறுவாயாக.

மயக்குதல்-பகலும் இரவும் தம்முளளே விரவுதல்; கறங்கு தலும் தோன்றநின்றது. புன்கண்-ஒளியிழத்தல்; அதுபற்றித் துணையும் உண்டாக்கிக் கூறினள். எச்சஉம்மை விகாரத்தால் தொக்கது. எமக்குத் துன்பஞ்செய்தாய்; நீயும் இன்பமுற்றிலை என்னும் குறிப்பால் 'வாழி' என்றாள். (2)

பனிஅரும்பிப் பைதல்கொள் மாலை துனிஅரும்பித்
துன்பம் வளர வரும். 1223

ஆற்றல்வேண்டும் என்ற தோழிக்குச் சொல்லியது.

பனி அரும்பிப் பைதல்கொள் மாலை - காதலர் கூடிய காளெல்லாம் யன் முன் நடுக்கம் எய்திப் பசக்துவக்த மாலை, துனி அரும்பித் துன்பம் வளர வரும்-இக்காள் எனக்கு இறக்துபாடு வக்துதோன்றி அதற்கு உளதாக்துன்பம் ஒருகாலைக்கு ஒருகால் மிக வாராநின்றது.

குளிர்ச்சிதோன்ற 'மயங்கிவருமாலை' என்னுஞ்செம்பொருள இக் குறிப்புணர நின்றது. துனி - உயிர்வாழ்தறகண் வெறுப்பு. அதனுல் யான் ஆற்றுமாறு என்னை என்பது குறிப்பெச்சம். (3)

காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து
ஏதிலர் போல வரும். 1224

இதுவும் அது.

மாலை - காதலர் உள்ளபொழுதெல்லாம் என் உயிர் தளிர்ப்ப வந்தமாலை, காதலர் இல்வழி - அவர் இல்லாத இப்பொழுது,



கொலைக்களத்து ஏதிலர்போலவரும் - அஃது ஒழிந்துசிற்றலேஅன்றிக்கொல்லுங்களரியில் கொலைஞர் வருமாறுபோல அவ் உயிரைக் கோடற்கு வாராகின்றது.

ஏதிலர்-அருளயாதுமில்லார். முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ் செய்து வந்த பொழுதும் இன்று என்மேற்பகையாய்த் துன்பஞ்செய்து வாராகின்றது. இனி யான் ஆற்றுமாறு என்னை என்பதாம். (4)

காலைக்குச் செய்த நன்றுஎன்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை. 1225

இதுவும் அது.

(காலையும், மாலையும், அவர் கூடிய ஞான்றுபோலாது இஞ்ஞான்று வேறுபட்டு வாராகின்றன; அவற்றுள்,) யான் காலைக்குச் செய்த நன்று என் - யான் காலைக்குச் செய்த உபகாரம் யாது? மாலைக்குச் செய்த பகை எவன் - மாலைக்குச் செய்த அபகாரம் யாது?

கூடியஞான்று பிரிவர் என்று அஞ்சப்பண்ணிய காலை அஃது ஒழிந்து இஞ்ஞான்று கங்குலவெள்ளத்திறுக் கரையாய் வாராகின்றது என்னும் கருத்தால 'நன்றுஎன்கொல' என்றும், கூடியஞான்று இன்பம் செய்துவந்த மாலை அஃது ஒழிந்து இஞ்ஞான்றும் அளவில துன்பஞ்செய்யாகின்றதுஎன்னும்கருத்தால் 'பகை எவன் கொல்' என்றும் கூறினள். பகை-ஆகுபெயர். தன்னோடு ஒத்த காலைபோலாது மாலை தன் கொடுமையால துன்பம் செய்யாகின்றது என்பதாம். (5)

மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்தது இலேன். 1226

இன்று இன்னையாகின்ற நீ அன்று அவர்பிரிவிற்கு உடம்பட்டது என்னை என்றாட்குச் சொல்லியது.

மாலை நோய் செய்தல் - முன்னெல்லாம் எனக்கு நட்பாய் இன்பஞ்செய்து போந்த மாலை இன்று பகையாய்த் துன்பஞ் செய்தலை, மணந்தார் அகலாத காலை அறிந்தது இலேன் - காதலர் பிரிதற்குமுன்னே அறியப்பெற்றிலேன்.

இவ்வாறு வேறுபடுதலை அறிந்திலேன்; அறிந்தேனாயின் அவர் பிரிவிற்கு உடம்படேன் என்பதாம். (6)

காலை அரும்பிப் பகல்எல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய். 1227

மாலைப் பொழுதின்கண் இனையையாதற்குக்காரணம் என்னை என்றாட்குச் சொல்லியது



இந்நோய் - இக் காமநோயாகிய பூ, காலை அரும்பி - காலைப் பொழுதின்கண் அரும்பி, பகல் எல்லாம் போது ஆகி - பகற் பொழுதெல்லாம் பேர் அரும்பாய் முதிர்ந்து, மாலைமலரும்-மாலைப் பொழுதின்கண் மலராநிற்கும்.

துயிலெழுந்தபொழுதாகலின் கனவின்கண் கூட்டம்நினைந்து ஆற்றுதல் பற்றி, 'காலை அரும்பி' என்றும், பின் பொழுதுசெலச் செல அதுமறந்து பிரிவுள்ளி ஆற்றாளாதல்பற்றி 'பகலெல்லாம் போதாகி' என்றும, தந்தம்துணையை உள்ளி வந்து சேரும் விலங்குகளையும்மக்களையும் கண்டு தான் அக்காலத்தின் நுகர்ந்த இன்பம் நினைந்து ஆற்றாமைமிகுதிபற்றி 'மாலை மலரும்' என்றும் கூறினாள். பூப்போல இந் நோய் காலவயத்ததாகாநின்றது என்பது உருவகத்தால் பெறப்பட்டது ஏகதேச உருவகம். (7)

அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை. 1228

இதுவும் அது.

*ஆயன் குழல் - முன்னெல்லாம் இனிதாய்ப்போந்த ஆயன் குழல், அழல்போலும் மாலைக்குத் தூதாகி - இதுபொழுது அழல் போலச் சுடுவதாய மாலைக்குத் தூதுமாய், கொல்லும் படை - அது வந்து என்னைக்கொல்வுழிக் கொலலும் படையும் ஆயிற்று.*

*பின்னின்ற 'போலும்' என்பது உரையசை. முன்னரே வர வுணர்த்தலின் தூதாயிற்று; கோறற் கருவியாகலின் படையா யிற்று. தானே சுடவல்ல மாலை இத்துணையும் பெறுருல் என்செய் யாது என்பதாம்.* (8)

பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து. 1229

*இதுவும் அது.*

*'இதற்கு முன்னெல்லாம் யானே மயங்கி நோயுழக்தேன்' மதி மருண்டு மாலை படர்தரும் போழுது - இனிக் கண்டாரும் மதிமரு ளும்வகை மாலை வரும்பொழுது, பதி மருண்டு பைதல உழக்கும் - இப் பகுதியெல்லாம மயங்கி நோயுழக்கும்.*

*மதி மருள என்பது மதி மருண்டு எனத் திரிந்து நின்றது. கூற்றமாகக் கருதிக் கூறிஞளாகலின் 'மாலைபடர்தரும் போழ்து' என்ருள். யான் இறந்து படுவல் என்பதாம். மாலை மயங்கிவரும் போழுது என் மதி நிலைகலங்கி நோயும் உழக்கும் என்று உரைப் பாரும உளர்.* (9)

பொருண்மாலை யாளரை உள்ளி மருள்மாலை
மாயும்என் மாயா உயிர். 1230

*இதுவும் அது.*



*மாயா என் உயிர் - காதலர் பிரிவைப் பொறுத்து இறந்துபடாதிருந்த என் உயிர், பொருண்மாலையாளரை உள்ளி மருள்மாலை மாயும் - இன்று பொருளியல்பே தமக்கியல்பாக உடையவரை நினைந்து, இம்மயங்கும் மாலைக்கண்ணே இறந்துபடா நின்றது.*

*குறித்தபருவம் கழியவும் பொருள் முடிவு நோக்கி வாராமை யின் சொல்வேறு படாமையாகிய தம்மியல்பு ஒழிந்தவர் அப் பொருளியல்பேதம் இயல்பாயினர்; காலம் இதுவாயிற்று, இனி நீ சொலலுகின்றவாற்ருல் பயனில்லை என்பதாம்.* (10)

# 124. உறுப்பு நலன் அழிதல்

அஃதாவது தலைமகளை தன் கண்ணும், தோளும், நுதலும் முதலாய அவயவங்கள் தம் அழகு அழிதல். இஃது, இரக்கம் மிக்குழி நிகழ்வதாகலின், பொழுதுகண்டு இரங்கலின் பின் வைக்கப்பட்டது.

சிறுமை நமக்கொழியச் சேண்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண். 1231

ஆற்றாமை மிகுதியான் வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

சிறுமை நமக்கு ஒழியச் சேண்சென்றார் உள்ளி-இவ் ஆற்றாமை நம்கண்ணே நிற்பத் தாம் சேணிடைச்சென்ற காதலரை நீ நினைந்து அழுதலால், கண் நறுமலர் நாணின - நின் கண்கள் ஒளியிழந்து முன் தமக்கு நாணிய நறுமலர்கட்கு இன்று தாம் நாணிவிட்டன. நமக்கு என்பது வேற்றுமை மயக்கம். 'உள்ள' என்பது

'உள்ளி' எனத் திரிந்து நின்றது. உள்ளுதல் என்பது காரணப் பெயர் காரியத்திற்காய ஆகுபெயர். இவை கண்டார் அவரைக் கொடுமை கூறுவர், நீ ஆற்றல் வேண்டும் என்பது கருத்து. (1)

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண். 1232

இதுவும் அது.

பசந்து பனிவாரும் கண்-பசப்பெய்தன்மேல் நீர் வார்கின்ற கண்கள், நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும் - நம்மால் நயக்கப்பட்டவரது நல்காமையைப் பிறர்க்குச் சொல்லுவபோலாநின்றன, இனி நீ ஆற்றல் வேண்டும்.

சொல்லுவபோறல் அதனை அவர் உணருதற்கு அனுமானமாதல். 'நயந்தவர்க்கு' என்று பாடம் ஓதுவாரும் உளர். (2)

தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள். 1233

14

இதுவும் அது.

மணந்த நாள் வீங்கியதோள் - காதலர் மணந்தஞான்று இன்பமிகுதியால் பூரித்த நின் தோள்கள, தணந்தமை சால அறிவிப்பபோலும் - இன்று அவர் பிரிந்தமையை விளங்க உணர்த்துவதுபோல மெலியாநின்றன, இது தகாது.

அன்றும் அவ்வாறு பூரித்து, இன்றும் இவ்வாறு மெலிந்தால் இரண்டும் கண்டவர் கடிதின் அறிந்து அவரைத் தகவின்மை கூறுவர் என்பதாம். (3)

பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். 1234

இதுவும் அது.

துணை நீங்கித் தொல் கவின் வாடிய தோள - அன்றும் தம் துணைவர் நீங்குதலான் அவரால் பெற்ற செயற்கை அழகே அன்றி, பழைய இயற்கை அழகும் இழந்த இத்தோள்கள், பணை நீங்கிப் பைந்தொடி சோரும்-இன்று அதற்குமேலே தம் பெருமை இழந்து வளை கழலா நின்றன, இவை இங்ஙனம் செயற்பாலவல்ல.

பெருமை இழத்தல் - மெலிதல். பைந்தொடி-பசிய பொன்னால் செய்த தொடி, சோரும் என்னும் வினை தொழில் தோள்மேல் நின்றது. அன்றும் பிரிதரா என்று அவரன்பின்மை உணர்த்தி இன்றும் குறித்த பருவத்து வந்திலா என்று அவர் பொய்மை உணர்த்தா நின்றன, இனி அவற்றைக் கூறுகின்றார் மேல் குறை உண்டோ என்பதாம். (4)

கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். 1235

இதுவும் அது.

கொடியார் கொடுமை உரைக்கும் - கவவுக்கை நெகிழினும் ஆற்றுதாட்கு இக் கால நீட்டதது என்னும் என்று நினையாத கொடியாரது கொடுமையைத் தாமே சொல்லா நின்றன, தொடியொடு தொல கவின் வாடிய தோள - வளைகளும் கழன்று பழைய இயற்கை அழகும் இழந்த இத் தோளகள, இனி அதனை யாம் மறைக்குமாறு என்னை?

உரைக்கும் என்பது அப்பொருண்மைதோன்ற நின்ற குறிப்புச்சொல். ஒடு - வேறு வினைக்கண் வந்தது. அவரொடு கலநத தோளகளே சொல்லுவனவானால அயலார் சொல்லுதல் சொல்ல வேண்டுமோ என்பதாம். (5)

தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்
கொடியர் எனக்கூறல் நொந்து. 1236

தான் ஆற்றுதற் பொருட்டு இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் சொல்லியது.



தொடியொடு தோள் நெகிழ - யான் ஆற்றவும் என்வயத்த வன்றித் தொடிகள கழலுமாறு தோளகள் மெலிய, அவரைக் கொடியர் எனக் கூறல் நொந்து நோவல் - அவற்றைக் கண்டு நீ அவரைக் கொடியர் எனக் கூறுதலைப் பொறுது யான் என்னுளளே நோவாநின்றேன்.

ஒடு - மேலவந்த பொருண்மைத்து. யான் ஆற்றேனுகின்றது அவர் வாராததற்கன்று, நீ கூறுகின்றதற்கு என்பதாம். (6)

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்குஎன்
வாடுதோள் பூசல் உரைத்து. 1237

அவ் இயற்பழிப்புப் பொறுது தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

நெஞ்சே - நெஞ்சே, கொடியார்க்கு என் வாடு தோளபூசல் உரைதது - இவவ கொடியார என்கின்றவர்க்கு நீ சென்று என்

மெலிகின்ற தோளினுலை விளைகின்ற ஆரவாரத்தைச் சொல்லி, பாடு பெறுதியோ - ஒரு மேம்பாடு எய்தவல்லையோ, வல்லையாயின் அதனை ஒப்பதில்லை.

'கொடியார்க்கு' என்பது கொடியரல்லர் என்பது தோன்ற நின்ற குறிப்புச்சொல். 'வாடுதோள்' என்பதும் அவை தாமே வாடாநின்றன என்பது தோன்றநின்றது. பூசல் - ஆகுபெயர். அஃது அவர் தோள் நோக்கி இயற்பழித்தல் மேலும், அதனல் தனக்கு ஆற்றுமை மிகன்மேலும் நின்றது. நின்னுரை கேட்டலும் அவர் வருவர் வந்தால், இவையெல்லாம் நீங்கும், நீங்க, அஃது

எனக்குக் காலத்தினுற்செய்த நன்றியாமாகலின், அதன் பயனெல்லாம் எய்துதி என்னும் கருத்தால் 'பாடுபெறுதியோ' என்றள.(7)

முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல். 1238

வினைமுடித்து மீளலுற்ற தலைமகன் முன் நிகழ்ந்தது நினைந்து தன்னுள்ளே சொல்லியது.

முயங்கிய கைகளை ஊக்க - தன்னை இறுக முயங்கிய கைகளை இவட்கு நோம் என்று கருதி ஒருஞான்று யான் நெகிழ்த்தேனுக, பைந்தொடிப் பேதை நுதல் பசந்தது - அத் துணையும் பொறாது

பைந்தொடிகளை அணிந்த பேதையது நுதல் பசந்தது, அப்பெற்றித்தாய நுதல் இப் பிரிவிற்கு யாது செய்யுமோ?

இனிக் கடிதிற் செல்லவேண்டும் என்பது கருத்து. (8)

முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண். 1239

இதுவும் அது.

*முயக்கிடைத் தண் வளி போழ* - அங்ஙனம் கைகளை ஊக்குதலான் அம் முயக்கிடையே சிறுகாற்று நுழைந்ததாக, *பேதை பெருமழைக்கண் பசப்புற்ற* - அத்துணையிடையீடும் பொறாது, பேதையுடைய பெரிய மழைக்கண்கள் பசப்புற்றன, அத்தன்மையவான கண்கள மலைகளும், காடும், நாடுமாய இவ் இடையீடுகளையெல்லாம் யாங்ஙனம் பொறுததன?

'தண்மை - ஈண்டு மென்மைமேல நின்றது. 'போழ' என்றது உடம்பு இரண்டும ஒன்றுனதுதோன்ற நின்றது. ம கமு-குளிரசசி.()

கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு. 1240

இதுவும் அது.

*கண்ணின் பசப்போ பருவரல எய்தின்று* - தண் வளி போழ வந்த கண்ணின்பசப்புத துன்பமுறறது, *ஒண்ணுதல செய்தது கண்டு* - தனக்கு அயலாக ஒண்ணுதல வினைதத பசப்பைக் கண்டு.

அது கைகளை ஊக்க அவ்வளவில பசநதது, யான் கைகளையும் ஊக்கி மெய்களும் நீங்கிச் சிறுகாறறு ஊடறுக்கும் துணையும் பசந்திலன் எனத் தன் வன்மையும் அவள மென்மையும் கருதி வெளகிற்று என்பதாம். ஆகவே, அவளுறுப்புக்கள ஒன்றினொன்று முற்பட்டு நலன் அழியும், யாம் கடிதிற் சேறும் என்பது கருததாயிற்று. (10)

## 125. நெஞ்சொடு கிளத்தல்

அஃதாவது ஆற்றாமை மிகுதரத தனக்கு ஓர் பற்றுக்கோடு காணாத தலைமகள தன் நெஞசொடு செய்திறன் அறியாது சொல்லுதல. இஃது, உறுப்புக்கள தம் நலனழிநத வழி நிகழ்வதாகலின், உறுப்பு நலன் அழிதலின் பின் வைக்கப்பட்டது.

நினைத்துஒன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து. 1241

தன் ஆற்றாமை தீரும் திறன் நாடியது.

நெஞ்சே - நெஞ்சே, எவ்வநோய் தீர்க்கும் மருந்து ஒன்று - இவ் எவ்வநோயினைத் தீர்க்கும் மருந்தாவதொன்றனை, எனைத்து ஒன்றும் நினைத்துச் சொல்லாய் - யான் அறியுமாறிலேன், எத்தன்மைத்து யாதொன்றாயினும் நீ அறிந்து எனக்குச் சொல்.

எவ்வம் - ஒன்றானும் தீராமை. உயிரினும் சிறந்த நாணினை விட்டுச் செய்வது யாதொன்றாயினும் என்பாள் 'எனைத்தொன்றும்' என்றாள். (1)



காதல் அவர்இல ராகநீ நோவது
பேதைமை வாழிஎன் நெஞ்சு. 1242

தலைமகனைக் காண்டற்கண் வேட்கைமிகுதியால் சொல்லியது.

என் நெஞ்சு வாழி - என் நெஞ்சே, வாழ்வாயாக; அவர் காதல் இலராக நீ நோவது - அவர் நம்கண் காதலிலராகவும் நீ அவர் வரவு நோக்கி வருந்துதற்கு ஏது, பேதைமை - நின் பேதைமையே, பிறிதில்லை.

நம்மை நினையாமையின், நங்கண் காதல் இலர் என்பது அறியலாம், அஃதறியாமை மேலும் அவர்பால் செல்லக் கருதாது அவர் வரவுபார்த்து வருந்தா நின்றாய், இது நீ செய்துகொள்கின்றது என்னும் கருத்தால் 'பேதைமை' என்றாள். வாழி-இகழ்ச்சிக் குறிப்பு. யாம் அவர்பாற் சேறலே அறிவாவது என்பதாம். (2)

இருந்துஉள்ளி என்பரிதல் நெஞ்சே பரிந்துஉள்ளல்
பைதல்நோய் செய்தார்கண் இல். 1243

இதுவும் அது.

நெஞ்சே இருந்து உள்ளிப் பரிதல் என் - நெஞ்சே, அவர்பால் செல்வதும் செய்யாது ஈண்டு இறந்துபடுவதும் செய்யாது இருந்து அவர் வரவு நினைந்து நீ வருந்துகின்றது என்னை, பைதல் நோய் செய்தார்கண் பரிந்து உள்ளல் இல் - இப் பையுள் நோய் செய்தார்மாட்டு நமக்கு இரங்கி வரக் கருதுதல் உண்டாகாது.

நம்மாட்டு அருளுடையார் அன்மையின் தாமாக வாரார், நாம் சேறலே இனித் தகுவது என்பதாம். (3)

கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவைஎன்னைத்
தின்னும் அவர்க்காணல் உற்று. 1244

இதுவும் அது.

நெஞ்சே கண்ணும் கொளச் சேறி - நெஞ்சே, நீ அவர்பாற் சேறலுறுவாயின் இக் கண்களையும் உடன்கொண்டு செல்வாயாக, இவை அவர்க் காணல் உற்று என்னைத் தின்னும் - அன்றி நீயே சேறியாயின், இவைதாம் காட்சி விருப்பினால் அவரைக் காண்டல்வேண்டி நீ காட்டு என்று என்னைத் தின்பனபோன்று நலியாநிற்கும்.

கொள என்பது கொள்ள எனத் திரிந்து நின்றது. தின்னும் என்பது இலக்கணைக் குறிப்பு. அந்நலிவு பொறுக்கவேண்டும் என்பதாம் என்றது, தான் சேறல் குறித்து. (4)

செற்ருர் எனக்கை விடல்உண்டோ நெஞ்சேயாம்
உற்ருல் உருஅ தவர். 1245

இதுவும் அது.



நெஞ்சே - நெஞ்சே, யாம் உற்ருல் உருதவர் - யாம் தம்மை யுறத் தாம் உருத நம் காதலரை, செற்ருரெனக் கைவிடல் உண்டோ - வெறுத்தார் என்று கருதிப் புலந்து கைவிட்டிருக்கும் வலி நமக்குண்டோ, இல்லை.

உறுதல் - அன்பு படுதல். அவ் வலியின்மையின் அவர்பால் செல்வதே நமக்குத் தகுவது என்பதாம். (5)

கலந்துஉணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்துஉணராய்
பொய்க்காய்வு காய்திஎன் நெஞ்சு. 1246

தலைமகன் கொடுமை நினைந்து செலவு உடன்படாத நெஞ்சினைக் கழறியது.

என் நெஞ்சு - என் நெஞ்சே, கலந்து உணர்த்தும் காதலர்க் கண்டால் புலந்து உணராய்-யான் தம்மொடு புலந்தால் அப்புலவியைக் கலவிதன்னுனே நீக்க வல்ல காதலரைக் கண்டால் பொய்யே யாயினும் ஒருகால் புலந்து பின்னதனை நீங்க மாட்டாய், பொய்க் காய்வு காய்தி-அதுவும் மாட்டாத நீ இப்பொழுது அவர் கொடியர் எனப் பொய்க் காய்வு காயாநின்றாய், இனி இதனை ஒழிந்து அவர்பாற் செல்லத் துணிவாயாக.

கலத்தலான் என்னும் பொருட்டாய கலக்க என்பது திரிந்து நின்றது. அதனான் உணர்த்தலாவது கலவியின்பத்தைக் காட்டி, அதனான் மயக்கிப் புலவிக் குறிப்பினை ஒழித்தல். பொய்க்காய்வு-இல்லையில் வெறுப்பு. கண்டால் மாட்டாத நீ காணாதவழி வெறுக்கின்றதனால் பயனில்லை என்பதாம். (6)

காமம் விடுஒன்றோ நாண்விடு நல்நெஞ்சே
யானோ பொறேன்இவ் இரண்டு. 1247

நாண் தடுத்தலின் அச் செலவு ஒழிவாள் சொல்லியது.

நல் நெஞ்சே - நல்ல நெஞ்சே, ஒன்று காமம் விடு - ஒன்றின் நாண் விடமாட்டாயாயின் காமவேட்கையை விடு, (ஒன்று) நாண் விடு - ஒன்றின் அது விடமாட்டாயாயின் நாணினை விடு, இவ் இரண்டு யானோ பொறேன்-அன்றியே இரண்டும் விடாமை நின் கருத்தாயின், ஒன்றற்கொன்று மறுதலையாய இவ் இரண்டனையும் உடன் தாங்கும் மதுகை யான் இலன்.

யானோ என்னும் பிரிநிலை நீ பொறுப்பினும் என்பதுபட நின்றது. 'நல்நெஞ்சே' என்றது, இரண்டையும் விடாது பெண்மையை நிலைபெறுத்தலின், நலமிலை என்னும் குறிப்பிற்று. அது கன்றே என்னும் ஒன்று உயிருண்டாதல் சாலாமையின், அதற்கு ஆகின்றிலேன் என்பதாம். முற்று உம்மை விகாரத்தால் தொக்கது.

பரிந்தவர் நல்கார்என்று ஏங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதைஎன் நெஞ்சு. 1248



இதுவும் அது.

என் நெஞ்சு - என் நெஞ்சே, அவர் பிரிந்து நல்கார் என்று- அவர் இவ்வாற்றுமையை அறியாமையின் கொண்டுவந்து தலையளி செய்யாராயினர் என்று கருதி, பிரிந்தவர்பின் ஏங்கிச் செல்வாய் பேதை-அறிவித்தற்பொருட்டு நம்மைப் பிரிந்துபோயவர்பின் ஏங்கிச்செலலுறற நீ யாதும அறியாய்.

ஆற்றுமை கண்டு வைததும நல்காது போயினரைக்காண வழிச் சென்று அறிவிதத துணையானே நல்கவருவா என்று கருதினமையின் 'பேதை' என்றான். (8)

**உள்ளத்தார் காத லவர்ஆக உள்ளிநீ**
**யாருழைச் சேறிஎன் நெஞ்சு. 1249**

இதுவும அது.

என் நெஞ்சு—என் நெஞ்சே, காதலவா உள்ளத்தாராக—காதலர் நின்னகததாராக, நீ உள்ளி யாருழைச சேறி—முன்பெலலாம் கண்டுவைதது இப்பொழுது நீ புறத்துத தேடிச செல்கின்றது யாரிடத்து?

உள்ளம் என்புழி அம பகுதிப்பொருள்விகுதி. நின்னகத் திருக்கின்றவரை அஃது அறியாது புறததுததேடிச்சேறல் நகை உடைத்து, அதனை ஒழி என்பதாம். (9)

**துன்னுத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா**
**இன்னும் இழத்தும் கவின். 1250**

அவரை மறநது ஆறறல வேண்டும என்பதுபடச் சொல்லியது.

துன்னாத் துறநதாரை நெஞசத்து உடையேமா—நம்மைக் கூடாவண்ணம துறநதுபோயினரை நாம் அகதது உடையேமாக, இன்னும் கவின் இழததும-முன் இழந்த புறக் கவினேயன்றி நின்ற அகக் கவினும இழபபேம்.

"குன்றின்—நெஞசுபக எறிந்த அஞ்சுடா நெடுவேல்" (குறுந். கடவுள வாழ்த்து) என்புழிப்போல நெஞசு என்பது ஈண்டும அகப் பொருட்டாய் நின்றது. அவா நம்மைமதுன்னுமல துறநதார் ஆகவும், நாம அவரை மறததல மாடடேமாகவும், போன மெய்க்கவினே அன்றி நின்ற நிறையும் இழப்பேம் என்பதாம். (10)

## 126. நிறை அழிதல்

அஃதாவது தலைமகள் மனத்து அடக்கற்பாலன வற்றை வேட்கைமிகுதியான் அடக்கமாட்டாது வாய்விடுதல்· "நிறையெனப்படுவது மறைபிறர் அறியாமை" (கலித். நெய் தல். 16) என்றார் பிறரும். அஃது அழிதற்காரணம் நெஞ் சொடுகிளத்தலமையின், இது நெஞ்சொடு கிளத்தலின் பின் வைக்கப்பட்டது.



**காமக் கணிச்சி உடைக்கும் நிறைஎன்னும்**
**நாணுத்தாழ் வீழ்த்த கதவு.** 1251

நாணும் நிறையும் அழியாமை நீ ஆற்றல்வேண்டும் என்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

நாணுத் தாழ் வீழ்த்த நிறை என்னும் கதவு-நாணாகிய தாழ் இனைக் கோத்த நிறை என்னும் கதவினை, காமக் கணிச்சி உடைக் கும்-காமவேட்கையாகிய கணிச்சி முறியாநின்றது, இனி அவை நிற்றலும் இல்லை, யான் ஆற்றலும் இல்லை.

கணிச்சி-குந்தாலி. நாணுள்ள துணையும் நிறையழியாதாக லின் அதனைத் தாழாக்கியும், அகத்து நிகழ்ந்தன பிறர்கொள்ளா மற் காத்தலின் நிறையைக் கதவாக்கியும், வலியவாய்த் தாமாக நீங்காத அவ்விரண்டனையும் ஒருங்கு நீக்கலின் தன் காமவேட்கை யைக் கணிச்சியாக்கியும் கூறினாள். (1)

**காமம் எனஒன்றோ கண்ணின்றுஎன் நெஞ்சத்தை**
**யாமத்தும் ஆளும் தொழில்.** 1252

நெஞ்சின்கண் தோன்றிய காமம் நெஞ்சால் அடக்கப்படும் என்றாட்குச் சொல்லியது.

யாமத்தும் என் நெஞ்சத்தைத் தொழில் ஆளும்—எல்லாரும் தொழிலொழியும் இடையாமத்தும், என் நெஞ்சத்தை ஒறுத்துத் தொழில்கொள்ளா நின்றது, காமம் என ஒன்று கண் இன்று—ஆகலாற் காமம் என்று சொல்லப்பட்ட ஒன்று கண்ணோட்டம் இன்றாயிருந்தது.

ஓ என்பது இரக்கக்குறிப்பு. தொழிலின்கண்ணே யாடல்—தலைமகன்பாற் செலவிடுத்தல். தாயப்பணிகோடல் உலகியலன்மையின் 'காமம் என ஒன்று' என்றும், அது தன்னைக்கொள்கின்றது அளவறியாது கோடலின் 'கண்ணின்று' என்றும் கூறினாள். அடக்கப்படாமை கூறியவாறு. (2)

**மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்புஇன்றித்**
**தும்மல்போல் தோன்றி விடும். 1253**

மகளிர்காமம் மறைக்கப்படும் என்றாட்குச் சொல்லியது.

காமத்தை யான் மறைப்பேன்—இக் காமத்தை யான் என்னுள்ளே மறைக்கக் கருதுவேன், குறிப்பு இன்றித் தும்மல்போல் தோன்றி விடும்—அதனை, இஃது என் கருத்தின் வாராது தும்மல் போல வெளிப்பட்டேவிடா நின்றது.

மன்—ஒழியிசைக்கண் வந்து. ஓகாரம்—இரக்கத்தின்கண் வந்தது. தும்மல் அடங்காதாற்போல அடங்குகின்றதில்லை என்பதாம். (3)

**நிறையுடையேன் என்பேன்மன் யானோஎன் காமம்**
**மறைஇறந்து மன்று படும். 1254**



இதுவும் அது.

யான் நிறையுடையேன் என்பேன்—இன்றினாக்கெல்லாம் யான் என்னை நிறையுடையேன் என்று கருதியிருந்தேன்; என் காமம் மறை இறந்து மன்று படும்—அதனால் என்? இன்று என் காமம் மறைத்தலைக்கடந்து மன்றின்கண் வெளிப்படாநின்றது.

மன்னும் ஓவும்—மேலவற்றின்கண் வந்தன. மன்றுபடுதல்—பலரும் அறிதல். இனி தன்வயத்தது அன்று என்பதாம். (4)

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றார் அறிவதொன்று அன்று. 1255

நம்மை மறந்தாரைத் தாமும் மறக்கற்பாலை என்றாட்குச் சொல்லியது.

*செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை*-தம்மை அகன்று சென்றார் பின் செல்லாது தாமும் அகன்று நிற்கும் நிறையுடைமை *காமநோய் உற்றார் அறிவது ஒன்று அன்று*-காமநோயினை உறாதார் அறிவதொன்று அல்லது உற்றார் அறிவதொன்று அன்று.

இன்பப்பகுதியொரு சிறிதும் எய்தாமல் துன்பத்தொடு கழியுமாறு செய்தலின் 'செற்றார்' என்றாள். பின்சேறல்-மனத்தால் இடைவிடாது நினைத்தல். பெருந்தகைமை-ஈண்டு ஆகுபெயர். காமநோய் உற்றார்-காமமுடையார். அஃது ஏனை உணராமாட்டும் சென்றே நிற்கும், யான் அறிவதொன்று அன்று என்பதாம். (5)

செற்றவர் பின்சேறல் வேண்டி அளித்தரோ
எற்றுஎன்னை உற்ற துயர். 1256

இதுவும் அது.

*செற்றவர் பின் சேறல் வேண்டி*-என்னை அகன்று சென்றார் பின்னே யான் சேறலை வேண்டுதலான், *என்னை உற்ற துயர் எற்று அளித்து*-என்னை உற்ற துயர் எத்தன்மையது? சால நன்று.

செற்றவர் என்றது ஈண்டும் அப்பொருட்டு. வேண்ட என்பது வேண்டி எனத் திரிந்து நின்றது. அளித்து என்பது இகழ்ச்சிக் குறிப்பு. இக் காமநோய் யான் சொல்லவும் கேட்கவும் ஆவதொன்றன்று, சாலக் கொடிது என்பதாம். (6)

நாண்என ஒன்றோ அறியலம் காமத்தால்
பேணியார் பெட்ப செயின். 1257

பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனோடு நிறையழிவாற் கூடிய தலைமகள் நீ புலவாமைக்குக் காரணம் யாது என்ற தோழிக்குச் சொல்லியது.

*பேணியார் காமத்தால் பெட்ப செயின்*-நம்மால் விரும்பப் பட்டவர் வந்து காமத்தால் நாம் விரும்பியவற்றைச் செய்யுமன

யில், நாண் என ஒன்றோ அறியலம்-நாண் என்றொன்றையும் அறியமாட்டேமாயிருந்தேம்.

பேணியார் எனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது. விரும்பியன-வேட்கை மிகவினாற் கருதியிருந்த கலவிகளை. நாண்-பரத்தையர் தோய்ந்த மார்பைத் தோய்தற்கு நாணுதல். ஒன்று என்பது ஈண்டுச் சிறிது என்னும் பொருட்டு. இழிவு சிறப்பு உம்மை விகாரத்தால் தொக்கது. நிறையழிவான் அறியாது கூடிய தன் குற்றம் நோக்கி, அவனையும் உளப்படுத்தாள். (7)

பல்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
பெண்மை உடைக்கும் படை. 1258

இதுவும் அது.

நம் பெண்மை உடைக்கும் படை-நம் நிறையாகிய அரணை அழிக்கும் தார், பல மாயக் கள்வன் பணிமொழியன்றோ-பல பொய்களை வல்ல கள்வனுடைய தாழ்ந்த சொற்களன்றோ? ஆனபின் அது நிற்குமாறென்னை?

பெண்மை ஈண்டுத் தலைமைபற்றி நிறைமேல் நின்றது. வந்தால் புலக்கக் கடவேம் என்றும், புக்கால் அவன் சொற்களானும் செயல்களானும் நெகேம் என்றும், இவை முதலாக எண்ணிக்கொண்டிருந்தன யாவும் காணாது கலவிக்கண் தன்வினும் முற்படும் வகை வந்து தோன்றினமையான், 'பலமாயக்கள்வன்' என்றாள். பணிமொழி-தம்மினும் தான் அன்புமிகுதியுடையனாகச் சொல்லுஞ் சொற்கள். அவன் அத்தன்மையனாக, சொற்கள் அவையாக, நம் நிறையழியாது ஒழியுமோ என்பதாம். (8)

புலப்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்தல் உறுவது கண்டு. 1259

இதுவும் அது.

புலப்பல ...ச் சென்றேன் - அவர் வந்தபொழுது புலக்கக் கடவேன் என்று கருதி முன் நில்லாது பிறிதோரிடத்துப்போயி னேன்; நெஞ்சம் கலத்தலுறுவது கண்டு புல்லினேன் - போயும், என் நெஞ்சம் நிறையின் நில்லாது அறைபோய் அவரோடு கலத் தல் தொடங்குதலை அறிந்து, இனி அது வாயாது என்று புல்லி னேன்.

வாயாமை - புலத்தற்கருவியாய நெஞ்சுதானே கலத்தற்கருவி யாய் நிற்றலின் அது முடியாமை. (9)

நிணந்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்துஊடி நிற்பேம் எனல். 1260

இதுவும் அது.



நிணம் தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு - நிணத்தைத் தீயின் கண்ணே யிட்டால் அஃது உருகுமாறுபோலத் தம் காதலரைக் கண்டால் நிறையழிந்துருகும் நெஞ்சினையுடைய மகளிர்க்கு, புணர்ந்து ஊடி நிற்பேம் எனல் உண்டோ - அவர் புணர யாம் ஊடிப் பின்பு உணராது அகன்றே நிற்கக் கடவேம் என்று கருதுதல் உண்டாகுமோ? ஆகாது.

புணர்தல் - பண்டு மிக நணுகுதல். எதிர்ப்பாடுதலுமாம். புணர என்பது புணர்ந்து எனத் திரிந்து நின்றது. யான் அத் தன்மையேன் ஆகலின் எனக்கு அஃது இல்லையாயிற்று என்ப தாம். (10)

## 127. அவர்வயின் விதும்பல்

அஃதாவது சேய்மைக்கட் பிரிவின்கண் தலைமகனும் தலை மகளும் வேட்கை மிகுதியான் ஒருவரையொருவர் காண்டற்கு விரைதல். தலைமகன் பிரிவும் தலைமகள் ஆற்றாமையும் அதி காரப்பட்டுவருகின்றமையின், இருவரையும் கூட்டிப் பொது வாகிய பன்மைப் பாலாற் கூறினார். பிறரெல்லாம் இதனை 'தலைமகனை நினைந்து தலைமகள் விதுப்புறல்' என்று சுட்டிப் பெயர் சொல்லுவான் கூறிப் பொருள் உணராது வழக்கல்லது தான் ஒன்றற்குப் பெயராகாமையா னும், கலிக்கூற்றை அதிகாரத்துத் தலைமகற்கு உரைத்தற் பன் மையாற் கூறப்படாமையானும், அஃது உரையன்மை

அறிக. இதனான் தலைமகள் கூற்று நிறைப்பழியாமை நிகழ்ந்ததாகலின், அவ் இயைபுபற்றி நிறை அழிதலின் பின் வைக்கப்பட்டது.

வாள்அற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாள்ஒற்றித் தேய்ந்த விரல். 1261

தலைமகள் காண்டல் விருப்பினால் சொல்லியது.

அவர் சென்ற நாள் ஒற்றி விரல் தேய்ந்த - அவர் நம்மைப் பிரிந்துபோய நாள்களை சுவரின்கண் இழைத்தவற்றைத் தொட்டு எண்ணுதலான் என் விரல்கள் தேய்ந்தன, கண்ணும் வாள் அற்றுப் புற்கென்ற - அதுவேயன்றி அவர்வரும் வழிபார்த்து என்கண்களும் ஒளியிழந்து புல்லியவாயின, இவ்வாறாயும் அவர் வரவு உண்டாயிற்றில்லை.

நாள் - ஆகுபெயர். புல்லியவாதல் - நுண்ணிய காணமாட்டாமை. ஒற்ற என்பது ஒற்றி எனத் திரிந்துநின்றது. இனி யான் காணுமாறு என்னை என்பதாம். நாள் எண்ணலும் வழிபார்த்தலும் ஒருகாற் செய்தொழியாது இடையின்றிச்செய்தலான், விதுப்பாயிற்று. (1)

இலங்கிழாய் இன்று மறப்பின்என் தோள்மேல்
கலங்கழியும் காரிகை நீத்து. 1262



ஆற்றாமைமிகுதலின் இடையின்றி நினைக்கற்பாலையல்லை; சிறிது மறக்கல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.

இலங்கு இழாய் - விளங்காநின்ற இழையினையுடையாய், இன்று மறப்பின் - காதலரை இன்று யான் மறப்பேனாயின், மேல் காரிகை நீத்து என்தோள் கலங்கழியும் - மேலும் காரிகை என்னை நீப்ப என்தோள்கள் வளை கழலவனவாம்.

இலங்கிழாய் என்பது இதற்கு நீ யாதும் பரியலை என்னும் குறிப்பிற்று. இன்று - யான் இறந்துபடுகின்ற இன்று. மேலும் - மறுபிறப்பினும். எச்சஉம்மை விகாரத்தாலதொக்கது. நீப்ப என்பது நீத்து எனத் திரிந்து நின்றது. கழிதல் என்னும் இடத்துநிகழ் பொருளின்தொழில் இடத்தின்மேல நின்றது. இவ் எல்லைக்கண் நினைத்தால மறுமைக்கண் அவரை எய்தி இன்புற

லாம், அதனுன் மறக்கற்பாலேனல்லேன் என்பதாம். (2)

உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்ருர்
வரல்நசைஇ இன்னும் உளேன். 1263

இதுவும் அது.

உரன் நசைஇ உள்ளம் துணையாகச் சென்ருர் - இன்பம் நுகர்தலை நச்சாது வேறலை நச்சி நாம் துணையாதலை இகழ்ந்து தம் ஊக்கம்துணையாகப் போயினா, வரல நசைஇ இன்னும் உளேன் - அவற்றை இகழாது மீண்டுவருதலை நச்சுதலான, யான் இவ் எல்லையினும் உளேனுயினேன்.

உரன் என்பது ஆகுபெயர். அந் நசையால் உயிர்வாழா நின்றேன்; அஃதிலலையாயின் இறந்துபடுவல் என்பதாம். (3)

கூடிய காமம் பிரிந்தார் வரவுஉள்ளிக்
கோடுகொடு ஏறும்என் நெஞ்சு. 1264

இதுவும் அது.

பிரிந்தார் கூடிய காமம் வரவு உள்ளி - நீங்கிய காமத்தராய் நம்மைப் பிரிந்துபோயவர் மேற்கூடிய காமத்துடனே நம்கண் வருதலை நினைந்து, என் நெஞ்சு கோடுகொடு ஏறும் - என் நெஞ்சு வருத்தமொழிந்து மேன்மேற் பணைத்தெழாநின்றது.

வினைவயிற்பிரிவுழிக் காம இன்பம் நோக்காமையும், அது முடிந்துழி அதுவே நோக்கலும் தலைமகற்கு இயல்பாகலின், 'கூடியகாமமொடு' என்றுள். ஒடு உருபு விகாரத்தால் தொக்கது. கோடுகொண்டேறலாகிய மரத்ததுதொழில் நெஞ்சின்மேல் ஏற்றப்பட்டது. கொண்டு என்பது குறைந்துநின்றது. அஃதுளனிற்றிலேனுயின் இறந்துபடுவல என்பதாம். (4)

காண்கமன் கொண்கனைக் கண்ணுரக் கண்டபின்
நீங்கும்என் மென்தோள் பசப்பு. 1265

தலைமகன் வரவுகூறி ஆற்றுயாய்ப் பசக்கற்பாலை யல்லை என்ற தோழிக்குச் சொல்லியது.

கண் ஆரக் கொண்கனைக் காண்க - என் கண்கள ஆரும் வகை என்கொண்கனை யான் காணபெறுக, கண்டபின் என் மென்தோளபசப்பு நீங்கும் - அங்ஙனம் கண்டபின் என் மெல்லிய தோளின்கண் பசப்புத தானே நீங்கும்.

காண்க என்பது ாண்டு வேணடிக்கோடற்பொருட்டு. அது வேண்டும் என்பது பட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வநதது. கேட்ட துணையான் நீயாது எனபதாம். (5)

வருகமன் கொண்கன் ஒருநாள் பருகுவன்
பைதல்நோய் எல்லாம் கெட. 1266

இதுவும் அது.

கொணகன் ஒருநாள வருக - இதுதுணையாகாவருமை வாராக் கொண்கன் ஒரு நாள எனகண வருவானாக, பைதல நோயெல் லாம் கெடப் பருகுவன் - வந்தால் பையுளைசெய்கின்ற இந் நோயெலலாங்கெட அவ் அமிழ்தமாநத வாயிலகள ஐந்தானும் பருகக் கடவேன்.

வருக என்பதறகும் மன் என்பதறகும மேல் உரைத்த வாறே கொளக. அக் குறிப்பு அவ ஒருநாளைக்குளளே இனி வரக் கடவ நோயகளும் கெடுப்பல எனபதாம. (6)

புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின். 1267

இதுவும் அது.

கண் அன்ன கேளிா வரின் - கண்போற்சிறநத கேளிர் வரு வராயின, புலப்பேன்கொல - அவா வரவு நீட்டிததமை நோக்கி யான புலக்கக்கடவேனோ, புல்லுவேனகொல - அன்றி என் ஆற் றுமை நோக்கிப் புல்லக்கடவேனோ? கலப்பேன்கொல - அவ் இரணடும வேணடுதலான் அய இருசெயலகளையும் விரவக்கட வேனோ? யாதுசெயயக்கடவேன?

புலவியும் புல்லலும் ஒருபொழுதின்கண் விரவாமையின், 'கலப்பேன்கொல்' என்றாள். மூன்றனையுஞ் செய்தல் கருத்தாகலின், விதுப்பாயிற்று. இனிக் கலப்பேன்கொல் என்பதற்கு, 'ஒரு புதுமை செய்யாது பிரியாத நாட்போலக் கலந்தொழுகுவேனோ'' என்று உரைப்பாரும் உளர். (7)

**வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து**
**மாலை அயர்கம் விருந்து.** 1268

*வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன் வினைமுடிவு நீட்டித்தவழித் தலைமகளை நினைந்து தன்னுள்ளே சொல்லியது.*



*வேந்தன் வினை கலந்து வென்றீக - வேந்தன் வினைசெய் தலைப்புரிந்து வெல்வானாக; மனைகலந்து மாலை விருந்து அயர்கம் - யாமும் மனைவியைச் சென்றுகூடி ஆண்டை மாலைப்பொழுதிற்கு விருந்து அயர்வேமாக.*

*மனை என்பது ஈண்டு ஆகுபெயர், "மங்கலம் என்ப மனை மாட்சி" (குறள் 60) என்புழிப்போல. வினைசெய்தற்கண்வந்த மாலைப்பொழுதிற்கு எதிர்கோடல் அலங்கரித்தல் முதலிய இன்மையின், மனைகலந்து 'மாலைக்கு விருந்தயர்கம்' என்றான். நான்கன் உருபு விகாரத்தால் தொக்கது. இது வினைமுடியாமுன் கூறலான் விதுப்பாயிற்று. பிறரெல்லாம் இதனைத் தலைமகள் கூற்றாக்கி உரைத்தார். தலைமகனைக்கூறாது வேந்தன் வெல்க என்றும், மனைகலந்து என்றும், மாலைப்பொழுதின்கண் விருந்தயர்கம என்றும் வந்த அவ் உரைதானே அது கூடாமைக்குக் கரியாயிற்று ()*

**ஒருநாள் எழுநாள்போற் செல்லும்சேண் சென்றார்**
**வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு.** 1269

*இதுவும் அது.*

சேண்சென்றூர் வருநாள வைதது ஏங்குபவர்க்கு - சேணி டைச்சென்ற தம் காதலர் மீண்டுவரக் குறிதத நாளை உட்கொண்டு அது வரும்துணையும உயிர்தாஙகி வருநதும் மகளிர்க்கு, ஒருநாள எழுநாளபோல் செலலும் - ஒருநாள பலநாளபோல நெடிதாகக் காட்டும்.

எழ் என்பது அதற்கு மேலாய மிக்க பன்மை குறிதது நின் றது. "ஒருவர்கூறை எழுவா உடுதது" என்றுற்போல. தலை

மகள் வருத்தம் பிறர்மேலிட்டுக் கூறியவாறு. இதனான் இதுவும் தலைமகள கூற்றுகாமையறிக. இருநாள என்று பாடம ஓதுவாரும் உளர். (9)

**பெறின்என்னும் பெற்றக்கால் என்னும் உறின்என்னும்**
**உள்ளம் உடைந்துஉக்கக் கால். 1270**

இதுவும் அது.

உள்ளம் உடைந்து உக்கக்கால் - காதலி நம்பிரிவினைபாற் றது உள்ளம் உடைந்து இறந்துபட்டவழி, பெறின் என் - நம்மைப் பெறக்கடவளானல் என்? பெற்றக்கால் என் - அதுவன்றியே பெற்றல் என், உறின் என் - அதுவன்றியே மெய்யுறக் கலந்தால் தான் என், இவையொன்றுனும் பயன் இல்லை.

* இம் மூன்றும் உடம்பொடுபுணர்த்துக் கூறப்பட்டன: அதன் மேலும் முன்னை வழக்குண்மையின். அதற்குமுன்னே யான் செல்லவேண்டும் என்பது கருத்தாகலின், விதுப்பாயிற்று. இது தலைமகள்கூற்றுயவழி இரங்கலாவதல்லது விதுப்பாகாமை அறிக.



## 128. குறிப்பு அறிவுறுத்தல்.

அஃதாவது தலைமகன், தலைமகள், தோழி என்றிவர் ஒருவர் குறிப்பினை ஒருவர்க்கு அறிவுறுத்தல். இது, பிரிந்து போய தலைமகன் வந்துகூடியவழி நிகழ்வதாகலின், அவர் வயின் விதும்பலின் பின் வைக்கப்பட்டது.

கரப்பினும் கைஇகந்து ஒல்லாநின் உண்கண்
உரைக்கல் உறுவதொன்று உண்டு. 1271

பிரிந்துகூடிய தலைமகன் வேட்கைமிகவினாற் புதுவது பன்னாளும் பாராட்டத் தலைமகள் இது ஒன்று உடைத்து என அஞ்சியவழி அதனை அவள் குறிப்பான் அறிந்து அவன் அவட்குச் சொல்லியது.

கரப்பினும்-நீசொல்லாது மறைத்தாயாயினும், ஒல்லா கையிகந்து-அதற்கு உடம்படாதே நின்னைக் கைகடந்து, நின் உண்கண் உரைக்கலுறுவது ஒன்று உண்டு - நின் உண்கண்களே எனக்குச் சொல்லல் உறுவதொரு காரியமுண்டாய் இராநின்றது; இனி அதனை நீயே தெரியச் சொல்வாயாக.

கரத்தல் - நாணான் அடக்குதல். தன்கண் பிரிதற் குறிப்புளதாகக்கருதி வேறுபட்டாளது வேறுபாடு குறிப்பான் அறிந்து அவட்குத் தன் பிரியாமைக் குறிப்பு அறிவுறுத்தவாறு. (1)

கண்நிறைந்த காரிகைக் காம்புஏர்தோள் பேதைக்குப்
பெண்நிறைந்த நீர்மை பெரிது. 1272

காணுல அவள் அது சொல்லாளாயவழி அவன் தோழிக்குச் சொல்லியது.

கண் நிறைந்த காரிகைக் காம்பு ஏர் தோள பேதைக்கு - என் கண்ணிறைந்த அழகினையும் வேயையொத்த தோளினையும் உடைய நின்பேதைக்கு, பெண்நிறைந்த நீர்மை பெரிது - பெண்பாலாரிடத்து நிறைந்த மடமை அவ்வளவன்றி மிகுந்தது.

இலதாய பிரிவினைத் தன்கண் ஏற்றி அதற்கு அஞ்சுதலான் இவ்வாறு கூறினான். (2)

மணியுள் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியுள் திகழ்வதொன்று உண்டு. 1273

இதுவும் அது.

மணியில் திகழ்தரும் நூல்போல் - கோக்கப்பட்ட பளிக்கு மணியகத்துக் கிடந்து புறத்துப்புலனும் நூல்போல, மடந்தை

அணியில் திகழ்வது ஒன்று உண்டு - இம் மடந்தையது அணியகத்துக் கிடந்து புறத்துப் புலனுகின்றதொரு குறிப்பு உண்டு.



அணி - புணர்ச்சியான் ஆய அழகு. அதனகத்துக்கிடத்தலாவது: அதனோடு உடன்நிகழ்தற்பாலதன்றிவைத்து உடனிகழ்தல். அதனை யான் அறிகின்றிலேன், நீ அறிந்து கூறல் வேண்டும் என்பது கருத்து. (3)

முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதுஒன்று உண்டு. 1274

இதுவும் அது.

முகை மொக்குள் உள்ளது நாற்றம்போல் - முகையது முகிழ்ப்பினுளதாய்ப் புறத்துப் புலனுகாத நாற்றம்போல, பேதை நகை மொக்குள் உள்ளது ஒன்று உண்டு - நின்பேதை என்னோடு நகக் கருதும் நகையது முகிழப்பினுளதாய்ப் புறத்துப் புலனுகாததோர் குறிப்பு உண்டு.

முகிழ்ப்பு - முதிர்ச்சியாற் புடைபடுதல். நகை - புணர்ச்சிஇன்பத்தான் நிகழ்வது. (4)

செறிதொடி செய்துஇறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கும் மருந்தொன்று உடைத்து. 1275

இதுவும் அது.

செறி தொடி செய்து இறந்த கள்ளம் - நெருங்கிய வளைகளை யுடையாள் என்கண் நில்லாததொன்றனை உட்கொண்டு அது காரணமாக என்னை மறைத்துப்போன குறிப்பு, உறு துயர் தீர்க்கும் மருந்து ஒன்று உடைத்து - என் மிக்கதுயரைத் தீர்க்கும் மருந்தாவதொன்றனை உடைத்து.

உட்கொண்டது - பிரிவு. கள்ளம் - ஆகுபெயர். மறைத்தற் குறிப்புத் தானும் உடன் போக்கு உட்கொண்டது. உறுதுயர் -

நன்றுசெய்யத நிங்குவிளை தலானும் அதுதான் நாதிறம்பெருமை யானும் உளதாயது. மருகது: அப் பிரிவின்மை தோழியால தெளிவித்தல. நீ அது செயதல வேண்டும என்பதாம். (5)

பெரிதுஆற்றிப் பெட்பக் கலத்தல் அரிதுஆற்றி
அன்பின்மை சூழ்வது உடைத்து. 1276

*தலைமகன் குறிப்பறிந்த தலைமகள அதனை அது தெளிவிக்கச் சென்ற தோழிக்கு அறிவுறுததது.*

*"பெரிது ஆற்றிப் பெட்பக் கலத்தல் – காதலர் வந்து தம் பிரிவுறைய துன்பத்தினை மிகவும் ஆற்றி நாம் மகிழும்வண்ணம் கலக்கின்ற கலவி, அரிது ஆற்றி அன்பின்மை சூழவது உடைத்து- இருந்தவாற்றான் மேலும் அத்துன்பத்தினை அரிதாக ஆற்றியிருநது அவரது அன்பின்மையை நினையுந்தன்மையுடைத்து.*

*பிரிதற்குறிப்பினாற் செய்கின்றதாகலான், முடிவில் இன்னாதாகா நின்றது என்பதாம்.* (6)



தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்னம் உணர்ந்த வளை. 1277

இதுவும் அது.

*தண்ணந் துறைவன் தணந்தமை-குளிர்ந்த துறையை உடையவன் நம்மை மெய்யாற்கூடியிருந்தே மனத்தாற் பிரிந்தமையை, நம்மினும் வளை முன்னம்உணர்ந்த - அவன் குறிப்பான் அறிதற்குரிய நம்மினும் இவ் வளைகள முன்னே அறிந்தன.*

*கருத்து நிகழ்ந்த தாகலின் 'தணந்தமை' என்றும், யான் தெளிய உணர்தற்குமுன்னே தோளகளா மெலிந்தன என்பாள அதனை வளைமேலேறறி, அதுதன்னை உணர்வு உடைத்தாக்கியும் கூறினாள.* (7)

நெருநற்றுச் சென்றார்எம் காதலர் யாமும்
எழுநாளேம் மேனி பசந்து. 1278

இதுவும அது.

எம காதலர் சென்றார் நெருநற்று - எம காதலர் பிரிந்து போயினார் நெருநற்றே, யாமும் மேனி பசந்து எழுநாளேம் - அப்பிரிவிற்கு யாமும் மேனி பசந்து எழுநாளுடையமாயினேம்.

நெருநற்றுச்செய்த தலைமகனாற் பிரிவு துணியப்பட்டது என்பாள 'நெருநற்றுச் சென்றார்' என்றும், அதனை ஐயுற்றுச்செல்கின்றது எழுநாளுண்டாகலின், அன்றே மேனி பசந்தது என்பாள மேனி பசந்து எழுநாளேம் என்றும் கூறினாள். இவ்வாற்றால தலைமகனது பிரிதற்குறிப்பினை உணர்த்தி நின்றது. (8)

தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி
அஃதுஆண்டு அவள்செய் தது. 1279

தலைமகள் குறிப்பறிந்த தோழி அதனைத் தலைமகற்கு அறிவித்தது.

(யான் அது தெளிவித்தவழித் தெளியாது) தொடி நோக்கி- அவர் பிரிய யான் ஈண்டிருப்பின் இவை நில்லா எனத் தன் தொடியை நோக்கி, மென் தோளும் நோக்கி - அதற்கு ஏதுவாக இவை மெலியும் எனத் தன் மென்தோள்களையும்நோக்கி, அடிநோக்கி-பின் இவ்விரண்டும் நிகழாமல நீர் நடந்து காத்தல் வேண்டும் எனத் தன் அடியையும் நோக்கி, ஆண்டு அவள் செய்தது அஃது - அங்ஙனம் அவள் செய்த குறிப்பு உடன்போக்காயிருந்தது..

செய்தகுறிப்பு-செய்தற்கு ஏதுவாய குறிப்பு. அஃது என்றான் "செறிதொடி செய்திறந்த கள்ளம்" என்றுணுகைவின். பிரிதற்குறிப்புண்டாயின், அஃது அழுங்குதல பயன். (9)



பெண்ணினுல் பெண்மை உடைத்துஎன்ப கண்ணினுல்
காமநோய் சொல்லி இரவு. 1280

தலைமகன் பிரியாமைக் குறிப்பினைத் தோழிக்கு அறிவுறுத்தது.

காமநோய் கண்ணினற் சொல்லி இரவு - மகளிர் தம் காம நோயினைத் தோழியர்க்கும் வாயாற்சொல்லாது கண்ணிற் சொல்லி அது தீர்க்கவேண்டும் என்று அவரை இரவாது உடன்

போதல் குறித்தும் தம் அடியினை இரத்தல், பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப - தமக்கு இயல்பாகிய பெண்மை மேலும் ஒருபெண்மைஉடைத்து என்று சொல்லுவர் அறிந்தோர்.

தலைமகளது உடன் போதல் துணிபு தோழியால் தெளிந்தானாகலின், தன்பிரிவின்மைக் குறிப்பினை அறிவுறுப்பான், அவள் பெண்மையினைப் பிறர்மேலிட்டு வியந்து கூறியவாறு. (10)

## 129. புணர்ச்சி விதும்பல்

அஃதாவது தலைமகனும் தலைமகளும் புணர்ச்சிக்கண்ணே விரைதல். மேற்புணர்ச்சி மிகுதிபற்றித் தலைமகன் பிரிதற்குறிப்பு அறிவுறுத்த தலைமகள் அவன் மாட்டே நிகழாது வேட்கைமிகுதியால் பின்னும் தன்கண்ணே நிகழ்தலான், இது குறிப்பு அறிவுறுத்தலின் பின் வைக்கப்பட்டது.

**உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்**
**கள்ளுக்குஇல் காமத்திற்கு உண்டு. 1281**

பிரிதற்குறிப்பினன் ஆகியானொடு நீ புலவாமைக்குக் காரணம் யாது என நகையாடிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

உள்ளக் களித்தலும் - நினைத்த துணையானே களிப்பெய்தலும், காண மகிழ்தலும் - கண்ட துணையானே மகிழ்வெய்தலும், கள்ளுக்கு இல் காமத்திற்கு உண்டு - கள்ளுண்டார்க்கு இல்லை, காமம் உடையார்க்கு உண்டு.

களித்தல் - உணர்வழியாதது. மகிழ்தல்-அகமகிழ்தது. இவ்விரண்டும் உண்டுழியல்லது இன்மையின் 'கள்ளுக்கு இல்' என்றாள். உண்டு என்பது இறுதிவிளக்கு. அப்பெற்றித்தாய காமம் உடைய யான்புலத்தல் யாண்டையது என்பதாம். (1)

**தினைத்துணையும் ஊடாமை வேண்டும்பனைத்துணையும்**
**காமம் நிறைய வரின். 1282**

இதுவும் அது.

காமம் பனைத்துணையும் நிறைய வரின் - மகளிர்க்குக் காமம் பனையளவினும் மிகஉண்டாமாயின், தினைத்துணையும் ஊடாமை வேண்டும் - அவரால், தம் காதலரோடு தினையளவும் ஊடுதல் செய்யாமை வேண்டப்படும்.

பனைத்துணையும் என்புழி ஐந்தனுருபு விகாரத்தால் தொக்கது. ஊடின் வருத்தமிகும் எனப் பிறர்க்கும் உறுதிகூறுவான் போன்று, தன் விதுப்புக் கூறியவாறு. (2)

**பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்**
**காணாது அமையல கண். 1283**

இதுவும் அது.

பேணாது பெட்பவே செய்யினும் - நம்மை அவமதித்துத் தான் வேண்டியனவே செய்யுமாயினும், கொண்கனைக் கண்காணாது அமையல - கொண்கனை என்கண்கள காணாது அமைகின்றன இல்லை.

தன் விதுப்புக் கண்கள்மேலேற்றப்பட்டது. அத் தன்மையேன் அவனோடு புலக்குமாறு என்னை என்பதாம். (3)

**ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து**
**கூடற்கண் சென்றதுஎன் நெஞ்சு. 1284**

இதுவும் அது.

தோழி - தோழீ, ஊடற்கண் சென்றேன் - காதலரைக் காணாமுன் அவர் செய்த தவறைத் தன்னொடு நினைந்து யான் அவரோடு ஊடுதற்கண்ணே சென்றேன், என் நெஞ்சு அது மறந்து கூடற்கண் சென்றது-கண்டபின் என் நெஞ்சு அதனை மறந்து கூடுதற்கண்ணே சென்றது.

சேறல் - நிகழ்தல். நினைதந்நெஞ்சிற்கும் ஒத்தலின், 'அது மறந்து' என்றான. அச் செலவாற் பயன் என் என்பதுபட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. அவ்வெல்லையிலே நெஞ்சு அறைபோகலான், அது முடிந்ததில்லை என்பதாம. (4)

**எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்**
**பழிகாணேன் கண்ட இடத்து. 1285**

இதுவும் அது.

எழுதுங்கால் கோல் காணாக் கண்ணேபோல-முன்னெல்லாம் கண்டிருந்தும் எழுதுங்காலத்து அஞ்சனக்கோலின் இயல்புகாண

மாட்டாத கண்ணேபோல, கொண்கன்பழி கண்டவிடத்துக் காணேன் - கொண்கனது தவறு காணாதவிடத்தெல்லாம் கண்டிருந்து அவனைக் கண்டவிடத்துக் காணமாட்டேன்.

கோல - ஆகுபெயர். இயல்பு - கருமை. என் இயல்பு இது வாகலின் மேலும் அது முடியாது என்பதாம். (5)

**காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால்**
**காணேன் தவறல் லவை.** 1286

இதுவும் அது.



காணுங்கால் தவறாய காணேன் - கொண்கனை யான் காணும் பொழுது அவன் தவறாயவற்றைக் காண்கின்றிலேன், காணாக்கால தவறல்லவை காணேன் - காணாதபொழுது அவையேயல்லது பிற வற்றைக் காண்கின்றிலேன்.

செயப்படுபொருள - அதிகாரத்தான் வந்தது. முன்பு நான் நின்னொடு சொல்லிய தவறுகளை இதுபொழுது காணாமையின் புலக்கிலேன் என்பதாம். (6)

**உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்**
**பொய்த்தல் அறிந்துஎன் புலந்து.** 1287

இதுவும் அது.

உய்த்தல அறிந்து புனல பாய்பவரேபோல - தம்மை ஈர்த்துக்கொண்டு போதல அறிந்துவைத்தது ஒழுகுகின்ற புனலுட்பாய வார் செயலபோல, பொய்த்தல அறிந்து புலந்து என்-புலவி முடிவு போகாமை அறிந்துவைத்துக் கொண்கனோடு புலந்து பெறுவது என்?

பாய்பவர் என்பது ஆகுபெயா. பொய்த்தல - புரைபடுதல புலந்தாலும பயனில்லை என்பதாம. 'பொய்த்தல அறிந்தேன்' என்பது பாடமாயின், உய்த்தலறிய ஓடும் நீருட்பாய்வாரபோல முடிவறியப் பண்டொருகால புலந்து முடியாமை அறிந்தேன் இனி அது செயற்பாற்றன்று என உரைக்க. (7)

**இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்கு**
**கள்அற்றே கள்வநின் மார்பு** 1288

தலைமகளை புணர்ச்சி விதுப்பு அறிந்த தோழி தலைமகற்குச் சொல்லியது.

களவ - வஞ்சகா! களித்தார்க்கு இளிதக்க இன்னாசெயினும கள் அற்றே-தன்னை உண்டுகளித்தார்க்கு இளிவரத்தக்க இன்னாதவற்றைச் செயினும் அவரால மேன்மேல விரும்பப்படுவதாய கள்போலும், நின்மார்பு - எங்கட்கு நின் மார்பு.

அவ் இன்னாதன நாணின்மை, நிறையின்மை, ஒழுக்கமின்மை, உணர்வின்மை என்றிவை முதலாயின. எங்கட்கு நாணின்மை முதலியவற்றைச் செய்யுமாயினும் எங்களால் மேன மேல் விரும்பப்படாநின்றது என்பதாம. களவ என்றதும் அது நோக்கி. (8)

மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார். 1289

உணர்ப்புவயின் வாராவூடற்கண் தலைமகன் சொல்லியது.

காமம் மலரினும் மெலலிது-காம இன்பம் மலரினும் மெல்லியதாயிருக்கும், அதன்செவ்வி தலைப்படுவார் சிலர் - அங்ஙனம்



மெல்லிதாதலையறிந்து அதன் செவ்வியைப் பெறுவார் உலகத்துச் சிலர்.

தொட்டதுணையானே மணச்செவவி அழிவதாய மலர் எல்லாவற்றினும் மெல்லிது என்பது விளக்கலின், உமமை சிறப்பின் கண்வநதது. குறிப்பும, வேட்கையும, நுகர்ச்சியும, இன்பமும் ஒருகாலத்தின்கண்ணே ஒத்து நுகர்தற்குரியார் இருவர், அதற்கு ஏற்ற இடனும் காலமும உபகரணங்களும பெறறுக் கூடி நுகர வேண்டுதலின், அதன் 'செவ்வி தலைப்படுவார் சிலர்' என்றும், அவற்றுள் யாதானும் ஒன்றனைப் பிரிந்து வேறுபாடுறும வாடுதலின், 'மலரினும் மெல்லிது' என்றும கூறினான். குறிப்பு ஒவவாமையின் யான் அதுபெறுகின்றிலேன் என்பதாம. [illegible] பயன். (9)

கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினும் தான்விதுப்பு உற்று. 1290

இதுவும் அது.

கண்ணின் துனித்தே - காதலி என்னொடு ஊடாது புல்லல் விதுப்பினுறச் சென்ற என்னொடு தன்கண் மாத்திரத்தான் ஊடி, புல்லுதல் என்னினும் தான் விதுப்புற்றுக் கலங்கினாள்-புல்லுதலை என்னினும் தான் விதும்பலான் அவ்வூடலையும் அப்பொழுதே மறந்து கூடிவிட்டாள், அதனால் யான் இத்தன்மையேனாகவும் விதுப்பின்றி ஊடிநிற்கின்ற இவள் அவளல்லள்.

கண்மாத்திரத்தான் ஊடல் சொல் மிகுதியின்றி அது சிவந்த துணையேயாதல், அவளாயின் இவ்வளவும் ஊடற்கண் நீடாள் என்பது பயன். (10)

## 130. நெஞ்சொடு புலத்தல்

அஃதாவது காரணம் உண்டாயவழியும் புலக்கக்கருதாது புணர்ச்சிவிதுப்புற்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும், தலைமகன் புலத்தலும் ஆம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

அவர்நெஞ்சு அவர்க்குஆதல் கண்டும் எவன்நெஞ்சே
நீஎமக்கு ஆகா தது. 1291

தலைமகன்கண் தவறுண்டாயவழியும் புலவி கருதாத நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது.

நெஞ்சே - நெஞ்சே, அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல்கண்டும்- அவருடைய நெஞ்சு நம்மை நினையாது அவர்க்காய் நிற்றல் கண்டு வைத்தும், நீ எமக்கு ஆகாதது எவன் - நீ எமக்காய் நில்லாது, அவரை நினைத்தற் காரணம் யாது?

அவர்க்கு ஆதல்: அவர்கருதியதற்கு உடம்படுதல். எமக்காகா தது என்றது புலவிக்கு உடம்படாமையை. ஒரு கருமத்தைத் தாமாக அறிந்து செய்யமாட்டாதார் செய்வாரைக் கண்டாயினும் செய்வர். நீ அதுவும் செய்கின்றிலை என்பதாம். (1)

உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்
செறாஅர்எனச் சேறிஎன் நெஞ்சு. 1292

இதுவும் அது.

என் நெஞ்சு - என் நெஞ்சே, உறாதவர்க் கண்ட கண்ணும்- மேலும் நம்மாட்டு அன்புடையராகாதவரை உள்ளவாறு அறிந்த இடத்தும், செறார் என அவரைச் சேறி-நாம் சென்றால் வெகுளார் என்பதுபற்றி நீ அவர் மாட்டுச் செல்லாநின்றாய், இப்பெற்றியது மேலும் ஓரறியாமையுண்டோ?

அவரை என்பது வேற்றுமை மயக்கம். பழக்கண்ணோட்டம் பற்றி வெகுளார் என்பது கந்தாகச் சென்றாய், நீ கருதியது முடியுமோ என்பதாம். (2)

கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங்கு அவர்பின் செலல். 1293

இதுவும் அது.

நெஞ்சே-நெஞ்சே, நீ பெட்டாங்கு அவர்பின்செலல - என் மாட்டு நில்லாது நீ விரும்பியவாறே அவர் மாட்டுச் செலுதற்குக் காரணம், கெட்டார்க்கு நட்டார் இல என்பதோ-கெட்டார்க்கு நட்டார் உலகத்து இல்லை என்னும் நினைவோ, நின்னியல்போ, கூறுவாயாக.

என்னைவிட்டு அவர்மாட்டுச் சேறல் நீ பண்டே பயின்றது என்பாள 'பெட்டாங்கு' என்றும், தான் இதுபொழுது மானமில ளாகலின், 'கெட்டார்க்கு' என்றும் கூறினாள். பின் என்பது ஈண்டு இடப்பொருட்டு. செலல் என்பது ஆருபெயர். "ஒல கிடத்து உலப்பிலா உணர்விலார் தொடர்பு" (கலித். பாலை. 25) ஆயிற்று நின் தொடர்பு என்பதாம். (3)

இனிஅன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று. 1294

இதுவும் அது.

நெஞ்சே-நெஞ்சே, துனி செய்து மறறுத் துவ்வாய்-நீ அவரைக் கண்டபொழுதே இன்பம் நுகரக் கருதுவதலலது அவர் தவறு நோக்கி முன் புலவியை உண்டாக்கி அதனை அளவறிந்து பின் நுகரக்கருதாய்; இனி அன்ன நின்னொடு சூழ்வார் யார்-ஆகலான், இனி அப்பெற்றிப்பட்டவற்றை நின்னோடு எண்ணுவார் யார்? யான் அது செய்யேன்.



அப்பெற்றிப்பட்டன-புலக்கும் திறங்கள். காண் என்பது உரையசை. மற்று-வினைமாற்றின்கண் வந்தது. முன்னெல்லாம் புலப்பதாக எண்ணியிருந்து பின் புணர்ச்சி விதும்பலின், இவ்வாறு கூறினள். (4)

பெருஅமை அஞ்சும் பெறின்பிரிவு அஞ்சும்
அருஅ இடும்பைத்துஎன் நெஞ்சு. 1295

வாயிலாகச் சென்ற தோழி கேட்பத் தலைமகள் சொல்லியது.

பெருமை அஞ்சும்-காதலரைப்பெருத ஞான்று அப் பெருமைக்கு அஞ்சா நின்றது, பெறின் பிரிவு அஞ்சும்-பெற்றக்கால வரக்கடவ பிரிவினை உட்கொண்டு அதறகு அஞ்சாநின்றது, என் நெஞ்சு அரு இடும்பைத்து-ஆகலான், என் நெஞ்சம் எஞ்ஞான்றும் நீங்காத இடும்பையை உடைத்தாயிற்று.

காதலரைப் பெற்றுழவுந்துக் கலவியிழந்தல் உறுதியன்று என்னும் கருததான் வாயில் நேர்ந்திலளாகலின், 'பெருமை அஞ்சும்' என்றும, கலவி ஆராமையின் இன்னும் இவர் பிரிவராயின் யாதுசெய்தும என்பது நிகழ்தலின், 'பெறின் பிரிவு அஞ்சும்' என்றும இவ இரண்டுமல்லது பிறிது இன்மையின், 'எஞ்ஞான்றும் அரு இடும்பைத்து' என்றும கூறினள். (5)

தனியே யிருந்து நினைத்தக்கால் என்னைத்
தினிய இருந்ததுஎன் நெஞ்சு. 1296

இதுவும் அது.

என் நெஞ்சு இருந்தது—என் நெஞ்சு கண்டு இருந்தது, தனியே இருந்து நினைந்தக்கால்—காதலரைப் பிரிந்திருந்து அவர் கொடுமைகளை யான் தன்னோடு நினைந்தக்கால், என்னைத் தினிய—அவ்வளவு அறிந்து என்னைத் தின்பதுபோன்று துன்பம் செய்தற்கே.

எம்மாட்டிருந்தது அன்று அவர்கொடுமைகளை உட்கொண்டு எனக்கு ஆற்றாமை செய்தற்கே, இன்று அவைநோக்கி அவரொடு புலத்தற்கன்று என்பதாம். (6)

நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாஎன்
மாணா மடநெஞ்சில் பட்டு. 1297

இதுவும் அது.

அவர் மறக்கல்லா என் மாணா மடநெஞ்சிற்பட்டு—தன்னை மறந்த காதலரைத் தான் மறக்கமாட்டாத என் மாட்சிமையில்லாத மட நெஞ்சுடனே கூடி, நாணும் மறந்தேன்—என் உயிரினும் சிறந்த நாண் தன்னையும் மறந்துவிட்டேன்.



மாணாமை—ஒருகிலையில் கில்லாமை. மடமை: கண்டவழி நினைந்து காணாதவழி மறக்குந் தவறைக் காணாவழிநினைந்து கண்டவழிமறத்தல். நாண்—எஞ்ஞான்றும் கூடியொழுகினும் அஞ்ஞான்று கண்டார்போன்று ஒடுக்குதல். கண்டபொழுதே புணர்ச்சி விதும்பலின், அதனையும் மறந்தேன் என்றாள். (7)

எள்ளின் இளிவாம்என்று எண்ணி அவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு. 1298

இதுவும் அது.

உயிர்க் காதல் நெஞ்சு - உயிர்மேல் காதலையுடைய என் நெஞ்சு, எள்ளின் இளிவு ஆம் என்று எண்ணி - நம்மை எள்ளிச் சென்றார் என்று நாமும் எள்ளுவேமாயின் பின் நமக்கு இளிவாம் என்று கருதி, அவர் திறம் உள்ளும் - அவர் திறத்தினையே நினையாநின்றது.

எள்ளுதல் - வாயில் மறுத்தல். இளிவு - வழிபடாமையானும், பிரிவாற்றாமையானும், நாணும் நிறையும் முதலிய இழத்தலா

னும் உளதாவது. பிறவும் - வாயில் நேர்தலும் வருதலும் கூட லும் முதலாயின. இவ்விறலு அனுபந்தமானும் பிறந்துபட மாட் டாமையானும் கூடக் கருதாநின்றது என்பதாம். (8)

துன்பத்திற்கு யாரே துணையாவார் தாம் உடைய
நெஞ்சம் துணைஅல் வழி. 1299

உணர்ப்புவயின்வாரா ஊடற்கண் தலைமகன் சொல்லியது.

துன்பத்திற்கு - ஒருவர்க்குத் துன்பம்வந்துழி, அது நீக்கு தற்கு, தாம் உடைய நெஞ்சம் துணை அல் வழி - தாம் உரித்தாகப் பெற்ற தமமுடைய நெஞ்சம் துணையாகாவழி, துணையாவார் யாரே - வேறு துணையாவார் ஒருவரும் இல்லை.

ஈண்டுத் துன்பமாவது - ஊடலுணர்ப்புவயின்வாராமை.

அதற்கு நெஞ்சம் துணையாகாமையாவது அவளை அன்பிலள் என்றொழியாது கூடற்கண்ணே விதும்பல. ஒரு துணையும் இன்மை யின், இஃது உற்று விடுதலே உளளது என்பதாம். (9)

தஞ்சம் தமர்அல்லர் ஏதிலார் தாம்உடைய
நெஞ்சம் தமர்அல் வழி. 1300

இதுவும் அது.

தாம் உடைய நெஞ்சம் தமர் அல்வழி - தாம் உரித்தாக உடைய நெஞ்சம் ஒருவர்க்குத் தமர் அல்லாவழி, ஏதிலார் தமர் அல்லர் தஞ்சம் - அயலார் தமர்அல்லராதல சொல்லவேண்டுமோ?

பிறளொருத்தியைக் காதலி என்று கருதி என் நெஞ்சே என்னை வருத்தாநின்றபின் அப் பிறள் புலக்கின்றது எளிது என் பதாம். (10)



## 131. புலவி

அஃதாவது இருவர் நெஞ்சும் புணர்ச்சி விதும்பாது புலக்கக் கருதியவழி ஒருவரோடு ஒருவர் புலத்தல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

புல்லாது இராஅப் புலத்தை அவர்உறும்
அல்லல்நோய் காண்கம் சிறிது. 1301

வாயிலாகச் சென்ற தோழி தலைமகன் வாயில் நேர்தற் பொருட்டு அவளொடு நகையாடிச் சொல்லியது.

அவர் உறும் அல்லல் நோய் சிறிது காண்கம்—அங்ஙனம் புலந்தால் காதலரெய்தும் அல்லல் நோயினை யாம் சிறிது காணக் கடவேம், புல்லாது இராஅப் புலத்தை—நீ அவரை விரைந்துசென்று புல்லாதே இத்தொழிலை மேலிட்டுக் கொண்டிருந்து புலப்பாயாக.

அல்லல் நோய் - துன்பத்தைச் செய்யும் காமநோய். சிறிது என்றாள், புலவியை நீளவிடலாகாது என்பதுபற்றி. புலத்தை என்புழி ஐகாரம் "கடம்பூண்டொருகால் நீ வந்தை" (கலித். குறிஞ்சி. 27) என்புழிப்போல முன்னிலைவினைவிகுதி. 'புலத்தி' என்பதூஉம் பாடம். புலவிக்குறிப்புக்கண்டு அவள்வழியளாய் நின்று நாம் உற்ற வருத்தம் அவரும் சிறிதுற்று அறிதல் வேண்டும் என நகையாடிக் கேட்பித்தவாறு. (1)

உப்புஅமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல். 1302

புலவியொழிந்து வாயில் நேருமவளாக அவள் சொல்லியது.

புலவி உப்பு அமைந்தற்று - புலவி கலவி இன்பம் செய்தற்கு வேண்டுமளவிற்றாதல் உப்புத் துய்ப்பனவற்றை இன் சுவையவாக்கற்கு வேண்டுமளவிற்றாதல் போலும், சிறிது நீளவிடல் அது மிக்கற்று - இனி அதனை அவ்வளவின் சிறிதுமிகவிடுதல் அவ் உப்பு அளவின்மிக்காற் போலும்.

நீளவிடல் - அளவறிந்துணராது கலவிமேல் எழுந்த குறிப்பழுங்குமளவும் செய்தல். 'சிறிது நீளவிடலாகாது' என்றாள், நேர்விக்கின்றாளாகலின். உப்பு மிக்கவழித் துய்ப்பது சுவையின்றாம் போலப் புலவிமிக்கவழிக் கலவி இன்பமின்றாம் என்றமையின், இது பண்பு உவமை. (2)

அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். 1303

பரத்தையர் இடத்துநின்றும் வந்த தலைமகனொடு தலைமகள் புலந்து சொல்லியது.

தம்மைப் புலந்தாரைப் புல்லாவிடல்-தம்மைப்பெறாது புலந்த மகளிரைப் புலவி நீக்கிக் கலவாது ஆடவர்சேறல், அலந்தாரை அல்லல்நோய் செய்தற்று - பண்டே துன்பமுற்றழிந்தாரை அதன் மேலும் மிக்க துன்பத்தினைச் செய்தாற்போலும்.

பிறர்பால் சேறலின் நும்மைப்பெறாது புலந்தாடியிருக்கின்ற பரத்தையரைப் போய்ப் புலவி நீக்கிப் புல்லீராயின், அவராற்றார் என்பதாம். (3)

ஊடி யவரை உணராமை வாடிய
வள்ளி முதல்அரிந் தற்று. 1304

இதுவும் அது.

ஊடியவரை உணராமை - நும்மோடு ஊடிய பரத்தையரை ஊடலுணர்த்திக் கூடாதொழிதல், வாடிய வள்ளி முதல் அரிந்தற்று - பண்டே நீர்பெறாது வாடிய கொடியை அடியிலே அறுத்தாற்போலும்.

நீர் பரத்தையரிடத்திர் ஆயவழி எம் புதல்வரைக் கண்டு ஆற்றியிருக்கற்பாலமாய யாம நும்மோடு ஊடுதற்குரியமல்லம்' அன்மையின், எம்மை உணர்த்தல்வேண்டா, உரியராய் ஊடிய பரத்தையரையே உணர்த்தல்வேண்டுவது, அதனால் ஆண்டுச்சென்மின் என்பதாம்: (4)

நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் புலத்தகை
பூவன்ன கண்ணார் அகத்து. 1305

தலைமகளைப் புலவி நீக்கிக் கூடிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது.

நலத்தகை நல்லவர்க்கு ஏர் - நற்குணங்களால் தகுதியுடைய ராய தலைவர்க்கும் அழகாவது, பூ அன்ன கண்ணார் அகத்துப் புலத்தகை - தம் பூவன்னகண்ணார் நெஞ்சின்கண் நிகழும் புலவி மிகுதியன்றே.

சிறப்புஉம்மை விகாரத்தால் தொக்கது. தவறில்லார்க்கும் புலவி இனிது என்பான், நலத்தகை நல்லவர்க்கும் என்றான். அழகு - இன்பப்பயனைத் தலைப்படுதல். தான் நுகர்ந்த இன்பத்திற்கு ஏதுவாகிய புலவியை வியந்து கூறியவாறு. (5)

**துனியும் புலவியும் இல்லாயின் காமம்**
**கனியும் கருக்காயும் அற்று. 1306**

இதுவும் அது.

துனியும் புலவியும் இல்லாயின் - முதிர்ந்த கலாம்ஆகிய துனியும் இளைய கலாம்ஆகிய புலவியும் இல்லையாயின், காமம் கனியும் கருக்காயும் அற்று - காமம் செவ்வி முதிர்ந்தபழமும் இளங்காயும் போலும்.



மிகமுதிர்ந்திறும் எல்லைத்தாய கனி நுகர்வார்க்கு மிகவும் இனிமைசெய்யாதாகலின் துனியில்லையாயின், 'கனியற்று' என்றும்; கட்டிளமைத்தாய காய் நுகரும் செவ்வித்தன்றாகலின் புலவியில்லையாயின் 'கருக்காயற்று' என்றும் கூறினான். இவ்விரண்டும் வேண்டும் என்று வியந்து கூறியவாறு. (6)

**ஊடலின் உண்டுஆங்குஓர் துன்பம் புணர்வது**
**நீடுவது அன்றுகொல் என்று. 1307**

இதுவும் அது.

புணர்வது நீடுவது (கொல்) அன்றுகொல் என்று - இனிப் புணர்ச்சி நீட்டிக்குமோ நீட்டியாதோ என்றுகருதலான், ஊடலின் ஓர் துன்பம் உண்டு - இன்பத்திற்கு இன்றியமையாத ஊடலின் கண்ணேயும் ஒருதுன்பம் நிகழும்.

என்று என்னும் எச்சத்திற்குக் கருதலான் என்பது வருவிக்கப்பட்டது. சிறப்புஉம்மை விகாரத்தால் தொக்கது. கொல் என்பதனை நீடுவது என்பதுடனும் கூட்டுக. ஆங்கு என்பது அசைநிலை. ஊடல் - கூடற்கண் விரைவித்தல் கூறியவாறு. (7)

நோதல் எவன்மற்று நொந்தார் என்றுஅஃதுஅறியும்
காதலர் இல்லா வழி. 1308

உணர்ப்புவயின்வாரா ஊடற்கண் தலைமகன் தலைமக ளொடு புலந்து சொல்லியது.

நொந்தார் என்று அஃது அறியும் காதலர் இல்லாவழி - இவர் நம்பொருட்டாக நொந்தார் என்று அந்நோவினையறியும் அன்புடையாரைப்பெறாவழி, நோதல் மற்று எவன் - ஒருவர் நோகின்றதனால் பயன் என்?

அறிதல் - ஈண்டு ஊடலை இனிது உணர்தல். மற்று - வினை மாற்றின்கண் வந்தது. இவள் நம் காதலியல்லள்; அன்மையின் இந்நோ அறியாள், அறியாமையின், நாம் புலக்கின்றதனால் பய னில்லை எனத் தன் ஆற்றாமைஉணர்த்தியவாறு. (8)

நீரும் நிழலது இனிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது. 1309

இதுவும் அது.

நீரும் நிழலதே இனிது - உயிர்க்கு இன்றியமையாத நீரும் நிழலின் கண்ணதே இனிதாவது, ஏனை வெயிலின் கண்ணது ஆகாது; புலவியும் வீழுநர் கண்ணே இனிது - அதுபோலக் கல விக்கு இன்றியமையாத புலவியும் அன்புடையார் கண்ணே இனி தாவது, ஏனை அன்பிலார்கண் ஆகாது.

நிழற்கண் இருந்த நீர் குளிர்ச்சிமிக்குத் தாகம்தணித்தலின், இனிதாயிற்று. வீழுநர் - ஆற்றாமைக்கு நோதலும் கூடுதற்கண்



வேட்கையுமுடையராவார். இவள் நம்மாட்டு அவ் இரண்டும் இன்மையின் இப்புலவிதானும் இன்னாதாக நின்றது என்பதாம்.

ஊடல் உணங்க விடுவாரோடு என்நெஞ்சம்
கூடுவேம் என்பது அவா. 1310

இதுவும் அது.

ஊடல் உணங்க - தான் ஊடற்கண்ணே மெலியாநிற்கவும், விடுவாரோடு கூடுவேம் என்பது என்நெஞ்சம் அவா - விட்டிருக்க வல்லாரோடு கூடக் கடவேம் என்று என்நெஞ்சம் முயறற்கு ஏது தன் அவாவே; பிறிது இல்லை.

அன்பும் அருளும் இல்லாதவரை உடையார் என்றும் அவரோடு யாம் கூடுவம் என்றும் கருதி அதற்கு முயறல் அவாவுற்றார் செயலாகலின், 'கூடுவேம என்பது அவா' என்றான். காரியம காரணமாக உபசரிக்கப்பட்டது. இக்கூட்டம் முடியாது என்பதாம். (10)

## 132. புலவி நுணுக்கம்

அது புலவியது நுணுக்கம் என விரியும். அஃதாவது தலைமகனும் தலைமகளும் ஓர்அமளிக்கண் கூடியிருந்துழி அவன்மாட்டுப் புலத்தற்காரணமில்லையாகவும் காதல் கைம்மிகுதலான் நுண்ணியதோர் காரணமுளதாக உட்கொண்டு அவன்மேலேற்றி அவள் புலத்தல். காரணத்தின் நுணுக்கம் காரியத்தின்மேல் நின்றது. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

பெண் இயலார் எல்லாரும் கண்ணின் பொதுஉண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு. 1311

உலாப்போய்வந்த தலைமகன் பள்ளியிடத்தானைத் தலைமகள் சொல்லியது.

பரத்த - பரத்தைமையுடையாய், பெண் இயலார் எல்லாரும் கண்ணின் பொதுவுண்பர் - நின்னைப் பெண்இயல்பினையுடையார் யாவரும் தம் கண்ணான் பொதுவாக உண்பர், நின் மார்பு நண்ணேன் - அதனால் அவர் மிச்சிலாய நின் மார்பினைப் பொருந்தேன்.

கற்பு நாண்முதலிய நற்குணங்களின்மையின் பரத்தையர்க்குள்ளது பெண்இயற்கைமாத்திரமே என்னும் கருத்தால் 'பெண் இயலார்' என்றாள். பொதுவாக உண்டல் - தனசேரிச்

செலவின்முறையானன்றி ஒருகாலத்து ஒருங்குநோக்குதல்: அதுவும் ஓர் குற்றம். தாம்நோக்கி இன்புற்றவாறே அவரும் நோக்கி இன்புறுவர் என ஆசங்கித்து அவர்பாற் பொதுமை எய்துதலின், நுணுக்கமாயிற்று. (1)



ஊடி இருந்தேமாத் தும்மினர் யாம்தம்மை
நீடுவாழ் கென்பாக்கு அறிந்து. 1312

தலைமகன் நீக்கத்துச் சென்ற தோழிக்குத் தலைமகள் பள்ளியிடத்து நிகழ்ந்தது கூறியது.

ஊடி இருந்தேமாத் தும்மினர் - யாம் தம்மோடு ஊடி உரையாடாதிருந்த காதலர் தும்மினார், யாம் தம்மை நீடுவாழ்கென் பாக்கு அறிந்து - அதுநீயைத் தம்மை நீடுவாழ்கென்றுஉரையாடு வேமாகக் கருதி.

தும்மியக்கால வாழ்த்துதல் மரபாகலான், உரையாடல் வேண்டிற்று என்பதாம. இயல்பான் நிகழ்ந்த தும்மலைக் குறிப்பான் நிகழ்ந்ததாகக் கோடலின், நுணுக்கமாயிற்று. (2)

கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று. 1313

தலைமகனை புலவிக்குறிப்பினைக் கண்டு நீவிர் கூடியொழுகா நிற்கவும் இது நிகழ்தற்குக் காரணம் யாது என்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.

கோட்டுப் பூச்சூடினும - யான் கோடுதலைச் செய்யும மாலை

யைச் சூடினேனாயினும், ஒருத்தியைக் காட்டிய சூடினீர் என்று காயும் - நும்மால் காதலிக்கப்பட்டாள் ஒருத்தி இப் பூவணிகாட்டல்வேண்டிச் சூடினீர் என்று வெகுளாநிற்கும்; இத்தன்மையாட்கு ஒரு காரணம் வேண்டுமோ?

கோடு என்பது முதனிலைத்தொழிற்பெயர். பூ - ஆகுபெயர். வளையமாகச்சூடினும் என்பதாம், "கோட்டம் கண்ணியும் கொடுந்திரையாடையும்" (புறநா. 275) என்றார் பிறரும். இனி அம் மருதநிலத்துப் பூவன்றி வேற்றுநிலத்துக் கோட்டுப்பூவைச் சூடினேனாயினும் ஈண்டையாள் பிறளொருத்திக்கு அவ் வேற்றுப் பூவணி காட்டல்வேண்டிச் சூடினீர் என்று வெகுளும் எனினும் அமையும். (3)

**யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்**
**யாரினும் யாரினும் என்று.** **1314**

இதுவும் அது.

யாரினும் காதலம் என்றேனா - காமம் நுகர்தற்குரிய இருவராயினார் யாவரினும் யாம் மிக்க காதலுடையேம் என்பது கருதி யாரினும் காதலம் என்றேனாக, யாரினும் யாரினும் என்று ஊடினாள் - நின் தோழி அது கருதாது, என்னால் காதலிக்கப்பட்ட மகளிர் பலருள்ளும் நின்கண் காதலுடையேன் என்றேனாகக் கருதி, அம்மகளிர் யாரினும் என்கண் காதலுடையராயினீர் என்று சொல்லிப் புலந்தாள்.



தலைமகள் கருத்திற்குத் தன்மைப்பன்மை உயர்ச்சிக்கண் வந்தது. யான் அன்பு மிகுதியாற் சொல்லியதனைக் கருத்து வேறுபடக்கொண்டதல்லது பிறிது காரண மில்லை என்பதாம். (4)

**இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்**
**கண்நிறை நீர்கொண் டனள்.** **1315**

இதுவும் அது.

இம்மைப் பிறப்பிற் பிரியலம் என்றேனா - காதன்மிகுதியான் இம்மையாகிய பிறப்பின்கண் யாம் பிரியேம் என்று சொன்னேனாக, கண்நிறை நீர்கொண்டனள் - அதனை எனை

மறுமையாகிய பிறப்பின்கண் பிரிவல் என்னும் குறிப்பினேனுகைக் கருதி, அவள் தன்கண் நிறைந்த நீரினைக் கொண்டாள.

வெளிப்படுசொலலைக் குறிப்புச்சொலலாகக் கொளகின்ற தல்லது என்பால் தவறிலலை என்பதாம். (5)

**உள்ளினேன் என்றேன்மற்று என்மறந்தீர் என்றுஎன்னைப்**
**புல்லாள் புலத்தக் கனள். 1316**

இதுவும் அது.

உளளினேன் என்றேன் - பிரிந்தகாலத்து நின்னையிடை யின்றி நினைந்தேன் என்னும் கருததால யான் உளளினேன் என்றேன், மறறு என்மறந்தீர் என்று என்னைப் புலலாள புலத தக்கனள - என, அதனை ஒருகால் மறந்து பின் நினைந்தேன் என்றதாகக் கருதி, என்னையிடையே மறந்தீர் என்று சொலலி முன் புல்லுதற்கு அமைநதவள அஃதொழிநது புலத்தற்கு அமைந தாள:

மற்று - வினைமாற்றின்கண் வந்தது. அருததாபததிவகை யான் மறத்தலையுட்கொண்டு புலந்தாள என்பதாம். (6)

**வழுத்தினாள் தும்மினே னாக அழித்துஅழுதாள்**
**யார்உள்ளித் தும்மினீர் என்று. 1317**

இதுவும் அது.

தும்மினேனாக வழுததினாள - கூடியிருக்கின்றவள யான் தும்மினேனாகத் தன் இயற்கைபற்றி வாழ்ததினாள, அழிதது யார் உள்ளித் தும்மினீர் என்று அழுதாள - அங்ஙனம் வாழததிய தானே மறித்து, நும்மை நினைதது வருந்துகின்ற மகளிருள யாவர் நினைத்தலால் தும்மினீர் என்று சொல்லிப் புலந்தழுதாள.

வாழ்த்தலொடு புலத்தல இயையாமையின், 'அழிதது' என்றான். அன்புடையார் நினைத்தவழி அந் நினைக்கப்பட்டார்க் குத் தும்மல் தோன்றும் என்பது மகளிர் வழக்கு. இவ்வழக்கை உன்வழக்காகக் கருதிப் புலந்தாள என்பதாம். (7)

**தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்**
**எம்மை மறைத்திரோ என்று. 1318**

தும்முச் செறுப்ப-எனக்குத் தும்மல் தோன்றியவழி யார்உள்ளித் தும்மினீர்என்று புலத்தலை அஞ்சி, அதனையான் அடக்கினேன் அங்ஙனம் அடக்கவும், நுமர் உள்ளல் எம்மை மறைத்திரோ என்று அழுதாள - நுமர் நும்மை நினைத்தலை எம்மை மறைக்க உற்றீரோ என்று சொல்லிப் புலந்தழுதாள.

தும்மு என்பது முதனிலைதொழிற்பெயர். செறுப்ப என்புழி இறநதது தழீஇய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. எம்மை என்பது நும்மோடு யாதுமியைபில்லாத எம்மை என்பதுபடநின்ற இசையெச்சம். இதனை வடநூலார் காகு என்ப. தும்மினும் குறறம், ஒழியினும் குறறமாயக்கால் செயற்பாலது யாது என்பதாம். (8)

தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்குநீர்
இந்நீரர் ஆகுதிர் என்று. 1319

இதுவும் அது.

தன்னை உணர்த்தினும் காயும் - இவ்வாற்றான் ஊடிய தன்னை யான் பணிந்துணாததுங்காலும் வெகுளாநிற்கும, பிறர்க்கும் நீர் இந்நீரர் ஆகுதிர என்று – பிறமகளிர்க்கும அவர் ஊடியவழி இவ்வாறே பணிநதுணாததும நீரமையையுடையீராகுதிர் என்று சொல்லி.

இவள தெளிவிதத வழியும் தெளியாள என்பதுபற்றி என்மேல் ஏற்றிய தவறை உடமபட்டுப் பணிநதேன், பணிய அது

தானும் புலததறகு ஏதுவாய முடிநதது, இனி இவள மாட்டுச் செயயததகுவது யாது என்பதாம. (9)

நினைத்திருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்
யார்உள்ளி நோக்கினீர் என்று. 1320

இதுவும் அது.

நினைத்து இருந்து நோக்கினும் காயும் - என்சொற்களுஞ் செயல்களும் பற்றித் தான் வெகுடலான், அவற்றையொழிந்திருந்து தன் அவயவங்கள ஒப்பின்மையை நினைந்து அவற்றையே நோக்கினும், என்னை வெகுளாநிற்கும், அனைத்தும் நீர் நோக்கினீர் யார் உள்ளி என்று-நீர் என் அவயவமனைத்தும் நோக்கினீர் அவற்றது ஒப்புமையான் எம்மகளிரை நினைந்து என்று சொல்லி.

யான் எல்லா அவயவங்களானும் ஒருத்தியொடு ஒத்தல் கூடாமையின் ஒன்றல ஒருவராகப் பலரையும் நினைக்கவேண்டும்; அவரெல்லாரையும் யான் அறியச் சொல்லுமின் என்னுங் கருத்தால், அனைத்தும் நோக்கினீர் யாருள்ளி என்றாள். வாளாவிருத்தலும் குற்றமாயிற்று என்பதாம். (10)



## 133. ஊடல் உவகை.

அஃதாவது அப்பெற்றித்தாய ஊடலால் தமக்குக் கூடல் இன்பம் சிறக்குழி அச்சிறப்பிற்கு ஏதுவாய அவ் ஊடலைத் தலைமகள் உவத்தலும் தலைமகன் உவத்தலும் ஆம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

**இல்லை தவறுஅவர்க்கு ஆயினும் ஊடுதல்**
**வல்லது அவர்அளிக்கு மாறு. 1321**

தலைமகள் காரணமின்றிப் புலக்கின்றமை கேட்டதோழி அங்ஙனம் நீ புலக்கின்றது என்னை என்றாட்கு அவள் சொல்லியது.

அவர்க்குத் தவறு இல்லையாயினும் - அவர்மாட்டுத் தவறில்லை ஆயினும், அவர் அளிக்குமாறு ஊடுதல் வல்லது - நமக்கு அவர் தலையளிசெய்கின்றவாறு அவரோடு ஊடுதலை விளைக்க வற்றுகின்றது.

அவர்க்கு என்பது வேற்றுமை மயக்கம். அளவிறந்த இன்பத்தராகலின் யான் எய்தற்பாலதாய இத் தலையளி ஒழிந்தாரும் எய்துவர் எனக்கருதி அது பொறாமையான் ஊடல் நிகழாநின்றது என்பதாம். (1)

ஊடலின் தோன்றும் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும். 1322

புலவாக்காலும் அத் தலையளி பெறலாயிருக்க அஃது இழந்து புலவியான் வருந்துவது என்னை என்றாட்கு அவள் சொல்லியது.

ஊடலின் தோன்றும் சிறுதுனி-ஊடல் ஏதுவாக நங்கண் தோன்றுகின்ற சிறிய துனிதன்னாலே, நல்லளி வாடினும் பாடு பெறும்-காதலர்செய்யும் நல்ல தலையளி வாடுமாயினும் பெருமை எய்தும்.

தவறின்றி நிகழ்கின்ற ஊடல கடிதின் நீங்கலின் அத்துன்பமும் நில்லாது என்பாள 'சிறு துனி' என்றும், ஆராமைபற்றி நிகழ்தலின் அதனான் நல்லளி வாடாது என்பாள 'வாடினும்' என்றும், பின்னே பேரின்பம் பயக்கும் என்பாள் 'பாடுபெறும்' என்றும் கூறினாள். (2)

புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு
நீர்இயைந்து அன்னார் அகத்து. 1323

இதுவும் அது.

நிலத்தொடு நீர் இயைந்தன்னார் அகத்துப்புலத்தலின்-நிலத்தொடு நீர் கலந்தாற்போல ஒற்றுமைஉடைய காதலர்மாட்டுப்புலத்



தல்போல, புத்தேள் நாடு உண்டோ-நமக்கின்பம்தருவதொரு புத்தேள்உலகம் உண்டோ, இல்லை.

நீர் தான் நின்ற நிலத்தியல்பிற்றாமாறுபோலக் காதலரும் தாம் கூடிய மகளிரியல்பினராகலான் அதுபற்றி அவரோடு புலவி நிகழும் என்பாள 'நிலத்தோடு நீர இயைந்தன்னாரகத்து' என்றும், அவர் நமக்கும் அன்னராகலின் அப்புலவி பின்னே பேரின்பம் பயவாநின்றது என்பாள 'புலத்தலின் புத்தேள நாடு உண்டோ' என்றும் கூறினாள. உவமம் பயன்பற்றி வந்தது. (3)

புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும்என்
உள்ளம் உடைக்கும் படை. 1324

அப்புலவி இனி யாதான் நீக்கும் என்றாட்குச் சொல்லியது.

புல்லி விடாப் புலவியுள் தோன்றும் - காதலரைப் புல்லிக் கொண்டு பின் விடாமைக்கு ஏதுவாகிய அப்புலவிக்கண்ணே உளதாம், என் உள்ளம் உடைக்கும் படை - அதன்மேற்சென்ற என்னுள்ளத்தைக் கெடுக்கும் படைக் கலம்.

புலவியுள் என்னும் ஏழாவது வினைநிகழ்ச்சிக்கண் வந்தது. என்னுள்ளம் உடைக்கும் படைக்கலம் என்றது வணக்கத்தையும் பணிமொழியையும். படைக்கலம் என்றான், அவற்றான் அப் புலவி உள்ளம் அழிதலின். புலவி நீக்கும்திறம் கூறியவாறு. (4)

தவறுஇலர் ஆயினும் தாம்வீழ்வார் மென்தோள்
அகறலின் ஆங்கொன்று உடைத்து. 1325

*தலைமகளை ஊடலினீக்கிக் கூடிய தலைமகன் கழியுவகை யனாய்த் தன்னுள்ளே சொல்லியது.*

*தவறு இலராயினும் தாம் வீழ்வார் மென்தோள் அகறலின்- ஆடவர் தங்கண் தவறிலராயினும் உடையார்போல ஊடப்பட்டுத் தாம் விரும்பும்மகளிருடைய மெல்லிய தோள்களைக் கூடப்பெறாத எல்லைக்கண், ஆங்கு ஒன்று உடைத்து - அவர்க்கு அப்பெற்றிய தோர் இன்பம் பயத்தல் உடைத்து.*

*உடையராயக்கால்இறந்தஇன்பத்தோடுவரும்இன்பமுமெய்து வா ஆகலின், அதுமிகையன்று. மற்றை இலராயக்காலும் வரும்இன்பத்தைஇகழ்ந்ததில்லை என்னும் கருத்தால, 'தவறிலராயினும் ஆங்கு உடைதது' என்றான். ஊடலின்கண் இன்பம் அளவிறத்தலின் கூறற்கு அரிது என்பான், 'அப்பெற்றியதொன்று' என்றான். தவறின்றியூடியதூஉம் எனக்கு இன்பமாயிற்றென்பதாம்.* (5)

**உணலினும் உண்டது அறல்இனிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது.** 1326

*இதுவும் அது.*

15

உணவினும் உண்டது அறல்இனிது - உயிர்க்கு மேலுண்ப தனினும் முன் உண்டது அறுதல் இன்பந்தரும், காமம் புணர் தலின் ஊடல் இனிது - அதுபோலக் காமத்திற்கு மேற்புணர் தலினும் முன்னைத்தவறுபற்றி ஊடுதல் இன்பம்தரும்.

காமத்திற்கு என்புழிச் சாரியையும் நான்கனுருபும விகாரத தால் தொக்கன. பசித்துண்ணும்வழி மிகஉண்ணலுமாய் இன் சுவைத்துமாம், அதுபோல அகன்றுகூடும்வழி ஆராததுமாய்ப் பேரின்பத்ததுமாம் எனத் தன் அனுபவம்பற்றிக் கூறியவாறு.(6)

ஊடலின் தோற்றவர் வென்றார் அதுமன்னும்
கூடலின் காணப் படும். 1327

இதுவும் அது.

ஊடலின் தோற்றவா வென்றார் – காமம நுகாதற்குரிய இரு வருள ஊடலின்கண் தோறறவர் வென்றாராவா, அது கூடலின் காணப்படும் - அஃது அப்பொழுது அறியப்படாதாயினும் பின் னைப் புணாச்சியின்கண் அவரால அறியப்படும.

தோற்றவர் - எதிாதலா றறுவது சாய்ந்தவர். அவர் புணர்ச்சிக் கண் பேரின்பம்எய்தலின் வென்றாராயினா. மன்னும் உம்மும் அசைநிலை. யான் அதுபொழுது சாய்தலின் இதுபொழுது பேரின் பம்பெறறேன் என்பதாம. (7)

ஊடிப் பெறுகுவம் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலின் தோன்றிய உப்பு. 1328

இதுவும அது.

நுதல் வெயாப்பக் கூடலின் தோன்றிய உப்பு-இதுபொழுது இவள நுதல வெயாக்கும்வகை கலவியின்கண் உளதாய இனி மையை, ஊடிப் பெறுகுவம்கொல்லோ - இன்னும ஒருகால் இவள ஊடி யாம பெறவல்லேமோ?

கலவியது விசேடம்பற்றி 'நுதல்வெயாப்ப' என்றான். இனிமை கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிதலானுய பின்பம. இனி அப்பேறு கூடாது எனப் பெற்றதன்சிறப்புக் கூறியவாறு. (8)

ஊடுக மன்னோ ஒளிஇழை யாம்இரப்ப
நீடுக மன்னோ இரா. 1329

இதுவும் அது.

ஒளிஇழை ஊடுகமன்-ஒளியிழையினை உடையாள் இன்னும் எம்மோடு ஊடுவாளாக, யாம் இரப்ப இரா நீடுகமன்-அங்ஙனம் அவள் ஊடிநிற்கும் அதனை உணர்த்துதற்பொருட்டு யாம் இரந்து நிற்றற்கும் காலம்பெறும்வகை இவ் இரவு விடியாது நீட்டித்தல்வேண்டுக.

ஊடுக, நீடுக என்பன வேண்டிக்கோடற்பொருளன. மன் இரண்டும் ஆக்கத்தின்கண் வந்தன. (9)



ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கு இன்பம்
கூடி முயங்கப் பெறின். 1330

இதுவும் அது.

காமத்திற்கு இன்பம் ஊடுதல்-காமநுகர்ச்சிக்கு இன்பமாவது அதனை நுகர்தற்குரியராவார் ஆராமைபற்றித் தம்முள் ஊடுதல், அதற்கு இன்பம் கூடி முயங்கப் பெறின் - அவ் ஊடற்கு இன்பமாவது, அதனை அளவறிந்து நீங்கித் தம்முள் கூடி முயங்குதல் கூடுமாயின், அம் முயக்கம்.

கூடுதல் - ஒத்த அளவினராதல். முதிர்ந்த துனியாயவழித் துன்பம் பயத்தலானும், முதிராத புலவியாயவழிக் கலவியின்பம் பயவாமையானும், இரண்டற்கும் இடையாகிய அளவறிந்து நீங்குதல் அரிது என்பதுபற்றி, 'கூடிமுயங்கப் பெறின்' என்றான். அவ்விரண்டு இன்பமும் யான் பெறுவேன் என்பதாம்.

ஈண்டுப் பிரிவினை வடநூலார் மதம்பற்றி, செலவு, ஆற்றாமை, விதுப்பு, புலவி என நால்வகைத்தாக்கிக் கூறினார். அவற்றுள் செலவு பிரிவாற்றாமையுள்ளும், ஆற்றாமை படர்மெலிந்திரங்கல் முதல நிறை அழிதல் ஈறாயவற்றுள்ளும், விதுப்பு அவர்வயின்

விதும்பல் முதல் புணர்ச்சிவிதும்பல் ஈறாயவற்றுள்ளும், புலவி நெஞ்சொடுபுலத்தல் முதல் ஊடலுவகை ஈறாயவற்றுள்ளும் கண்டுகொள்க. அஃதேல் வடநூலார் இவற்றுடனே சாபத்தினைய நீக்கத்தினையும் கூட்டிப் பிரிவினை ஐவகைத்து என்றாராலெனின், அஃது, அறம்பொருள் இன்பம் என்னும் பயன்களுள் ஒன்றுபற்றிய பிரிவின்மையானும் முனிவராணையான் ஒருகாலத்து ஓர் குற்றத்துள்ளதாவதல்லது உலக இயல்பாய் வாராமையானும், ஈண்டு ஒழிக்கப்பட்டது என்க. (10)

கற்பு இயல் முற்றும்

காமத்துப்பால் முற்றும்

திருக்குறள் பரிமேலழகர் உரை முற்றும்.

—:0:—

# திருவள்ளுவ மாலை

—:0:—

'திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோடு
உருத்தகு நற்பலகை ஒக்க—இருக்க
உருத்திர சன்மர்' எனஉரைத்து வானில்
ஒருக்கஓ என்றதுஓர் சொல்.

—அசரீரி.

நாடா முதல்நான் மறைநான் முகன்நாவில்
பாடா இடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
எள்ளிய வென்றி இலங்கிலைவேல் மாற! பின்
வள்ளுவன் வாயதுஎன் வாக்கு.

—நாமகள்.

என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும்
நின்றுஅலர்ந்து தேன்பிலிற்றும் நீர்மையதாய்—

குன்ருத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போன்ம்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.

—இறையனூர்.

நான்மறையின் மெய்ப்பொருளே முப்பொருளா
நான்முகத்தோன்
தான்மறைந்து வள்ளுவனய்த் தந்துஉரைத்த—
நூல்முறையை
வந்திக்க சென்னி;வாய் வாழ்த்துக;நல் நெஞ்சம்
சிந்திக்க; கேட்க செவி.

—உக்கிரப் பெருவழுதியார்.

தினையளவு போதாச் சிறுபுல்நீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால்—மனை அளகு

வள்ளைக்கு உறங்கும் வளநாட! வள்ளுவனர்
வெள்ளைக் குறட்பா விரி.

—கபிலர்

மாலும் குறளாய் வளர்ந்துஇரண்டு மாண்அடியால்
ஞாலம் முழுதும் நயந்துஅளந்தான்—வால்அறிவின்

வள்ளுவருந் தங்குறள்வெண் பாஅடியால்வையத்தார்
உள்ளுவஎல் லாம்அளந்தார் ஓர்ந்து.

—பரணர்.



தானே முழுதுஉணர்ந்து தண்தமிழின் வெண்

ஆறு அறம்முதலா அந்நான்கும்—ஏறேருக்கு
ஊழின் உரைத்தாற்கும் ஒண்ணீர் முகிலுக்கும்
வாழிஉலகு என்ஆற்றும் மற்று !

—நக்கீரர்.

அறம்பொருள் இன்பம்வீடு என்னும்அந் நான்கின்
திறம்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவன் என்பான்ஓர் பேதை; அவன்வாய்ச்சொல்
கொள்ளார் அறிவுடை யார்.

—மாமூலனார்.

ஒன்றே பொருள்எனின் வேறுஎன்ப; வேறுஎனின்,
அன்றுஎன்ப ஆறு சமயத்தார்;—நன்றுஎன
எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி.

—கல்லாடர்.

மும்மலையும் முந்நாடும் முந்நதியும் முப்பதியும்
மும்முரசும் முத்தமிழும் முக்கொடியும்—மும்மாவும்
தாமுடைய மன்னர் தடமுடிமேல் தார்அன்றோ
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்.

—சீத்தலைச் சாத்தனார்

சீந்திநீர்க் கண்டம் தெறிசுக்குத் தேன்அளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில்;—காந்தி
மலைக்குத்தும் மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.

—மருத்துவன் தாமோதரனார்.

தாளார் மலர்ப்பொய்கை தாம்குடைவார் தண்ணீரை
வேளாது ஒழிதல் வியப்புஅன்று;—வாளாதாம்
அப்பால ஒருபாவை ஆய்பவோ வள்ளுவனார்
முப்பால் மொழிமூழ்கு வார்.

—நாகன் தேவனார்.

பரந்த பொருள்எல்லாம் பார்அறிய வேறு
தெரிந்து திறந்தொறும் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்
வல்லார்ஆர் வள்ளுவர்அல் லால்.

—அரிசில்கிழார்



கான்நின்ற தொங்கலாய்! காசிபனூர் தந்ததுமுன்
கூநின்று அளந்த குறள்என்ப—நூல்முறையான்
வான்நின்று மண்ணின்று அளந்ததே வள்ளுவனூர்
தாம்நின்று அளந்த குறள்.

—பொன் முடியார்

ஆற்றல் அழியுமென்று அந்தணர்கள் நான்மறையைப்
போற்றியுரைத்து ஏட்டின் புறத்துஎழுதார்—ஏட்
டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனூர் முப்பாலைச்
சொல்லிடினும் ஆற்றல் சோர்வுஇன்று.

—கோதமனார்

ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளும்
பாயிரத்தி னோடு பகர்ந்ததன்பின்—போய்ஒருத்தர்
வாய்க்கேட்க நூல்உளவோ? மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்

—நத்தத்தனார்

உள்ளுதல் உள்ளி உரைத்தல் உரைத்ததனைத்
தெள்ளுதல் அன்றே செயற்பால—வள்ளுவனூர்
முப்பாலின் மிக்க மொழிஉண்டு எனப்பகர்வார்
எப்பா வலரினும் இல்.

—உறையூர்ச் சிறுகருந்தும்பியார்.

சாற்றிய பல்கலையும் தப்பா அருமறையும்
போற்றி உரைத்த பொருள்எலலாம்—தோற்றவே
முப்பால் மொழிந்த முதற்பா வலர்ஒப்பார்
எப்பா வலரினும் இல்.

-ஆசிரியர் நல்லந்துவனார்

தப்பா முதற்பாவால் தாம்மாண்ட பாடலினல்
முப்பாலின் நாற்பால் மொழிந்தவர்—எப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனம்மகிழத்
தெய்வத் திருவள் ளுவர்.

-கீரந்தையார்.

வீடுஒன்று; பாயிரம் நான்கு; விளங்குஅறம்
நாடிய முப்பத்து மூன்று; ஒன்றுஊழ்—கூடுபொருள்
எள்ளில் எழுபது; இருபதிற் றைந்துஇன்பம்
வள்ளுவர் சொன்ன வகை.

- சிறு மேதாவியார்.



உபயக்கம் நோக்கி உபகேசி தோளமணந்தான்
உத்தர மாமதுரைக்கு அச்சுஎன்ப;—இப்பக்கம்
மாதானு பங்கி மறுவுஇல் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற்கு அச்சு.

நல்கூர் வேள்வியார்.

அறம்நான்கு; அறிபொருள் ஏழொன்று; காமத்
திறம்மூன்று எனப்பகுதி செய்து - பெறல்அரிய
நாலும் மொழிந்தபெரு நாவலரே நன்குஉணர்வார்
போலும் ஒழிந்த பொருள்.

-தொடித்தலை விழுத்தண்டினார்.

செய்யா மொழிக்கும் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருள்ஒன்றே;—செய்யா
அதற்குஉரியர் அந்தணரே; ஆராயின் ஏனை
இதற்குஉரியர் அல்லாதார் இல்.

-வெள்ளி வீதியார்.

ஓதற்கு எளிதாய் உணர்தற்கு அரிதாகி,
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதுஅற்றோர்
உள்ளுதொறு உள்ளுதொறு உள்ளம் உருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

-மாங்குடி மருதனார்.

பாயிரம் நான்கு;இல் அறம்இருபான்; பன்மூன்றே
தூய துறவறம்; ஒன்று ஊழாக - ஆய
அறத்துப்பால் நால்வகையா ஆய்ந்துஉரைத் தார் நூலின்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து.

-எறிச்சலூர் மலாடனார்.

அரசியல் ஐயைந்து; அமைச்சியல் ஈரைந்து,
உருவல் அரண்இரண்டு; ஒன்று ஒண்கூழ்—இருவியல்
திண்படை நட்புப் பதினேழ்; குடிபதின்மூன்று;
எண்பொருள் ஏழாம் இவை.

-போக்கியார்.

ஆண்பால்ஏழ்; ஆறிரண்டு பெண்பால்; அடுத்துஅன்பு
பூண்பால் இருபால்ஓர் ஆறாக—மாண்புஆய
காமத்தின் பக்கம்ஒரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு.

-மோசிகீரனார்.

ஐயாறும் நூறும் அதிகாரம் மூன்றுமாம்
மெய்யாய வேதப் பொருள்விளங்கப்—பொய்யாது
தந்தான் உலகிற்குத் தான்வள் ளுவனாகி
அந்தா மரைமேல் அயன்.

-காவிரிப்பூம்பட்டினத்துக் காரிகண்ணனார்.

எல்லாப் பொருளும் இதன்பால் உள;இதன்பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால்;—சொல்லால்
பரந்தபா வால்என் பயன்?வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை.

-மதுரைத் தமிழ் நாகனார்.

எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாம் செப்பவரும்—முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற்று இல்லை நிகர்.

-பாரதம் பாடிய பெருந்தேவனார்.

மணற்கிளைக்க நீர்ஊறும்; மைந்தர்கள் வாய்வைத்து
உணச்சுரக்கும் தாய்முலை; ஒண்பால்—பிணக்குஇலா
வாய்மொழி வள்ளுவர் முப்பால் மதிப்புலவோர்க்கு
ஆய்தொறும் ஊறும் அறிவு.

-உருத்திர சன்ம கண்ணர்.

ஏதம்இல் வள்ளுவர் இன்குறள்வெண் பாவினால்
ஓதிய ஒண்பொருள் எல்லாம் உரைத்ததனால்
தாதுஅவிழ் தார்மாற! தாமே தமைப்பயந்த
வேதமே மேதக் கன?

-பெருஞ்சித்திரனார்.

இன்பம் பொருள்அறம் வீடுஎன்னும் இந்நான்கும்
முன்புஅறியச் சொன்ன முதுமொழிநூல்—மன்பதை
கட்கு
உள்ள அரிதென்று அவைவள் ளுவர்உலகம்
கொள்ள மொழிந்தார் குறள்.

-நரி வெரூஉத் தலையார்.

புலவர் திருவள் ளுவர்அன்றிப் பூமேல்
சிலவர் புலவர்எனச் செப்பல்—நிலவு

பிறங்குஒளிமா லைக்கும் பெயர்மாலை; மற்றும்
கறங்குஇருள்மா லைக்கும் பெயர்.

-மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர்க்கிழார்.



இன்பமும் துன்பமும் என்னும் இவைஇரண்டும்
மன்பதைக்கு எல்லாம் மனம்மகிழ—அன்புஒழியாது
உள்ளி உணர உரைத்தாரே ஓதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து.

-மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார்.

பூவிற்குத் தாமரையே; பொன்னுக்குச் சாம்புநதம்;
ஆவிற்கு அருமுனியா; ஆனைக்கு அமர்உம்பல்;
தேவில் திருமால் எனச்சிறந்தது என்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா.

-கவிசாகரப் பெருந்தேவனார்.

அறம்முப்பத் தெட்டு; பொருள்எழுபது; இன்பத்
திறம்இருபத் தைந்தால் தெளிய—முறைமையால்
வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார்
ஓதஅழுக்கு அற்றது உலகு.

-மதுரைப் பெருமருதனார்.

அறம்முதல் நான்கும் அகலிடத்தோர் எல்லாம்
திறமுறத் தேர்ந்து தெளியக்—குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் பால்முறைநேர் ஒவ்வாதே
முன்னை முதுவோர் மொழி.

-கோவூர்க் கிழார்.

தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண்
பாவிற் சிறந்திடும்முப் பால்பகரார்—நாவிற்கு
உயலில்லை சொற்சுவை ஓர்வில்லை மற்றும்
செயலில்லை என்னும் திரு.

-உறையூர் முதுகூற்றனார்

இம்மை மறுமை இரண்டும் எழுமைக்கும்
செம்மை நெறியின தெளிவுபெற—மும்மையின்
வீடுஅவற்றின் நான்கின் விதிவழங்க வள்ளுவனார்
பாடினர் இன்குறள்வெண் பா.

-இழிகண் பெருங்கண்ணனார்

ஆவனவும் ஆகா தனவும் அறிவுடையார்
யாவரும் வல்லார் எடுத்துஇயம்பத்—தேவர்
திருவள் ளுவர்தாமும் செப்பியவே செய்வார்
பொருவில் ஒழுக்கம்பூண் டார்.

-செயிர்க் காவிரியார் மகனார் சாத்தனார்



வேதப் பொருளை விரகால் விரித்துஉலகோர்
ஓதத் தமிழால் உரைசெய்தார்;—ஆதலால்,
உள்ளுநர் உள்ளும் பொருளெல்லாம் உண்டுஎன்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு.

-செயலூர்க் கொடுஞ் செங்கண்ணனார்

ஆரியமும் செந்தமிழும் ஆராய்ந்து இதனின்இது
சீரியது என்றுஒன்றைச் செப்பரிதால்—ஆரியம்
வேதம் உடைத்து; தமிழ்திரு வள்ளுவனார்
ஓது குறட்பா உடைத்து.

-வண்ணக்கஞ் சாத்தனார்

ஒருவர் இருகுறளே முப்பாலின் ஓதும்
தருமம் முதல்நான்கும் சாலும்—அருமறைகள்
ஐந்தும் சமயநூல் ஆறும்நம் வள்ளுவனார்
புந்தி மொழிந்த பொருள்.

-களத்தூர்க் கிழார்

எழுத்துஅசை சீர்அடி சொற்பொருள் யாப்பு
வழுக்கில் வனப்புஅணி வண்ணம்—இழுக்கு இன்றி
என்றுஎவர் செய்தன ? எல்லாம் இயம்பின
இன்றுஇவர் இன்குறள்வெண் பா.

-நச்சுமனார்

கலைநிரம்பிக் காண்டற்கு இனிதாகிக் கண்ணின்
நிலைநிரம்பும் நீர்மைய தேனும்—தொலைவுஇலா
வான்ஊர் மதியம் தனக்குஉண்டோ வள்ளுவர்முப்
பால்நூல் நயத்தின் பயன் ?

-அக்காரக்கனி நச்சுமனார்

அறம்தகளி; ஆன்ற பொருள்திரி; இன்பு
சிறந்தநெய்; செஞ்சொல் தீ; தண்டு—குறும்பாவா
வள்ளுவனார் ஏற்றினார் வையத்து வாழ்வார்கள்
உள்இருள் நீக்கும் விளக்கு.

-நப்பாலத்தனார்

உள்ளக் கமலம் மலர்த்தி உளத்து உள்ள
தள்ளற்கு அரியஇருள் தள்ளுதலால்—வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரும் ஒக்கும்,எனக்
கொள்ளத் தகுங்குணத்தைக் கொண்டு.

-குலபதி நாயனார்

